# செளந்தர கோகிலம்

## மூன்றாம் பாகம்

நூலாசிரியர்

வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார், B. A.,

நான்காம் பதிப்பு

B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,

புத்தக வியாபாரிகள்,

ஜி. டி., சென்னை.

காபிரைட்] 1951 [விலை ரூ. 3-0-0

# சௌந்தர கோகிலம்



## 14-வது அதிகாரம்

## தஞ்சை கலெக்டர் தங்கமணி நாட்டார்

திவான் மயங்கிச் சாய்ந்து விட்டதைக் கண்ட குஞ்சிதபாத முதலியார் வியப்பும் கலக்கமும் அடைந்து தமது வரலாறு அவ்வளவு தூரம் அவரது மனத்தைப் புண்படுத்த வேண்டிய காரணம் எதுவாக இருக்குமென்றும், ஒருகால், அவர் தமக்கு அதற்கு முன் பழக்கமான மனிதரா யிருப்பாரோ வென்றும் எண்ணமிட்டபடி அவரது முகத்தை உற்று நோக்கினர். திவானின் முகம் முழுதும் பெருத்த புதர்போல விருந்த சடைகளினாலும் தாடி மீசைகளினாலும் முற்றிலும் புதைபட்டுப் போயிருந்த தாகையால், அவர் இன்னார் என்ற அடையாளம் சொற்பமும் தெரியாமல் போய்விட்டது. ஆயினும், அவர் சும்மா இராமல் திவானண்டை நெருங்கி உட்கார்ந்து பக்கததில கிடந்த ஒரு வாழை இலைததுண்டை எடுத்து திவானின் முகத்திற்கருகில் வீசி காற்றை உண்டாக்கியபடி அன்பு ததும்பிய குரலில் பேசத தொடங்கி, "சுவாமிகளே! சுவாமிகளே! ஏன் ஒரு மாதிரியாகச் சாய்ந்து விட்டீர்கள்? உடம்பில் ஏதாவது தொந்தரவு உண்டா? சுவாமிகளே! சுவாமிகளே! தாகததிற்கு சாப்பிடுகிறீர்களா? நான் போய்த தண்ணீர் கொண்டு வந்து தரட்டுமா" என்று அன்போடு கூறினர். அப்பொழுது திவான்சாமியார் மயக்கமும் தெளிவும் கலந்த நிலைமையி லிருந்தமையால், குஞ்சிதபாத முதலியார் கூறிய சொற்கள் கிணற்றிற்குள்ளிருந்து பேசப்படுவதுபோல திவான்சாமியாருக்கு சொற்பமாகக் கேட்டது. ஆயினும் அவர் அதற்கு உடனே மறுமொழி கொடுக்க இயலாதவராய்த் தமது கண்களைத திறக்க முயல்வதும் ஆடி ஆடிச் சுவரில் சாய்வதுமா யிருந்தார்.

அதைக் கண்ட குஞ்சிதபாத முதலியார் மிகுந்த கவலையும் கலக்கமும் கொள்ளத் தொடங்கி தமது வலக்கரத்தை திவான்

சாமியாரின் உடம்பின்மீது வைத்து அன்பாகவும் மிருதுவாகவும் தடவிக் கொடுத்தபடி, "சுவாமிகளே! சுவாமிகளே! உடம்பு எப்படி இருக்கிறது? கொஞ்சநேரம் இப்படியே படுத்துக் கொள்ளுகிறீர்களா?" என்று கூறி நிரம்பவும் கனிகரமாய் உபசரிக்க, இரண்டொரு நிமிஷ நேரத்தில் திவான் தமது கண்களை திறந்து கொண்டு மெதுவாக நிமிர்ந்து முன்போல உட்கார்ந்து கொண்டார்.

அவ்வாறு தெளிவடைந்து உட்கார்ந்துகொண்ட திவான் அப்போதும் கலங்கிய மனதும் குழம்பிய பார்வையுமாய்த் தோன்றி கனவு நிலைமையி லிருப்பவர்போலக் காணப்பட்டு நாற்புறங்களிலும் திரும்பித் திரும்பி மருள மருள விழித்துத் தமது தந்தை சந்தேகங் கொள்ளாதபடி அவரது முகத்தையும் உடம்பையும் பன்முறை ஏற இறங்கப் பார்த்து ஆராய்ச்சி செய்தார். கிழவரது பழைய அடையாளங்கள் அடியோடு மாறுபட்டுப்போ யிருந்தனவானாலும், அவர் தமது தந்தையாகத்தா னிருக்கவேண்டு மென்று திவான் நிச்சயித்துக்கொண்டார். தமது தந்தை யிறந்துபோய் விட்டாரென்றும், தாம் இனி இந்தப் பிறப்பில் அவரைக் காண இயலாதென்றும் நினைத்து முற்றிலும் நம்பிக்கை இழந்திருந்த நிலைமையில், தாம் சிறிதும் எதிர் பார்க்காத இடத்திலும், நிலைமையிலும் அவரை உயிருடன் கண்டது திவானுக்கு வெகுநேரம் வரையில் உண்மையாகப் படாமல கனவுபோலவே தோன்றியது. அவ்வாறு மனிதர் தவறுதலாக மயானத்தில் கொளுத்தப்பட்டபின் இரண்டு வருஷ காலத்திற்குப் பிறகு அவர் உயிருடன் காணப்பட்டாரென்பது எப்பொழுதும் எவ்விடத்திலும் திவான் கேட்டிராத அதிசய சம்பவமா யிருந்ததாகையால், திவானினது மனத்தில அது உண்மை யென்று சுலபத்தில உரைக்கவில்லை. அந்த அபூர்வச் செய்தியைக் கேட்டதனால் உண்டான பிரமிப்பும், ஆச்சரியமும் அவரை விட்டு எளிதில் அகலாமல் இருந்தன. தமது தந்தை அவரது சம்சாரம், சம்பத்து முதலிய யாவற்றையும் இழந்து, அத்தகைய கேவல நிலைமையை அடைந்து விட்டாரே என்ற நினைவு தோன்றத் தோன்ற, அவரது மனம் சகிக்கவொண்ணாத பெருத்த விசனத்தையும் துடிப்பையும் அடைந்து பரதவித்துப் பதறிப் பாகாய் இளகி யோடிய தானாலும், எப்படியாகிலும் அவர் உயிருடன் இருந்து இந்த ஜென்மத்தில் மறுபடி தமக்குக் காக்ஷி கொடுத்தாரே என்ற நினைவு இன்னொரு பக்கத்தில் எழுந்து அவரது மனதும் தேகமும் கட்டிலடங்காதபடி தளிர்த்து ஆநந்தவெறி கொண்டு பரவசமடையும்படி செய்

தது. தாம் இறந்துபோய் விட்டதாகக் காட்டி வெளியிட்ட பொய்யான செய்தியைக் கேட்டதிலிருந்தே தமது தந்தை இடிந்து நிலைகுலைந்து தளர்வடைந்து முடிவில் அகாலமரணமடைந்து விட்டதாகவும், அத்தகைய பெருத்த பழிக்கும், பாவத்திற்கும் தாமே உத்தரவாதியென்றும் திவான் அதுவரையில் எண்ணி எண்ணி மனநைந்துருகி இரத்தக்கண்ணீர் விடுத்திருந்தவராதலால், அந்த அபாரமான பழி தமக்கு இல்லாமல் போய்விட்டது என்ற விஷயமே அப்பொழுது திவானின் துயரச்சுமையில் பெரும்பாகத்தையும் விலக்கியது. அவர் தெளிவடைந்தவுடனே, தாம் அவரது புத்திரரான திவான் என்றசெய்தியைத் தமது தந்தைக்குத் தெரிவித்து அவரை மகிழ்விக்க வேண்டுமென்ற நினைவே அவரது மனத்தில் முதன் முதலில் துடியாக எழுந்து அவரைத் தூண்டியது. ஆயினும், அவர் உடனே தமது மனப் பதைப்பை ஒருவாறு அடக்கிக்கொண்டார். தமது தந்தை நோய் வாய்ப்பட்டு இளைத்துத் தளர்ந்து கேவலம் துர்ப்பலமான நிலைமையில் இருந்தமையால், அத்தகைய அபாரமான சந்தோஷச் செய்தியைத் தாங்க அவருக்கு வலுவிராதென்றும், அதனால் இவர் இறந்துபோனாலும் போய் விடுவாரென்றும் திவான் அஞ்சினார். அதுவுமன்றி, தாம் இன்னார் என்பதைத் தெரிவித்தால், தாம் அத்தகைய நிலைமையை அடைந்த வரலாற்றை ஆதியோடந்தமாய்க் கூற நேருமென்ற நினைவும் உண்டாயிற்று. தாம் அவ்வாறு கூற நேரின், தமது சமயற்காரன் தமக்கு விஷமிட முயற்சித்தது, அவன் காந்திமதியைக் குறித்து விபரீதமான செய்திகளை வெளியிட்டது, அதன் பிறகு தாம் செய்த காரியங்கள் முதலிய எல்லா விவரங்களையும் சவிஸ்தாரமாக வெளியிட வேண்டியிருக்குமாதலால், அத்தகைய துன்பகரமான விஷயங்களை யெல்லாம் அவரிடம் வெளியிடுவதற்கு அது சரியான தருணமல்லவென்றும் திவான் எண்ணினார். தாம் இன்னார் என்பதை அப்பொழுது வெளியிடுவது தமது தந்தைக்குச் சிறிதும் நன்மையை விளைவிக்காமல் பெருத்த தீங்கையே விளைவிக்குமென்றும், அதுவே அவரைக் கொன்றாலும் கொன்றுவிடுமென்றும் திவான் எண்ணினாராதலால், தமது தந்தையின் நன்மையைக் கருதித் தாம் உண்மையான வரலாற்றைச் சிறிது காலத்திற்கு மறைத்து வைப்பதே உசிதமான காரியமென்றும், சில மாதகாலத்தில் அவரைத் தேற்றி நல்ல நிலைமைக்குக் கொணர்ந்த பிறகு சமயம் பார்த்துச் சிறுகச் சிறுக விஷயங்

களை வெளியிட்டு, அவர் திடுக்கிட்டுப் போகாதபடி தந்திரமாகத் தம்மை வெளிப்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும் திவான் தீர்மானித்துக் கொண்டார். ஆயினும், தாம் தமது தந்தையின் விபரீத வரலாற்றைக் கேட்டு மயங்கி வீழ்ந்ததற்குத் தக்க சமாதானம் கூற வேண்டியது அவசியமாகத் தோன்றிய தாகையாலும், அதன் பிறகு தமது தந்தையைத் தமது ஆதீனத்திலும் சவரக்ஷணையிலும் வைத்துக்கொள்வது அத்தியாவசியமாக இருந்தமையாலும், அதற்குத் தகுந்தபடி தாம் தமது வரலாற்றை மாற்றிக் கூறவேண்டுமென்று திவான் தீர்மானித்துக்கொண்டார். அவ்வாறு அவர் எண்ணமிட்டபடி குழப்பமான மன நிலைமையி லிருக்க, மறுபடி குஞ்சிதபாத முதலியார் அவரை வாஞ்சையாக நோக்கி, "சுவாமிகளே! இந்த ஏழையின் வரலாற்றைக் கேட்க தங்களுக்கு சகிக்கவில்லையோ! ஈசுவரன் தங்களுக்கு நிரம்பவும் தயாளமான மனதைக் கொடுத்திருக்கிறானென்பது, தாங்கள் எதையும் கருதாமல் எனக்குச் செய்த உதவிகளிலிருந்தே நன்றாகத் தெரிந்தது. அதனால்தான் மகா துன்பகரமான என்னுடைய விருத்தாந்தம் தங்களுடைய மனதை அத்யந்த சஞ்சலத்தில் ஆழ்த்திவிட்டது போலிருக்கிறது. பொதுவாக எவருக்கு இப்பேர்ப்பட்ட அவகேடு நேரிடுவதானாலும், உத்தமகுண புருஷர்களுடைய மனம் தாளாது. ஆனாலும், ஒரு வேளை என்னைப்பற்றி இதற்கு முன் தாங்கள் கேள்வியுற்றிருப்பீர்களோ அல்லது என்னைப் பார்த்திருந்தாலும் இருப்பீர்களோ என்னவோ தெரியவில்லை தங்கள் பூர்வீகர்களுடைய இருப்பிடம் எதுவோ?" என்றார்.

அதைக் கேட்ட திவான் தமது தந்தையிடம் பொய்யான சொற்களை உபயோகிக்க மாட்டாதவராய்ச் சிறிது நேரம் தயங்கித் தத்தளித்தாரானாலும், அவரது நன்மையைக் கருதித் தாம் அப்பொழுது உண்மையை மறைத்துப் பேசியே தீரவேண்டுமென்று தமது மனத்தைஒருவாறுதிடப்படுத்திக்கொண்டு, "பெரியவரே! இனி நான் உங்களை என்ன விதமான முறைமை சொல்லி யழைப்பதென்பதை யறியாமல் நான் தயங்குகிறேன். நான் ஏற்கெனவே உங்களைப் பல தடவைகளில் பார்த்திருக்கிறேன். உங்களுடைய யோக்கியதா பக்ஷத்தையும் நான் நன்றாக அறிவேன்." என்றார்.

குஞ்சிதபாத முதலியார்:—அப்படியா! அதுவும் என் பாக்கியந் தான்; என்னைக் கண்டு, "இவன் எப்பேர்ப்பட்ட இழிவான மனிதனோ" என்று சம்சயங் கொள்ளாத தக்க புதிய மனிதரைக் கொண்டு என்னைக் காப்பாற்றச் செய்யாமல், என்னுடைய பூர்வோத்தரங்களை யெல்லாம் நன்றாக அறிந்தவரான தங்களைக் கொண்டு கடவுள் என்னைக் காப்பாற்றச் செய்தது அவருடைய அகண்டாகாரமான பேரருளைத்தான் காட்டுகிறது!

திவான் சாமியார்:—அது மாத்திரமல்ல. நானும் தங்கள் குமாரரும் ஈருடலும் ஒருயிருமா யிருந்த ஆப்த சிநேகிதர்கள். வயசு வடிவம் குணம் மனப்போக்கு முதலிய சகலமான அம்சங்களிலும் நாங்களிருவரும் ஒருவர்போலவே இருந்தமையால், ஜனங்கள் எங்கள் இருவரையும் ஒரே வயிற்றிலிருந்து ஒரே காலத்தில் ஜனித்த இரட்டைப் பிள்ளைகளோ வென்றுகூட எண்ணி விடுவார்கள். அவர் தான் நான், நான்தான் அவர் என்று சொல்லத் தக்கபடி நானும் அவரும் ஒன்றாய் ஐக்கியப்பட்டுப் போயிருந்தோம். எவரும் எதிர் பார்க்காத விதமாய் ஈசுவரன் அவரை இப்படிப்பட்ட சோதனைக்கு ஆளாக்கி விட்டார். அவர் மறைந்துபோன பிறகு நான் சொந்த மனிதர்களையும் சகலமான சுகபோகங்களையும் குடும்ப வாழ்க்கையையும் துறந்து, ஊரையும், நாட்டையும் துறந்து, இப்படி சந்நியாசிக் கோலம் பூண்டு வடக்கே காஸ்மீரம், ஹரித்துவாரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக் கெல்லாம் போய்விட்டு, இப்பொழுதுதான் வந்துகொண் டிருக்கிறேன்—என்று கூறினார். அதற்குள் அபாரமான மனவெழுச்சியும் வேதனையும் பொங்கி யெழுந்து அவரது தொண்டையை அடைத்துக் கொண்டனவாதலால அவர் சிறிது நேரம் கண்களை மூடி மௌனத்தி லாழ்ந்து போனார்.

அந்த வரலாற்றைக் கிழவர் சிறிதும் எதிர்பார்த்தவ ரன்றாதலால், அவரது மனதும் அப்படியே பொங்கிப் போய்விட்டது. தேகம் பரவசமடைந்து துடித்தது. கண்களினின்று கண்ணீர் பொங்கி மாலை மாலையாக வழிந்தது. அவர் உடனே தம்மை மறந்து, தமக்கெதிரி லிருந்த திவான் சாமியாரின்மீது தமது இருகரங்களையும் வைத்து வாஞ்சையோடு தழுவி வாய்விட்டுக் கோவெனக் கதறி யழுது. "ஆகா! ஐயோ! அகாலக் கொள்ளையாக நான் இழந்த என் செல்வத் திருமகனுடைய வடிவத்தை நான் மறுபடி காணவேண்டு மென்று திருவுளம்பற்றி, அவனைப்போல ஏற்கெனவே சிருஷ்டிக்கப்

பட்டிருந்த தங்களைக் கடவுள் இப்பொழுது இங்கே யனுப்பி வைத்தாரோ? ஆகா! என்ன அவனுடைய காருண்யம்! என்ன அவனுடைய திருவிளையாடல்! அவனுடைய சூழ்ச்சித் திறனை யார்தான் அறியவல்லார்!" என்று தழுதழுத்த குரலில் கூறிக் குழந்தை போலத் தேம்பித் தேம்பி அழத்தொடங்கி விட்டார். அதைக் கண்டு சகியாத திவான் சாமியார், "பெரியவரே! நீங்கள் இப்படிக் கசிந்துருகி அழுவது ஆச்சரியமாக இருக்கிறது. நம்முடைய சாஸ்திரம் எந்த ஜீவனும் இறந்துபோகிறதில்லை யென்றும், இறப்பு, பிறப்பென்பது ஜீவன், கிழிந்துபோன ஒரு சட்டையை விலக்கிவிட்டு இன்னொரு புதிய சட்டையை அணிந்துகொள்வது போன்றதே யன்றி, வேறல்ல வென்றும், இறந்துபோனதாகத் தோன்றும் ஜீவர்களை மறுபடி காணலா மென்றும் முறையிடுவதை நீங்கள் படித்திருந்தும் இப்படி மனத் தளர்வடைந்து குழந்தைபோல அழுவது சரியல்ல. உங்களுடைய குமாரரை நீங்கள் இனி எங்கேயாவது மறுபடி சந்தித்தே தீருவீர்கள். நாங்கள் இருவரும் ஒரே மனிதராக இருந்தோம் என்று சொன்னேனல்லவா அவர் மண்ணுலகில் மறைந்து போனபிறகு, அநாதரவாக இருக்கும் நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ வென்று கவலையுற்று நான் சுமார் ஏழு வருஷ காலத்திற்கு முன்பு திருவிடமருதூருக்கு வந்து பார்த்தேன். அப்பொழுது கடவுள் உங்களுக்கு வேறு சில மனிதர்களுடைய உதவியைக் கூட்டி வைத்து நீங்கள் மறுபடி கல்யாணம் செய்து கொள்ளவும் அநுக்கிரகித்ததை உணர்ந்து நான் ஒருவாறு திருப்தியடைந்து யாத்திரை சென்றுவிட்டேன். இப்பொழுது உங்களைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையினால் தூண்டப்பட்டே நான் வடக்கிலிருந்து திரும்பி வந்தது. வந்து திருவடமருதூருக்குப் போய் விசாரித்ததில் இரண்டு வருஷகாலத்திற்கு முன்பே நீங்கள் இறந்துவிட்டீர்களென்ற மகா துக்ககரமான செய்தியைக் கேட்டு மனமுடைந்து நானும் இனி பட்டினி கிடந்து இறந்து போவதென்ற தீர்மானத்துடன் வந்து கொண்டிருக்கையில் சர்வேசுவரன் உங்களை என் வழியில் கொண்டுவந்து விட்டார். கடவுள் அப்படிச் செய்தது நான் உங்களை இனி என் சவரக்ஷணையில் வைத்துப் பாதுகாக்க வேண்டுமென்று எனக்குக் கட்டளை இடுவதாக நான் எண்ணுகிறேன். நானும் உங்கள் குமாரனும் இரண்டறக் கலந்து ஒருவராகவே இருந்தோமாகையால் நீங்கள் இனி என்னை உங்களுடைய சொந்தக் குமாரனென்றே எண்ணிக் கொள்ள வேண்டும். என்னை நீங்கள் மரியாதையான பதங்களால்

அழைக்காமல், "அடேய் யோகலிங்கம்!" என்று என் பெயரைச் சொல்லி அழைக்கவேண்டும். நான் உங்களை இனி, "அப்பா" என்று தான் கூப்பிடப்போகிறேன். அதை நீங்கள் குற்றமாகக் கருதக் கூடாது. அதுவுமன்றி இன்னொரு முக்கியமான விஷயமும் இருக் கிறது. உங்கள் குமாரர் மறைந்துபோன காலத்தில், அவருடைய பணத்தில் ஒரு பாகம் என் வசத்தில் இருந்தது. அது இப்போதும் என்னிடத்தில் தானிருக்கிறது அது முழுதும் உங்களையே சேர வேண்டிய தாகையால, அதை நான் உங்களுடைய தேகபோஷணை யின் பொருட்டே உபயோகிக்கப் போகிறேன்; தங்களுக்கு எந்த ஊரில் இருக்கப்பிரியமோ, அந்த ஊரில் வசதியான ஒரு வீட்டை நாம் அமர்த்திக்கொள்வோம் உங்களுக்குத் தேவையான வேலைக் காரர்களையும் வேலைக்காரிகளையும் நான் நியமித்துத் தருகிறேன். உங்களுக்கு ஏற்பட்டுள்ள தேகப்பிணியை நீக்கத் தக்க வைத்தி யரைக் கொண்டு ஔஷதம் கொடுத்து உங்களைத் தேற்றவும் நான் ஏற்பாடு செய்கிறேன். நீங்கள் இனி எதைப்பற்றியும் கவலை கொள் ளாமல் ஈசுவரத் தியானம் செய்தபடி சௌக்கியமாகக் காலந்தள்ளுங் கள்." என்றார்.

அவர் கூறிய சொற்களையெல்லாம் கேட்ட குஞ்சிதபாத முதலி யார் அளவற்ற மகிழ்ச்சியும் ஆச்சரியமும் சகிக்கவொண்ணாத மன வெழுச்சியு மடைந்து ஆநந்தக் கண்ணீர் விடுத்து, "ஆகா! இதுவும் எம்பிரான் திருவருளா! என்ன ஆச்சரியம் இது! காற்று எவருடைய கண்ணிலும் படாவிட்டாலும் எங்கும் நிறைந்திருந்து எல்லோருக் கும் ஜீவாதாரமாக அமைந்து ஒவ்வொருவரையும் காப்பாற்றுவது போலக் கடவுளும் எவருடைய கண்ணிலும் படாமல் எங்கும் நிறைந்து தோன்றாத துணைவனாய் இருந்து ஒவ்வொருவரது தேவை யையும் உணர்ந்து அவரவர்க்குத் தக்க உதவி செய்து எலலோரை யும் காப்பாற்றுகிறார் என்பதற்கு இதைவிட வேறு திருஷ்டாந்தமும் தேவையா! நான் இப்போது காண்பதெல்லாம் ஏதோ சொப்பனம் போல இருக்கிறதேயன்றி உண்மையென்ற நம்பிக்கையே என் மனம் கொள்ளமாட்டேனென்கிறது. என்னப்பனே! யோகலிங்கம்! உன் னிஷ்டம் போலவே நீ எந்தக் காரியத்தையும் நடத்தலாம். நான் உன் விருப்பம் போல நடந்துக்கொள்ளத் தடையில்லை. என்னப்பனே! நீயும் என் குமாரனும் இவ்வளவு அன்னியோன்னியமாக இருந்த தாக நீ இப்போது சொல்லுகிறாயே கொஞ்சநேரத்துக்கு முன்நான் என் வரலாற்றையும் பெயரையும் வெளியிட்டபோது, "எங்கேயோ

திவானு யிருப்பதாகச் சொன்னார்களே அவருடைய தகப்பனாரா'' என்று கேட்டாயே! நீ ஒன்றையு மறியாதவனைப்போல அப்படிப் பேசிய காரணமென்ன'' வென்றார்.

திவான் சாமியார், "அப்பா! உங்கள் குமாரர் அடைந்திருந்த மேம்பாடு உன்னத நிலைமையும், போக போக்கியங்களும் ஒரு நிமிஷத்தில் கனவுபோல இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன; அவர் உயிருடனிருந்தது எனக்கே சொப்பனம்போல ஆகிவிட்ட தாகையால் திடீரென்று நீங்கள் அவருடையகுடும்ப பிரஸ்தாபத்தை எடுத்தபடியால் என்னை மீறி என் வாய் எதையோ உளறி விட்டது. அவ்வளவே தவிர வேறொன்று மில்லை. அது ஒருபுறம் இருக்க, நாம் இனி எந்த ஊரில் இருக்கலாம் என்பதைப் பற்றி உங்கள் அபிப் பிராயம் தெரியவேண்டும். ஒருகால், நீங்கள் முன்னிருந்த திருவட மருதூருக்கே போயிருக்க இஷ்டப்படுகிறீர்களா, அல்லது, வேறு எங்கேயாவது போயிருக்க விரும்புகிறீர்களா என்பது தெரிய வேண்டும்'' என்றார்.

குஞ்சிதபாத முதலியார் "நான் இனி அந்தத் திருவடமரு தூருக்குள் நுழையப் போகிறேனா? அந்த ஊர்க் கோவிலின் சுவாமி தரிசனம் எனக்கு மறுபடி இந்த ஜென்மத்தில் கிடைக் கப் போகிறதா? நான் உண்மையிலேயே இறந்துபோய் விட்டதாக அந்த ஊரார் நினைத்துக் கொண்டிருக்கிறார்களே! இந்த நிலைமை யில் நான் அங்கே போவது அவ்வளவு உசிதமாகப் படவில்லை. இதோ பக்கத்தில் திருவையாறு என்ற ஒரு புண்ணிய க்ஷேத்திர மிருக்கிறதென்று ஜனங்கள் சொல்லிக்கொண்டார்கள். அந்த ஊரில் தங்கி பஞ்சநதீசரையாவது தினம் தினம் தரிசித்து என் வாழ்நாளை இனியாவது நல் வாழ் நாளாய்க் கடத்தலாமென்று நினைக்கிறேன். அந்த ஊரில் ஓர் இடம் அமர்த்திக்கொண்டு அவ் விடத்தில் இருப்போம்'' என்றார்.

திவான் சாமியார் "சரி; இப்பொழுது சொற்பகால ஏற்பாடாக நாம் திருவையாற்றில் ஜாகை வைத்துக்கொண்டு இருந்து வரு வோம். நீங்கள் திருவடமருதூர் சுவாமியை மறுபடி தரிசிக்க வேண்டுமென்று மனப்பூர்வமான ஆர்வங் கொண்டு வருந்துகிறீர்க ளென்பது கடவுளுக்குத் தெரியாமல் போகாது. உங்களுடைய களங்கமெல்லாம் விலகும்படி செய்து, உங்களை அவ்விடத்திற்கு

வரவழைத்துக் கொள்வது அவருக்கு ஒரு பெரிய காரியமல்ல. அவர் எப்படியும் உங்களுடைய கோரிக்கையைப் பூர்த்திசெய்து வைப்பாரென்றே நான் நம்புகிறேன். அதைப் பற்றி நீங்கள் இனி கவலைகொள்ளவேண்டாம். அது ஒருபுறமிருக்க, இன்னம் முக்கியமான ஒரு விஷயத்தை உங்களிடம் கேட்டுக் தெரிந்து கொள்ள வேண்டுமென்று என் மனம் ஆசைகொள்ளுகிறது. என்னைவிட வயசில் எவ்வளவோ பெரியவர்களான உங்களிடம் அதைப்பற்றி எப்படிப் பிரஸ்தாபிக்கிறதென்று நான் அஞ்சுகிறேன். உங்களுடைய அநுமதி கிடைத்தால், அதை நான் பிரஸ்தாபிக்கிறேன்'' என்றார்.

குஞ்சிதபாத முதலியார், "என்னப்பனே! எந்தெந்தத் தகவல் உனக்குத் தெரியவேண்டுமோ அதையெல்லாம் கூசாமல் நீ என்னிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். அநேகமாய் அது என்னுடைய இளைய சம்சாரத்தைப் பற்றிய விஷயமாகத்தான் இருக்குமென்று நான் யூகிக்கிறேன். எதுவாக இருந்தாலும், இருக்கட்டும்; கேட்கலாம்'' என்றார்.

திவான் சாமியார் "அப்பா! நீங்கள் செய்தது சரியான யூகமே. இவ்வளவு உலக அநுபவமுடைய உங்களுக்குத் தெரியாத விஷயம் என்ன இருக்கிறது. நான் வேறு எதையும் கேட்கவிரும்பவில்லை, நீங்கள் இரண்டாவதுதாரம் கட்டிக்கொண்டீர்களே. அந்த அம்மாளும், அவர்களுடைய தகப்பனார் முதலிய பந்துக்களும் கடைசிவரையில உங்களிடம் அந்தரங்கமான அன்போடு இருந்து வந்தார்களா? நீங்கள் மார்படைப்பினால் சுவாசபங்க மடைந்திருந்த காலத்தில் அவர்கள் உண்மையிலேயே நீங்கள் இறந்துபோனதாக நம்பி உங்களைக் கொளுத்த முயற்சித்திருப்பார்களா? அல்லது, சுவாசபங்க மடைந்து படுத்திருக்கிறீர்களென்பதை யுணர்ந்தும், வேண்டுமென்று அப்படிப்பட்ட காரியம் செய்ய முயற்சித்திருப்பார்களா? அதற்குமுன் அவர்கள் உங்களிடம் நடந்துகொண்ட மாதிரியிலிருந்து உங்களுடைய மனசிற்கு அது எப்படிப் படுகிறது? நீங்கள் சுடுகாட்டிலிருந்துகொண்டு காத்தானை அனுப்பிய காலத்தில், அவனுக்கு அவர்கள் சொன்ன மறுமொழியைக் கொண்டே, அவர்கள் கெட்டவர்களென்றும் நாம் நிச்சயிப்பது சரியல்லவென்று நினைக்கிறேன். இறந்துபோனவர்கள் ஊருக்குள் வந்தால், ஜனங்கள் அவரை அடித்துக் கொன்றுவிடுவார்களென்று

மனப்பூர்வமாகப் பயந்தே அவர்கள் அப்படிச் சொல்லி இருப்பதும் சகஜமே. ஆகையால், அதை நாம் இப்பொழுது அவ்வளவாகப் பாராட்டுவது உசிதமல்ல எனக்கு முக்கியமாகத் தெரியவேண்டுவ தென்னவென்றால், அவர்கள் உங்களிடம் உண்மையான மதிப் பும் மரியாதையும் வைத்து நல்லமாதிரியாக நடந்துகொண்டு வந்தார்களா, அல்லது, எப்படியாவது நீங்கள் ஒழிந்துபோவதே தங்களுக்கு அநுகூலமானதென்ற அபிப்பிராயத்துடனிருந்தார் களா என்பதுதான் எனக்குத் தெளிவாகத் தெரியவேண்டும். ஏனென்றால், அவர்கள் இப்பொழுது அந்த ஊரில இல்லையானு லும், வேறு எந்த ஊரிலாவது உயிரோடிருப்பார்களென்பதைப் பற்றி சந்தேகமே இல்லை. அவர்கள் நல்ல நடத்தை யுடையவர்க ளாகவும், உங்களிடம் குரோதபுத்தியில்லாதவர்களாகவுமிருந்தால், நீங்கள் மறுபடியும் அவர்களுடன் சேர்ந்து ஒன்றாயிருப்பதற்கு வேண்டிய பிரயத்தனங்களை நான் செய்யலாமென்று நினைக்கி றேன். ஆகையால் இந்த முக்கியமான விஷயத்தில் நீங்கள் உங்க ளுடைய மனப்பூர்வமான அபிப்பிராயத்தை வெளியிடக் கோரு கிறேன்'' என்றார்.

குஞ்சிதபாத முதலியார், "அப்பா யோகலிங்கம்! என் இளைய சம்சாரமும், அவளுடைய தகப்பனார் முதலியோரும் நான் பார்த்த வரையில் என்னிடம் அந்தரங்க விசுவாசமுடையவர்களாகவும், எனக்கு இரண்டகம் நினைக்காதவர்களாகவுமே இருந்து வந்தார்க ளென்பது என் அபிப்பிராயம், ஆனால், காதகனிடம் அவர்கள் பேசிய மாதிரிதான் எனக்கு இன்னமும் நம்பிக்கைப்படாததாக இருக்கிறது. நீ எண்ணுகிறபடி, ஊராருக்குப் பயந்து அவர் கள் அப்படி நடந்து கொண்டாலும் நடந்து கொண்டிருக்கலாம். வேறு எந்த சந்தர்ப்பத்திலும் அவர்கள் என் விஷயத்தில் குரோத புத்தி கொண்டிருப்பதாக நான் உணரும்படி அவர்கள் நடந்து கொண்டதே இல்லை. ஆனால் இப்போது அவர்கள் என்ன நிதா னத்தில் இருக்கிறார்களோ, அது யாருக்குத் தெரியும். அந்தப் பெண் என்னிடம் நடந்துகொண்ட மாதிரி, என்னை மீறி நான் அவ ளிடம் பிரியம் கொள்ளும்படியாக இருந்ததென்றே நான் சொல்ல வேண்டும். அவர்கள் காதகனிடம் நடந்துகொண்ட மாதிரியி லிருந்து அந்தப் பிரியம் அடியோடு போய்விட்டதானாலும், அவர் கள் இப்போது எப்படிப்பட்ட நடத்தையோ டிருக்கிறார்கள் என் பதையும், அதற்குமுன் அவர்கள் என்னிடம் நடந்துகொண்டதெல்

லாம் பொய் வேஷமா, உண்மையானதுதானா என்பதையும் பார்க்க வேண்டுமென்ற ஓர் அவா தடுக்கமுடியாமல் என் மனசில் உண்டாகிறது. என்னுடைய கேவலமான இந்த நிலைமையில் அந்த எண்ணமெல்லாங் கைகூடவா போகிறது? அப்படியே அவர்களை நான் மறுபடி காண்கிறதாக வைத்துக் கொள்வோம். அவர்கள் நல்ல நடத்தையுடையவர்களாக இருந்தாலும், அவர்கள் என்னைப் பழையபடி எஜமானனாய் ஏற்றுக்கொள்ளப் போகிறார்களா, அல்லது, அவர்கள் கெட்ட நடத்தை யுடையவர்களாக இருந்தால், அவர்களைத் தண்டிக்கத்தான் எனக்கு உரிமை இருக்கிறதா! ஒன்றுமில்லை," என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் சிறிது நேரம் யோசனை செய்தபின், "சரி; இருக்கட்டும். கடவுள் செயல் எப்படி இருக்கிறதோ பார்க்கலாம். நான் போய் ஒரு வண்டி யமர்த்திக்கொண்டு வருகிறேன். உடனே நாம திருவையாற்றுக்குப் போய்ச் சேர்ந்து முதலில் அவ்விடத்தில் நம்முடைய குடித்தனத்தை ஸ்தாபித்துக் கொள்வோம்; அதன் பிறகு மற்ற விஷயங்களை கவனிப்போம்" என்று கூறியவண்ணம் அவ்விடத்தை விட்டு ஊருக்குள்போய் ஒரு வண்டி யமர்த்திக்கொண்டு வந்து தமது தந்தையை ஏற்றி அதற்குள் வைத்துக்கொண்டு திருவையாற்றிற்குப் போய்ச் சேர்ந்தார். போனவர் அந்த ஊரில பல இடங்களில் அமைக்கப் பட்டுள்ள தரும சத்திரங்களுள் ஒன்றையடைந்து, அதன் திண்ணையில் தமது தந்தையை உட்கார வைத்துவிட்டு தெருக்களுக்குள் நுழைந்து, விசாரித்துப் பார்த்து வசதியான ஒரு வீட்டை வாடகைக்குப பேசி முன் பணம் கொடுத்து அதை ஏற்றுக்கொண்டு சத்திரத்திற்கு வந்து, தமது தந்தையை மறுபடி வண்டியில் வைத்து அழைத்துக்கொண்டு போய்த் தமது புதிய ஜாகையில் விடுத்தார். விடுத்தபின், அவருடைய குற்றேவல்களைச் செய்வதற்கு நான்கு வேலையாட்களையும், சமயல் வீட்டு வேலைகள் முதலியவற்றைச் செய்வதற்கு இரணடு வேலைக்காரிகளையும் ஆக அறுவரை உடனே நியமித்ததன்றி, அந்த ஊரிலிருந்த வைத்தியர்களுள் சிறந்தவராய் விளங்கிய ஒருவரைத் தருவித்துத் தமது தந்தையின் தேககூறை உணரச்செய்து, அவரைத் தேற்றுவதற்கான சிறந்த ஔஷதங்களைக் கொடுக்கும்படி திட்டம் செய்துவிட்டு, கிழவருக்குத் தேவையான கட்டில, மெத்தைகள், திண்டு தலையணைகள், நாற்காலிகள், ஸோபாக்கள், பாத்திரங்கள், சமயல்

சாமான்கள், ஏராளமான உயர்ந்த வஸ்திரங்கள், சட்டைகள் முதலிய சகலமான பொருட்களேயும் இரண்டு மூன்று தினங்களுக்குள் வரவழைத்து வீட்டில் நிரப்பி, அதை ஒரு பெருத்த ஜமீந்தாரினது மாளிகை போல அலங்கரித்து விட்டார். அவர் ஒவ்வொரு சாமானேயும் அப்பொழுதுதான் புதிதாய் வாங்குகிறதாகக் காட்டிக் கொள்ளாமல், எவ்விடத்திலோ வுள்ள தமது சொந்த ஊரிலிருந்து அவைகள் வருவது போலவும், தாம் கிழவரது வைத்தியத்தைக் கருதி அந்த ஊருக்கு வந்திருப்பதாகவும் காட்டிக் கொண்டார். ஏனெனில், உலகைத் துறந்த யோகீசுவரரும், இளைத்து மெலிந்து பிச்சைக்காரரைப்போ லிருந்த கிழவரும் புதிதாக அவ்வளவு ஆடம்பரமான காரியங்களைச் செய்து கொள்வதை உணர்ந்தால், ஜனங்கள் அதைப்பற்றிப் பலவாறாக சந்தேகங் கொண்டு, தம்மைப்பற்றி ஏதேனும் தப்பான அபிப்பிராயம் கொள்வதோடு, ரகஸியத்தில் தங்களது செய்கைகளைக் கவனிக்கத் தொடங்குவார்களென்ற முன் யோசனையினால் திவான் அவ்வாறு எச்சரிக்கையாக நடந்து கொண்டார்.

ஒருவார காலத்திற்குள் கிழவருக்கு சகலமான வசதிகளும், சௌகரியங்களும் ஏற்பட்டுப் போயின. தாம இனி கடைத்தேறப் போவதில்லை யென்றும், தமக்கு உலகில யாரும் நாதியில்லை யென்றும் நினைத்து ஒருவாய்த் தண்ணீர் கொடுப்பாரும், "நீ யார்" என்று கேட்பாருமின்றி மனத்தளர்வும், பெருத்த ஏக்கமும், அவநம்பிக்கையும், விரக்தியும் அடைந்து உழன்று கிடந்த கிழவருக்குத் தமது புத்திரரே நேரில் வந்ததுபோலத் தமக்கு ஓர் ஆப்த பந்து கிடைத்து விட்டார் என்ற எண்ணமும், அவரிடம தமது குமாரருடைய பணம் ஏராளமாக இருக்கிறதென்ற எண்ணமும், அதையெல்லாம் வேண்டுமானல் அவர் தமபொருட்டுச் செலவிடக்கூடிய பரம தயாள குணம வாய்ந்தவரா யிருக்கிறாரென்ற எண்ணமும் உண்டாகவே, அவருக்கு ஓர் யானையின் பலம் உண்டாய் விட்டதென்றே கூறலாம். முக்கியமாக அவரது மனதில் திடீரென்று ஏற்பட்ட மாறுபாடென்றே அவரது தளர்விலும், இளைப்பிலும் பெரும் பாகத்தை உடனே விலக்கிய தன்றி பெருத்த மனோதிடம் உற்சாகம் சந்தோஷம் முதலியவற்றை உண்டாக்கி விட்டது. அது வன்றி, வைத்தியரது சிகிச்சைகளும், மற்ற போஜனபானுதி வசதிகளும் சுக ஜீவனமும் ஒன்று கூடி அவருக்கு வெகு சீக்கிரத்தில் புத்துயிரையும் தெளிவையும் தேக புஷ்டியையும் உண்டாக்கி விட்

டன. அதற்கு முன் கோலை யூன்றியும், இரண்டொருவர் கைலாகு கொடுக்கப் பெற்றும், தட்டித் தடுமாறி எழுந்து இரண்டோர் அடிகள் வைத்து நடக்கும் நிலைமையிலிருந்த கிழவர் சுமார் 15-தினங்களுக்குள் அதிகாலையில் எழுந்து தாமாகவே காவிரியாற்றிற்குச் சென்று நீராடி வேஷ்டி துவைத்து தமது நியமநிஷ்டைகளை முடித்துக் கொண்டு கோவிலைப் பிரதக்ஷிணம் செய்து சுவாமி தரிசனம் முடித்துக்கொண்டு வீட்டுக்குவரத் தொடங்கி விட்டார் வந்த பொழுது எண்பது, தொண்ணூறு வயது மதிக்கத் தக்க குடு குடு கிழவராகக் காணப்பட்ட குஞ்சிதபாத முதலியாரது வயது பதினைந்துதினங்களில் சுமார் அறுபதுக்குமேலிராதென்று எல்லோரும் எண்ணும்படி அதயாச்சரியகரமாக மாறிப் போயிற்று. அன்னியர் போலக் காணப்பட்ட ஒரு சாமியார் தம்மை, அடிக்கடி, “அப்பா! அப்பா!”, வென்று கனிகரமாகவும் பணிவாகவும் அழைத்ததையும், தமது புத்திரன் தம்மிடம் எவ்வளவு பயபக்தி வாஞ்சையோடு நடந்து கொள்வானோ அதைவிடப் பன்மடங்கு சிரேஷ்டமாக நடந்து கொண்டதையும் உணர, உணர அவரது தேகமும் மனதும் ஆநந்த பரவசமடைந்து பூரித்துப் போயின. அவர் அடிக்கடி தமது குமாரரையும், மற்ற மனிதர்களையும் நினைந்துருகிக் கண்ணீர் விடுத்து அழுதாராலும், திவான் சாமியாரது உத்கிருஷ்டமான நடத்தைகள் அவருக்கு தேவாமிருத அபிஷேகம் போல பரம சுகமாகவும், அவரது துயரத்தை வெகு சீக்கிரத்தில் விலக்குவனவாகவும் இருந்தன.

அவ்வாறு தமது தந்தை நல்லநிலைமைக்கு வந்து கொண்டிருந்ததைக் காண்பது திவானுக்குப் பரம சந்தோஷமாயிருந்தது. தமது தந்தை வேலைக்காரர்களை அடக்கியாளும் நிலைமைக்கு வந்துவிட்டாரென்பதைக் கண்ட திவான், தாம் அதற்குமேல் அவ்வாறு வீணில் பொழுதைப் போக்கிக்கொண்டிருப்பது ஒழுங்கல்லவென்று தீர்மானித்துக்கொண்டு, கிழவருடைய புகைப்படம் பிடித்து அதில் சுமார் பதினைந்து பிரதிகள் தயாரித்துத் தமது கைவசத்தில் பத்திரப்படுத்திக்கொண்டு, அவரிடம் தாம் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டிய தகவல்கள் யாவற்றையும் கேட்டுத் தெரிந்து கொண்டு, தாம் திருவடமருதூர் முதலிய ஊர்களுக்குப் போய் விட்டு இரண்டொரு தினங்களில் திரும்பிவந்து சேருவதாகக் கூறித் தமது தந்தையினிடம் அநுமதி பெற்றுக்கொண்டு ஒருநாள் அதிகாலையில் திருவையாற்றைவிட்டுப் புறப்பட்டு அன்றையதினம்

பிற்பகலில் திருவடமருதூருக்குப் போய்ச் சேர்ந்தார். சேர்ந்தவர் அதற்குமுன் இரண்டு தடவைகளில் போய்த் தங்கிய திண்ணையை அடைந்து "சம்போ! சங்கரா!" என்று வாய்விட்டுக் கடவுளை அழைத்த வண்ணம் அதன்மேல் உட்கார்ந்து சுவரில் சாய்ந்து சிறிதுநேரம் ஓய்ந்திருந்தபடி இளைப்பாறினர். அவரது கண்கள் அந்த வீட்டிற்கு எதிரிலிருந்த தமது மாளிகையை ஆசையோடு பார்த்தபடி ஒரே நிலையில் நின்றன. தமது தந்தையார் இருந்த மாளிகையைப் பார்க்கவே அவரது மனதில் பழைய நினைவுகள் யாவும் சண்டமாருதமாய்க் கிளம்பி சகிக்கவொண்ணாத வேதனையையும் துயரத்தையும் உண்டாக்கத் தொடங்கின. கடைசியாகத் தமது தந்தை அந்த இல்லத்தில் மணம்புரிந்து கொண்ட வைபவமும், அதன்பிறகு அவருக்கு நேர்ந்த அபூர்வமான கதியும், தமது மனையாட்டியான காந்திமதியம்மாளும், அரிய புதல்வனை ராஜாபகதூரும் கடைசியாக அந்த இடத்திலிருந்து மாய மாய் மறைந்து போனதும், முடிவில் அந்த மாளிகை கிழவரது இளைய மனைவிக்குச் சொந்தமானதும், அவர்களிடத்தி லிருந்து வேறொருவர் அதை வாங்கி அநுபவித்து வருவதும் ஆகிய விஷயங்கள் யாவும் அப்பொழுதே கண்முன் தோன்றும் நாடகக் காட்சிகள் போல அவரது அகக்கண்ணிற்குப் புலனாகவே, அவரது மனம் முழுதும் அந்த நினைவுகளில் ஆழ்ந்து லயித்துப் போயிற்று. அவரது தேகம் சித்திரப்பாவைபோல் அசைவற்று அப்படியே ஓய்ந்து காணப்பட்டது. சென்றுபோன நாட்களும், கழிந்துபோன காட்சிகளும், கடவுளால் அளிக்கப்பட்டுப் பிறகு பறிக்கப்பட்டுப் போன வைபவங்களும் மறுபடி திரும்பப் போகின்றனவா வென்றும், தமது மனிதர்களெல்லோரும் ஒன்று கூடி மறுபடியும் முன்போல வாழப் போகிறார்களா வென்றும் திவான் சாமியார் நினைத்து நினைத்து மனநைவடைந்து உருகி ஓய்ந்து அப்படியே சிறிது நேரம் உட்கார்ந்திருக்க, ஏதோ அலுவலாய் வெளியில் போய்விட்டு வீட்டிற்குள் நுழைந்த அந்த வீட்டின் ஸ்திரீ யாரோ பரதேசி திண்ணையில உட்கார்ந்திருந்ததாக உணர்ந்து ஒருபக்கமாக விலகி நடந்தபடி தனது கடைக்கண் பார்வையால் அவரைக் கவனித்தாள். கவனிக்கவே, சமீப காலத்தில் வந்துவிட்டுப்போன சாமியாரே மறுபடியும் வந்திருப்பதாக அந்த ஸ்திரீ உடனே உணர்ந்துகொண்டாள். உணர்ந்தவுடன், அதற்குமுன் பழகிய பிரியமான நண்பரைக் காண்பதுபோல ஒருவித இன்பமும் மன வெழுச்சியும் அவளுக்கு உண்டாயின. சந்

தோஷத்தினால் முகமும் மலர்ந்தது. அந்த ஸ்திரீ கதவு நிலைப்பக்கம் போய் ஒதுங்கி நின்றபடி பேசத்தொடங்கி, "சாமியார் ஐயா சௌக்கியமா! இப்போதுதான் வருகிறீர்களா?" என்று அன்பொழுக வினாவினள்.

அதைக் கேட்டு திடுக்கிட்ட கிவான் தமது சுய உணர்வை அடைந்து, கேள்வி கேட்டது இன்னார். என்பதை அறிந்து நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு "சௌக்கியந்தான் தாயே! இப்போதுதான் இந்த ஊருக்குள் நுழைந்து நேராக இங்கே வந்து உட்கார்ந்தேன். நான் எப்போது வந்தாலும், இந்தத் திண்ணை தான் எனக்குத் தாய் வீடுபோல நிழல் கொடுத்து உதவுகிறது. அன்பான குளிர்ந்த முகத்தோடு நீங்கள் என்னை ஒவ்வொரு தடவையிலும் விசாரிப்பது நான் எங்கே போனாலும் என் மனதை விட்டு அகல்கிறதே இல்லை. அம்மணீ! நான் வந்த வழியில் ஓர் ஊரில, நல்ல முதல் தரமான சீமை இலந்தைப் பழங்கள் விற்கப்பட்டன. நான் வந்து வழக்கப்படி இந்தத திண்ணையில் கொஞ்சநேரம் தங்கி விட்டுப் பிறகு போகவேண்டுமென்ற உத்தேசத்தோடு நான் வந்து கொண்டிருந்தேனாகையால், அந்தப் பழங்களைப் பார்த்த காலத்தில் உங்களுடைய நினைவு என் மனதில் உண்டாயிற்று, இந்த ஊரில் அந்தப் பழம் அகப்படுவது அரிதாகையால், நான் உங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்ற எண்ணங்கொண்டு ஐந்தாறு பழங்களை வாங்கி என் ஜோல்னாப் பையில் போட்டுக் கொண்டு வந்தேன். தாயே! இதை வாங்கிக் கொள்ளுங்கள். நான் இதோடு மூன்று தடவைகள் இங்கே வந்திருக்கிறேன்; உங்களுடைய குடும்பத்திலுள்ள மற்ற மனிதர்கள் யாரையும் பார்த்ததுமில்லை, உங்களுக்குக் குழந்தை குட்டிகள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதையும் கேட்டுத் தெரிந்து கொள்ளவுமில்லை. நீங்கள் இவ்வளவு அன்பாக என் க்ஷேமத்தைக் கேட்கையில் நான் உங்களுடைய குடும்ப க்ஷேமலாபங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் போவது கேவலம் அநாகரீகமான செய்கை. அம்மணீ! தாயே! இந்தப் பழங்களை எடுத்துக்கொண்டு போய் நீங்களும் சாப்பிட்டு, உங்களைச் சேர்ந்தவர்களுக்கும் கொடுங்கள்" என்று கூறிய வண்ணம் தமது மூட்டைக்குள்ளிருந்து ஆறு பெரிய சீமை இலந்தைப் பழங்களை எடுத்து அந்த ஸ்திரீ இருந்த பக்கமாக நகர்த்தி வைத்தார்.

அவர் கூறிய வார்த்தைகள் அத்தியந்த வாஞ்சையும் உருக்க மும் நிறைந்து, நிரம்பவும் கனிவாக இருந்தமையால், அந்த ஸ்திரீ யின் மனம் அவற்றால் முற்றிலும் வசீகரிக்கபபட்டுப் போயிற்று. சீமை இலந்தைப் பழத்தை அந்த ஸ்திரீ அதற்கு முன் கண்ணுலும் பார்த்தவளன்றாதலால், அவை தமக்கு வேண்டாமென்று மறுக்க அவளது மனம் இடந்தராமல் அவற்றை எடுத்துக்கொள்ளவேண்டு மென்ற வேட்கையையும் ஆவலையும் அடைந்தது. ஆயினும் அந்த ஸ்திரீ தனது கண்ணியத்தை இழக்க மனமற்றவளாய், "சுவாமி களே! ஏன் இத்தனை பழங்களை எடுத்து வைக்கிறீர்கள்? உங்களைப் போன்ற பரதேசிகளுக்கு எங்களைப் போன்றவர்கள் கொடுத்து உப சரிப்பதுபோக, உங்களிடமிருந்து நான் வாங்கிக்கொள்ளுகிறதா? சுவாமிகளே! இத்தனை பழங்கள் வேண்டாம், உங்களுக்கு வைத் துக்கொள்ளுங்கள். உங்கள் பிரியமான வசனத்தைக் கருதி நான் ஒரே ஒரு பழம் எடுத்துக்கொள்ளுகிறேன். எனக்குப் பிள்ளையா குட்டியா, ஒருவருமில்லை. நானும் என் புருஷரும்தான் இந்த வீட்டு மகா ஜனங்கள். என் புருஷர் ஊருக்குப் போயிருக்கிறார்; திரும்பி வர நாலைந்து தினங்கள் பிடிக்கும். இத்தனை பழங்களை வைத்துக்கொண்டு நான் என்னசெய்யப்போகிறேன்" என்றுகூறிய வண்ணம் பழமிருந்த இடத்தண்டை வந்து ஒரே ஒரு பழத்தை எடுத்துக்கொள்ள எத்தனித்தாள்.

உடனே திவான் சாமியார் அன்பாகவும் நயமாகவும் வற்புறுத் திக் கூறி, "இல்லையம்மா! நான் ஏராளமாகத் தின்றுவிட்டேன். எனக்கு வேண்டாம். நீங்களே எடுத்துக்கொள்ளுங்கள். வெளி யில் தோல் பெரிதாக இருக்கிறதேயொழிய தோலைப் போக்கினுல் உள்ளே ஒன்றுமிராது. ஒருவர் ஒரு காலத்தில் பதினைந்து பழங் கள் சாப்பிடலாம். எடுத்து உள்ளே கொண்டுபோய்வைத்துவிட்டு வாருங்கள்" என்று கூறினுர்.

அவரது வசீகரமான சொற்களை அதற்குமேலும் மறுக்க வல் லமையற்றவளாய் அந்த மாது உடனே குனிந்து பழங்களனைத்தை யும் எடுத்துத் தனது மடியில்வைத்துகட்டிக்கொண்டபடி அவரிடம் முனனிலும் அதிக அன்பாகவும் குழைவாகவும் வார்த்தையாடத் தலைப்பட்டாள்.

திவான் சாமியார்:—தாயே! சமீப காலத்தில் நான் இங்கே வந்துவிட்டுப்போனது உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா?

ஸ்திரீ:—ஓ! நன்றாக ஞாபகமிருக்கிறதே! நீங்கள் இப்போது தானே வந்துவிட்டுப் போனீர்கள். நேற்றுதான் வந்துவிட்டுப் போனதுபோல வல்லவா இருக்கிறது.

தி. சாமியார்:—அப்படியா இருக்கிறது! நான் இந்தஊரை விட்டுப் போய் சரியாய் இருபது நாட்கள் ஆய்விட்டனவே! இதற்குள் நான் எத்தனையோ ஊர்களுக்குப் போய்விட்டல்லவா திரும்பி வந்திருக்கிறேன். அம்மணி! நான் முன்னேவந்திருந்துவிட்டுப்போன போது, இவ்வளவு சீக்கிரத்தில் நான் மறுபடி திரும்பி இந்த ஊருக்கு வருவேனென்று நினைக்கவே இல்லை. நான் போன இடத்தில் முக்கியமான ஒரு பொருள் எனக்குக் கிடைத்தது. அது எவருக்கும் கிடைக்கக்கூடியதல்ல அதை அலட்சியமாக எவரிடத்திலாவது கொடுத்துவிடவும், மனம் இடங்கொடுக்கவில்லை. அது எனக்கு உபயோகப் படுவதாகவும் தோன்றவில்லை அப்போது உங்களுடைய ஞாபகம் வந்தது. ஆகையால், உடனே புறப்பட்டு இந்த ஊருக்கு வந்து சேர்ந்தேன்.

ஸ்திரீ:—(வியப்பும் ஆச்சரியமும் அடைந்து) என்ன சுவாமிகளே! நீங்கள் சொல்வது எனக்குக் கொஞ்சமும் விளங்கவே இல்லையே! நீங்கள் குறித்துப் பேசுவது ஒருவேளை இந்த சீமை இலந்தைப் பழமாயிருக்குமா ?

தி. சாமியார்:—இல்லை அம்மா! இல்லை. இந்த அற்பப் பழம் கிடைத்தால், அதைப் பற்றி நான் இவ்விதமான எண்ணமெல்லாம் கொள்வது நியாயமாகுமா? நான் குறிப்பது பழமல்ல. அது வேறொரு வஸ்து. இதோ தருகிறேன் பாருங்கள்—என்று கூறிய வண்ணம் தமது மூட்டைக்குள் தனியாக மேலே எடுத்து வைக்கப் பட்டிருந்த தமது தந்தையின் புகைப்படப் பிரதிகளுள் ஒன்றை உடனே எடுத்து சிறிது தூரத்திற்கப்பால்வைத்து நகர்த்திவிட்டார். விஷயம் எதுவாக இருக்குமென்பதை சிறிதும் யூகிக்கமாட்டாதவளாய்ப் பலவிதமான சந்தேகங்கள் கொண்டு தவித்து ஆவலே வடிவாக நின்ற அந்த ஸ்திரீ விரைவாகப் பாய்ந்து அந்தப் படத்தைத் தனது கையில் எடுத்துச் சரேலென்று பார்த்தவள், அடுத்த நிமிஷம், "சுவாமிகளே! இது யாருடைய படம்! நான் அடிக்கடி பார்த்து நிரம்பவும் பழகிய மனிதருடைய படமல்லவா இது! இவர் யார் என்பது நெஞ்சில் இருக்கிறது; வாயில் வரமாட்டேனென்

கிறதே! ஆம்! ஆம்! இப்போது ஞாபகம் வந்துவிட்டது. இதோ எதிர்த்த வீட்டிலிருந்த ஜவுளிக்கார முதலியாருடைய படமல்லவா இது? இது உங்களுக்கு எங்கிருந்து கிடைத்தது? நீங்கள் இதற்கு முன் இரண்டு தடவை வந்தபோதெல்லாம் இவரைப் பற்றியே பேசினீர்களே! கடைசியாக இந்த ஊரை விட்டு எங்கேயோ போன இடத்தில்கூட இந்த மனிதருடைய படமே உங்களுக்குக் கிடைத்ததுபோலிருக்கிறதே!

தி. சாமியார்:—ஆம். அம்மா! அவரவருடைய மனதில் உள்ள சிந்தனைப்படியேதான் காரியமும் கைகூடுமென்று நம்முடைய பெரியோர்கள் சொல்லக் கேட்டதில்லையா. அது நிஜமாகவே முடிந்தது. இது எனக்கு எப்படிக் கிடைத்தது தெரியுமா? நான் இந்த ஊரிலிருந்து புறப்பட்டுப் போனபிறகு பல ஸ்தலங்களுக்கு யாத்திரை போய்க் கடைசியில் தஞ்சாவூருக்குப் போனேன். அங்கே நான் கடைத்தெருவின் வழியாய்ப் போன காலத்தில் ஒரு மனிதன் ரஸ்தாவோரத்தில் சுமார் நூறு படங்களைப் பரப்பி வைத்து அரைவிலை கால்விலை யென்று சொல்லி விற்றுக்கொண்டிருந்தான். அதில் தேவகணங்களைச் சேர்ந்த படங்கள் அநேகம் இருந்தன. மனிதர்களுடைய புகைப்படமும் ஏராளமாகக் கிடந்தன. ஜனங்கள் அந்தக் கடையைச் சுற்றிலும் கும்பலாக நின்று ஆளுக்கொன்றாய்ப் படங்களை எடுத்து வேடிக்கை பார்ப்பதும் விலைக்கு வாங்குவதுமா யிருந்தனர். அப்போது ஒரு மனிதன் இந்தப் படத்தை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு “இது யாருடைய படம் ஐயா? இதை யார் வாங்கப் போகிறார்களென்று இங்கே கொண்டு வந்து வைத்திருக்கிறீர்? என்று கேட்டான்.

அதற்கு அந்தப் படக்கடைக்காரன் “அடே போ ஐயா! இது ஒரு பெரிய மனிதருடைய படமல்லவா! திருவனந்தபுரம் திவான் வேலை பார்த்த ஒருவருடைய தகப்பனாரின் படம் இது? அந்த திவானைப் புலி தின்றுவிட்டது. அவரிடம் தஞ்சாவூரான் ஒருவன் வேலை பார்த்து வந்தான். அந்த வேலைக்காரனுக்கு இந்தப் படம் கிடைத்தது. இந்தப் படத்தை இவர்களுடைய சொந்தக்காரரிடம் கொடுத்தால், அவர்கள் நூறு இருநூறு இனாம் கொடுப்பார்கள் என்று எண்ணி அவன் இதை எடுத்து வந்தானாம், வந்த இடத்தில் அவனுக்குப் பணத்தட்டு வந்துவிட்டது. இதை என்னிடம் கொடுத்து ஒரு ரூபாய் வாங்கிப் போனான். அதை இரண்டு

ரூபாயாய்த் திருப்பிக் கொடுத்துவிட்டு மறுபடி இதை வாங்கிக் கொண்டு போவதாய்ச் சொன்னவன், அவன் குறித்த வாயிதாவுக்குள் வரவில்லை. ஆகையால் இதை நான் விற்கிறேன். இது யாருக்குப் போகிறதோ, அவருக்கு லாட்டரிச் சீட்டு மாதிரி பெரிய பணத்துகை கிடைக்கும்" என்றான்.

அவன் சொன்ன வரலாற்றை சிலர் உண்மையென்று எண்ணினார்கள்; சிலர் பொய்யாக மதித்தார்கள் ஆயினும் எவரும் இதை வாங்கவில்லை. திருவனந்தபுரம் திவானின் தகப்பனார் என்ற சொல்லைக் கேட்டவுடன், எனக்கு இந்தக் கிழவருடைய ஞாபகம் உண்டாயிற்று. நான் உடனே இந்தப் படத்தை வாங்கிப் பார்த்தேன். இதற்குமுன் இந்தக் கிழவரை நான் பார்த்திருப்பதாக உங்களிடம் சொல்லியிருக்கிறேனல்லவா படத்தைப் பார்த்தது கிழவரை நேரில் பார்த்ததுபோல இருந்தது. நான் உடனே இதற்கு விலை பேசி முடித்துப் பணத்தைக் கொடுத்து இதை வாங்கிக் கொண்டேன். இதை நான் வாங்கினபொழுது என்ன உத்தேசம் தெரியுமா? இந்தக் கிழவருடைய சம்சாரம் முதலியோரிடம் ஒரு வேளை இப்படிப்பட்ட படம் இராதென்றும், நான் இதை அவர்களிடம் கொடுக்கலாமென்றும் எண்ணியே இதை நான் வாங்கினேன். வாங்கிக் கொண்டு அப்பால் போனவுடன்தான் எனக்கு இன்னொரு விஷயம் நினைவுக்கு வந்தது. கிழவர் இறந்த பிறகு அவருடைய இளைய சம்சாரம் முதலியோர் ஒரு மாஸகாலம் வரையில் இங்கே இருந்து எல்லா சொத்துக்களையும் விற்றுப் பணமாக்கிக்கொண்டு இரவோடிரவாய்ப் புறப்பட்டு எவருக்கும் தெரியாமல் எங்கேயோ போய்விட்டதாக நீங்கள் சொன்னது பின்னால்தான் நினைவுக்கு வந்தது. நான் கொண்ட கருத்து பலிதமடைய வகையில்லாமல் போய்விட்டதே என்றும், இதை வைத்துக்கொண்டு என்ன செய்கிறதென்றும் யோசனை செய்தேன். கடைசியில் உங்களுடைய நினைவுதான் உண்டாயிற்று. ஏனென்றால் எனக்கு இந்த ஊரில் நீங்கள் ஒருவர்தான் அறிமுகமானவர்கள். இதை உங்களிடம் கொண்டு வந்து கொடுத்தால், இதை இன்னவிதமாய் உபயோகிக்கலாம் என்று நீங்கள் ஏதாவது யுக்தி சொல்லுவீர்கள். அதுவுமில்லாவிட்டால், நான் இதை உங்களிடமே கொடுத்து விட்டுப்போனால், இனிமேல் ஒரு வேளை அந்த இளைய சமசாரம் முதலியோர் இருக்கும் இடத்தைப் பற்றி ஏதாவது தகவல் கிடைத்தாலும் சரி, அல்லது, அவர்களுள் எவராவது இந்த ஊருக்கு மறுபடி வந்தாலும் சரி, நீங்கள் இதை

அவர்களிடம் சேர்த்துவிடலாம் என்று தீர்மானித்து நான் இதை எடுத்துக்கொண்டு நேராக இந்த ஊருக்கு வந்தேன். ஆனால் அந்தக் கடைக்காரன் சொன்னது போல, இதை சம்பந்தப்பட்ட மனிதரிடம் கொடுத்து அதனால் பெருத்த பணத்தொகை சம்பாதிக்க வேண்டுமென்பது என்னுடைய கருத்தல்ல இதற்காக எனக்கு ஒரு செல்லாக்காசுகூடக் கிடைக்க வேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை. அவ்வளவுதான் இதன் வரலாறு, இனி நீங்கள் இதை எப்படியாவது உபயோகப்படுத்திக் கொள்ளலாம். என் கோரிக்கை பூர்த்தியாகிவிட்டது. இவ்வளவோடு நான் திருப்தி அடைகிறேன்—என்றார்.

அந்த வரலாற்றை உண்மையென்றே நம்பிய அஷ் ஸ்திரீ "ஓகோ! அப்படியா சங்கதி! நீங்கள் இந்தப் படவிஷயத்தில் வெகு தூரம் பாடுபட்டிருக்கிறீர்கள். ஆனால் இதை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேனென்பது தான் தெரியவில்லை" என்றாள்.

திவான் சாமியார், "ஏனம்மா! அந்தப் பெண்ணின் தகப்பனான இராமலிங்க முதலியாருடைய பூர்வீகமான ஊர் எது என்பது இந்த ஊரில் யாருக்காவது தெரிந்திருக்காதா? அவர்கள் ஒருவேளை அவர்களுடைய பூர்வீகமான இடத்திற்கு போனாலும் போயிருக்கலாம் அல்லது, நீங்கள் முன் தடவையில் இன்னொரு சங்கதி சொன்னீர்களே. அந்தப் பெண்ணுக்கு யார் யாருடைய சிநேகமோ ஏற்பட்டதென்றும், அது கடைசியில் எப்படியோ முடிந்தது என்றும் நீங்கள் சொன்னீர்கள். அப்படி சிநேகமானவர்கள் யாரும் இந்த ஊரில் இப்போது இல்லையா? அவர்களிடம் விசாரித்துப் பார்த்தால் அந்தப் பெண்ணும் அதைச் சேர்ந்தவர்களும் இப்போது இன்ன ஊரில் இருக்கிறார்களென்பது ஒருவேளை அவருக்குத் தெரிந்தாலும் தெரியலாமல்லவா?" என்றார்.

அதைக்கேட்ட அந்த ஸ்திரீ சிறிதுநேரம் ஆழ்ந்து யோசனை செய்தபின் "சுவாமிகளுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இறந்து போன பெரிய மனிதருடைய படமாயிற்றே யென்றும், அவரைச் சேர்ந்தவர்களிடம் இதைக் கொடுத்தால் அவர்கள் நிரம்பவும் சந்தோஷமடைவதன்றி, இதை ஒரு பெரிய நிதிபோல எந்நாளும் வைத்துப் பாராட்டுவார்களே யென்றும் நீங்கள் எண்ணுகிறீர்கள்.

இவர்கள் அப்படிப்பட்ட தக்க மனிதர்களாக எனக்குப் படவில்லை. பெண்ணின் தகப்பனார் கேவலம் தவசிப்பிள்ளை வேலை செய்தவர். கிழவர் வேறே வார்சு இல்லாமல் இருப்பதோடு அபாரமான ஐசுவரியத்தை வைத்துக்கொண்டிருக்கிறாரே யென்றும், அதை யெல்லாம் அடைய வேண்டுமென்றும் நினைத்தே அவர் தம்முடைய பெண்ணைக் கிழவருக்குக் கட்டிக் கொடுத்தார். அவருடைய கோரிக்கை சுலபத்தில் நிறைவேறியது. கிழவரும் வெகு சீக்கிரம் பரலோகப் பிராப்தி யடைந்துவிட்டார். சநியன் தொலைந்ததென்றும் சங்கடம் விலகியதென்றும் நினைத்து இரட்டை சந்தோஷத்தோடு பணத்தை எடுத்துக்கொண்டு அவர்கள் எங்கேயோ போய்விட்டார்கள். அந்தக் கிழவருடைய படம் இல்லையென்று அவர்கள் அழுகிறார்களா! அவர்களிடம் இதுபோய்ச் சேர்ந்தால்தான், இதை அவர்கள் இலட்சியம் செய்யப்போகிறார்களா! அதுவுமில்லை. ஒருவேளை இதுபோன்ற படம் அவர்களிடம் ஏற்கெனவே இருந்தாலும் இருக்கலாம். ஆகையால் நாம் படும்பாடு வீண்பாடாக முடியுமே தவிர வேறில்லை. அவர்களுடைய பூர்வீகமான ஸ்தலம் இன்னது என்பது எனக்குத் தெரியாது. இந்த ஊரிலுள்ள மற்ற பிரமுகர்களிடம் விசாரித்துப் பார்த்தால் அது ஒருவேளை தெரிந்தாலும் தெரியலாம். நான் பெண் பிள்ளை யாகையால, அவ்வளவு தூரம் துணிந்து நான் அந்த விசாரணையைச் செய்வது உசிதமல்ல என் புருஷர் ஊரில் இருந்தாலும் அவரைக் கொண்டு விசாரித்துப் பார்க்கச் சொல்லுவேன் அவருமில்லை: ஆகையால், நீங்கள்தான் நேரில் அதைச் செய்யவேண்டும். அவர்களுடன் இன்னார்தான் சிநேகமா யிருந்தார்கள், இன்னார் சிநேகமாக இல்லையென்று நான் சொல்லமுடியாது. கிழவர் உயிரோடிருந்த வரையில், அவருடைய அச்சத்தில் எவரும் அந்த வீட்டிற்கு வந்ததில்லை. அவர் போனதுதான் தாமசம். இந்த ஊரிலுள்ள சகலமான ஜனங்களும் அவர்கள் வீட்டுக்கு இரவு பகல் வித்தியாசமில்லாமல் வருவதும் போவதும் கூத்தடிப்பதுமாய் ஆரம்பித்து விட்டனர். கிழவர் போன ஒரு மாசகாலத்திற்குள் அது பெருத்த கள்ளுக்கடைபோலாகிவிட்டது. பெண்ணைப்பற்றி பலவிதமான வதந்திகள் கிளம்பிவிட்டன. அப்படிக் கிளம்பவே, நான் நீ என்று அம்பட்டன் வண்ணான் முதலியோர்கூட அவர்களுடைய வீட்டுக்குள் நுழையவும் அவர்களோடு குலாவவும் ஆரம்பித்து விட்டார்கள். இந்த நிலைமையில் ஒருநாள் காலையில் அவர்களுடைய வீடு காலியாக இருந்தது.

இரவோடிரவாய் அவர்கள் எங்கேயோ போய்விட்டார்களென்பது தெரிந்தது கிழவருடைய ஸ்தாவர சொத்துகளையெல்லாம் அவர்கள் சுமார் பதினைந்து நாள்களுக்கு முன்பே ஒரு பெரிய மிராசுதாரிடம் விற்றுவிட்டதாகவும் தெரிந்தது. அவர்களுடன் அன்னியோன்னிய சிநேகம் பாராட்டி வீட்டுக்குள் போய் வந்து கொண்டிருந்தவர்கள் எல்லோரும், "அவர்கள் எங்கே போய் விட்டார்கள்?" என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்களேயன்றி, அவர்கள் இன்ன இடத்துக்குப் போனார்களென்று சொல்லக் கூடியவர் ஒருவரும் இல்லை. ஆகையால் நான் இப்போது புதிதாக விசாரிப்பதற்கு எதுவும் பாக்கி இல்லை. விசாரித்தாலும், அதனால் உபயோகமே இல்லை." என்றாள்.

அதைக் கேட்ட திவான் சாமியார் மிகுந்த சஞ்சலமும் கிலேசமும் அடைந்து, "அடாடா! கிழவருக்குப் பிறகு அவர்களுடைய நிலைமை அப்படியா போய் விட்டது! நீங்கள் சொல்வதைப் பார்த்தால், இந்த ஊராருடைய உபத்திரவத்தைப் பொறுக்க மாட்டாமல் அவர்கள் எவருக்கும் சொல்லாமல் புறப்பட்டுப் போய் விட்டதாக அல்லவா எண்ண வேண்டி இருக்கிறது. அவர்கள் ஏழ்மை நிலைமையிலிருந்தவர்களென்றும், அவர்களுக்கு ஜனக்கட்டு இல்லையென்றும் கண்டு அவர்களுக்கு வந்து சேர்ந்த அபாரமான செல்வத்தைக் கண்டு பொறாமை கொண்டும் அதை அபகரிக்க எண்ணியும் இளம்பிராயப் பெண்ணைத் துன்மார்க்கத்தில் உபயோகப் படுத்திக் கொள்ள நினைத்துமே ஜனங்கள் அவர்களிடம் தாறுமாறாக நடந்து கொண்டு இல்லாத பொல்லாத அபவாதத்தையெல்லாம் கட்டிவிட்டிருக்க வேண்டுமென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். இதில் இன்னொரு முக்கியமான விஷயமிருக்கிறது. அந்தப் பெண் துன்மார்க்கமான நடத்தையில் இறங்கியிருக்கும் பட்சத்தில், அதற்கு உடந்தையாயிருந்த ஒரு மனிதனிடத்திலாவது அந்தப் பெண் தாங்கள் போகும் இடத்தை ரகஸியத்தில் தெரிவித்திருக்கும். அந்த மனிதனும் கூடப்போயிருப்பான் நீங்கள் சொல்லும் வரலாற்றை வைத்துக் கொண்டு பார்த்தால, அவர்களோடு இந்த ஊர் மனிதர் வேறு யாரும் போய் விட்டதாகவும் தெரியவில்லை. இந்த ஊர் மனிதருள் ஒருவருக்காவது அவர்கள் இன்ன இடத்தில் இருக்கிறார்கள் என்பது ரகஸியத்தில் தெரிந்திருந்தாலும், அது எப்படியும் இதற்குள் பகிரங்கத்துக்கு வந்திருக்கும். இதுவரையில் விஷயம் ரகஸியமாகவே இருப்பதைப் பார்த்தால், அவர்கள் ஒருவ

ரிடத்தில் கூட சொல்லாமல் போயிருக்கவேண்டு மென்பது நிச்சயமாகிறது. அதிலிருந்து, அவர்கள் இந்த ஊரிலுள்ள எந்த மனிதருடனும் துன்மார்க்கமான சம்பந்தமே வைத்துக் கொள்ள வில்லையென்பது உறுதியாகிறது. இந்த ஊரில் இருந்த வரையில் பெண் சுத்தமாகவே இருந்திருக்க வேண்டும். இந்த ஊரார் அவளைக் கெடுக்கவும் அவர்களிடமிருந்த சொத்தை அபகரிக்கவும் எண்ணியதைக் கண்டு பயந்தே அவர்கள் இந்த ஊரை விட்டுப் போய் விட்டார்கள் என்பதும் உறுதிப்படுகிறது இருக்கட்டும். நீங்கள் ஒன்றும செய்ய வேண்டாம். நானும் இதைப்பற்றிக் கவலைப்படவில்லை. ஊரூராய்த் திரியும் பரதேசியான நான் இதைத் தூக்கிக்கொண்டு போவதை விட இது உங்கள் வீட்டுச் சுவரிலேயே ஒரு மூலையில் தொங்கிக் கொண்டிருக்கட்டும். நான் மறுபடி யாத்திரை போகும் காலத்தில் எந்த ஊரிலாவது தற்செயலாக அவர்களைப் பற்றிய தகவல் ஏதேனும் கிடைக்குமானல், அவர்களைக் கண்டு உங்களிடம் வந்து படத்தை வாங்கிக்கொண்டு போகும்படி செய்கிறேன்,'' என்றார்.

அம்மாள் அதற்கு இசைந்தாள். அதற்குமேல் அவர்களிருவரும் வேறு பல வகைப்பட்ட விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். தாம் அன்றைய தினம் அந்த ஊரில் தங்கி மறுநாள் புறப்பட்டுப்போக உத்தேசிப்பதாய் சாமியார் கூற, அந்த ஸ்திரீ அவர் அன்றிரவு தங்கள் மனையில் போஜனம் செய்ய வேண்டுமென்று வருந்தி வேண்டிக்கொள்ள, அதற்கு திவான் சாமியார் இணங்கினார்,

அப்பொழுது மாலை 5-மணி சமயமாயிற்று, தாம் ஆற்றங் கரைப் பக்கம் போய்விட்டு சாயுங்காலம் சுவாமி தரிசனம் செய்து கொண்டு மறுபடி வருவதாகக் கூறியபின் அவர் அதை விட்டுப் புறப்பட்டார். புறப்பட்டவர் அந்த ஊருக்கு வெளியிலிருந்த பறைச் சேரியை நோக்கிச் சென்று அதற்கருகில் காணப்பட்ட இலுப்பைத் தோப்பில் மாட்டுக்காரப் பையன்கள் சிலர் விளையாடிக்கொண்டிருந்ததைக் கண்டு அந்த இடத்திற்குப் போய், அவர்களை நோக்கி, "அப்பா குழந்தைகளா! இந்தச் சேரியில் காத்தான் என்ற பெயருடைய ஒரு கிழவன் இருந்தானே, அவன் இருக்கிறானா?'' என்று அன்பாக வினவினார்.

பெருத்த சாமியாரைப்போலக் காணப்பட்ட நமது திவானைப் பார்த்தது மாட்டுக்காரப் பையன்களது மனதில் ஒருவித வியப்பை

யும், அவரிடத்தில் பயபக்தி விசுவாசத்தையும் உண்டாக்கி யது. விளையாட்டின் இன்பத்திலேயே லயித்துப்போய் அதே கவனமாக ஓடிக்கொண்டிருந்த பெரும்பாலோர் நிற்க, சிலர் அவ ரண்டை நெருங்கிவந்து சிறிது விலகிப் பணிவாக நின்று வணக்கமாக அவருக்கு மறுமொழி தரத் தொடங்கினர். அவர்க ளுள் ஒருவன், "சாமியாரையா! நம்ப வெட்டியாரக் காத்தானையா கேக்கிறீங்க! ஊட்டுலேதான் இருக்கறானுங்க சாமியாரே! போயி அளெச்சாரட்டுங்களா! அவங்கிட்ட ஏதாச்சும் சோலியா வந்தீங் களா? நீங்க யாருன்னு சொல்லறது?" என்றான்.

அதைக் கேட்ட திவான் சாமியார், "அப்பா! இந்த ஊர்ச் சுடுகாட்டில் வெகுகாலமாய் அவன் வெட்டியான் வேலை பார்த்துக் கொண்டு வருவதாகச் சொன்னார்கள். அந்த காத்தானைத்தான் நான் பார்க்கவேண்டும் இப்போதுகூட அவன்தானே அந்த அலு வலைப் பார்க்கிறவன்" என்றார். அவருடன் பேசியவன், "ஆமாஞ் சாமீ! அந்தக் காத்தானைத்தான் நானும் குறிக்கறேனுங்க." அவந்தானுங்க இப்பவும் அந்த அலுவலெப் பாக்கறானுங்க, ஆனா அவுனுக்கு நொம்ப வயசாயிப் போச்சுங்களே தள்ளாமை வந்துடிச்சிங்க. அவனுக்கு வீமன் அருச்சுனன் கணக்கா மலெ மலெயாமவனுங்கஇருக்கிறானுங்க. அவுங்களும் கூடமாட இருந்து ஒத்தாசெ பண்ணறானுங்க, நீங்க இங்கிட்டே இருங்க. நானு ஒரே ஓட்டமா ஓடி அவனெ அளெச்சாரேனுங்க" என்று கூறிய வண்ணம் அவ்விடத்தைவிட்டு, வீடுகளிருந்த இடத்தை நோக்கி ஓட்டமாக ஓடிப்போய்விட்டான். திவான் சாமியார் காத்தானுடன் தனிமையில் ரகசியமாகப் பேச விரும்பினாராதலால் மாட்டுக்காரப் பையன்கள் கும்பலாக இருந்த இடத்தை விட்டு விலகிச் சிறிது தூரம் அப்பால் நடந்துபோய்த் தனியாகப் பிரிந்திருந்த ஒரு திட லில் நின்றவண்ணம் காததானினது வருகையை ஆவலோடு எதிர் பார்த்து நின்றார்

சிறிது நேரத்தில் தடியும் கையுமாகக் காத்தான் அவ்விடத் திற்கு வந்து சேர்ந்தான். அவனை அழைதது வரச் சென்ற மாட் டுக்காரப் பையன் மறுபடி விளையாட்டுக் கும்பலில் போய்ச் சேர்ந்து கொண்டான். யாரோ ஒரு சாமியார் தன்னை எதன் பொருட்டு அழைக்கிறார் என்ற ஐயங்கொண்டு, பல விதமாக எண்ணமிட்டுத தயங்கித் தயங்கிச் சாமியாரண்டை போய்த் தூர விலகி நின்ற

காத்தான், "சாமியாரய்யா! கும்பிட்றேனுங்க" என்று நிரம்பவும் வணக்கமாகக் குனிந்து அவருக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு நிமிர்ந்து நின்று அவரது முகத்தை உற்று நோக்கி, அதற்கு முன் அவர் தமக்குப் பழக்கமானவரா வென்று அறிய முயற்சித்தான். உடனே திவான் சாமியார் தமது வலக் கரத்தை மார்பு வரையில் உயர்த்தி அவனை ஆசீர்வதித்துவிட்டு அவனை நோக்கி, "உன் பெயர் காத்தானா?" என்று நிரம்பவும் பிரியமாக வினவினார்.

காத்தான்:—(பணிவாக) ஆமாஞ்சாமீ! நான்தான் காத்தான். சாமியாரையாவோடே அடையாளம் எனக்குத் தெரியலியே! நீங்க யாருங்க சாமீ?

திவான் சாமியார்:—அப்பா காத்தான்! என்னை நீ இதற்கு முன் பார்த்திருக்கமாட்டாய். நானும் உன்னைப் பார்த்ததில்லை. வேறு விசேஷம் ஒன்றுமில்லை. உன்னிடம் கோரோசனை நல்ல தினிசாக அகப்படுமென்று கேள்வியுற்றிருக்கிறேன். எனக்கு மருந்துகள் செய்யத்தெரியும். சில மருந்துகள் கோரோசனையைக்கொண்டு தயாராகவேண்டும். உன்னிடம் நல்ல கோரோசனை தினிக்கள் இப்போது கைவசத்தில் இருக்குமோ என்று கேட்டு விட்டுப் போகலாமென்று உன்னை வரவழைத்தேன். இருந்தால், கொண்டு வந்து கொடு. உடனே விலை கொடுத்து நான் வாங்கிக் கொள்ளுகிறேன்.

காத்தான்:—சாமீ! எந்த மாதிரிக் கோரோசனை ஒணுமானாலும் எங்கிட்ட இருக்குது சாமீ! ஒசத்தியும் இருக்குது; மட்டமும் இருக்குது. ஆனா, அததுக்குத் தக்கின வெலெ குடுத்து வாங்கர மவராசரைத்தான் காணுங்க சாமி.

தி. சாமியார்:—ஓகோ அப்படியா! எனக்கு நல்ல முதல்தரமான கோரோசனைதான் தேவை. நீ என்ன விலை சொல்லுகிறாயோ அதை நான் மறு பேச்சுப் பேசாமல் கொடுத்து விடுகிறேன்.

காத்தான்:—நல்லது சாமீ! சந்தோஷம்! இதுவரையிலே இந்த மாதிரி யாரும் சொன்னதில்லீங்க; நானு ஊட்டுக்குப் போயி எடுத்தாறட்டுமா? மொதல் தாரம் கோரோசனை ஒரு மாட்டுலெ இருந்து எடுத்தது ஒருவரான் ஆவுங்க. மட்டம் ஒரு மாட்டுலெ இருந்து எடுத்தது ரெண்டேருபாதானுங்க. எது வோணுமானா

லும் எடுத்தாறேன். சொல்லுங்க எத்தினி மாட்டுக் கோரோசனை ஒணுங்கறத்தியும் சொல்லுங்க.

தி. சாமியார்:—நல்ல முதல்தரமான கோரோசனை இப்போது உன்னிடத்தில் எத்தனை மாட்டிலிருந்து எடுத்தது இருக்கிறது ?

காத்தான்:—நாலு மாட்டுக் கோரோசனை இருக்குதுங்கு.

தி. சாமியார்:—சரி ; அதை யெல்லாம் அப்படியே எடுத்துக் கொண்டுவா—என்றார்.

தன்னிடத்திலிருந்த சரக்கு முழுதையும் அவர் வாங்கிக் கொள்வதாகச் சொன்னதைக் கேட்கவே காததான் மிகுந்த மகிழ்ச்சியும் குதூகலமுமடைந்து விரைவாக அந்த இடத்தை விட்டுத் தனது வீட்டிற்குப் போய் ஐந்து நிமிஷ நேரத்துக்குள் கோரோசனையோடு திரும்பி வந்தான். வந்தபொழுது அவன் வழியில் பறித்துக்கொண்டு வந்திருந்த சிததாமணக்குக் கொட்டை இலைகளில் இரண்டைத் தரையில் பரப்பி, அதன்மீது, நான்கு பாகமாக இருந்த கோரோசனையை வைத்துவிட்டு முன்போல விலகி நின்றவனாய் திவான் சாமியாரை நோக்கி "சாமீ! எடுத்து என்னமா இருக்குதுன்னு பாருங்க" என்றான். திவான் சாமியார் அதை எடுத்துப் பார்த்து விட்டு "சரி; நன்றாகததான் இருக்கிறது. இவைகளுக்கு மொத்த விலை ரூபாய் பதினான்கு ஆகிறது. நீ நல்ல யோக்கியமான மனிதனென்றும், சொற்ப விலை வாங்கிக் கொண்டு உயர்ந்த சரக்கையே கொடுப்பாயென்றும் என் சிநேகிதர் பல தடவைகளில் சொல்லக் கேட்டிருக்கிறேன். அந்த ஞாபகத்தை வைத்துக் கொண்டுதான், நான் உன்னைத் தேடிக்கொண்டு வெகு தூரத்திலிருந்து, இந்த ஊருக்கு வந்தேன். நீ இப்போது என்னிடம் நடந்து கொண்டதைப் பார்க்க, உன்னைப் பற்றி அவர் என்னிடம், சொன்ன புகழ்ச்சியான வார்த்தையெல்லாம் உண்மையென்றே படுகிறது. நிரம்பவும் சந்தோஷமாயிற்று. என் கையில் நோட்டாக இருக்கிறது. பணமாக இல்லை. நோட்டை நான் ஊருக்குள் போய் மாற்றிக்கொண்டு வரவேண்டு மென்பதில்லை இதோ இரண்டு பத்து ரூபாய் நோட்டுகள் தருகிறேன். இருபது ரூபாயையும் நீயே எடுத்துக்கொள். ஒவ்வொரு மாட்டின் கோரோசனைக்கும் நீ ஒரு வராகனல்லவா விலை சொன்னாய். நான் கொடுத்

தது ஐந்து ரூபாய் வீதம் ஆகிறது எடுத்துக் கொண்டு சந்தோஷ மாக வீட்டுக்குப்போ" வென்று கூறிய வண்ணம் இரண்டு பத்து ரூபாய் நோட்டுகளை எடுதது அவனுக்கெதிரில் விசிறி எறிந்தார். அதைச் சிறிதும் எதிர்பார்க்காத கிழவன் அடக்க வொண்ணாத பெருங் களிப்பும் பூரிப்பும் நன்றி யறிதலின் பெருக்கு மடைந்து அவரை நோக்கி, "சாமீ! எசமானே! நீங்க மவராசரா ஆயிரங்காலம் சொகமா இருக்கணும். இந்த மாதிரி இம்பிட்டு தாராளமா இந்தக் காலத்துலெ யாரு பணம் குடுக்கப் போறாங்க சாமீ! வாறவங்கள்ளாம் காரூவாயிக்கிக் குடுக் கிறியா, அரை ரூவாயிக்கிக் குடுக்கிறியான்னு நச்சு நச்சுன்னு பேசிப் பேசி என்னோடே உசிரெ வாங்கி புட்றாங்க. சாமி! நீங்க தரும தொரெதானுங்க. ஒங்க காலுக்கு கும்பிட்டேனுங்க" என்று கூறி அவருக்குப் பன்முறை கும்பிடுகள் போட்டு, அவரால் வைக்கப் பட்ட நோட்டுகளை எடுத்துக் கொண்டான்.

திவான் சாமியார்:—காத்தான்! நீ நல்ல யோக்கியமான மனிதன். உன்னுடைய மனசு தங்கமான மனசு. அதைக் கருதி உனக்கு எவ் வளவு ரூபாய் வேண்டுமானாலும் கொடுக்கலாம். அதற்காக நான் கணக்குப் பார்க்காமல் கொடுத்தேனேயன்றி, உன் சரக்கின் யோக் கியதையை மாத்திரம் கவனித்து நான் இதைக் கொடுக்கவில்லை. நீ இப்பேர்ப்பட்ட மனிதனென்று இப்போது ஐந்து நிமிஷநேரம் உன் னோடு பழகியவுடனே நான் கண்டு பிடித்துவிடவில்லை நான்முன்னே சொன்னபடி என்னுடைய சிநேகிதர் சொல்லக்கேட்டே, உன்யோக் யதையைத் தெரிந்து கொண்டேன். அவர் கூட இந்த ஊரில் இருந்த ஒரு பெரிய மனிதர்தான்.

காத்தான்:—இந்த நாயெப்பத்தி அம்பிட்டுத் தூரம் பெருமை யாச் சொன்ன அந்த மவராசரு யாரு சாமீ? அவுங்க இப்பவும்இந்த ஊருலேதானே இருக்கறாங்க?

தி. சாமியார்:—அவர் இருந்தால், இப்போது என்னோடு வந் திருக்கமாட்டாரா? அவர் இறந்துபோய் இரண்டு வருஷ காலமாகி றது. அவரை இப்போது நீ சுத்தமாக மறந்து போயிருப்பாய்.

காத்தான்:—அவுங்க எந்த ஊருலே எறந்து போனது சாமீ! இந்த ஊருலேதானே?

தி. சாமியார்:—ஆமாம்.

காத்தான்:—அப்படியானால், கடைசி நெருப்பு எங்கையாலெ தானே அவுருக்குக் கெடச்சிருக்கும் நானு ஊராருக்கெல்லாம் புள்ளையில்லையா சாமீ! பாப்பரு மொதக்கொண்டு பதினெட்டு சாதியாருக்கும் நேசமான கொள்ளிப் போட்டுக்கொளுதத்தர புள்ளெ நாந்தானே சாமீ! நானு யாருன்னு ஒங்களுக்குத தெரியாதா சாமீ! நானு மோச்சலோவத்து வாசப்படி காக்கர தொவார பாலகன் சாமீ! மனிசரெச் சுட்டு அவங்களோடே அசங்கியம் புடிச்ச ஒடம்பெ யெல்லாம் கொளுததிச் சாம்பலாக்கி, அவங்களோடெ பாவத்தையெல்லாம் போக்கடிச்சு, அவுங்களோடெ ஆத்துமாவெ சுத்தப்படுத்தி, நம்மெப் படெச்ச ஆண்டவரோடெ பாதத்தடிக்குப் போயிச் சேருங்கன்னு சொல்லி அனுப்பறவன் இல்லியா சாமீ நானு. நான் பொறந்து இத்தினி வருஷகாலமா அந்த மாதிரி எத்தினியோ மனிசரே அனுப்பிச்சிருக்கறேனுங்க சாமீ! நீங்க சொல்ற மனிசரு ரெண்டு வருசத்துக்கு மின்னெயா எறந்து போனாரு? அப்படியானா எனக்கு நல்லா காபகம் இருக்கணு முங்க, பெயரு தெரிஞ்சா சொல்லுங்க சாமீ! நானு கண்டுக்கறேன்.

தி. சாமியார்:—அந்த ஐயாவை குஞ்சிதபாத முதலியார் என்று கூப்பிடுவார்கள். அவர்களுக்கு முதலில் ஜவுளிக்கடை கூட இருந்தது—என்றார்.

அந்தப் பெயரைக் கேட்ட உடனே காத்தான் திடுக்கிட்டு மெய்ம்மறந்துபோய் ஆவேசங் கொண்டவன்போலத் துள்ளிக் குதித்தான். அவனது முகம் உடனே மாறுபட்டது. அவனது மனதில் இன்பமோ துன்பமோ என்று கூற இயலாத பலவித உணர்ச்சிகள் பொங்கி யெழுந்தன. தான் சொல்வது இன்னதென்பதை உணராதவனாய் அவன், "சாமீ! அந்த எசமான் இப்ப எந்த ஊருலே இருக்கறாரு சாமீ! அவுங்க சொகந்தானுங்களா? என்றான்.

உடனே திவான் சாமியார் நிரம்பவும் வியப்படைந்தவர்போல நடித்து, "என்ன காததான் நீ இப்படிக் கேட்கிறாயே! அவர் இரண்டு வருஷ காலததிற்குமுன் இறந்துபோனதாக நாம் பேசிக்

கொண்டிருக்கிறோம் நீ அவருடைய இப்போதைய க்ஷேம சமா சாரத்தை விசாரிக்கிறாயே! என்றார்.

காத்தான் உடனே தனது தவறை உணர்ந்துகொண்டான். ஆனாலும் தான் அதை மாற்றிப் பொய்பேச வேண்டுமென்ற எண் ணம் அவனுக்கு உண்டாகவில்லை "ஒங்கெளப்பாத்தா சாச்சாத துப் பரமசிவன் கணக்கா இருக்குதுங்க. ஒங்ககிட்டப் பொய் சொன்னா நானு நரவத்துக்குத்தான் போய் சேரணுமுங்க. நீங்க பேசினததுலே இருந்து அவுங்களும் நீங்களும் நேசமின்னும், அவுங்களோடெ நெச சங்கதி ஒங்களுக்குத தெரிஞ்சிருக்குமின் னும், ஒங்களெ இங்கிட்டு அவுரே அனுப்பிச்சிருப்பாருன்னும் நானு எண்ணி அந்த மாதிரி பேசிப் புட்டேனுங்க இருந்தாலும் பரவா இல்லீங்க. ஒங்ககிட்ட எல்லா சங்கதியெயும் உள்ளது உள்ள படி சொல்லிப்புட்றேனுங்க. நெசமாச் சொலலுங்க. அவுங்க எறந்து போயிட்டாருங்கற சங்கதிக்கிப பொறவாலே வேறே எந்தச் சங்கதியும் ஒங்களுக்குத தெரியாதா" என்றான்.

திவான் சாமியார் "இரண்டு வருஷத்துக்கு முன் அவர் இறந்து போய் விட்டார் என்ற விஷயத்தை நான் இந்த ஊரில் சுமார் இரு பது தினங்களுக்கு முன்னேதான் தெரிந்து கொண்டேன். பல வருஷங்களுக்கு முன் நான் வடதேசங்களுக்கு யாததிரை போய் இப்போதுதான் திரும்பி வந்தேன். வந்தவுடன் இந்த துக்ககரமான சங்கதி என் காதில் பட்டது. அவ்வளவுதான்" என்றார்.

உடனே காத்தான் மிகுந்த விசனமும் சஞ்சலமும் தவனிதத குரலில் பேசததொடங்கி "சாமீ; அநத அரிசயதெதெ நான் என் னன்னு சொல்லப போறேனுங்க! அந்த தருமராசா இருந்த இருப் பென்ன! அவுங்களுக்கு வந்த கயிஷ்டகாலம் என்ன! அந்த அக்கரமக் கொடுமெயெ நானு எப்பிடித்தான் வாயிலெவச்சு சொல் லபபோறேன் சாமீ!" என்று கூறி மேலே பேசமாட்டாதவனுப் கண்ணீர் விடுததுத தேம்பித தேம்பி அழத தொடங்கிவிட்டான்; அதைப் பார்தத திவான் சாமியாருக்கும் துக்க மேலீட்டினால மன தும் கண்களும் கலங்கிப் போயின. அவர் தமது அங்கியால் தமது கண்ணிலிருந்து வழிந்த கண்ணீரைத் துடைததுக்கொண்ட வண் ணம் "அப்பா! காததான்! நீ விசனபபடுவதைக் காண, எனக்கும் என்னை மீறி விசனம் பொங்குகிறது. இறந்துபோன ஐயா என்னு

டைய பிராண சிநேகிதராகையால், அவரைக்குறித்து நீ இவ்வளவு தூரம் சங்கடப்படுவதைக் காண, எனக்கு உன்னிடத்தில் எவ்வளவு பிரியமும் மதிப்பும் உண்டாகின்றன தெரியுமா? காத்தான்! உன் விசனத்தை அடக்கிக்கொண்டு, சங்கதியைத் தெரிவி'' என்றார்.

உடனே காத்தான், குஞ்சிதபாத முதலியார் திவானுக்குக் கூறிய வரலாறு முழுதையும் அப்படியே எடுத்துக் கூறிவிட்டு, அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் மேலும் பேசத்தொடங்கி "சாமீ! இந்த வவுத்தெரிச்சச் சங்கதியைச் சொல்லும்பொழுதே என்னோடெ அங்கம்பதறுது சாமீ! என் உசிரு போறாப்பலே இருக்குது எசமானே! அந்த மவராசரு இப்ப இந்த மண்ணு மேலே உசிரோடே இருக்காரோ, இல்லாமெப்போன எறந்துதான் போயிட்டாரோ அது ஆண்டவனுக்குத்தான் தெரியணும். அவுங்களே அந்தக் கோலத்துக்கு ஆளாக்கின மனிசரு போன எடந் தெரியாமே சணநேரத்துலெ அளிஞ்சு நாசமாய்ப் போயிட்டாங்க. அக்கரமம் நீடிச்சு நிக்காது சாமீ! ஆண்டவன் ஒடனே கைமேலே கூலி குடுத்துட்டான். அவுங்களெப்பத்தி எனக்கு அக்கெர இல்லீங்க. அந்த தர்மராசாவை இந்தக் கட்டை பட்டுப் போயிச் சாயறத்துக்குள்ளற, ஒருதர மாச்சும் கண்ணாரப் பார்த்தாத்தான் என் மனசு குளிரும். அவுங்க இந்த ஊருக்கே வரமாட்டாங்களோ என்னமோ. நானு இந்த ஊரெவுட்டும் எங்கிட்டும் போறதில்லெ. எப்படித்தான் இந்த ஆசெ தீருமோ என்னமோ தெரியலீங்க. அந்தக் காலத்துலெ நந்தனாரு செதம்பரத்துக்குப் போயி சாமி கும்பிட ஆசெப்பட்டமாதிரி நானும் ஆசெப்பட்டுப்பட்டு அப்படியே ஒஞ்சுபோயிக்கெடக்கறேனுங்க. எனக்கு ஆண்டவன்தான் தொணே செய்யணும்'' என்று நிரம்பவும் மனநைவாகவும் உருக்கமாகவும் கூறினான்.

திவான் அப்பொழுதே அந்த வரலாற்றை முதன் முதலில் கேட்டவரைப்போல அளவற்ற வியப்பும் பிரமிப்பும் காட்டி "ஆகா! அப்படியா நடந்தது! அதுவும் நல்லதுதான். மனிதர் உண்மையில் இறந்துபோவதும், அவர்களைச் சுட்டுக் கொளுத்தி சாம்பலாக்குவதும் சாதாரணமாக நடக்கக்கூடிய சம்பவம். இந்தப் பெரியவருடைய காரியம் அப்படி நடவாமல் மாறுபட்டுப்போனதில் முக்கியமான ஒரு விசேஷமிருக்கிறது. அவர் உண்மையில் இறந்து

போயிருந்தாலும் அவருடைய சொத்து சுதந்தரங்களை யெல்லாம் பிறர்தானே எடுத்துக்கொண்டு போய்விடப்போகிறார்கள். ஆகை யால், அவைகளைப்பற்றி நாம் இப்போது கவலையாவது விசனமாவது கொள்ளவேண்டிய அவசியமே இல்லை. முக்கியமாக, இறந்து போனவருடைய உயிர் மீண்டதே. அப்பேர்ப்பட்ட பாக்கியம் இந்த உலகத்தில் வேறு யாருக்காவது கிடைக்குமா? அவருடைய உயிர் மீண்டதே அதுதான் ஒரு கோடி திரவியத்தைக் காட்டிலும்மேலான செல்வம். காத்தான்! நீ விசனப்படாதே; நான் ஊரூராய் யாத் திரை செய்யும் பரதேசி. பெரியவர் எங்கே இருந்தாலும் நான் தேடிப் பார்த்து கூடிய சீக்கிரம் எப்படியாவது அவரைக் கண்டு பிடித்து இந்த ஊருக்கு அழைத்துக்கொண்டு வருகிறேன். அப்போது நீ அவரைப் பார்த்து சந்தோஷப்படலாம். அவருடைய படம் ஒன்று என்னிடத்தில் பல வருஷகாலமாய் இருக்கிறது. அதை வேண்டுமானால் நான் உனக்கு இப்போது காட்டுகிறேன். பார்க்கிறாயா?" என்றார்.

அதைக் கேட்ட காத்தான் சகிக்கவொண்ணாத ஆவலும் பதைப் பும் தோற்றுவித்து, "சாமீ! அதெக் காட்டுங்க சாமீ! எங்கப்ப னெக் கண்ணாலே பாக்கறேன். அந்த தர்மதொரெயப் பார்க்கப் போறமான்னு எண்ணி எண்ணி எங்கண்ணு பூத்துப்போயிக் கெடக்குது சாமீ! காட்டுங்க சாமீ!" என்று நிரம்பவும் பதறி உருக்கமாகக் கேட்டுக்கொள்ள, திவான் சாமியார், அவனுக்குக் கொடுக்கும்பொருட்டு, தமது மூட்டையில் மேலாகஎடுத்து, வைத் திருந்த தமது தந்தையின் புகைப்படமொன்றை எடுத்து, அவ னிடம் கொடுத்தார். அதை வாங்கிப் பார்த்த காத்தான், "ஆகா! ஐயோ! அப்படியே இருக்குதே! அவுங்க நேருலெ வந்து நிக்கிற மாதிரி இருக்குதே! கண்ணாலே பார்த்தாலும் கலி தீர்ந்துபோவுமே எங்கப்பன்; எம்மவராசன்! இப்ப நீ எந்த ஊருலெ இருக்கிறியோ நீ குடுத்த துணி இன்னும் எம்மேலே இருக்குதப்பனே! நீ போட்ட சாப்பாடுதானே இண்ணெக்கிம் நானும் எம்புள்ளெ குட் டிங்களும் சாப்பிட்றோம் யப்பா! மவராசா! ஒனக்கு என்ன கோலம் வந்துடுச்சப்பா! என் தொரெயே!" என்று கூறி படத் தைக் கண்களில் ஒற்றிக்கொண்டு ஆநந்தக் கூத்தாடிப் பூரித்துப் புளகாங்கித மடைந்து கண்ணீர் சொரிந்து கோவென வாய்விட்டுக் கதறியழவே, அதைக் கண்ட திவானும் கலங்கிப்போய் விம்மி விம்மி

அழத் தொடங்கி விட்டார். ஐந்து நிமிஷத்திற்குப் பிறகு காத்தான் திவானைப் பார்த்து, "சாமீ! நீங்க, இங்கிட்டே ரவெ நேரம் குந்திக்கிட்டு இருக்கறீங்களா. நானு ஒரே ஓட்டமாக ஓடி இதை எம் பொஞ்சாதி புள்ளெயிங்களுக்குக் காட்டிப்புட்டுக் கொண்டாறே னுங்க. இதெப் பாத்தா அவுங்கெல்லாம் சந்தோசத்துலே அப்பிடியே குதிப்பாங்க சாமீ!" என்று நயந்து பணிவாகக் கூறினன்.

திவான் சாமியார், "காத்தான்! என்னிடம் இதைப்போல இன்னொரு படம் இருக்கிறது. அதுவே எனக்குப் போதுமானது. இதைக் கண்டு நீ இவ்வளவு தூரம் சந்தோஷப்படுகிறபடியால், இதை நீ உன் வீட்டில் கொண்டுபோய் பத்திரமாய் வைத்துக்கொள். நீயும் உன் பெண்ஜாதி பிள்ளைகளும் இதை எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கலாம்." என்றார்.

அதைக் கேட்ட காத்தான் பெருத்த குபேர சம்பத்தையே அடைந்தவன்போல விவரிக்க இயலாத அபாரமான களிப்பும் பூரிப்பும் அடைந்து மெய்ம்மறந்துபோய் திவான் சாமியாரை வாய் ஓயாமல் புகழ்ந்து வாழ்த்தத் தொடங்கினன்.

முடிவாக திவான் சாமியார், "அப்பா! காத்தான் எனக்கு நேரமாகிறது. நான் போய்விட்டு வருகிறேன். இன்று ராத்திரி இந்த ஊரில் தங்கி, நாளைய தினம் காலையிலிருந்து, நான் ஊரூராய்த் தேடி இவரைக் கண்டு பிடிக்கத் தீர்மானித்திருக்கிறேன். இவர் பிழைத்துக் கொண்டது உன்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியாதாகையால், இவர் சொல்லும் வரலாற்றை யாரும் உண்மையென்று ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். ஆகையால், ஏதாவது சந்தர்ப்பம் வாய்க்குமானல் உனக்கு நான் செய்தி சொல்லியனுப்புகிறேன். நீ வந்து உண்மையான வரலாற்றைச் சொல்லவேண்டும். பயப்பட்டுப் பின் வாங்கக் கூடாது; தெரிகிறதா?" என்றார்.

காத்தான், "சாமீ! அதென்ன அப்பிடிச் சொல்லுறீங்க! நெசத்தெப் பேச எனக்கென்ன பயஞ்சாமீ! நானு திருடிப்புட்டேனு, மோசம் பண்ணிப்புட்டேனு! நடந்தத்தெத்தானே சொல்லப் போறேன். நீங்க எங்ஙனே கூப்பிட்டுச் சொல்லச் சொன்னாலும், நானு சொல்லத் தடையில்லே எசமானே! இது சத்தியப் பிரமாணிக்கமான பேச்சு. எங்க கொலதெய்வம் மதுரைவீரன் சாக்ஷி

யாச் சொல்றேன். எம் உசிரு போறதானாலும், நானு பெறள மாட்டேனுங்க எசமானே.'' என்று உறுதிமொழி கூறினான்.

அதைக் கேட்ட திவான் சாமியார் அவனிடம் முடிவாக விடை பெற்றுக்கொண்டு அவ்விடத்தை விட்டு ஊருக்குள் புகுந்து கோவி லுக்குப் போய் சாயரக்ஷை பூஜை சமயத்தில் சுவாமி தரிசனம் செய்துவிட்டு தாம் தங்கியிருந்த வீட்டின் திண்ணைக்குப் போய்ச் சேர்ந்தார். அவரது வருகைக்காகக் காத்திருந்த அந்த வீட்டின் சொந்தக்காரியான பர்வதததம்மாள் அவரை உவப்போடு உபசரித்து உள்ளே அழைத்துப் போய், அவருக்கு நல்ல மாதிரியமான போஜ னம் செய்வித்தாள். அவளது பெருத்த அன்பைக் கண்டு களி கொண்ட திவான் சாமியார் தமது நன்றியறிதலின் பெருக்கை வெகுவாக வெளியிட்டு அவளை ஸ்தோத்திரம் செய்தவராய் மறுபடி வெளியில் வந்து திண்ணையில் படுத்து அந்த இரவைப் போக்கினர்.

அவர் திருவையாற்றிலிருந்து அந்த ஊருக்கு வந்தது முக்கிய மாக இரண்டு மூன்று விஷயங்களை நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடனேயே, தமது தந்தை அவரது மரணத்தைப்பற்றிக் கூறிய வரலாற்றை மெய்ப்பிக்கத் தகுந்தவன் காத்தான் ஒருவனே யாதலால், அவன் உயிருடனிருக்கிறானு வென் பதையும், அவன் அந்த வரலாற்றைத் துணிவாக வெளியிடுவானே வென்பதையும் நிச்சயித்துக் கொள்ள வேண்டுமென்பது அவரது முக்கியமான நோக்கம். தமது தந்தையின் இளைய மனைவி அந்த ஊரிலிருந்த வரையில் நல்ல நடத்தை யுள்ளவளா யிருந்தாளா என் பது, அவளும், அவளது தகப்பன் முதலியோரும் எந்த ஊரில் இருக்கிறார்கள் என்பது முதலிய விஷயங்களை யெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதும் அவரது நோக்கம். அதுவுமன்றி, தமது தந்தையின் அடையாளத்தை அந்த ஊர் ஜனங்கள் மறந்து போயிருப்பார்களாதலால், ஒருகால் தமதுதந்தையின் தோற்றத்தில் ஏதேனும் மாறுபாடு ஏற்பட்டிருந்தால், அவரை மறுபடி காணும் ஜனங்கள் அவரது அடையாளத்தைக் கண்டுகொள்வது கடினமாக இருக்குமென்ற எண்ணத்துடன், அவர் அப்போது எப்படி இருந் தாரோ அப்படியே புகைப்படம் எடுத்து, அதைத் தந்திரமாகப் பல முக்கியஸ்தர்களிடம் கொடுத்து, குஞ்சிதபாத முதலியார் இறந்து போனதற்கு முன் அப்படித்தானிருந்தார் என்று அவர்களெல்லோ ரும் எண்ணிக் கொண்டிருக்கவும், தமது தந்தையை அவர்கள் மறு

படி கண்டால், அவர்தான் குஞ்சிதபாத முதலியாரென்று உடனே அடையாளங் கண்டுகொள்ளவும் வேண்டுமென்ற கருத்துடன், அவர் படங்களில் பல பிரதிகள் தயாரித்துக் கொணர்ந்திருந்தார். அதுவுமன்றி, தமது தந்தையின் பேரில் இருந்த நிலங்களையும், வீடுகளையும் விலைக்கு வாங்கி அநுபவிப்பவர்கள் இன்னின்னார் என்ற தகவல்களையும் தாம் தெரிந்துகொண்டு போக வேண்டுமென்பதும் அவரது கருத்து.

ஆகவே, அவர் அன்றிரவு முழுதும் அந்தத் திண்ணையில் படுத்திருந்து விடியற்காலையில் எழுந்து தமது ஸ்நானம் நியம நிஷ்டைகள் சுவாமி தரிசனம் முதலியவற்றை முடித்துக்கொண்டு அந்த ஊரிலிருந்த மிராசுதார்களும், தமது தந்தையின் நண்பர்களுமான ஏழெட்டு மனிதர்களிடம் ஒருவர்பின் னொருவராகவும், ஒருவருக்குத் தெரியாமல் மற்றவரிடமும் போய்த் தந்திரமாக சம்பாஷித்திருந்து விட்டு, ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு புகைப் படம் கொடுத்துவிட்டு அவரவர்களிடம் மேலே குறிக்கப்பட்ட தகவல்களில் எதெதை கிரகிக்க இயன்றதோ அததை கிரகித்துக் கொண்டு, அன்றைய தினம் முழுதும் அவ்வூரில் தங்கியிருந்து விட்டு, மறுநாள் காலையில் அதை விட்டுப் பிரயாணமாகி அன்றைய தினம் பகலில் திருவையாற்றை யடைந்து தமது ஜாகைக்குப் போய்ச் சேர்ந்து, தாம் திருவடமருதூருக்குப் போய் விசாரித்து வந்த தகவல்களை யெல்லாம் தமது தந்தையிடம் வெளியிட்டதன்றி அவரது பெயரால் தயாரித்த சென்னை கவர்னருக்கு அனுப்பும் பொருட்டு அன்றையதினமே ஒரு மனுத் தயார் செய்தார். அதில் குஞ்சிதபாத முதலியார் திருவடமருதூரி லிருந்தது, அவரதுகுமாரரான திவான் திருவநந்தபுரத்திலிருந்து, தமது மனைவியையும் புதல்வனையும் அனுப்பியது, அவர்கள் காணுமல் போனது, பிறகு அவர் புலியினால் கொல்லப்பட்டுப் போனதாக கிழவருக்கு செய்திவந்தது, அவர் திருவநந்தபுரம் போய் அவ்விடத்திலிருந்த சொத்துக்களை யெல்லாம் எடுத்துவந்தது, பிறகு அவர் இராமலிங்கத்தின் குமாரத்தியை மணந்தது, சில வருஷ காலத்திற்குப் பிறகு மார்படைப்பினால் அவருக்கு ஏற்பட்ட அவகேடு, அவர் இறந்துபோய் விட்டதாக அவரது சொந்தக்காரர்கள் எண்ணி அவரை மயானத்திற்குக் கொண்டு போய்க் கொளுத்தியது, அதன்பிறகு அவ்விடத்தில் அவர் பிழைத்துக் கொண்டெழுந்தது, காத்தான் அவரது வீட்டிற்குப் போய்

வந்த விவரம் முதலிய வரலாறு யாவற்றையும் தெளிவாகவும், விரிவாகவும் திவான் அந்த மனுவில் எழுதி, மேலும் அடியில் வரும் குறிப்புகளையும் எழுதினர்:—

"நீதிபதியவர்களே! ஷை சம்பவம் நிகழ்ந்த அன்றைய தினமே நான் மயானத்திலிருந்து திரும்பி என் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்திருக்க வேண்டியதே நான் செய்யத்தக்க காரியமென்று என் மனசிற்கு இப்போதுதான் படுகிறது இந்த விஷயத்தில சட்டம், தர்ம சாஸ்திரம், உலக அநுஷ்டானம் முதலியவை எவ்விதமாக முறையிடுகின்றது என்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்பதை நான் அப்பொழுது உணராமல், நான் ஊருக்குள் போனால் உண்மையில் ஊரார் என்னை அடித்துக் கொன்று விடுவார்களோ என்ற அச்சமொன்றையே கொண்டு, நான் ஊருக்குள் போகாமல், வேறு பல இடங்களுக்குப் போய் இந்த இடைக்காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தேன். இப்பொழுது ஷை வியவகாரங்களை நன்முக அறிந்த நிபுணர்களிடம் விசாரித்துப் பார்த்ததில் நான் அப்படிச் செய்தது தவறு என்றும், என்னுடைய உரிமைகளை நான் இப்போதும் அடைய எனக்கு பாத்தியமிருக்கிறதென்றும், ஊர்ஜனங்கள் எனக்கு எவ்விதமான தீங்கும் செய்வதற்கு சட்டம் இடங்கொடுக்க வில்லை என்றும் அவர்கள் அபிப்பிராயம் கொடுக்கிருர்களாகையால் நான் தங்களுக்கு இந்த மனுவை எழுதி யனுப்பிக் கொண்டிருக்கிறேன்."

"மயான மென்பது உயிரற்ற பிணங்களைக் கொளுத்துவதற்காக ஏற்பட்ட இடமே யன்றி உயிருடனிருக்கும் மனிதர்களைக் கொளுத்துவதற்காக ஏற்பட்ட இடமல்ல. தீயினுலோ, தண்ணீரினுலோ. வீடு இடிந்து விழுவதனுலோ, ரயில் மோதிக் கொள்ளுவதாலோ, மார்படைப்பினுலோ, தற்கொலை செய்து கொள்ள முயற்சிப்பதனுலோ, இன்னும் இவை போன்ற காரணங்களினுலோ மனிதர் தமது பிரக்ஞையை இழந்து இறந்தவர் போலக் கிடந்தால், மற்றவர் தம்மாலேன்ற சிகிச்சைகளைச் செய்து, வைத்தியர்களைத் தருவிக்க வேண்டுமாயின் தருவித்து, அந்த மனிதர் இறந்து போகாதபடி தடுத்து அவரது உயிரை மீட்டு, அவர் தெளிவடையும்படி செய்ய வேண்டுமென்பதே சட்டத்திற்கும் நீதிக்கும் அநுபவத்திற்கும் ஒத்த விஷயம். அப்படி மூர்ச்சித்துக் கிடந்தவரை இறந்து போய் விட்டதாக எண்ணுவதும், சவங்களுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளை அவருக்குச் செய்வதும், அவரை மயானத்திற்குக்

கொண்டுபோவதும் தவறுதலாய் நிறைவேறிப் போகுமானல், அது மற்றவர்களின் தவறேயன்றி, மூர்ச்சித்துக் கிடப்பவரின் தவறாகாது சவங்களுக்குச் செய்யப்பட வேண்டிய சடங்குகளைத் தாம் தவறுதலாக உயிருடனிருப்பவருக்குச் செய்து விட்டமையால், தாம் அவருடைய உயிரை எப்படியாவது போக்கிவிட வேண்டுமென்று எண்ணுவது நியாயமாகாது. அப்படிச் செய்வதற்கும், வேண்டுமென்றே கொலைக்குற்றம் செய்வதற்கும் சிறிதும் வித்தியாசம் கிடையாது பிணங்களுக்குச் செய்யப்பட வேண்டிய சடங்குகள் உயிருடனிருப்பவருக்குச் செய்யப்பட்டால், அந்தச் சடங்குகளே ரத்தாகிப் போய்விட்டன வென்று கருத வேண்டுமன்றி, மனிதருடைய உயிரை ரத்து செய்ய எத்தனிப்பது சட்டத்திற்கும் நீதிக்கும், பகுத்தறிவிற்கும் ஒவ்வாத மூடக் காரியம். சுடுகாட்டில் தகனம் செய்யப்பட்ட பிறகு மனிதர் பிழைத்து வந்துவிட்டால், அவர்களுக்குத் தம்முடைய சொத்து சுதந்திரங்க ளெல்லாம் இல்லாமல் போய் விடும் என்றாவது, அவர்கள் மறுபடி ஊருக்குள் வரக்கூடாது என்றாவது, தம்முடைய குடும்பத்து மனிதர்களையெல்லாம் அவர் துறந்து விடவேண்டும் என்றாவது சட்டமாவது, சாஸ்திரமாவது சொல்வதாகத் தெரியவில்லை ஏதோ சில பட்டிக் காடுகளிலுள்ள மூட ஜனங்கள் அறியாமையினுல் இப்படிப்பட்ட கட்டுப்பாடுகளைச் சொல்லிக் கொண்டிருப்பதையே இதற்கு முக்கிய ஆதாரமாக வைத்துக் கொண்டு, ஒரு மனிதருடைய வாழ்நாளையே அடியோடு நாசமாக்கி, அவருடைய குடும்ப வாழ்க்கை சொத்து சுதந்திரங்கள் முதலியவைகளை அவர் அநுபவிக்காமல் செய்து, அவரைக் கேவலம் பிச்சைக்காரர் ஆக்குவதற்கு இந்தக் காருண்ய துரைத்தனத்தார் இடங் கொடுக்கக்கூடாதென்னும் விஷயத்தை நான் நிரம்பவும் வணக்கமாக விக்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.''

"நான்தான் உண்மையில் ஷை குஞ்சிதபாத முதலியாரா என்பதையும் தாங்கள் வெகு சுலபத்தில் நிச்சயப்படுத்தி விடலாம். திருவடமருதூரில் வசிக்கும் காத்தானுக்கும், மற்றுமுள்ள பிரபல மிராசுதார்களுக்கும் என்னைக் காட்டினுல், அவர்கள் என்னுடைய அடையாளத்தை உடனே கண்டு கொள்வார்கள்; அதுவுமன்றி இன்னெரு முக்கியமான சாட்சியமு மிருக்கிறது. நான் திருவடமருதூருக்கு சம்பந்தப்பட்ட சப்ரிஜிஸ்டிரார் கச்சேரியில் பல தேதிகளில் பத்திரங்கள் பதிவு செய்திருக்கிறேன். அந்த சமயங்களில் எடுக்கப்பட்ட என் கைரேகை யடையாளங்கள் அந்தக் கச்சேரியில்

உள்ள புஸ்தகங்களில் எடுக்கப்பட்டிருக்கின்றன. இப்போது என்னுடைய கைரேகை யடையாளங்களை யாரைக் கொண்டாவது எடுக்கச் செய்து, இதையும் முன்னிருப்பவைகளையும் ஒத்திட்டுப் பார்க்கச் செய்தால் நான்தான் குஞ்சிதபாத முதலியா ரென்பது சந்தேகமற உறுதிப்பட்டுப் போகும்."

"தவிர, என்னுடைய சம்சாரமும், அவளுடைய தகப்பனார் முதலியோரும் என்னுடைய ஸ்தாவர சொத்துக்களை யெல்லாம் சிலரிடம் குறைவான விலைக்கு விற்று விட்டு அந்தத் தொகைகளையும், தங்களிடம் பணமாகவும், நகைகள் பாத்திரங்கள் முதலிய சாமான்களாகவும் இருந்தவைகளையும் எடுத்துக்கொண்டு வேறு எந்த ஊருக்கோ போய்விட்டதாகவும் தெரிகிறது. நான் விசாரித்துப் பார்த்தவரையில், அவர்கள் இன்ன இடத்தில் இருக்கிறார்களென்பது இதுவரையில் தெரியாமலிருக்கிறது. என்னுடைய பேரனை ராஜாபகதூர என்பவன இப்பொழுது உயிரோடு இல்லை என்பது நிச்சயமாகா திருக்கிறபடியால், எனக்கு தகனம் செய்த பிறகு ஒருமாச காலத்திற்குள் என் ஸ்தாவர சொத்துக்களை விற்பதற்கு என் மனைவிக்கு எவ்வித அதிகாரமுமில்லை. அவ்வாறு விற்கப்பட்ட தஸ்தாவேஜுும் செல்லத் தக்கதல்ல. அவைகளை வாங்கியவர்கள் கொஞ்சமும் யோசிக்காமல் ஆத்திரப்பட்டு வாங்கினது தவறானாலும், அவர்கள் குறைவான கிரயத்திற்கு வாங்கி இருக்கிறார்களானாலும், நியாயப்படி பார்த்தால், அவர்கள்கொடுத்த தொகையை அவர்கள் மறுபடி அடையச் செய்து ஷை சொத்துக்களை அவர்களிடமிருந்து மீட்டுக்கொள்வதே தகுதியான காரியமாகப்படுகிறது."

"ஆகவே, காருண்ய துரைத்தனத்தார் என்மீது கிருபைகூர்ந்து இந்த விஷயத்தில் தக்க நடவடிக்கைகளை எடுத்து, செய்ய வேண்டிய விசாரணையைச் செய்து நான், இறந்து போய்விட்டதாக எண்ணி எனக்கு சவச் சடங்குகள் நடத்தியதும், என்னை மயானத்தில் வைத்து கொளுத்த முயன்றதும் தவறென்றும், ஷை சடங்குகள் ரத்தாகிவிட்டன வென்றும், என்னுடைய சம்சாரத்தின் மேலும், இன்னும் மற்ற சகலமான சொத்து சுதந்தரங்களின் மேலும் எனக்கு ஆதியில் இருந்துவந்த பாத்தியதை சிறிதும் பாதிக்கப்படாமல் இப்பொழுதும் அப்படியே இருந்து வருகிறதென்றும், என் மனைவியிடம் என் ஸ்தாவர சொத்துக்களை வாங்

கியவர்கள் அவர்களால் கொடுக்கப்பட்ட பணத்தை என்னிடம் பெற்றுக்கொண்டு ஷை சொத்துக்களை என்னிடம் உடனே ஒப்பு வித்துவிடவேண்டுமென்றும், ஷை திருவடமருதூரிலுள்ள ஜனங் களோ வேறு எந்த ஊர் ஜனங்களோ எனக்கு தேகத துன்பமோ, அல்லது, மானஹானியோ உண்டாக்காமல் இருப்பதற்கு சகல மான போலீஸ் ஸ்டேஷன் அதிகாரிகளும் எனக்குத் தேவை யானால் தக்க பந்தோபஸ்து செய்துகொடுக்க வேண்டுமென்றும், மாட்சிமை தங்கிய துரைத்தனத்தார் உததரவு பிறப்பிக்க வேண்டு மாய் மிகுந்த வணக்கததுடன் பிரார்த்திக்கிறேன்.

—என்று எழுதப்பட்ட மனுவை திவான் சாமியார் நல்ல காகிதத் தில் அச்சியற்றி அதைத் தபால் கச்சேரியில் ரிஜிஸ்டர் செய்து சென்னை கவர்னர் துரைக்கு இரண்டொரு தினங்களில் அனுப்பி வைத்தார்.''

அவ்வாறு தாம் சட்டப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று குஞ்சிதபாத முதலியார் கனவிலும் நினைததவ ரன்றாதலால் திவான் சாமியார் அவ்வாறு செய்தது குஞ்சிதபாத முதலியாருக்கு மிகுந்த வியப்பையும், அளவற்ற மகிழ்ச்சியையும், மனோ திடததையும் உண்டாக்கியதன்றி, தாம இழந்த தமது குடும்ப வாழ்க்கையும் தமக்கு வெகு சீக்கிரத்தில் கிடைததுவிடு மென்ற நம்பிக்கையையும் அவர் கொள்ளச் செய்தது. அதுவு மன்றி, தமது மனைவியைத் தேடிக் கண்டுபிடிப்பதோடு மாததிரம் நின்றுவிடாமல், தமது மருமகளான காந்திமதியம்மாள், ராஜா பகதூர் ஆகிய இருவரையும்தேடிப்பிடிதது தமது சொத்து முழு தையும் முடிவில் அவர்களிடம் ஒப்புவித்தாலன்றி தமது ஆன்மா சாந்தியடையாதென்றும் அவர் அடிக்கடி திவான் சாமியாரிடம் கூறிக்கொண்டிருந்தார்.

அவர்களால் எழுதப்பட்ட மனுவின்மேல் சென்னை துரைத் தனத்தார் என்னவிதமானநடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கி றார்களென்பது சுமார் இருபது தினங்கள் வரையில் தெரியாமல் இருந்தது. அதுவரையில் திவான் சாமியார் ஒவ்வொரு நாளிலும் ஒவ்வோர் ஊராகச் சென்று தமது இளைய தாய் எந்த ஊரிலாகிலும் இருக்கிறாளாவென்பதைப்பற்றித துப்பு விசாரிப்பதும் திரும்பிவரு வதுமாயிருந்தார். குஞ்சிதபாத முதலியார் அனுப்பிய மனுவைப்

படித்துப்பார்த்த சென்னை கவர்னர் துரை அளவற்ற ஆச்சரியமும் பிரமிப்பும் அடைந்து, அவ்விதமான அதிசயசம்பவமும்உலகத்தில் நடக்குமோவென்று மயங்கி, எவனாகிலும் மோசக்கருத்துள்ள மனிதனாலோ, அல்லது, பைத்தியம் கொண்டுள்ள மனிதனாலோ அந்த மனுஎழுதியனுப்பப்பட்டிருக்கலாமென்று சந்தேகித்தார். ஆயினும், அதன் உண்மையைத் தாம் கிரமப்படி, கீழதிகாரிகளைக்கொண்டு நிச்சயிக்கவேண்டுமென்று தீர்மானித்து அந்த மனுவைத் தஞ்சை ஜில்லா பெரிய கலெக்டர் துரைக்கு அனுப்பி, அதை மற்ற சாதாரண மனுக்களைப்போலப் பட்டவர்த்தனமாய் விசாரிக்காமல் நிரம்பவும் யுக்தியாகவும் ஜாக்கிரதையாகவும் விசாரணையையும் நடவடிக்கைகளையும் நடத்தி அதன் உண்மையைக் கண்டெழுதும் படி ஆக்ஞாபித்தார்.

அப்பொழுது அந்த ஜில்லாவின் தலைமை அதிகாரத்தை வகித்தவரான பெரிய கலெக்டர் நாடார் ஜாதியைச் சேர்ந்த ஒரு கனவான். அவரது தந்தை கிறிஸ்து மதத்தைத்தழுவிக்கொண்டவர். கிரமப்படி புத்திரரும் அதே சமயத்தைத் தழுவியவர். ஆயினும், புத்திரரது மனம் அதிதுரித கதியிற் செல்லக்கூடியதும், எதையும், உண்மையைக் கண்டு, நிற்பக்ஷபாதமாய் நிர்ணயிக்கக் கூடிய திராசுமுனை போன்றது. சில வருஷகாலத்திற்கு முன்பு வரையில் அச்சியற்றும் வசதிகளும், ஒவ்வொரு பாஷையிலுமுள்ள அரிய நூல்களை அச்சியற்றுவதும், ஒரு பாஷையிலுள்ள நூல்களை வேறு பாஷைகளில் மொழிபெயர்ப்பதும் இல்லாத காலத்தில், அவரவர் தாம் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்பது போல, தமது முன்னோர் ஏட்டுச்சுவடிகளில் அருமையாக எழுதி வைத்துக்கொண்டு எதைப் போதித்து அநுஷ்டானத்தில் கொண்டுவந்திருந்தனரோ அதுவே முடிவான உண்மையென்று ஒரே பிடியாய் சாதித்து, மற்றவர்கள் சொல்வதைக் கேளாமலும், அதன் உண்மையையோ, அல்லது, சிறப்பையோ தெரிந்து கொள்ளாமலும் பொதுவாக அன்னியருடைய கோட்பாடெல்லாம் மூடத்தனமானதென்று உல்லங்கனம் செய்தும், ஜனங்கள் இருந்துவந்த மூர்க்கத்தனமான கசட நிலைமை மாறி, ஒவ்வொருவரும் சமரஸமான புத்தியோடு, தம் நூல்களையும், மற்றவரது நூல்களையும் படித்து ஒத்திட்டுத் தமது பகுத்தறிவினால் உண்மை இன்னது, தவறு இன்னது என்று அறிந்து அதன்படி தமது கோட்பாடு நடையுடை பாவனைகள் முதலியவற்றைத் திருத்திக்கொள்ளத் தக்கவிதமாய்த்

தற்காலக் கல்வி முறைகளும் துறைத்தனமும் அமைந்திருப்பது பற்றி, அபாரமான விவேகமும் புத்தி தீக்ஷண்யமும் வாய்ந்த மேதாவிகள் தமது ஜீவனோபாயத்திற்குரிய கடமைகளைச் செய்த காலம் போக மிஞ்சி யிருக்கும் அவகாசங்களில் ஏதேனும் ஒரு துறையில் இறங்கி இவ்விதமான மெய் யாராச்சியில் தமது கவனத்தையும் புத்தியையும் செலுத்திக்கொண்டே இருப்பது வழக்கம். சிலர் சங்கீத ஆராய்ச்சி செய்வர்; சிலர் மொட்டை மெத்தையில் கட்டிலின் மேல் படுத்துக் கையில் தூரதிருஷ்டிக் கண்ணாடியை வைத்தபடி இரவெல்லாம் ஆகாயத்தை உற்று நோக்கி நக்ஷத்திரங்களின் போக்குவரத்துகளை கவனித்து வான சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்வர் மற்றும் சிலர் பலவகைப்பட்ட பாஷைகளில் ஒரே பொருளைத் தரத்தக்க சொற்களின் ஒலி ஒற்றுமையை ஆராய்ச்சி செய்வர். இவ்வாறு ஒவ்வொருவரது மூளையும் ஒவ்வொரு துறையைப் பின்பற்றி அதே பைத்தியமாக இருந்து வருவது அநுபவபூர்வமான விஷயம். அது போலவே, நமது தஞ்சை ஜில்லா பெரிய கலெக்டர் தங்கமணி நாடார் அவர்களும் ஒருவித ஆராய்ச்சியில் தமது கவனத்தைச் செலுத்திவந்தார். அவர் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், அவர் மற்ற மதங்களின் நூல்களைப் படித்ததன்றி இஸ்லாமிய மதம், கிருஸ்துவ மதம், ஹிந்து மதம் முதலிய பல சமயங்களிலுள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும் ஆராய்ச்சி செய்துவந்தார். அவ்வாறு ஆராய்ச்சி செய்ததில, அவருக்கு எல்லா மதங்களும் ஒரே மாதிரியானதென்றும், அதைக் குறித்து ஜனங்கள் ஒருவருக்கொருவர் சண்டையிடுவது அறியாமை யென்றும், எல்லா மதங்களும் தங்கள் தங்கள் கடவுளென்று குறிப்பது ஒரே வஸ்துவே யன்றி ஒவ்வொரு மதத்தினருக்கும் தனித்தனியான வெவ்வேறு கடவுள் இல்லை யென்றும், ஒரே கடவுள்தான் எல்லா மதத்தினரையும் படைத்துக் காத்து அழிப்பவரென்றும் கண்டு பிடித்து, மத வேற்றுமை, மதத்துவேஷம் முதலியவற்றைச் சிறிதும் பாராட்டாமல் சமரஸ புத்தியோடு ஒழுகிவந்தார். வெள்ளைக்காரர் தஞ்சாவூர் என்பதை டாஞ்ஜூர் என்றும, திருசிராப்பள்ளி என்பதை டிரிச்சினோபோலி என்றும, இன்னும் எல்லா பெயர்களையும் இப்படியே அர்த்தமில்லாமல் மாற்றி உபயோகிப்பதில் மகா நிபுணர்களாதலால், கிரிஸ்டியானிடி என்பது ஒருவேளை கிருஷ்ணநீதியாக இருக்கலாம், ஏசுகிறிஸ்து என்பதை எசோதை கிருஷ்ணனாக இருக்கலாம், யூதர் என்பது யாதவராக இருக்கலாம், யோசெப் என்பது வாசுதேவராக இருக்கலாம்

மேரி என்பது மாரியம்மனுக இருக்கலாம், காட் என்பது கடவுளி லிருந்து வந்ததாக இருக்கலாம் என்று அவர் கிருஸ்துவ மததத்திற் கும் ஹிந்து மதத்திற்கும் ஒற்றுமை கண்டு பிடித்துக்கொண்டே போவார். அதுபோலவே அவர் இஸ்லாமிய மதத்திற்கும் ஹிந்து மதத்திற்கும் பலவகைப்பட்ட ஒற்றுமைகள் கண்டு பிடிப்பார். மாசி மாதத்தில் ஷாப்ராத் என்று மகம்மதியர்கள் ஒரு நோன்பை அநுஷ்டிப்பதுண்டு. அதற்குக் கடவுளின் இரவென்று பொருளாம். அதுபோலவே, ஹிந்துக்கள் அந்த மாதத்தில் சிவராத்திரி என்று ஒரு நோன்பைக் கொண்டாடுகிருர்கள். அதற்கு அடுதத பங்குனி மாதத்தில் இஸ்லாமியர் ரம்ஜான் என்று கொண்டாடுகிருர்கள் அது ஒரு வேளை ராம்ஜன் ஆக இருக்கலாம் ஏனெனில், ஹிந்துக் கள் ராமஜனனம் என்ற திருவிழாவை நடத்துகிருர்கள். இன்னும் ஆவணி புரட்டாசி மாதங்களில் இஸ்லாமியர் முகரம் என்ற பண்டி கையைக் கொண்டாடுகிருர்கள். ஹிந்துக்களோ மகார்நோன்பு என்று கொண்டாடுகிருர்கள். இன்னும் இவைபோலவே இரண்டு மதங்களிலும் பல நெருங்கிய ஒற்றுமைகள் இருக்கின்றனவென் றும், இவைகளும் அடிப்படையில் ஒன்றுதானென்றும் நாடாரவர் கள் தனக்குள் பலவிதமான முடிவுகளைச் செய்துகொண்டிருப்பார். ஆகவே, அவரது மனப்போக்கு எந்தக் கொள்கையையும், எந்த மததத்தையும் இழிவு படுத்தாமலும், வெறுக்காமலும், எல்லாவற்றி லும் உண்மை இருக்கிறது என்றும், எல்லாம் ஸாரத்தில் ஒன்றே யானுலும் பெயரில் மாத்திரம் வேறு யிருக்கிற தென்றும் சமரஸ ஞானமும் நடு நிலைமையும் வகிப்பதாக இருந்து வந்தது.

அத்தகைய கனவானிடம் குஞ்சிதபாத முதலியாரது மனு வந்து சேரவே, அவர் அதைப் படித்துப் பார்த்து சகிக்கவொண் ணுத வியப்பும் பிரமிப்பும் அடைந்தார். ஹிந்துக்களின் மதாசார சம்பிரதாயங்களில் அன்னிய மதத்தினரான தாம் தலையிடக்கூடாது என்று அஞ்சி அந்த வேலையை இன்னொருவர்மீது தள்ளாமல், அந்த வேலையைத் தாமே நேரில் செய்து, உண்மையை அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலும் ஊக்கமும் கொண்டவராய் அவர் உடனே அதை எடுத்துக்கொண்டு எவருக்கும் தெரியாதபடி திரு வடமருதூரை யடைந்து யாரோ வழிப்போக்கர் போல நடித்து ஜனங்களிடம் நெருங்கிப் பழகி தந்திரமாகப் பேச்சுக் கொடுத்துக் குஞ்சிதபாத முதலியாரைப்பற்றிய தகவல்கள் யாவற்றையும் விசா ரிதது் தெரிந்து கொண்டார். அவர் இரண்டு வருஷ காலத்திற்கு

முன்பு இறந்துபோய் விட்டதாகவே அவ்வூரார் நம்பி இருந்தனர் என்பதை அவர் நிச்சயப்படுத்திக் கொண்டார். அந்த ஊர் கிராம முன்சீப்பு, கர்ணம் முதலியோரிடமும் அவர் போய்த் தந்திரமாக விசாரித்துப் பார்த்ததில் அவர்களும் அதே விதமாய் எண்ணிக் கொண்டிருப்பதாக உணர்ந்தார். முடிவாக அவர் அவ்வூரை விட்டு வரும்பொழுது அந்த ஊரிலுள்ள பிரபலமான மிராசுதார்கள் இன்னின்னார் என்பதையும் தெரிந்து எழுதிக்கொண்டு வந்து சேர்ந்தார். குஞ்சிதபாத முதலியாரிடத்திலிருந்து அவ்விதமான மனு வந்திருக்கிறது என்பதைத் தமது சிரஸ்ததாருக்குக்கூட வெளியிடாமல் கலெக்டர் அதைப் பரம ரகசியமாக வைத்துக்கொண்டிருந்தார். அவர் திருவடமருதூரிலிருந்து வந்தவுடனே தமது சிரஸ்ததாரை அழைத்து அவரிடம் சில மனிதர்களின் விலாசமடங்கிய ஜாப்தா வொன்றைக் கொடுத்து, அவர்களெல்லோரும் அதற்கு மூன்றாவது நாள் தமது கச்சேரியில் வந்து ஆஜராகவேண்டுமென்று சம்மன் எழுதி உடனே அனுப்பச்செய்தார்; ஆனால், இன்ன விஷயமாக அவர்கள் தருவிக்கப்படுகிறார்கள் என்பது அந்த சம்மனில் குறிக்கப் படவில்லை. இன்னின்னாருக்கு சம்மன் அனுப்பப்பட்டிருக்கிற தென்பதை சிரஸ்ததார் யாரிடத்திலும் வெளியிடக் கூடாதென்றும், வெளியிட்டால், அவரை உடனே வேலையிலிருந்து விலக்கிவிடுவதாகவும் கலெக்டர் கூறிக் கண்டித்து வைத்திருந்தா ராதலால், சிரஸ்ததார் அதுவிஷயத்தில் நிரம்பவும் ஜாக்கிரதையாக இருந்துவந்தார். இன்ன சம்பந்தமாக அவர்களுக்கு சம்மன் அனுப்பப்பட்டிருக்கிறதென்பதே சிரஸ்ததாருக்குத தெரியாமல்போகவே அவர் அதன் உள் மர்மத்தை அறிந்து கொள்ள மாட்டாதவராய் இருந்தார்.

மூன்றாவது நாள் வந்தது. திருவடமருதூரிலிருந்து வந்து, கலெக்டர் கச்சேரியின் வாசலில் காததிருந்தமனிதர்கள் எல்லோரும் ஒருவரையொருவர் கண்டு வியப்படைந்து "நீ எதற்காக வந்திருக்கிறாய்? எனக்கும் சம்மன் வந்திருக்கிறது. விஷயம் இன்னதென்று உனக்குத் தெரியுமா?" என்று ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டு, விஷயம் இன்னதென்பதைச் சிறிதும் யூகிக்க மாட்டாதவராய்த் தததளிததிருந்தனர்.

அன்றைய தினம் காலை சுமார் எட்டு மணிக்கே தமது போஜனத்தை முடித்துக்கொண்ட கலெக்டர் எவருக்கும் தெரியாதபடி தமது மோட்டார் வண்டியில் உட்கார்ந்து, அந்த ஊருக்கு ஆறு

மயில் வடக்கில் இருந்த திருவையாற்றை யடைந்து, குஞ்சித பாத முதலியார் கொடுததிருந்த விலாசப்படி விசாரித்து அவரது ஜாகையை யடைந்து, அவரைக் கண்டு, அவரது மனுவைப்பற்றிய விசாரணை அன்றையதினம் பகல் பதினொரு மணிக்குத் தஞ்சை கலெக்டரின் முன்னிலையில் நடக்கப் போகிறதென்றும், அது ரகஸியமாக நடப்பதால், அவரை ரகஸியமாய் அழைததுவரும்படி தம்மைக் கலெக்டர் அனுப்பி இருப்பதாகவும் கூறி, உடனே புறப்பட்டுத் தம்முடன் மோட்டார் வண்டியில் உட்கார்ந்து வரும்படி அழைக்க, அது திவான் சாமியார் இல்லாத சமயமாதலால் குஞ்சிதபாத முதலியார் தமது வீட்டை வேலைக்காரர்களிடத்தில் ஒப்பிதததுவிட்டு உடனே புறப்பட்டு வந்து மோட்டாரில் உட்கார்ந்து கொண்டார். வண்டி புறப்பட்டு அரை நாழிகை காலத்தில் தஞ்சை கலெக்டரது கச்சேரியை யடைந்தது. கட்சிக்காரர்களுக்குத தெரியாதபடி கலெக்டர் தமது கச்சேரிக்குள் போகும் பொருட்டு அமைக்கப்பட்டிருந்த பிரத்தியேகமான வழியாக நாடார் குஞ்சிதபாத முதலியாரை மேன்மாடத்திற்கு அழைத்துச் சென்று அவ்விடததில் பிரமாண்டமான கூடத்தில் உன்னதமான பீடததின்மேல் போடப்பட்டிருந்த தமது ஆசனததண்டை போய்ச் சேர்ந்தார்.

அவ்விடத்தில் காத்திருந்த சிரஸ்ததார், குமஸ்தாக்கள், டபேதார், டலாயததுகள் முதலியோர் "கலெக்டர் கலெக்டர்" என்று சொல்லிக்கொண்டு சரேலென்று எழுந்து ஒதுங்கி நின்று பயபக்தி விநயததோடு நாடாரை நோக்கி சலாம் செய்ய, அவரும் அதற்கு உத்தரமாக சலாம் செய்தார். அவருக்குப் பக்கததில் நின்ற குஞ்சித பாத முதலியார் கலெக்டர் வேறு எங்கேயோ வருகிருரென்று நினைத்து நாற்புறங்களிலும் திரும்பித திரும்பி பார்ததார். வேறு எவரும் காணப்படவில்லை. அதற்குள் நாடாரும் போய்க் கலெக்டரது ஆசனத்தில் அமர்ந்து கொண்டாராதலால் அதைக் கண்ட குஞ்சிதபாத முதலியார் திடுக்கிட்டு திக்பிரமை கொண்டு நடுநடுங்கி கலெக்டரே நேரில தமது ஊருக்கு வந்து தம்மை அழைததுக் கொண்டு வந்திருக்கிருரென்று உடனே நிச்சயித்துக் கொண்டு, அவர் அவ்வாறு செய்தது தமது நன்மைக்கு அறிகுறியோ அல்லது, தீமைக்கு அறிகுறியோ என்பதையும், அவர் யார் யாரை எவ்விதமாக விசாரணை செய்யப்போகிருரோ வென்பதையும் நிச்ச

யிக்க மாட்டாதவராய்த் தத்தளித்து சுற்றுமுற்றும் பார்த்து விழித்துக்கொண்டு நின்றார்.

அங்கு நின்ற சிரஸ்ததார் முதலிய சிப்பந்திகள் குஞ்சிதபாத முதலியாரை உற்று நோக்கினாராயினும், அவர் இன்னாரென்பதை யாவது, கலெக்டர் என்னவிதமான விசாரணை செய்யப்போகிறார் என்பதையாவது அறிந்துகொள்ள மாட்டாதவராய் பிரமித்து நின்றனர். கலெக்டரது ஆசனம் இருந்த கூடத்தை யடுத்த ஒரு பெரிய சுவருக்கு அப்பால் வெளிப்பக்கத்துத் தாழ்வாரம் நீளமாக இருந்தது. அந்த தாழ்வாரத்துக்கும், அந்த கூடத்திற்கும் நடுவில் இருந்த சுவரில் ஒரு பெரிய ஜன்னல் இருந்தது. அந்த ஜன்னலின் கதவுகள் திறந்து விடப்பட்டிருந்தன. அந்த கூடத்தில், ஜன்னலிலிருந்து சுமார் மூன்று கஜதூரத்தில், அந்த ஜன்னலை மறைத்தாற்போல ஒரு மறைவு தட்டி வைக்கப்பட்டிருந்தது. அந்தத் தட்டியில் சுமார் 5-அடி உயரத்தில் ஒரு சாண் நீள அகலத்தில் ஒரு துவாரம் விடப்பட்டிருந்தது. கலெக்டர் அந்தத் தட்டியின் மறைவில் குஞ்சிதபாத முதலியாரை நிற்கச்செய்து, தமது மேஜை நாற்காலிகளை அவருக்கருகில் கொணர்ந்து போடும்படி செய்து, தாமும் அவ்விடத்தில் உட்கார்ந்து கொண்டார் உட்கார்ந்து கொண்டவர் தமது சிரஸ்ததாரை அழைத்து, திருவடமருதூரிலிருந்து வந்து கீழே காத்திருந்த மனிதர்களை ஜாப்தாவின் வரிசைப்படி ஒவ்வொருவராய் மேலே அழைத்து வந்து ஜன்னலுக்கு வெளியில் தாழ்வாரத்தில் நிறுத்திவைக்கும்படி கட்டளை இட, அவர் உடனே அவ்விடத்தைவிட்டு வெளியில் போய், ஒரு டலாயத்தைக் கீழே யனுப்பி, கலெக்டர் கூறியபடி ஒருவரை அழைத்து வரச் செய்து அவரை ஜன்னலுக்கு வெளியில் நிற்கச் செய்தார். அவ்வாறு நின்றவர் ஜன்னலின் வழியாகப் பார்த்ததில், உட்புறத்தில் தட்டி மாத்திரம் தெரிந்ததேயன்றி, அதற்கப்பால் மனிதர் இருந்தனரென்பது தெரியவில்லை கலெக்டர் தட்டியில் விடப்பட்டிருந்த துளையின் வழியாக வெளியில் பார்த்து, ஜன்னலுக்கு அப்பால் ஒரு மனிதர் வந்து நின்றதை உணர்ந்து, குஞ்சிதபாத முதலியாரை நோக்கி, ஐயா! முதலியாரே! இந்த தட்டியில் இருக்கும் துவாரத்தண்டை உங்களுடையமுகத்தை வைத்துக்கொண்டுஜன்னலுக்கு வெளியில் நிற்கும் மனிதரைப் பாருங்கள்'' என்றார்.

உடனே குஞ்சிதபாத முதலியார் அவ்வாறே செய்தார்.

கலெக்டர்:—அங்கே நிற்பவர் யாரென்று அடையாளம் உங்களுக்குத் தெரிகிறதா ?

கு. முதலியார்:—தெரிகிறது. இவர் எங்களுடைய ஊர் கிராம முனிசீப்.

கலெக்டர்:—இவருடைய பெயர் என்ன ?

கு. முதலியார்:—முத்தப்பா முதலியார்.

கலெக்டர்:—தகப்பனார் பெயர் ?

கு. முதலியார்:—கைலாச முதலியார்.

கலெக்டர்:—இவருக்கு குழந்தைகள் எத்தனை ? நிலம் முதலியவை எவ்வளவு ? இவரைப்பற்றி உங்களுக்குத் தெரிந்த விவரங்களை எல்லாம் சொல்லுங்கள்.

கு. முதலியார்:—இந்த இரண்டு வருஷகாலமாய் நான் அந்த ஊருக்குள்ளேயே போனதில்லை. அதற்கு முந்தி இருந்த நிலைமையைத்தான் நான் சொல்ல முடியும். அப்போது இவருடைய சம்சாரம் தவறிப் போய்விட்டாள். இவர் மறுபடி கலியாணம் செய்து கொண்டிருக்கிறாரோ இல்லையோ என்பது எனக்குத் தெரியாது. மூத்த சம்சாரத்திற்கு குழந்தைகள் இல்லை. இவருடைய வீட்டில் விருத்தாப்பிய தசையிலிருந்த தாய் தகப்பன் மார் இருந்தார்கள். இவருடன் கூடப் பிறந்த தம்பி ஒருவரும் இருந்தார். அவருடைய பெயர் குட்டியப்பா முதலியார் என்பது; இவருக்கு அகிலாண்டத்தம்மாள் என்ற தமக்கை ஒருத்தியுண்டு. அந்த அம்மாளை திருநாகேசுவரத்தில் பொன்னம்பல முதலியார் என்ற ஒருவருக்குக் கட்டிக் கொடுத்திருந்தார்கள். இவருக்கு சுமார்ஐந்துவேலி நிலம் இருந்தது. இவருடைய தம்பி நிலத்தில் பயிர்ச் செலவை கவனிக்கிறது. இவர் தம்முடைய உத்தியோகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பார். இவருடைய வீடு தெற்கு வீதியில் மேலண்டைக் கோடியில் இருந்தது. ஓட்டு வீடு; வீட்டுக்குப் பின்புறத்தில் தென்னை, வாழை, மூங்கில், மா, பலா முதலிய மரங்கள் அடர்ந்த தோப்பு இருந்தது.

கலெக்டர்:—சரி; அவ்வளவு விவரமே போதுமானது. இன்னும் ஒரே ஒரு விஷயம் கேட்கிறேன். அதை மாத்திரம்

கவனித்துச் சொல்லுங்கள். இவருக்கும் உங்களுக்கும் மாத்திரம் தெரிந்துள்ள ரகஸியமான விஷயம் ஏதாவது இருக்கிறதா வென்று நினைத்துப் பார்த்து அதை என்னிடம் சொல்லுங்கள்.

கு. முதலியார்:—(சிறிது நேரம் யோசனை செய்து) ஆம் இருக்கிறது, சொல்லுகிறேன். நான் அந்த ஊரை விட்டுப் போனதற்கு சுமார் ஒரு வருஷத்திற்கு முன்பு இவர் சர்க்கார் வாய்தாப் பணங்களை ஆயிரக்கணக்கில் வசூல் செய்து வீட்டில் பெட்டியில் வைத்திருந்தார். இவருக்குத் தெரியாமல் இவருடைய தம்பி அந்தத் தொகையில் ஆயிரம் ரூபாயை எடுத்து கும்பகோணத்திலுள்ள ஒரு தாசிக்குக் கொடுத்துவிட்டார். இவர் தாலூகா கச்சேரிக்கு இருசால் அனுப்பவேண்டிய சமயத்தில் பணத்தை எடுத்து எண்ணிப் பார்த்து விட்டு வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு, என்னிடம் ஓடிவந்து விஷயத்தைச் சொன்னார். நான் உடனே ஆயிரம் ரூபாய் கைமாற்றாக எடுத்துக் கொடுத்தேன். பிறகு இவர் ஆறுமாச காலங்கழித்து நெல் விற்றுப் பணத்தைத் திருப்பிக் கொடுத்தார். இவர் அதற்கு வட்டி கொடுக்க வந்தார். நான் வேண்டாமென்று சொல்லிவிட்டேன். வீட்டில் சர்க்கார் பணம் குறைவுபட்டது, என்னிடம் கடன் வாங்கிச் செலுத்தியது, பிறகு அதை எனக்குக் கொடுத்தது முதலிய விவரமெல்லாம் மற்ற எவருக்கும் தெரியாது. எனக்கும் இவருக்கும்தான் தெரியும்—என்றார்.

உடனே கலெக்டர் "சரி; நீங்கள் இதோ பக்கத்தில் இருக்கும் அறைக்குள் போய் கொஞ்சநேரம் உட்கார்ந்து கொண்டிருங்கள். நான் கூப்பிடும்போது மறுபடி இங்கே வாருங்கள்" என்று கூறி அவரைப் பக்கத்திலிருந்த அறைக்குள் அனுப்பியபின், தமது சிரஸ்ததாரைக் கூப்பிட்டு, ஜன்னலுக்கு வெளியில் நின்ற மனிதரை உள்ளே அழைத்து வந்து தமக்கெதிரில் நிறுத்தும்படி கட்டளை இட, சிரஸ்ததார் அப்படியே செய்தார்.

தம்மை இன்ன விஷயத்திற்காகக் கலெக்டர் வரவழைத்திருக்கிறாரென்பதைச் சிறிதும் யூகிக்கமாட்டாதவராய் முற்றிலும் கலங்கி பீதி கொண்டு வந்து நின்ற கிராம முனிசீப்பை நோக்கிக் கலெக்டர் பல கேள்விகள் கேட்டு அவரது பெயர், உத்தியோகம், குடும்ப வரலாறுகள் முதலிய விஷயங்களை அவர் வெளியிடும்படி

செய்தார். அவர் கூறிய தகவல்களும் குஞ்சிதபாத முதலியார் கூறிய தகவல்களும் சிறிதும் வேறுபாடின்றி ஒன்றாகவே இருந்தன.

உடனே கலெக்டர் அவரை நோக்கி "ஐயா! சுமார் மூன்று வருஷ காலத்திற்கு முன் நீர் வசூல் செய்து வைத்திருந்த சர்க்கார் கிஸ்திப்பணத்தில் ஓர் ஆயிரம் ரூபாயை உம்முடைய தம்பி உமக்குத் தெரியாமல் எடுத்துக்கொண்டு போய்க் கும்பகோணத்திலுள்ள ஒரு தாசிக்குக் கொடுத்து விட்டாரே. அது போலவேதான் அவர் இன்னமும் செய்துகொண்டு வருகிறாரா, அல்லது, அதன்பிறகாவது ஒழுங்காக நடந்து கொள்ளுகிறாரா?" என்றார்.

கலெக்டர் கூறிய வார்த்தைகள் கிராம முன்சீப்பின் மனதில் பெருத்த இடி வீழ்ந்ததுபோன்ற திகிலையும் நடுக்கத்தையும் உண்டாக்கி விட்டன. தங்களது குடும்பத்தில் பரம ரகஸியமாக நடந்த அந்தச் சம்பவத்தைக் கலெக்டர் எப்படித் தெரிந்துகொண்டிருப்பார் என்ற மலைப்பும் பிரமிப்பும் தோன்றி அவர் ஊமைபோல விழிக்கும்படி செய்துவிட்டன. சர்க்கார் கிஸ்திப்பணத்தை தாம் அஜாக்கிரதையாய் வைத்திருந்ததாகக் கலெக்டர் தம்மீது குற்றம் சுமத்துவாரோ என்ற கவலையும் அச்சமும் எழுந்தனவாதலால், அதற்குத் தாம் எவ்விதமான மறுமொழி சொல்வதென்பதை அறியமாட்டாமல் அவர் தயங்கித் தயங்கி மென்று விழுங்கியபடி நின்றார்.

உடனே கலெக்டர் "என் ஐயா! சும்மா நிற்கிறீர்? குடும்பத்தில் ரகஸியமாக நடந்த விஷயம் இந்தக் கலெக்டருக்கு எப்படித் தெரிந்திருக்குமென்று எண்ணுகிறீரோ? அது விஷயமாய் நான் உம்மீது ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டு விடுவேனென்ற யோசனையா? நீர்தான் உடனே குஞ்சிதபாத முதலியாரிடம் ஓடி ஆயிரம் ரூபாய் கைமாற்று வாங்கிக் கட்டிவிட்டு நெல்லை விற்று அவருக்குக் கொடுத்தீரே. அவர் வட்டிகூட வேண்டாமென்று சொல்லி விட்டாரே!" என்றார்.

அதைக் கேட்ட கிராம முன்சீப் முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த வியப்பும் பிரமிப்பும் அடைந்து சிறிது நேரம் மயங்கி நின்றபின் "இந்த மாதிரி சங்கதி மூன்று வருஷத்துக்கு முன்பு நடந்ததாகத் தாங்கள் சொல்லுகிறீர்கள். எனக்கு இதைப்பற்றி அவ்வளவு நன்றாக நினைவுண்டாகவில்லை இது நிஜமோ இல்லையோ என்

பதை நான் இப்பொழுது நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை." என்றார்.

கலெக்டர் "என்ன ஐயா! இப்பேர்ப்பட்ட முக்கியமான பெரிய விஷயத்தை யாராவது இவ்வளவு சீக்கிரத்தில் மறந்து விடுவார்களா? என்ன ஆச்சரியம் ஐயா இது! காரியம் இப்படி நடந்ததென்பதை ருஜுப்படுத்தக்கூடிய சாக்ஷியை வரவழைக்கட்டுமா?" என்றார்.

கிராம முன்சீப்பு "நீங்கள் சொல்வதுபோல விஷயம் நடந்திருந்தாலும், அது எனக்கும் அந்தக் குஞ்சிதபாத முதலியாருக்குந் தானே தெரிந்திருக்கும். அவர் இறந்துபோய் இரண்டு வருஷகாலமாகிறது. வேறேயார் தங்களுக்கு சாக்ஷியாக வரப்போகிறார்கள்?" என்றார். உடனே கலெக்டர் அவரை நோக்கி வேடிக்கையாகப் புன்னகை செய்து "ஐயா! நீர் பேசுவது நிரம்பவும் வேடிக்கையாக இருக்கிறதே! குஞ்சிதபாத முதலியார் இறந்துபோய் விட்டார்; வேறு ஒரு வரும் சாக்ஷி இல்லை; ஆகையால் விஷயம் நடந்ததாக ஞாபகமில்லையென்று சொல்லுகிறீரா? இப்படி உண்மையை அடியோடு மறைக்கப் பார்த்தால் நான் இதை சும்மா விட்டுவிட மாட்டேன். நீர் இப்படியே இரும். சாக்ஷி இதோ வருகிறார் பாரும்." என்று கூறிய வண்ணம் பக்கத்திலிருந்த அறைப்பக்கம் போய் வெளியில் நின்றபடி குஞ்சிதபாத முதலியாருக்குச் சில சைகைகள் செய்தார். வெளியில் நடந்த விஷயங்களை யெல்லாம்கேட்டு சந்தோஷ மடைந்தவராய் நின்று கொண்டிருந்த குஞ்சிதபாத முதலியார் மெதுவாக நடந்து அறைக்கு வெளியில் வந்து மௌனமாக நின்று கிராம முன்சீப்பைப் பார்தார். அதே காலத்தில் கிராம முன்சீப்பும் நிமிர்ந்து அவரைப் பார்த்தார். பார்க்க, கிராம முன்சீப் திடுக்கிட்டு நடுநடுங்கிக் குஞ்சிதபாத முதலியாரைப் பார்த்த பார்வையை மாற்றாமல் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டார். தாம் காண்பது கனவோ நனவோ என்ற சந்தேகம் அவரது மனதில் உண்டாக்கிவிட்டது. தமக்கெதிரில் வந்து நின்றது உண்மையில் குஞ்சிதபாத முதலியார் தானா, அல்லது, அவரைப்போலச் செய்து வைக்கப்பட்ட உருவச் சிலையா என்ற சந்தேகமும் தோன்றியது. ஆயினும், அந்த வடிவம் அறைக்குள்ளே இருந்து தானாக நடந்து வெளியில் வந்ததாகையால், அது உயிருள்ள வடிவமாகத்தான் இருக்க வேண்டுமென்று கிராமமுன்சீப்பு தனக்குத் தாமே நிச்சயப் படுத்

திக் கொண்டார். திருவடமருதூரிலிருந்து அழைக்கப்பட்டிருந்த சாக்ஷிகளுள் பெரும்பாலோர் அதற்கு சமீப காலத்திற்கு முன்பே திவான் சாமியாரால் கொடுக்கப்பட்ட புகைப்படங்களைப் பார்த்திருந்தன ரென்பதை நாம் இங்குக் குறிப்பது அத்தியாவசியமான விஷயம். கிராம முன்சீப்பும் அந்தப் படத்தைப் பார்த்திருந்தவராதலால், குஞ்சிதபாத முதலியாரது வடிவம் அவருக்கு நன்றாக ஞாபகத்திலிருந்தது. ஆகவே, அவர் குஞ்சிதபாத முதலியாரைப் பார்த்த உடனே, அவர் இன்னார்தான் என்ற எண்ணம் கிராம முன்சீப்பினது மனத்தில் உண்டாகிவிட்டது. அவர் தமது வியப்பையும் மனவெழுச்சியையும் அடக்க மாட்டாதவராய்க் கலெக்டரை நோக்கி, "என்ன ஆச்சரியம் இது! இரண்டு வருஷ காலத்திற்கு முன் இறந்துபோன மனிதர் உயிரோடு வந்து நிற்கிறாரோ! அவருடைய பிரேதத்தை மயானத்துக்கு எடுத்துப்போன காலத்தில் நானும் கூட இருந்தேன். அதை ஜதையில் வைத்துக் கொள்ளி போட்டுவிட்டு நாங்க ளெல்லோரும் வந்தோமே! அப்படி இருக்க, அவர் இப்போது எப்படி வந்தாரென்பது தெரியவில்லையே! அவரைப்போலவே இன்னொரு மனிதர் இருக்கிறாரா!" என்றார்.

உடனே கலெக்டர் அவரை நோக்கி, "ஐயா! குஞ்சிதபாத முதலியாரைப்போல இந்த உலகத்தில் இன்னொரு மனிதர் இருக்கலாம். இவருடைய உடம்புகளின் தோற்றம் மாத்திரம் ஒற்றுமையாக இருக்குமேயன்றி, ஒருவருக்கு மாத்திரம் ரகஸியத்தில் தெரிந்த சங்கதிகூட மற்றவருக்குத் தெரிந்திருக்க வேண்டிய முகாந்தரமென்ன? நீர் குஞ்சிதபாத முதலியாரிடம் ரகஸியமாய் ஆயிரம் ரூபாய் கைம்மாற்றாக வாங்கி வட்டி இல்லாமல் திருப்பிக் கொடுத்த விஷயத்தை நீர் வேறு யாரிடத்திலும் சொல்லவில்லை யல்லவா. அப்படி இருக்க, அந்த விஷயம் இவருக்கு எப்படித் தெரிந்தது? இவர் குஞ்சிதபாத முதலியார் அல்லவென்றே வைத்துக்கொள்வோம், உங்களுடைய ஊர் விஷயங்களை யெல்லாம் தெரிந்து கொள்வதற்கு இவர் அங்கே வந்திருக்க வேண்டுமல்லவா. அப்படி இவர் உங்களுடைய ஊருக்கு வந்திருந்தால், ஜனங்கள் இவரைக் கண்டு ஆச்சரியமடைந்து இவர் குஞ்சிதபாத முதலியாரைப் போல இருக்கிறாரென்ற வதந்தியைக் கிளப்பிவிட்டிருப்பார்க ளல்லவா? இந்த இரண்டு வருஷ காலத்தில் அப்பேர்ப்பட்ட வதந்தி ஏதாவது உண்டாயிற்றா, அல்லது, நீர் இந்த இரண்டு வருஷகாலத்திற்குள் இவரை உங்கள் ஊரில் பார்த்ததுண்டா?" என்றார்.

அதைக் கேட்ட கிராம முன்சிப் முன்னிலும் அதிகரித்த மனக் கலக்கமும் பிரமிப்பும் அடைந்து, "தாங்கள் சொல்வது நியாயமா கத்தான் இருக்கிறது. இவரை நான் இரண்டு வருஷ காலத்திற் குள் அந்த ஊரில் பார்த்ததுமில்லை. தாங்கள் சொல்வதுபோல ஜனங்களும் அவ்விதமான பிரஸ்தாபம் செய்ததில்லை. ஆனாலும், நாங்கள் அவரை வைத்துக் கொளுத்திவிட்டு வந்ததும் உண்மை யான விஷயந்தானே. அப்படி இருக்க அவர் மறுபடி உயிரோடு எப்படி வந்திருக்க முடிந்ததென்பது விளங்கவில்லையே" என்றார்.

உடனே கலெக்டர், "சரி; நீர் கொண்டுள்ள சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்வதற்காகத்தான் நானும் இந்த விசார ணையை நடத்துகிறேன். நீரும் இப்படியே கொஞ்ச நேரம் இரும். உம்மை வரவழைத்ததைப்போல இன்னொரு மனிதரை வரவழைக்கி றேன். அவரைப்பற்றிய தகவல்களையெல்லாம் இவர் சொல்லு கிறாரா இல்லையா என்று பார்ப்போம் நீரும் இந்தத் தட்டியின் மறைவில் நில்லும். ஆனால் நான் இவருடன் பேசும்போது நீர் வாயை திறக்கவே கூடாது. இவராகவே எல்லா தகவல்களையும் சொல்ல வேண்டும். நீர் இவருக்கு எதையும் சொல்லிக் கொடுக்கக் கூடாது" என்று கூறியவண்ணம், தமது சிரஸ்ததாரை நோக்கி ஜாப்தாவில் குறிக்கப்பட்ட அடுத்த சாக்ஷியை அழைத்து வந்து ஜன்னலுக்கு நேராகத தாழ்வாரத்தில் நிற்க வைக்கும்படி கட்டளை யிட, அவர் அப்படியே செய்தார். அப்பொழுது கலெக்டர், குஞ்சிதபாத முதலியார், கிராம முன்சிப் ஆகிய மூவர் மாத்திரம் தட்டிக்கு மறைவில் இருந்தனரென்பதும் நாம் கூறாமலே விளங்கும். உடனே கலெக்டர் கிராம முன்சிப்பை நோக்கி, "ஐயா! இதோ தட்டியில் இருக்கும் துவாரத்தின் வழியாக, ஜன்னலுக்கு வெளி யில் யார் நிற்கிறார் என்பதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளும். அதை நீர் வெளியிட வேண்டாம்." என்றார்.

உடனே கிராம முன்சீப்பு அவ்வாறே துவாரத்தின் வழி யாகப் பார்த்து, ஜன்னலுக்கு அப்பால் தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்தது இன்னார் என்பதைத் தெரிந்துகொண்டு, வாயைத் திறவாமல் அப்பால் நகர்ந்து நின்றார். பிறகு கலெக்டரது வேண்டு கோளின் மேல் குஞ்சிதபாத முதலியார் துவாரத்தண்டை போய் நின்று ஜன்னலுக்கு வெளியில் பார்த்து அவ்விடத்தில் நின்றது

யார் என்பதைத் தெரிந்துகொண்டு கலெக்டரது முகத்தை நோக்கினார்.

கலெக்டர்:—இப்போது வந்து நிற்கிறவர் யாரென்பது தெரிகிறதா ?

கு. முதலியார்:—ஓ தெரிகிறது! இவர் திருவடமருதூர் கர்ணம் இராமச்சந்திர ஐயர். இவருடைய தகப்பனார் பெயர் சுந்தரமையர் இவருடைய வீடு சிவன் கோவிலுக்கு எதிரிலிருக்கும் சன்னிதித் தெருவிலிருக்கிறது. அது தெற்குப் பார்த்த ஓட்டு வீடு. இவருடைய தகப்பனார் தாயார் ஆகிய இருவரும் சுமார் நான்கு வருஷங்களுக்கு முன்பு மார்கழி மாசத்தில் 10-தினங்களுக்கு முன்னும் பின்னுமாக ஒரே மாசத்தில் இறந்துபோய் விட்டார்கள். இவருடைய சம்சாரம் குட்டையாகவும், கருப்பாகவும், முகத்தில் பெரியம்மைத் தழும்புகளோடும் இருப்பார்கள். அந்த அம்மாளுடைய வலது கண்ணில் பூவிழுந்தது போல இருக்கும் இவருக்குப் பெண் குழந்தைகள் ஐந்து, ஆண் குழந்தை ஒன்று. ஆண் குழந்தைதான் கடைக்குட்டி. அதற்கு இப்போது ஐந்து வயசிருக்கலாம். அது கால்களை ஊன்றி எழுந்திருக்க மாட்டாமல், உட்கார்ந்தபடியே நகர்ந்து கொண்டிருக்கும்; இப்பொழுது ஒருவேளை எழுந்து நடக்கிறதோ என்னவோ. பெண்களில் மூன்று பேருக்குக் கலியாணம் ஆகி இருந்தது. இரண்டு பேர் சிறிய குழந்தைகளாக இருந்தனர். இவருக்கு நிலம் அதிகமாக இல்லை ஊர்க்கோடியில் சுடுகாட்டுக்குப் பக்கத்தில் இவருக்குப் புஞ்சை நிலம் இரண்டு வேலி இருந்தது. அதில் இவர் சௌக்கு மரம் வைத்துப் பயிர் செய்திருந்தார். இவருக்கு சர்க்காரில் பத்து ரூபாய் சம்பளம். அது தவிர மிராசுதார்கள் ஒரு வேலி நிலத்துக்கு ஒரு கல நெல்வீதம் இவருக்கு வருஷவாரி இனும் கொடுக்கிறது வழக்கம். அவைகளை வைத்துக்கொண்டுதான் இவர் ஜீவனம் செய்கிறது. இவர் நிரம்பவும் பயந்த சுபாவமுடையவர். அதிகமான மோசம் புரட்டு முதலிய விஷயங்கள் எதிலும் இறங்குவதில்லை. இவர் பத்திரம் முதலிய தஸ்தாவேஜுகள் எழுதுவதில் நிரம்பவும் கைதேர்ந்தவர். அதிலும் இவருக்கு அடிக்கடி ஏதாவது வருமானம் கிடைக்கும்.'' என்றார்.

உடனே கலெக்டர் "சரி; இவருக்கும் உங்களுக்கும் மாத்திரம் தெரிந்த ரகஸிய சங்கதி ஏதாவது இருந்தால் சொல்லுங்கள்.' என்றார்.

குஞ்சிதபாத முதலியார் சிறிது நேரம் யோசனை செய்து ஞாபகப்படுத்திப் பார்த்து 'ஆம்; இருக்கிறது. கடைசியாக எனக்கு தகனம் நடந்ததல்லவா. அதற்கு சுமார் இரண்டு மாச காலத்திலிருந்தே என் உடம்பு சரியான நிலைமையிலில்லை. எனக்கு அடிக்கடி மார்படைப்பும் மயக்கமும் வருவது வழக்கமாக இருந்தது. நான் ஒரு வேளை சீக்கிரமாக இறந்துபோய் விடுவேனோ என்ற எண்ணம் என் மனசில் தோன்றியது. நான் இவரை ரகஸியமாக ஒரு நாள் இரவு எட்டு மணிக்கு வரவழைத்துத் தனியாக என் வீட்டு மேன்மாடத்திலுள்ள ஓர் அறைக்குள் வைத்துப் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது நான் இவரிடத்தில் என்னுடைய உடம்பின் கேவல நிலைமையைத் தெரிவித்ததன்றி, எனக்கு இன்னின்ன சொத்துக்கள் இருக்கின்றனவென்றும், அவைகளை தான தருமங்களுக்கும் கோவிலுக்கும் மற்றுமுள்ள என் மனைவி முதலியோருக்கும் இன்னின்ன விதமாகப் பங்கிட்டுக் கொடுக்க உத்தேசிக்கிறே னென்றும் சொல்லி, அப்படியே ஓர் உயில் தயாரித்துக் கொண்டு வரும்படி இவரிடம் கேட்டுக் கொண்டேன். இவர் தமக்கு அப்போது ஜமாபந்தி காலமாகையால், ஒரு நிமிஷங்கூட ஒழிவு கிடைக்கவில்லை'யென்றுசொல்லி "ஏன் நீங்கள் தான் திடமாயிருக்கிறீர்களே! இதற்குள் உயிலுக் கென்ன அவசரம் வந்து விட்டது நீங்கள் இன்னும் இருபது வருஷகாலம் கல்போல இருக்கப் போகிறீர்கள். உங்களுக்கு இராமன் லக்ஷ்மணன்போல இரண்டு குழந்தைகள் பிறக்கப் போகிறார்கள். நீங்கள் உயில் எழுத வேண்டிய அவசியமே இல்லாமற் போய் விடப் போகிறது. ஏன் நீங்கள் இப்போதே அதைப்பற்றி நினைக்கிறீர்கள" என்றார். நான் "ஐயரே! இதெல்லாம் வீண் ஸ்தோத்திர மொழிகள். யாருடைய ஆயுசு யாருக்குத் தெரியும் இந்த நிமிஷம் இருந்தவர் அடுத்த நிமிஷத்தில் இல்லை. நீர் சொல்லுகிறபடி ஈசுவரன் அநுக்கிரகித்தால் எனக்கும் சந்தோஷந்தான். இருந்தாலும் அப்படித்தான் நடக்குமென்ற நிச்சயத்தை நாம் வைத்துக் கொண்டு அஜாக்கிரதையாக இருப்பது சரியல்ல. எல்லாவற்றிற்கும் நீர் இந்த உயிலை உம்முடைய ஜமாபந்தி முடிந்த பிறகாவது தயா

ரித்துக் கொண்டு வாரும்'' என்றேன். இவர் "சரி! அதற்கென்ன ஆகட்டும். நான் எப்போதும் உங்களுடைய மனுஷ்யன். உங்கள் பிரியப்படி நடந்து கொள்ளக் காத்திருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு என்னிடம் செலவு பெற்றுக்கொண்டார். அதற்கு மறுநாள் வருஷப் பிறப்பு தினமாகையால், நான் உடனே என் கைப் பெட்டியைத் திறந்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து இவரிடம் கொடுத்து, இது வருஷப் பிறப்பு சன்மானமாக இருக்கட்டு மென்று சொல்லி ஒரு கும்பிடு போட்டு அனுப்பி வைத்தேன். அதன் பிறகு நான் இதுவரையில் இவரைப் பார்க்கவுமில்லை. இவர் உயில் தயாரித்தாரோ இல்லையோ என்பதும் எனக்குத் தெரியாது'' என்றார்.

அந்த வரலாற்றைக் கேட்ட கலெக்டர் மிகுந்த களிப்பும் குதூகலமு மடைந்தவராய் கிராம முன்சீப்பின் முகத்தைப் பார்த்தார். குஞ்சிதபாத முதலியார் கர்ணத்தின் குடும்ப வரலாறுகளை யெல்லாம் கூறியது நிஜமே என்று ஒப்புக் கொள்ளுகிறவர் போல மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் தோற்றுவித்த முகத்தினராய் கிராம முன்சீப்பும் கலெக்டரைப் பார்த்தார். உடனே கலெக்டர் கிராம முன்சீப்பை பக்கத்திலிருந்த வேறோர் அறைக்குள் அனுப்பிய பின் குஞ்சிதபாத முதலியாரை அதற்கு முன் உட்கார வைத்திருந்த அறைக்குள் போயிருக்கச் செய்து விட்டு, வெளியிலிருந்த கர்ணத்தை உள் பக்கத்தில் வரவழைத்துத் தமக்கெதிரில் நிற்க வைத்துக்கொண்டு, அவரது பெயர் குடும்ப விவரங்கள் முதலிய தகவல்களை யெல்லாம் விசாரித்து எழுதிக்கொண்டார். அவை குஞ்சிதபாத முதலியார் கூறியவை போலவே இருந்தன. பிறகு கலெக்டர் அவரை நோக்கி, "இதெல்லாம் சரிதான். இன்னொரு விஷயம் கேட்கிறேன். அதை நீர் மறைக்காமல் சொல்லவேண்டும், உமக்கு சர்க்கார் சம்பள ரூபாய் பத்தல்லவா, அதைத் தவிர, வேறு எந்தெந்த வகையில் உமக்கு வருமானம் கிடைக்கும்?'' என்றார்.

கர்ணம் தாம் அந்த விஷயத்தில் உண்மையைச் சொன்னால் தமக்கு ஏதேனும் கெடுதல் நேருமோ வென்று அஞ்சித் தயங்கி மௌனமாக நின்றார். மறுபடியும் கலெக்டர் அவரைப் பார்த்து, "சொல்லுமையா! ஏன் விழிக்கிறீர்? நியாயமான வழியில் நீர் எவ்வளவு பணம் சம்பாதித்தாலும் அதைப்பற்றி நமக்கு அக்கறை

இல்லை. நீர் பயப்படாமல் உண்மையைச் சொல்லலாம். ஒரு வேலி நிலத்துக்கு ஒரு கல நெல் வாங்குவதுண்டா?'' என்றார்.

கர்ணம் திருட்டு விழி விழித்து, "அதை யெல்லாம் அவ்வளவு கண்டிப்பாக நான் வைத்துக் கொள்ளவில்லை. என்னவோ எங்கள் ஊரிலுள்ள மிராசுதார்கள் பெருத்த தனிகர்கள்; அவர்களுக்கு இதெல்லாம் ஒரு பொருட்டல்ல. அவர்கள் பார்த்து சந்தோஷப் பட்டு ஏதாவது கொடுத்தால், நான் வாங்கிக் கொள்வதுண்டு அவர்கள் கொடுத்துத்தான் தீர வேண்டுமென்ற கட்டாயம் ஒன்றுமில்லை. அவர்கள் செல்வாக் குடையவர்கள். அவர்களுக்கு முன் நான் எம் மாத்திரம். அவர்கள் இஷ்டப்படாத காரியம் எதுவும் நடை பெறாது.'' என்றார்.

கலெக்டர், "ஆம், ஐயா, ஆம். அது எனக்குத் தெரியாதா? லஞ்சம் கொடுக்கிறவர்க ளெல்லோரும் மனம் ஒப்பித்தான் கொடுக் கிறார்கள் அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாக நீர் போய் நெல்லை அள்ளிக்கொண்டு வருகிறதாக யாராவது சொன்னார்களா? சொல்லவில்லை. அது போகட்டும். இன்னம் எந்தெந்த விதத்தில் நீர் பணம் சம்பாதிக்கிறீர்? பத்திரம் எழுதிப் பணம் வாங்குவ துண்டா? என்றார்.

கலெக்டர் என்ன கருத்தோடு தம்மிடம் அவ்விதமான கேள்வி களைக் கேட்கிறாரென்பதை யறியாமல் அஞ்சி முற்றிலும் கலங்கிப் போன கர்ணம் நடுநடுங்கி, "நானாக எதற்கும் போய் மேல விழுகிற தில்லை. ஜனங்கள் பிரியப்பட்டு என்னிடம் வந்து பத்திரம் எழுதும் படி கேட்டுக் கொண்டால், நான் எழுதிக் கொடுப்பேன். அவர்கள் பணங் கொடுத்தால் வாங்கிக் கொள்ளுகிறது. இல்லாவிட்டாலும் நான் கேட்கிறதில்லை.'' என்றார்.

கலெக்டர் வேடிக்கையாகச் சிரித்து, "நீர் பேசுவதே வேடிக்கை யாக இருக்கிறதையா! பத்திரம் எழுதுகிறவர்களுடைய சம்மதம் இல்லாமல் நீரே போய் எழுதிவிட்டீரென்று இப்போது யாராவது சொன்னார்களா? பத்திரம் எழுதிப் பணம் சம்பாதிப்பதுண்டா என் றால், அதற்கு, "ஆம் உண்டு'' என்று ஒரே வார்த்தையாய் மறு மொழி கொடுப்பதை விட்டு ஊரையெல்லாம் வளைத்து ஏன் பேச வேண்டும்? பத்திரம் எழுத வருகிறவர்கள் இஷ்டப்பட்டு வருகிறார் களா, இஷ்டமில்லாமல் வருகிறார்களா என்ற கேள்வியே இப்போது

உண்டாக வில்லையே. அது போகட்டும். இன்னும் வேறு எந்த விதத்திலாவது நீர் பணம் சம்பாதிப்பதுண்டா ? உமக்கு ஜோசியம் தெரியுமா ? நீ பிறருக்கு ஜோசியம் சொல்லி அதனால் ஏதாவது பணம் சம்பாதிப்பதுண்டா, அல்லது, சம்பாதித்ததுண்டா ?'' என்றார்

அதைக் கேட்ட கர்ணம், "அடாடா! இதென்ன விபரீதமாக இருக்கிறதே! எனக்கு ஜோசியமே தெரியாதே. நான் ஜோசியம் சொல்லிப் பணம் சம்பாதிக்கிறதாக யாரோ தங்களிடம் வந்து பொய் சொல்லி இருக்கிறார்களே!'' என்றுகூறி நிரம்பவும் தாபந்திரியமாகக் கைகளை விரித்து நடனம் செய்தார்.

அதைக்கண்ட கலெக்டர் கலகலவென்றுசிரித்து, "என்ன ஐயா இப்படியெல்லாம் மாயஜாலம் செய்தால், உண்மையைப்பொய்யாக்கி விடமுடியுமா? நான் சாட்சியோடு சொல்லுகிறேன். கேளும். சுமார் இரண்டு வருஷத்திற்கு முன் ஒருநாள் இரவு எட்டுமணிக்கு உங்கள் ஊர்ப் பெரிய மனிதர் ஒருவர் உம்மை அவருடைய மாளிகைக்கு வரவழைத்து, தனியான ஓர் அறைக்குள் கொண்டுபோய் உட்காரவைத்துக்கொண்டு, தமக்கு உடம்பு சரியான நிலைமையில் இல்லை என்றும், தமக்கு அந்தியகாலம் சமீபித்து விடுமோவென்று தாம் அஞ்சுவதாகவும் உம்மிடம் சொன்னதன்றி, தமக்கு இன்னின்ன சொத்துகள் இருப்பதாகவும், அவைகளைத் தாம் இன்னின்னபடி விநியோகிக்க எண்ணுவதாகவும் சொல்லி, ஓர் உயில் தயாரிக்கும்படி கேட்டுக் கொண்டதுண்டா இல்லையா?'' என்றார்.

கர்ணம் சிறிதுநேரம் யோசனைசெய்து "தாங்கள் குறித்துப் பேசும் சந்தர்ப்பம் எப்போது நேரிட்டதென்று எனக்கு அவ்வளவு நன்றாக ஞாபக முண்டாகவில்லை. இருக்கலாம். யாராவது உயில் எழுதித் தரும்படி கேட்டிருக்கலாம். நான் ஜோசியம் சொல்லிப் பணம் சம்பாதிப்பதாகத தாங்கள் சொன்னதற்கும், இந்த உயிலுக்கும் என்ன சம்பந்தம் என்பது தெரியவில்லையே!'' என்றார்.

கலெக்டர் சிரித்துக்கொண்டு "அதே சமயத்தில்தான் நீர் ஜோசியம் சொல்லிப் பணம் வாங்கிக்கொண்டது. உயில் எழுதும்படி கேட்டுகொண்ட கிழவர் இன்னம் இருபது வருஷகாலம் கல் போல இருப்பாரென்றும், அவருக்கு இராமர் லக்ஷ்மணர் போல இரண்டு ஆண் குழந்தைகள் பிறக்கப் போகிறார்களென்றும், ஆகை

யால் உயில் எழுதவேண்டிய அவசியமே இல்லையென்றும் நீர் அவரிடம் சொல்லவில்லையா? அவர் தம்முடைய கைப் பெட்டியைத் திறந்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து உம்மிடம் கொடுத்து, மறுநாள் வரும் வருஷப் பிறப்பு சன்மானமாக வைத்துக் கொள்ளும்படி சொல்லவில்லையா? அப்படி நீர் சொன்னது ஜோசியமல்லாமல் வேறு என்ன?'' என்றார்.

கர்ணம் முற்றிலும் திகைத்துக் கலங்கிப்போய் "தாங்கள் குறிக்கும் மனிதர் இன்னார் என்ற ஞாபகம் எனக்கு இன்னமும் உண்டாகவில்லை. இருந்தாலும், தாங்கள் சொல்வதிலிருந்து பார்த்தால் கூட நான் ஜோசியம் சொன்னேனென்று எப்படி அர்த்தமாகும்? தாம் சீக்கிரத்தில் இறந்துபோய் விடுவோமோ வென்று ஒருமனிதர் பயந்தால், அவருக்கு தைரியமான வார்த்தை சொல்வது உலகத்தில சாதாரணமாக நடக்கக்கூடிய காரியந்தானே. அதுவுமன்றி அவர் இன்னம் இருபது வருஷகாலம் இருக்கப் போகிறாரென்றும், அவருக்கு இரண்டு குழந்தைகள் பிறக்கப்போகின்றன வென்றும் நான் சொல்லியிருந்தால், அம்மாதிரி ஈசுவரன் செய்ய வேண்டுமென்று நான் கோருவதாக எடுத்துக்கொள்ள வேண்டுமே யன்றி அதை ஜோசியம் என்று எப்படி சொல்லுகிறது. இம்மாதிரியெல்லாம் என் பேரில் தங்களிடம் யார் வந்து கோள் சொன்னதென்பது தெரியவில்லையே. எனக்கும் இன்னொரு மனிதருக்கும் பரம ரகஸியமாக நடந்த சம்பாஷணைகளையெல்லாம் தெரிந்துகொண்டு வந்து எவன் தான் தங்களிடம் சொன்னானென்பது தெரியவில்லையே!'' என்றார்.

உடனே, "நீர் யாருக்கு ஜோசியம் சொன்னீரோ அவரே வந்து இதை வெளியிட்டிருக்கலாமல்லவா?'' என்றார்.

கர்ணம், "இவ்விதமான தம்முடைய குடும்ப ரகஸியத்தை எவரும் வெளியில் சொல்லிக் கொள்ள மாட்டார்கள்.'' என்றார்.

கலெக்டர், "ஐயா! அந்த மனிதர் இறந்துபோய் விட்டாரென்ற தைரியத்தைக் கொண்டு அவர் இப்போது இங்கே வர மாட்டாரென்று நினைத்து நீர் இப்படிப் பேசுகிறீரா? நீர் உண்மையை உள்ளபடி ஒப்புக்கொள்ளாவிட்டால் அவரையே நான் இப்போது இங்கே வரவழைத்து விடுவேன்'' என்றார்.

கர்ணம், "இறந்துபோனவர் எங்கிருந்து வரப் போகிறார்? அவரைத் தாங்கள் கூப்பிடுகிறதாவது?'' என்றார்.

உடனே கலெக்டர், "ஓகோ! இறந்து போனவர் வரமாட்டாரா! இதோ வருகிறார் பாரும்" என்று கூறியவண்ணம் குஞ்சிதபாத முதலியார் இருந்த அறையின் வாசலண்டை போய்ச் சைகை செய்ய, அதுவரையில் அவ்விடத்தில் நடந்த விசாரணையை நிரம்ப வும் சுவாரஸ்யமாகவும் சந்தோஷததோடும் கேட்டுக்கொண்டிருந்த கிழவர் மெதுவாக வெளியில் வந்து கர்ணம் இராமச்சந்திர ஐயருக் கெதிரில் நின்று புன்னகை செய்தார்.

அவரைக் கண்ட கர்ணம் அதற்குமுன் கிராம முன்சீப் எவ்வாறு கலங்கி பிரமித்து, அது உயிருள்ள வடிவமோ, அல்லது உயிரற்ற கற்சிலையோ வென்று சந்தேகித்தாரோ, அது போலவே செய்து, வியப்போடு கலெக்டரை நோக்கி, "என்ன ஆச்சரியம் இது! இரண்டு வருஷத்திற்குமுன் இறந்துபோன குஞ்சிதபாத முதலியாரைப் போலவே இவர் இருக்கிறாரே! இவர் ஒருகால் வேறே எந்த ஊரிலாவது இருந்த, அவருடைய தமையனார், அல்லது, தம்பியாக இருப்பாரோ!" என்றார்.

கலெக்டர், "இவர் குஞ்சிதபாத முதலியாருடைய அண்ணன், அல்லது, தம்பியாக இருந்தால் மாத்திரம் என்ன? ஒருவருடைய மனசுக்கு மாத்திரம் தெரிந்த விஷயங்களெல்லாம் அவருடைய அண்ணன் தம்பிகளுக்கும் தெரியவேண்டு மென்ப துண்டா?" என்றார்.

கர்ணம், "அப்படியானால் இவர் குஞ்சிதபாத முதலியாராகத் தான் இருக்கவேண்டும். சுமார் இரண்டு வருஷ காலததுக்கு முன் இவர் இறந்துபோய் விட்டதாகச் சொன்னார்களே! அப்படி இருக்க, இவர் இப்பொழுது எங்கிருந்து திடீரென்று முளைதது வந்தார்" என்று அதிக வியப்போடு கூறினார்.

கலெக்டர், "அதே சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்வ தற்காகத்தான் நானும் இந்த விசாரணையை நடத்துகிறேன். இதோ பக்கத்து அறையில் உங்கள் ஊர் கிராம முனிசீப் இருக்கிறார். நீரும் போய் அவருடன் இருந்து, இங்கே நடப்பதைக் கவனித்துக் கொண்டிரும். போம்" என்றார். உடனே கர்ணம் அவ்வாறே பக்கதது அறைக்குள் சென்றார்.

அதன் பிறகு திருவடமருதூர் வாசிகளான மளிகைக் கடை குருமூர்த்தி செட்டியார், தோல் மண்டி மஸ்தான் சாயப்பு, நெல்

வியாபாரம் பரிமணத்தா பிள்ளை, கோவில் தர்மகர்த்தா சொக்கப்பா முதலியார், மாட்டு வியாபாரி வீரமுததுபடையாச்சி ஆகிய சுமார் பத்து கனவான்கள் முன் செய்யப்பட்டதுபோல ஒரு வருக்குப் பின்னொருவராய் வருவிக்கப்பட்டனர். கலெக்டர் அவர் களை முதலில் ஜன்னலுக்கு வெளியில் நிற்க வைதது குஞ்சிதபாத முதலியார் வாய் மூலமாக அவரைக் குறித்த விவரங்களைத் தெரிந்து கொண்டு, பிறகு அவரை உள்ளே வருவித்து முன் செய்தது போலத் தந்திரமாகக் கேள்விகளைக் கேட்டு முடிவில் ஒவ் வொருவருக்கும் குஞ்சிதபாத முதலியாரைக் காட்டி அவர்கள் பிர மிப்படைந்து அவர் இன்னாரல்லவா வென்று தாங்களே அவரது பெயரை வெளியிடும்படி செய்தார். அவ்வாறு வந்தவர்களுள் பெரும்பாலோர் சமீப காலத்தில் திவான் சாமியாரால் கொடுக்கப் பட்ட புகைப்படத்தைப் பார்த்திருந்தவர்களாகலால், அவர்கள் சிறிதும் சந்தேகமாவது தயக்கமாவது கொள்ளாமல் உடனே கிழவ ரது அடையாளத்தைக் கண்டு அவரது பெயரை சடக்கென்று வெளியிட்டு விட்டனர். கலெக்டர் அவர்களெல்லோரையும் விசா ரித்து முடித்தவுடன், இன்னம் அழைக்கப்படாமல் மிஞ்சி நின்ற கடைசி சாட்சியை ஜன்னலுக்கு வெளியில் கொணர்ந்து நிறுததும் படி செய்து, உள்ளே நின்ற சாட்சிகள் எல்லோரும் தட்டியிலிருந்த துவாரததின் வழியாக முதலில் பார்க்கும்படி செய்த பின், குஞ்சித பாத முதலியாரை அழைத்து அவ்விடத்தில் நிற்கவைதது, "அதோ வந்து நிற்பது யார் தெரிகிறதா?" என்றார்.

உடனே வெளியில் பார்தத குஞ்சிதபாத முதலியாரின் மனத் தில் தாங்க வொண்ணாத மன எழுச்சியும், ஆநந்தமும் பொங்கிக் கிளம்பின. அவரது கண்களிலிருந்து கண்ணீர் சரேலென்று பெரு கிக் கன்னங்களின் வழியாய் முததுமுததாக உதிர்ந்தது. உச்சி முதல் உள்ளங்கால் வரையில் உரோமம் சிலிர்த்து நின்றது. அவ ரது தேகம் கட்டிடங்காமல் பதறிப் பறந்தது. அவர் தம்மை மறந்து பரவசமடைந்து, "இவன்தான் எங்கள் ஊர் மயானம் காக் கும் வெட்டியாரக்காரன்! இவன் செய்யும் தொழில் கேவலமான தொழிலாக இருந்தாலும், இவன் தங்கமான மனசும் தயாளகுண மும் உடைய சிரேஷ்டமான மனிதன். இவனுக்கு நான் அதிகமான பொருள் எதையும் கொடுத்துவிடவில்லை. நான் இவனுக்கு விட்டி ருக்கும் மானிய நிலத்திலிருந்து வருஷம் ஒன்றுக்கு அதிகமாய்க்

கிடைத்தால் நூறு ரூபாய் வரும். லக்ஷக்கணக்கிலிருந்து என்னு டைய சொத்துகளை யெல்லாம் எடுத்துக்கொண்ட சொந்த மனிதர் கள் இந்த மனிதனுடைய நன்றி விசுவாசததில் லக்ஷததில் ஒரு பங்குகூட உணரவில்லை. நெருப்பு என் உடம்பில் பட்டவுடன், நான் உணர்வடைந்து பிழைத்துக் கொண்டு எழுந்ததைக் கண்டவுடன், இவனுக்குண்டான ஆநந்தம் இவ்வளவுதானிருக்குமென்று சொல்ல முடியாது. நான் இறந்துபோய் விட்டேனென்று கொட்டி முழக்கி வெளி வேஷங்காட்டி அழுது கொண்டிருந்த மிருகங்கள் என்னைத் தடியால் அடித்து இடுப்பை முறிதது நெருப்பில போட்டுக் கொளுத்திவிடாமல் ஏன் வந்தாயென்று இவனைக் கேட்டனவாம். "நான் இறந்துபோன பிணங்களைச் சுடுவேனேயன்றி, உயிருட னிருக்கும் மனிதர்களைக் கொல்ல, நான் கொலைகாரனல்ல" வென்று இந்த உத்தமகுணப் புருஷன் அந்த மிருகங்களுக்கு நீதி போதித் தானும். எஜமானே! இந்தக் காத்தானைப் பார்க்கும்போது, முன் காலத்திலிருந்த நந்தனார் முதலிய தெய்வாம்சம் பொருந்திய மகான் களின் நினைவுண்டாகிறது. இப்போது என் மனசில் உண்டாகும் ஆநந்தப் பெருக்கில் நான் ஓடி இந்த மனிதனைக் கட்டி ஆலிங்கனம் செய்துகொள்ள வேண்டுமென்ற ஒருவேட்கையும் ஆவலும் எழுந்து துடிக்கின்றன. நான் என் ஆயிசுககுள் இந்தப் புண்ணிய புருஷனை மறுபடி காணப்போகிறேனு வென்று எண்ணிப் பதறிக் கொண்டிருந் தேன். அந்த ஆசை இப்போதுதான் தங்கள் தயவினுல் பூர்த்தி யாகிறது எஜமானே! இந்த மனிதனேடு தனிமையில் நான் கொஞ்சநேரமாவது பேசவேண்டுமென்று என் மனம் நிரம்பவும் தாகப்படுகிறது அதற்குத தாங்கள் அநுமதி கொடுக்கலாமா?" என்று நிரம்பவும் இறைஞ்சி வேண்டிக்கொண்டார். அதைக்கேட்ட கலெக்டர் உடனே காத்தானை உள்ளே அழைககுவரும்படி சிரஸ்த தாரை அனுப்பி வைததார். குஞ்சிதபாத முதலியார் கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களான கிராமமுனிசீப் முதலிய கனவான் கள் குஞ்சிதபாத முதலியார் பிழைத்துக்கொண்ட வரலாற்றை அப் பொழுததான் ஒருவாறு தெரிந்துகொண்டு, அதைக் குறிதது அளவற்ற வியப்பும், பிரமிப்பும், ஆநந்தமுமடைந்து ஒருவரிடத தொருவர் ரகசியமாகப் பல கேள்விகள் கேட்டுக் கொண்டனர். கலெக்டர் குஞ்சிதபாத முதலியாரை மாத்திரம் முன்போல அறைக்குள் போய் இருக்கும்படி செய்து, மற்ற கனவான்களை அவர்களிருந்த அறைக்குள்ளிருந்து வரவழைதது அந்தக் கூடத்தி

லேயே ஒரு பக்கமாக நின்று கொண்டிருக்கும்படி செய்துவிட்டு காத்தானுடைய வருகையை எதிர்பார்த்திருந்தார்.

திருவடமருதூரிலிருந்து வந்திருந்த எல்லோரிலும் காத்தானே நிரம்பவும் பயந்த சுபாவமுடையவன். அவன் தனது சேரியை விட்டு ஊருக்குள்ளிருக்கும் மிராசுதார்களிடம் வருவதென்றாலே பயந்து நடுங்கிப் பதுங்கி ஒதுங்கி அரைபர்லாங்கு தூரத்திற்கு அப்பால் நின்றே “ஆண்டே ஆண்டே!” என்று நிரம்பவும் அச்சத்தோடு கூப்பிடும் இயல்புடையவன். அவன் அதற்குமுன் எந்தக் கச்சேரியிலும் ஏறியறியாதவன் ; எந்த உத்தியோகஸ்தரோடும் பேசிப் பழகாதவன். தனக்கு தஞ்சை ஜில்லா பெரிய கலெக்டரிடத்திலிருந்து சம்மன் வந்திருக்கிறது என்ற செய்தியை அவன் உணர்ந்தபோதே, அவனுக்கு உயிர் போவது போலாய்விட்டது. எதற்காகத் தனக்கு சம்மன் வந்திருக்கும் என்ற கேள்வியை அவன் தனக்கருகில் வருவோரிடத்திலெல்லாம் கேட்டுக் கொண்டே இருப்பான். சம்மன் வந்த பிறகு அவனுக்கு ஆகாரத்திலாவது, தூக்கத்திலாவது, இன்னம் தனது இதர அலுவல்களிலாவது மனம் செல்லவில்லை. தஞ்சை கலெக்டர் கச்சேரிக்குள் நுழைவது தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப்படுவதுபோல, அவனது மனதில் விவரிக்க இயலாத சங்கடத்தையும் வேதனையையும் உண்டாக்கியது. அவன் தமது ஊரிலிருந்து வந்திருந்த மற்ற மிராசுதார்களைப் பார்த்து “சாமீ! என்ன வெசாரணை சாமீ! சுடுகாட்டேக் காத்துகிட்டுக் கெடக்கற இந்த நாயெ என்னுதைதுக்கு சாமீ இம்பிட்டுத் தூரம் இளுக்கறுங்க. சங்கதி இன்னதுன்னு தெரிஞ்சா ரவையூண்டு சொல்லுங்க சாமி. என் மனசு தவிக்குது சாமீ! ஏஞ்சாமீ! கலெக்கட்டரு தொர எப்பிடி இருப்பாரு சாமீ! நம்பளெப்பேலெ இருப்பாரா, இல்லாமெப்போனு மதுரை வீரன் கணக்கா, அல்லாட்டி, பெரியபூதங்கணக்கா இருப்பாராசாமீ! நான் போனு அவரு என்னை என்னுச்சும் சேஞ்சுப் புடுவாரா சாமீ?” என்று பலவிதப்பட்ட விபரீத சந்தேகங்களையும் கவலையையும் கொண்டு அதே பைத்தியமாகப் பிடித்து பிரமித்து மருள மருள விழித்துக் கொண்டு சித்தக் கலக்கமடைந்து நின்று, கலெக்டரது பிரம்மாண்டமான கச்சேரிக் கட்டிடத்தைப் பார்க்கப் பார்க்க, அவனுக்கு அது பூலோகமோ தேவேந்திரலோகமோ என்ற மலைப்பும் மனப்பிராந்தியும் ஏற்பட்டுப் போயின. அத்தகைய விப

ரீதமான நிலைமையில் இருந்த காத்தானை சிரஸ்ததார் அழைத்துக் கொண்டு போய்க் கலெக்டருக்கெதிரில் நிறுத்தினார். கிலியினால் அவனது உடம்பு குபீரென்று வியர்த்துப் போயிற்று. கைகால்களெல்லாம் வெட வெடவென்று உதறுகின்றன; சகிக்கவொண்ணாத கிலியினால் அவனது தொண்டை இறுகிப்போகவே, அவன் வாயைத் திறந்து பேசுவதற்கும் கூடாமல் போய்விட்டது. பெரிய ஆசனத்தின்மீது உட்கார்ந்து கொண்டிருந்த கலெக்டரை அவன் நிமிர்ந்து பார்த்தான். அவர் மற்ற சாதாரண மனிதரைப் போல இருந்ததைக் காணவே, அவனது நிலைமை சிறிது கட்டிலடங்கத் தக்கதாக மாறியது. அதுவுமன்றி, தங்கள் ஊர் மிராசுதார்கள் அங்கு ஒரு புறத்தில் ஒன்றாக நின்று கொண்டிருந்ததைக் காணவே அவனது உயிர் மீண்டது. அவன் ஒருவாறு தைரியமடைந்து குனிந்து கலெக்டரை நோக்கி ஒரு கும்பிடு போட்டான். உடனே கலெக்டர் அவனைப் பார்த்து நிரம்பவும் அன்பாகவும் நயமாகவும் பேசத்தொடங்கி "உன் பெயர் காத்தானா?" என்றார்.

காத்தான்:—ஆமாஞ்சாமீ!

கலெக்டர்:—திருவடமருதூரில் சுடுகாடு காக்கிறது உன் வேலையா?

காத்தான்:—ஆம்போ.

கலெக்டர்:—இதோ நிற்கிறார்களே. இவர்கள் எல்லோரும் உன்னுடைய ஊர் மனிதர்கள்தானா? இவர்கள் உனக்குத் தெரிந்தவர்கள்தானா?

காத்தான்:—ஆம்போ. ஆம்போ. எல்லாரும் எங்க வூரு ஆண்டமாருங்கதான். எல்லாரும் எனக்குத் தெரிஞ்சவங்கதானுங்க.

கலெக்டர்:—நீ இப்போது இங்கே என்ன காரியமாக வந்திருக்கிறாயென்பதை இவர்களிடத்திலாவது, வேறே யாரிடத்திலாவது நீ கேட்டுத் தெரிந்து கொண்டாயா?

காத்தான்:—கேட்டேனுங்க. யாரும் சொல்லலிங்க.

கலெக்டர்:—இவர்கள் எல்லோரும் எதற்காக வந்திருக்கிறார்கள் என்பதையாவது நீ கேட்டுத் தெரிந்து கொண்டாயா?

காத்தான்:—இல்லீங்க எசமானே! அம்பிட்டுப் பெரிய தனம் எனக்கு ஆவுமா மவராசா! அவுங்கள்லாம் பெரிய பெரிய ஆண்டை மாருங்க. அவுங்களையா அந்த மாதிரி கேவி கேக்கறதுங்க. தொரைங்களுக்குத தெரியாத சங்கதியா!—என்றான்.

அதைக் கேட்ட கலெக்டர் "ஓகோ அப்படியா! இவர்களிடம் நீ அதைக் கேட்கக் கூடாதா! இருக்கட்டும். இதோ பக்கத்து அறையில் உங்கள் ஊர் மனிதர் இன்னொருவர் இருக்கிறார். அவரைக் கூப்பிடுகிறேன்; அவர் அவ்வளவு பெருமை பாராட்டுகிறவர் அல்ல ஆகையால், அவரிடம் நீ கேட்டால், உனக்குத் தக்க உததரம் சொல்லுவார்" என்று கூறிய வண்ணம் குஞ்சிதபாத முதலியார் இருந்த அறைப்பக்கம் திரும்பி "ஐயா! வாருங்கள் வெளியில்" என்றார்.

அடுதத நிமிஷம் குஞ்சிதபாத முதலியார் அறைக்குள்ளிருந்து கூடத்திற்கு வந்து சேர்நதார். வந்தவர் எதிரில் நின்ற காத்தானைப் பார்ததார். அவனும் நிமிர்ந்து அவர் யாரென்று பார்த்தான். பார்க்கவே, திடீரென்று பிரம்மாண்டமான ஒரு ஜோதி மனிதராது கண்ணில வந்து தாக்கினல், அவர்கள் எவ்வாறு பிரமிதது திடுக்கிட்டு மதிமயங்கி நிற்பார்களோ அவ்வாறு காததான் தனது கண்களையே நம்பாமல் பிரமித்து ஸ்தம்பிதது ஒரு நிமிஷ நேரம் அப்படியே நின்றுவிட்டான். அடுதத நிமிஷம் அவனது உடம்பு மின்சாரசக்தியால் ஊக்கப்பட்டதுபோல அளவற்ற உற்சாகமும் கட்டிலடங்கா ஆவேசமும் கொண்டது. தான் பெரிய கலெக்டரின் கச்சேரியில் அவருக்கெதிரில் நின்றதையும் அவன் மறந்தான், தன்னையும் மறந்தான், மற்றவர் நின்றதையும் மறந்துபோய் சன்னதங்கொண்டவன் போல வாய்விட்டுப் பெருங்கூச்சல் செய்து, ஆ! சாமீ! எங்கப்பா! நீயா இங்கிட்டு வந்திருக்கறே! என் ராசாவே! ஒங்களெ மறுதரம் இந்த சென்மததுலெ காணப் போறேனுன்னு, ஏங்கிக் கெடந்தேண்டாயப்பா! என் தொரையே! அன்னக்கி ராவுலே நம்ப ஊரு மசானததுலெ ஒங்களெ உட்டுப் பிரிஞ்ச மொதக்கொண்டு இன்னவரையிலே ராவாப்பவலா ஒங்க நெனெப்பே நெனப்பா இருக்கிறேனுங்க சாமி! ஒங்க குடியும் குடித்தனமும் இருந்த இருப்பென்ன! ஒங்க செல்வமென்ன! செல்வாக்கென்ன! அப்பிடிப்பட்ட கர்னமவராசனோடெ ராச்சியம் இருந்த எடந்தெரியாமெப் போயிடுச்சே! நீங்க எல்லாத்தியும் தோததுப்புட்டு அரிச்

சந்திரமவராசன், நளமவராசன், தர்மராசனெப்பெலே, பரதேசி யாய்ப் போயிட்டீங்களே! ஐயோ யப்பா! இந்த வவுத தெரிச்சுக் கொடுமையெ என்ஞன்னு சொல்லப் போறேன் என்ராசதொரையே'' என்று கூறிக் கதறியழுது கண்ணீரை ஆறாய்ப் பெருக விட்ட வனாய் அப்படியே வேரற்றமரம்போலக் குஞ்சிதபாத முதலியாரது பாதத்திற்கருகில் சாஷ்டாங்கமாக விழுந்து ஓலமிட்டலறத் தொடங்கிவிட்டான். அவனது மனதில் கரையுடைத்து விடப்பட்ட பெருத்த நதியின் வெள்ளம்போல அபாரமான மனவெழுச்சியும், ஆனந்தப் பெருக்கும், துயரப்பெருக்கும் பொங்கி அவனை மேற் கொண்டெழுந்து கரைபுரண்டோடின வாதலால்தான் கலெக்டரது கச்சேரியில் இருந்ததையாவது அவர் தன்னைக்கோபித்துத் தண்டிப் பாரோ என்பதையாவது சிறிதும் எண்ணாமல் துடிதுடித்துப் பத றிக் கீழே சாய்ந்து மனமுருகிக் கனிந்து தேம்பித் தேம்பி அழத் தொடங்கி விட்டான். அந்தக் காட்சி கல்லும் கரைந்துருகத் தக்க மகா பரிதாபக் காட்சியாக இருந்தமையால், குஞ்சிதபாத முதலி யார் அழுகிறார், கிராம முன்சீப் முதலிய சாக்ஷிகள் எல்லோரும் பொருமிப்பொருமி யழுகின்றனர். கலெக்டரும் குழந்தைபோல விம்மிவிம்மி யழுகிறார் சிரஸ்ததார், டவாயதாகள், டபேதார் முத லிய சிப்பந்திகளும் அழததொடங்கி விட்டனர் அந்த ஆநந்தகர மான அழுகை ஐந்து நிமிஷகாலம் எவராலும் அடக்க இயலாத தாய் நீடித்து நின்றது. கலெக்டர் தமது கண்ணியமான நிலைமை யைக் கருதி உடனே தமது கண்ணீரைத் துடைத்து மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு காத்தானை நோக்கி "அடா காததான் ! எழுந்திரு. எழுந்திரு. போதும் இந்த ஐயாவிடம் சங்கதி தெரிந்து கொண்டது. இது சர்க்கார் கச்சேரி என்பதைக்கூட மறந்து கீழே விழுந்து இப்படிக் கூச்சலிடுகிறாயே! எழுந்திரு'' என்று அதட்டிக் கூறினர்.

உடனே காத்தான் பயந்து, சரேலென்று எழுந்து வணக்கமாக நின்று, "இல்லீங்க தொரையே! இந்த எசமானுக்கு வந்த கதியெ நீங்க கேட்டீங்கன்ன, அப்படியே உருகிப் போயிடுவீங்க ராசாவே! என்னமோ நானு ஏளெயிங்க. தயாளமாக் கஞ்சிவாதது எங்க குடும்பததெ காப்பாததின புண்ணியவானெப் பாத்தா ஒடனே என் யறியாமப் பொங்கிப் போயிடிச்சுங்க. கோவம் வைக்காதீங்க'' என்று தேம்பித் தேம்பி அழுதவண்ணம் நிரயபவும் பணிவாகக் கூறினன்.

கலெக்டர் "இந்த ஐயாவுக்கு என்ன கதி வந்ததப்பா? நீ சொல்வது எனக்கு விளங்கவில்லையே! விவரமாகச் சொல்" என்றார்.

உடனே காத்தான் குஞ்சிதபாத முதலியாரது குடும்பவரலாறு, அவர் மார்படைப்பினால் ஸ்மரணை தப்பிப்போனது, அவர் சுடுகாட்டில் வைத்துக் கொளுத்தப்பட்ட பின்னர் பிழைத்து எழுந்தது, பிறகு தான் அவரது மாளிகைக்குப் போய்த் திரும்பிவந்து அவரை அனுப்பி வைத்தது முதலிய விருத்தாந்தம் யாவையும் சவிஸ்தாரமாக எடுத்துக் கூறினான். அதைக் கேட்ட சாக்ஷிகளும் மற்றவரும் குஞ்சிதபாத முதலியார் மீது அளவற்ற இரக்கமும், தயாளமும் காட்டி, அவருக்கு நேரிட்ட மகா துக்ககரமான அவகேட்டைக் குறித்து மிகுந்த விசனமும் அநுதாபமும் கொண்டு கலங்கி யுருகித் தவித்து நின்றனர்.

உடனே கலெக்டர், காத்தானை நோக்கி "ஏனப்பா காத்தான்! நெருப்புப் பற்றிக்கொண்டு கொஞ்சதூரம் எரிவதற்குள் இந்த ஐயா எழுந்து ஜதையை விட்டு இப்பால் வந்து விட்டதாகச் சொல்லுகிறாயே! அது நிஜமாக இருக்கலாம். எரிந்துபோன இவருடைய எலும்பை எடுத்துக்கொண்டு போய் ஆற்றில் போடவும், இவருடைய சாம்பலைக் கரைத்து விடவும் இவரைச் சேர்ந்த மனிதர்கள் மறுநாள் மயானத்திற்கு வந்திருப்பார்களே. அப்போது அவர்கள் வந்து பார்த்து எவ்வித சந்தேகமும் கொள்ளவில்லையா? அப்பொழுது நீ அவர்களிடம் உண்மையை வெளியிட வேண்டுமென்று நினைக்க வில்லையா?" என்றார்.

காத்தான் "ஆமாஞ்சாமீ அதுவும் ஒரு கேவிதானுங்க. இந்த எசமான் நெருப்பெ உட்டு இப்பாலெ வந்த பொறவாலே, நானு நெருப்பே கவனிக்கவே இல்லீங்க. கட்டைங்களும் எருமுட்டைங்களும் தானா எரிஞ்சு அடங்கி அவுஞ்சி சாம்பலாப் போயிடிச்சுங்க. மைக்கா நாளு ஐயாவோடெ மாமனாரும் இன்னம் இரண்டொருத்தரும் வந்தாங்க. ஐயா பொளச்சிக்கின சங்கதி அந்த மாமனாருக்கு ராதகிரியே தெரியுமலலெ, அதனாலே அவுரே தந்தரமா அதுக்கு ஒரு சமாதானம் சொல்லிப புட்டாரு. ஐயாவோடெ ஒடம்பு ரொம்ப வயசாயி எளச்சு மெலிஞ்சுபோன ஒடம்பு. கட்டையிங்க அதியம். அதனாலே எலும்பு கிலும்பு எல்லாம் வெந்து நீறாப் போயிருச்சு இன்னு அவுரு மத்தவங்களுக்குச் சமாதானம் சொன்

ரூ. அவுங்க அதெ நெசமுன்னு நம்பி சொம்மா இருந்துட்டாங்க. அப்பாலெ மாக்கட்டெச் சாம்பலெ யெல்லாம் அவுங்க தண்ணியெ ஊத்திக் கரைச்சுப்புட்டுப் போயிச் சேர்ந்தாங்க அம்மிட்டுதான் சேதி '' என்றான்.

அதைக் கேட்ட கலெக்டர் திருவிடமருதூரி லிருந்து வந்திருந்த சாக்ஷிக ளெல்லோரையும் பார்த்து, " ஏன் ஐயா என்ன சொல்லுகிறீர்கள் ? இவன் சொல்லுகிற வரலாறு உண்மையாக இருக்குமா ? இவர் உங்கள் ஊர்க் குஞ்சிதபாத முதலியார்தானா, அல்லவா ?" என்றார்.

உடனே எல்லோரும் ஏகமனதாக, "காத்தான் சொல்வது நிஜமாகத்தான் இருக்கவேண்டும். இவர் குஞ்சிதபாத முதலிதாயர் என்பதைப் பற்றிக் கொஞ்சமும் சந்தேகமில்லை '' என்றனர்

உடனே கலெக்டர், " சரி ; அது இருக்கட்டும் இவர் இப்போது உங்களுடைய ஊருக்குள் வந்தால், நீங்கள் இவர்மேல் கல்லை விட்டெறிந்து இவரை அடித்துக் கொன்று விடுவீர்களா ?" என்றார்.

ஜனங்கள், " ஐயோ பாவமே, நாங்களேன் அப்படிச் செய்கிறோம். நாங்களும் மனிதர்கள்தானே ; பேய் பிசாசுகள் அல்லவே ; ஒரு நாளும் நாங்கள் அப்படிச் செய்யமாட்டோம். '' என்றனர்.

கலெக்டர், " மற்றவர்கள் அப்படிச் செய்தால், அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பீர்களா ?" என்றார்.

எல்லோரும், " அதற்கும் நாங்கள் இடம் கொடுக்க மாட்டோம். '' என்றனர்.

உடனே கலெக்டர் அவர்கள் எல்லோரையும் நோக்கி, " சரி ; நீங்கள் இனி உங்கள் ஊருக்குப் போகலாம். நான் இப்போது செய்த விசாரணையின் விவரத்தை யெல்லாம் நம்முடைய துரைத்தனத்தாருக்கு அனுப்பப் போகிறேன். அவர்களுடைய முடிவான உத்தரவு வெகு சீக்கிரத்தில் வந்துவிடும். மறுபடி குஞ்சிதபாத முதலியார் உங்கள் ஊரில் இருக்க நேரிட்டால், நீங்கள் எல்லோரும் இவருக்கு யாரும் எவ்வித இடைஞ்சலும் செய்யாமல் பாதுகாக்க

வேண்டும். அது விஷயமாக இவருக்குப் போலீஸ் பந்தோபஸ்தும் கிடைக்கும்படி நான் எழுதுகிறேன். நீங்கள் இனி போகலாம். அடே காத்தான்! ஐயா சீக்கிரம் ஊருக்கு வந்து விடுவார். இவர் உயிரோடிருக்கிறார் என்றும், சீக்கிரம் வந்து விடுவார் என்றும், இவருக்கு யாராவது கெடுதல் செய்ய எத்தனித்தால் அவர்கள் கடுமையான சர்க்கார் தண்டனைக்கு ஆளாவார்களென்றும் ஊர் முழுதும் தண்டோராப் போட்டுத் தெரிவி" என்றார்.

அதைக் கேட்ட காத்தான் தாங்கவொண்ணாத பெருமகிழ்ச்சி யடைந்து ஆநந்தக் கூத்தாடி, 'புத்தி புத்தி சந்தோசம் சந்தோசம்; இப்பவே ஓடி ஒடனே தமுக்குப் போட்டுட்டு மறு சோலி பாக்கறேனுங்க. எசமானே மாத்திரம் சுருக்குனு ஊருக்கு அனுப்பி வையுங்கோ தொரையே! ஒங்களிக்கு ஆயிரங்கோடி புண்ணியமுண்டுங்க. ஒங்க புள்ளெ குட்டிங்க நல்லா சந்தோசமா ஆயிரங்காலம் வாளுவாங்க" என்று கூறி சாஷ்டாங்கமாகக் கலெக்டருக்கெதிரில் விழுந்து கும்பிட்டு விட்டுக் குஞ்சிதபாத முதலியாரிடத்திலும் உருக்கமாகவும் பணிவாகவும் செலவு பெற்றுக்கொண்டு வெளியில் சென்றான். மற்ற சாக்ஷிகளும் உடனே வெளியேறினர். பிறகு கலெக்டர் குஞ்சிதபாத முதலியாரது கைரேகை யடையாளத்தை இரண்டு மூன்று காகிதங்களில் பதிய வைக்கச் செய்தபின், தமது சிரஸ்ததாரை அழைத்து, ஐயா! என்னுடைய மோட்டார் வண்டியில் இவரை உட்கார வைத்துக்கொண்டு நீர் உடனே திருவையாற்றுக்குப் போய் இவருடைய ஜாகையில் இவரை ஜாக்கிரதையாகக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு வந்து சேரும்" என்று கட்டளை யிட்டார்.

உடனே குஞ்சிதபாத முதலியார் கலெக்டர் தம்மிடம் காட்டிய அளவுகடந்த அன்பையும் மரியாதையையும் உணர்ந்து தமது மனத்தில் பொங்கி யெழுந்த நன்றியறிதலின் பெருக்கை வெளியிட்டு அவரைப் பலவாறு மெச்சிப் புகழ்ந்து விடைபெற்றுக்கொண்டு சிரஸ்ததாருடன் அவ்விடத்தைவிட்டு வெளியில் சென்றார்.

உடனே கலெக்டர் திருவடமருதூருக்கு சம்பந்தப்பட்ட சப் ரிஜிஸ்டிரார் கச்சேரியிலிருந்து முன்னரே தருவிக்கப்பட்டிருந்த குஞ்சிதபாத முதலியாரது பழைய ரேகைக் குறிகளடங்கிய புஸ்தகத்தையும், அப்போது எடுக்கப்பட்ட ரேகைகளடங்கிய காகிதங்

களையும் சர்க்கார் ரேகை பரிசோதக உத்தியோகஸ்தரிடம் அனுப்பி வைக்க, அவர் அவைகளை நிரம்பவும் ஜாக்கிரதையாக ஆராய்ச்சி செய்து பார்த்து அவைகள் எல்லாம் ஒரே விரலின் ரேகைக் குறிகள்தாம் என்று உறுதிமொழி யெழுதி அனுப்பி வைத்தார். அதையும், மற்ற விசாரணை விவரங்களடங்கிய காகிதங்களையும் கலெக்டர் உடனே சென்னை துரைத்தனத்தாருக்கு அனுப்பி வைத்தார். குஞ்சிதபாத முதலியார் எழுதிக் கொண்டிருக்கும் மனு முற்றிலும் உண்மையான தென்றும், அவர் செய்துகொண்டிருக்கும் வேண்டுகோள்கள் நியாயமானவை யென்றும், அதன்படியே துரைத்தனத்தார் உத்தரவு பிறப்பிக்க வேண்டு மென்று தாம் பலமாய்ச் சிபார்சு செய்வதாகவும் கண்டு கலெக்டர் ஒரு கடிதமும் எழுதி யனுப்பிக் கொண்டார்.

அதன் பிறகு ஒருவார காலம் கழிந்தது. சென்னை துரைத்தனத்தாரிடத்தி லிருந்து உத்தரவு கிடைத்து விட்டது. குஞ்சிதபாத முதலியாரது மனுவின் கோரிக்கைகள் முற்றிலும் ஒப்புக் கொள்ளப் பட்டதோடு, அவருக்குத் தேவையான போலீஸ் உதவிகளையும் தஞ்சை ஜில்லா கலெக்டர் செய்து கொடுக்க வேண்டு மென்றும் துரைத்தனத்தார் உத்தரவு பிறப்பித்திருந்தனர். அந்த உத்தரவின் பிரதி யொன்றை சென்னை துரைத்தனத்தார் தபால் மூலமாக நேரில் குஞ்சிதபாத முதலியாருக்கே அனுப்பி வைத்தனர். அதைப் படித்த திவான் முதலியாரும் அவரது தந்தையும் அளவற்ற களிப்பும் குதூகலமும் அடைந்தனர். முக்கியமாகத் தஞ்சை ஜில்லா கலெக்டர் தமது தந்தையின் மனுவிசாரணை காலத்தில் காட்டிய அன்பையும், மரியாதையையும் புத்திசாலித்தனத்தையும் அறிந்து, அதுபற்றி அளவளாவி இருந்த தருணத்தில், சென்னை துரைத்தனத்தாரின் உத்தரவு கிடைத்தமையால், தாம் எடுத்துக் கொண்ட முயற்சி தோல்வியிலும் அவமானத்திலும் முடியாமல் வெற்றியாயும் பூஜிதையாயும் தாம் நினைத்தபடியும் முடிவுற்றதை எண்ணி உவகை பூத்து உள்ளங் குளிர்ந்த தன்றி, அன்றைய தினம் சுமார் பதினாயிரம் ரூபாய் வரையில் செலவு செய்து சுவாமிக்கு அபிஷேகம், சகஸ்ரநாம அர்ச்சனை, நிவேதனம் முதலியவைகளை நடத்தி வைத்ததோடு ஏழைகளுக்கு அன்னதானம் வஸ்திரதானம் முதலியவைகளையும் தாராளமாக நடத்தி வைத்தார். உத்தரவு வந்து சேர்ந்த தினம் முழுதும் தந்தையும் புத்திரரும் அந்த அபார சந்தோஷத்தில்

மெய்ம்மறந்து போயிருந்தனராதலால் அந்த உத்தரவின்மேல் தாம் எவ்விதமான நடவடிக்கை எடுத்துக் கொள்வதென்ற விஷயத்தில் தமது கவனத்தைச் செலுத்தா திருந்தனர். மறு நாள் காலையில் அவர்கள் அந்த விஷயத்தைப்பற்றி யோசிக்க வாரம்பித்தது முதலில் தஞ்சை ஜில்லா கலெக்டருக்கு ஒரு கடிதமெழுதி, அதில் குஞ்சிதபாத முதலியார் தமது மனமார்ந்த நன்றி யறிதலை அவருக்கு அறிவித்துக் கொண்டார். சென்னை துரைத்தனத்தாரது உத்தரவின் முக்கிய அம்சங்கள் அடியில் வருவன:—(1) திருவடமருதூர் மிராசுதாரான குஞ்சிதபாத முதலியார் மார்படைப்பினால் பிரக்ஞைதவறி யிருந்த சமயத்தில், அவரைச் சேர்ந்த மனிதர்களும் மற்றவர்களும் அவர் இறந்துபோய் விட்டாரென்று தப்பாக அபிப்பிராயப்பட்டு அவரை மயானத்தில் ஜதையில் வைத்துக் கொளுத்தி விட்டுச் சென்றனரென்பதும், பிறகு அவர் பிரக்ஞை யடைந்து விழித்துக் கொண்டாரென்பதும், அவர் இறக்காமல் இப்போதும் இருந்து வருகிறாரென்பதும், தஞ்சை ஜில்லா கலெக்டர் நடத்திய மகா திறமையான விசாரணையி லிருந்து சந்தேகமற நிச்சயப்படுவதால், அவர் இறக்கவில்லை யென்பதையும், அந்தத் தேதி வரையில் அவருக்கு இருந்துவந்த சொத்து சுதந்திரங்களின்மேல் அவருக்கு இருந்த உரிமை அப்படியே இருந்து வருகிற தென்பதையும் நாம் ஏற்றுக்கொள்வதோடு, இதை சர்க்கார் கெஜட்டுகளின் மூலமாகவும் தண்டோரா மூலமாகவும் பகிரங்கப்படுத்த உத்தரவு செய்கிறோம். (2) அவர் உயிரோடு இருக்கிறாரென்பதைத் தெரிந்து கொண்டும், அவரது மனைவியும், அவளுடைய தகப்பனாரும் அவரது ஸ்தாவர சொத்துக்களை விற்றது தவறு. அவர் இறந்துபோ யிருந்தாலும், அவரது பெயரானது முடிவு தெரியாதிருக்கும் நிலைமையில அதை அவர்கள் விற்றதும், மற்றவர் அதை வாங்கினதும் சட்டப்படி செல்லத் தக்க விஷயங்களல்ல. ஆயினும், அவர் அவற்றிற்காகக் கொடுக்கப்பட்ட தொகையைத் தாமே திருப்பிக் கொடுத்து விடுவதாக ஒப்புக் கொள்ளுகின்றாராதலால், ஷை சொத்துக்களைவாங்கியவர்கள் ஷை பணத்தைப் பெற்றுக் கொண்டு அவற்றை அவரிடம் ஒப்படைக்கக் கடமைப்பட்டவர்களாகிறார்கள். அவர்கள் அப்படிச் செய்யத் தவறினால், சிவில் கோர்ட் அதிகாரிகள் இந்த உத்தரவைத் தங்களுடைய டிக்ரிகள் போல பாவித்து சட்டப்படி நிறைவேற்றி வைக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள். (3) ஷை குஞ்சிதபாத முதலியாருக்கு மற்ற ஜனங்கள் எவ்விதமான துன்பமும் இழைக்காமல்

அவரையும் அவரது சுதந்திரங்களையும் பாதுகாக்கவும், அவரது மனைவி இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து அந்த அம்மாளை அவரிடம் ஒப்புவிக்கவும் எல்லா ஊர்ப் போலீசாரும் கிராம அதிகாரிகளும் அவருக்குத் தக்க உதவிசெய்ய வேண்டுமென்று இதன் மூலமாய்க் கட்டளை யிடுகிறோம் என்பவை மேஷ உத்தரவின் முக்கியமான அம்சங்கள் அந்த உத்தரவின்மேல் தாம் எவ்விதமான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வதென்பதைப்பற்றி திவான் முதலியார் ஆழ்ந்து சிந்தனை செய்தார். தாம் அதுதனை தினங்களாய்த் தேடி யலைந்தும், துப்பு விசாரித்தும், தாம் தமது இளைய தாயைக் கண்டு பிடிக்க இயலாமற் போனதை உணர்ந்த திவான் சாமியாருக்கு, அவள் எளிதில் அகப்படமாட்டாளென்ற ஒரு சந்தேகம் தோன்றியது. ஆகவே, தமது தந்தையை அடிக்கடி தனிமையில் இருக்க விடுத்துத் தாம் வெளியூர்களுக்குப் போகவேண்டியிருக்குமாதலால், தாம் தமது தந்தையைத் திருவடமருதூரில் தனியாக விடுத்துச் சென்றால், அவரது ஸ்தாவர சொத்துக்களை விலைக்கு வாங்கியவர்களோ மற்றவர்களோ அவர்மீது பகைமை பாராட்டி அவருக்கு ஏதேனும் தீங்கிழைப்பர் என்ற எண்ணம் உதித்தமையால், தாம் தமது இளைய தாயைக் கண்டுபிடிக்கிற வரையில் தமது தந்தை திருவையாற்றிலேயே இருப்பது அவருக்கு உசிதமாகப் பட்டது. அந்த யோசனையை அவர் கிழவரிடம் கூற, அவரும் அதுவே நலமானதென்று ஒப்புக்கொண்டார். அதுவுமன்றி சென்னை துரைத்தனத்தாரால் வெளியிடப்பட்ட உத்தரவோடு கிழவரது இளைய மனைவியான கமலவல்லி, அவளது தந்தை, தாய், தமயன் முதலியோரது அங்கமச்ச அடையாளங்களை விரிவாக எழுதிய குறிப்பையும் சேர்த்து லக்ஷக்கணக்கில் பிரதிகள் தயாரித்து, அவைகளைத் தஞ்சை ஜில்லா கலெக்டர் மூலமாகவும் மற்ற ஜில்லா கலெக்டர்கள் மூலமாகவும் எல்லா ராஜதானிகளிலுமுள்ள சகலமான ஊர்களின் கிராம முன்சீப்புகளுக்கும், போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் அனுப்பும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் அவர்களிருவரும் முடிவு செய்தனர். அவ்வித அடையாளமும் இன்னின்ன பெயர்களும் உள்ள மனிதர்கள் எந்த ஊரில் இருக்கிறார்களோ, அந்த ஊர் கிராமாதிகாரிகளோ, போலீசாரோ அதைப்பற்றி உடனே தமக்குத் தந்தி மூலமாய் அறிவிக்க வேண்டுமென்றும், அவர்கள் தம்மிடம் வரப் பிரியப்பட்டால், உடனே அவர்களை அழைத்து வந்து தம்மிடம் சேர்க்க வேண்டுமென்றும், அவர்கள் வர மறுத்தால், அவர்களைப்

பிடித்துப் போலீஸ் பந்தோபஸ்தில் வைத்துத் தமக்கு உடனே தந்தி மூலமாய் அறிவிக்க வேண்டுமென்றும், அப்படிச் செய்வோருக்கு ஆயிரம் ரூபாய் சன்மானம் கொடுக்கப்படுமென்றும் ஒரு வேண்டு கோளையும் அந்த உததரவோடு சேர்த்துத் தயாரிதது அனுப்புவ தென்றும் அவர்கள் தீர்மானித்துக்கொண்டனர். உடனே திவான் சாமியார் சென்னையிலிருந்த பெரிய அச்சுக்கூடங்களில் மேற்படி உத்தர வையும் வேண்டுகோளையும் லக்ஷக்கணக்கில் அச்சியற்றி அவைகளை சகலமான ஜில்லாக்களின் கலெக்டர்களுக்கும் அனுப்பி வைத்துவிட்டுத திருவையாற்றிற்கு வந்து சேர்ந்து விஷயத்தைத் தமது தந்தை யாரிடம் தெரிவித்தார். அந்த உததரவுகள் சுமார் ஒருவார காலத்திற் குள் எல்லா கிராமங்களுக்கும் பரவி விடுமென்றும், சுமார் பத்து தினங்களுக்குள் எந்த ஊரிலிருந்தாவது தமக்குத் தந்தி வருமென் றும் உடனே கமலவல்லியைத்தாம் அழைத்துவந்து விடலாமென்றும் அவர்கள் ஆவலோடு ஒவ்வொரு தினமும் எதிர்பார்த்துப் பார்த்து ஏக்கமும் ஏமாற்றமும் அடைந்தவரா யிருந்தனர். சுமார் ஒருமாத காலம் கழிந்து போயிற்று. எந்த ஊரிலிருந்தும் எவ்விதமான தகவ லும் வந்து சேரவில்லை. கமலவல்லி தனது கற்பு நிலைமையிலிருந்து தவறுமல் இருந்தால் மாத்திரம் தாம் அவளை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அவர்கள் எண்ணியிருந்தார்களென்பதை நாம் இங்குக் குறிப்பிடுவது மிகையாகும். அவள் ஒரு கால் தனது கற்பு நிலையில் தவறிப் போனதால், தம்மிடம் வர விருப்பங் கொள்ளாது எவ்விடத்திலாயினும் ஒளிந்து கொண்டிருக்கிறுளோ, அல்லது தம்மைக் குறிதத சென்னை துரைத்தனத்தார் வெளியிட்ட உதத ரவு அவள் வரையில் எட்டாமல் இருக்குமோ, அல்லது, அவள் இந்தியாவிலேயே இல்லாமல் அக்கரைச் சீமைக்குப் போயிருப் பாளோ என்று தந்தையும் புதல்வரும் பலவாறு ஐயமுற்றுத் தவிததவராயிருந்தனர். தாம் எப்படியும் கமலவல்லியின் இருப்பி டத்தைக் கண்டு பிடித்து அவள் என்ன நிலைமையிலிருக்கிறுள் என்பதை அறிந்துவிட வேண்டுமென்ற தீர்மானத்தைச் செய்து கொண்டவர்களாய், தாம் அதற்குமேல் எவ்விதமான நடவடிக்கை எடுததுக் கொள்ளலாம் என்பதைப்பற்றி இருவரும் இரவு பகல் எண்ணமிட்டுக்கொண் டிருந்தனர்.

---

15-வது அதிகாரம்

## காணிக்குற்றம் கோடிக் கேடு—பிராயச்சித்தம்

12-வது அதிகாரத்தின் முடிவில் குறிக்கப்பட்ட தினத்தன்று இரவில், புரசைப்பாக்கம் பூஞ்சோலையம்மாளது பங்களாவில் நிகழ்ந்த சம்பவங்களை இனி நாம் விவரிப்போம். அந்த பங்களா முன்னரே கூறப்பட்டுள்ளபடி பிரம்மாண்டமான பூஞ்சோலை முதலியவைகளைக் கொண்ட விசாலமான கட்டிடமாகையால், அவைகளைக் கவனித்து நல்ல நிலைமையில் வைத்திருப்பதற்காகவும், அவர்களது வண்டிகளை ஓட்டவும், குதிரைகளை போஷிக்கவும், அவர்களுக்கு சமையல் செய்யவும், இன்னும் மற்றுமுள்ள எண்ணிறந்த குற்றேவல்களை நிறைவேற்றி வைக்கவும் சுமார் இருபத்தைந்து சிப்பந்திகள் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்களுள் மூவர் நால்வர் தவிர, மற்ற எல்லோரும் அப்பொழுது அந்த பங்களாவிலேயே இருந்தனர். அவர்களெல்லோரையும் பூஞ்சோலையம்மாள் நிரம்பவும் பக்ஷமாகவும் பெருந்தன்மையாகவும் நடத்திவந்தனளாதலால், எல்லோரும் அந்த அம்மாளைத் தமது சொந்தத் தாயைப் போல மதித்து அவளிடம் மிகுந்த சலுகையும் உரிமையும் பாராட்டி வந்ததன்றி அந்த அம்மாள் தமக்கு எவ்வித கெடுதலும் செய்ய மாட்டாள் என்ற நம்பிக்கையையும் கொண்டவர்களாயிருந்தனர். கோகிலாம்பாள் சகலமான சிப்பந்திகளையும் நடத்தி பங்களாவின் காரியங்களையெல்லாம் ஒழுங்காய்ச் செய்வித்த முக்கிய சூத்திரதாரியாதலால், அவள் அவர்களிடம் மாறிமாறி நயமாகவும் கண்டிப்பாகவும் இருந்து வந்தாள். வேலை வாங்கும் விஷயத்தில் அந்த மடந்தை நிரம்பவும் கண்டிப்பாக இருந்தனளானாலும், அவளது மனம் அபாரமான தயாளகுணத்தையும், காருண்யத்தையும் உள்ளடக்கிய மகா சிரேஷ்டமான மனம் என்பதை எல்லோரும் அறிந்து கொண்டிருந்தனராதலால், அவளது மனம் கோணாதபடி நிரம்பவும் ஜாக்கிரதையாக நடந்ததன்றி, அவளிடம் அத்யந்த வாஞ்சையும், பாசமும் உடையவராய், அவளை மகா லக்ஷ்மியின் அவதாரமென்றே மதித்து வந்தனர். சௌந்தரவல்லியைக் கண்டால், அவர்கள் நடுநடுங்கினர். அவள் உலக அநுபவத்தையும் பிறது கஷ்ட சுகங்களையும் சிறிதும் அறியாத செல்லக் குழந்தை.

தான் பிறருக்குக் கெடுதல் செய்யவேண்டுமென்றாவது, தான் துன் மார்க்கமான வழியில் நடக்க வேண்டுமென்றாவது அந்த மடந்தை எண்ணுகிறவளன்றாலும், அவளிடததிலும் தயாளம், பெருந் தன்மை, ஈகை, மற்ற ஒழுக்கத்தூய்மை முதலியவை சம்பூர்ணமாக நிறைந்திருந்தனவாறாலும், அவளிடம், தான் செய்வதே சரியான காரியம் என்றும், அதைப் பிறர் ஆக்ஷேபிக்காமல் அதற்கிணங்க நடந்துகொள்ள வேண்டுமென்றும் நினைக்கும் பிடிவாதகுணம் பூர்த்தியாக நிறைந்திருந்தது. தான் எந்த விஷயத்திலும் அற்ப குற்றமும் செய்யாமல் ஒழுங்காய் நடப்பதாக அவள் அபிப்பிராயப் பட்டுக் கொண்டிருந்தமையால், பிறரிடம் அற்ப குற்றம் இருப்பதைக் கண்டாலும், அவளுக்கு அபாரமான கோபமும் வெறுப்பும் உண் டாகிவிடும். அவ்வாறு குற்றம் செய்தவர்களை அவள் நிரம்பவும் கடுமையாய் தண்டிப்பதோடு அதற்குப் பிறகு அவர்களது முகத்தி லும் விழிக்க விரும்பமாட்டாள். தனது உத்தரவின்படி வேலைக் காரர் எவரேனும் கீழ்ப்படிந்து நடப்பதற்கு அற்ப காலதாமதம் ஏற்படுமானால்கூட அவள் உடனே அந்த வேலைக்காரரைப் பற்றித் தனது தாயிடம் கடுமையாகப் புகார் செய்து அவரை அலுவலி னின்று நீக்கி விட்டே மறுவேலை பார்ப்பாள். ஆதலால், அந்த பங்களாவி லிருந்த சுமார் இருபத்தைந்து சிப்பந்திகளும் அவளைப் பற்றி எப்போதும் சிம்ம சொப்பனம் கண்டு, அவள் எந்த வேலை இட்டாலும், அதை முதலில் நிறைவேற்றிய பின்னரே மற்ற அலு வல்களைக் கவனித்தனர்; அவளது கட்டளை யென்றால் அதை அந்த க்ஷணத்தில் நிறைவேற்றிவிட்டே மற்ற இருவரது காரியங் களையும் கவனிப்பார்கள். வேலைக்காரர்கள் சௌந்தரவல்லிக்கு முதன்மை கொடுத்தே எந்த வேலையையும் செய்கிறார்களென்பது பூஞ்சோலை அம்மாளுக்கும் கோகிலாம்பாளுக்கும் நன்றாகத் தெரி யும். ஆனாலும், அவளிடம் அவர்களிருவரும் கொண்டிருந்த அபார மான வாஞ்சையினாலும், மதிப்பினாலும், அவளது மனம் கோணாத படி வேலைக்காரர்கள் நடந்து கொள்ளுமாறு விடுத்திருந்தனர்.

ஆகவே, சௌந்தரவல்லியம்மாள், எள் என்பதற்கு முன் வேலைக்காரர்கள் எந்த நேரத்திலும் எண்ணெயாகவே, அவளது விருப்பத்தை நிறைவேற்றி, அவள் காலால் இடுவதைத் தலையாற் செய்து வந்தனர்.

அதுவன்றி, மேலே குறிக்கப்பட்ட தினத்தன்று அவள் தனி யாக இருந்தமையால், அவளது உத்தரவுகளை ஒரு சக்கரவர்த்தினி

யின் ஆக்ஞையைப்போல, வேலைக்காரர் வெகு பயபக்தி சிரத்தை யுடன் உடனுக்குடன் நிறைவேற்றியபடி, கைகட்டி வாய்பொத்தி அவள் இருந்த இடத்திற்குப் பக்கத்திலேயே எப்பொழுதும் ஆயத்தமாக நின்று கொண்டிருந்தனர். அவள் முன் கூறப்பட்டுள்ளபடி, மூன்று நான்கு வேலைக்காரர்களைத் தமது உறவினர்களது வீடுகளுக்கெல்லாம் விரைவாகப் போய் விஷயத்தைத் தெரிவித்து விட்டு வரும்படி செய்ததன்றி, டெலிபோன் எந்திரம் எங்கெந்த உறவினரது மாளிகைகளில் இருந்ததோ, அந்த மாளிகைகளி லிருந்தோருக்கு அந்த யந்திரத்தின் மூலமாகவும் செய்தியனுப்பி வைத்தாள். அதுவன்றி, கோகிலாம்பாள் மைலாப்பூரில் சுந்தரமூர்த்தி முதலியாரது பங்களாவில் இருக்கிறாளென்ற செய்தியைத் தனது தாய் வந்தவுடன் அவளிடம் வெளியிடக் கூடாது என்ற நினைவைக் கொண்டவளாய், சௌந்தரவல்லியம்மாள் அந்த செய்தியை எந்த வேலைக்காரருக்கும் தெரிவியாமல் தனக்குள்ளாகவே வைத்திருந்தாள்.

மைலாப்பூரிலிருந்த சுந்தரமூர்த்தி முதலியார் கோகிலாம்பாள் தமது பங்களாவி லிருக்கிறாளென்ற செய்தியைத் தாம தமது தங்கைக்கு அறிவித்திருப்பதாகக் கோகிலாம்பாளிடம் கூறினாரல்லவா, அவ்வாறு தாம் அவளிடம் கூறியிருப்பதாக, அவர் புஷ்பாவதிக்கும் தெரிவித்தாராதலால், பூஞ்சோலையம்மாள் பங்களாவிற்குத திரும்பி வந்தவுடன் புஷ்பாவதி அந்தச்செய்தியை அந்த அம்மாளிடம் வெளியிடக் கடமைப்பட்டிருந்தாள். அவ்வாறு அவள் வெளியிடா திருப்பாளாயின், பிற்பாடு கோகிலாம்பாளும், அவளது தாயும் சந்தித்துப் பேச நேருமாதலால், அந்த முக்கியமான செய்தியைப் புஷ்பாவதி வெளியிடாமல் மறைதததைப்பற்றி அவள்மீது பெருத்த சம்சயம் ஏற்படுமாதலால், தாம் அந்த சம்சயத்திற்கு இடம் கொடாமல் முன் னெச்சரிக்கையாக நடந்துகொள்ள வேண்டுமென்று புஷ்பாவதியும் சௌந்தரவல்லியும் நினைத்து, பூஞ்சோலையம்மாள் வரும்பொழுது புஷ்பாவதி தனியான ஓர் அறைக்குள் படுத்துத் தூங்குவதுபோலப் பாசாங்கு செய்வதென்றும், தன் உடம்பின் நிலைமை சரியாக இல்லையாதலால், தானாக எழுந்து வருகிற வரையில் தன்னை யாரும் வந்து எழுப்ப வேண்டாமென்று புஷ்பாவதி சொல்லிவிட்டுப் படுத்துத் தூங்குவதாக சௌந்தரவல்லி தனது தாயிடம் சொல்வதென்றும், இடையிடையில் என்னென்ன விசேஷ சம்பவங்கள் நடக்கின்றனவென்பதை சௌந்தரவல்லியம்மாள் ஒரு வேலைக்காரியின் மூல

மாக அவளுக்கு ரகஸியத்தில் சொல்லி யனுப்புகிறதென்றும் அவர்கள் தீர்மானித்துக்கொண்டு அதற்கு அனுகூலமான ஓர் அறையும் குறித்துக்கொண்டனர். அதுவுமன்றி, சௌந்தரவல்லி தனது தாயையும், அக்காளையும் அவமானப் படுத்துவதை குரோத நினைவினால் வேண்டுமென்றே செய்வதாகக் காட்டிக்கொள்ளாமல் எவ்வித கெட்டக்கருத்துமின்றி அறியாமையினால் உள்ளதை உள்ளபடி எல்லோருக்கும் முன்னும் வெளியிடுவது போலக் காட்டிக்கொள்ள வேண்டுமென்று புஷ்பாவதி தெரிவிக்க, அப்படியே செய்வதாக சௌந்தரவல்லி ஒப்புக்கொண்டதன்றி, வேலைக்காரர்களுள் மூவரை பங்களாவுக்கு வெளியில் ரஸ்தாவில் இருக்கச் செய்து, தம்மைச் சேர்ந்தமனிதர் யார்வந்தாலும், அவர்கள் தூரத்தில், வரும் பொழுதே பார்த்தது தெரிந்து கொண்டு ஓடிவந்து தன்னிடம் அந்தச் செய்தியைக் கூறும்படி அமர்த்தி யிருந்தாள்.

அன்றையதினம் காலையில் புறப்பட்டுச்சென்ற கோகிலாம்பாள் இரவு வரையில் திரும்பி வராததைப்பற்றியும், அவளைத் தேடிச் சென்ற பூஞ்சோலை யம்மாளும் வராமையைப் பற்றியும் வேலைக்காரர்களும், வேலைக்காரிகளும் மிகுந்த கவலையும் கலக்கமும் மனவேதனையும் கொண்டு தவித்து ஆவலே வடிவாகத் துடிதுடித்திருந்தனர். சௌந்தரவல்லி யம்மாளோ அவர்களெல்லோரையும் விடப் பன் மடங்கு அதிகரித்த கவலையும் மனத்துடிப்பும் அடைந்தவள்போல வேலைக்காரர்களுக் கெதிரில் நடித்து, அடிக்கடி தனது கைகளைப் பிசைந்துகொண்டு, "என்ன துன்பம் இது! அக்காளும் வரவில்லை! அம்மாளும் வரவில்லையே! அவர்களுக்கு என்னவிதமான அபாயம் நேரிட்டுவிட்டதோ தெரியவில்லையே! அவர்களைத்தவிர எனக்கு இந்த உலகத்தில் வேறு உற்றார் யார் இருக்கிறார்கள்! அவர்களை இழந்துவிட்டு நான் எப்படி உயிர்வாழப் போகிறேன்! ஐயோ தெய்வமே! இந்த அபாய வேளையில் நீதான் எனக்குத் துணையிருக்க வேண்டும்" என்றும், வேறு பலவாறாகவும் கூறிப் பிரலாபித்து சோகரஸம் நடித்துக் காட்டியபடி பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தாள்

அவ்வாறு ஒரு நாழிகைகாலம் கழிந்தது. பூஞ்சோலையம்மாள் வந்து சேர்ந்தாள். அந்த அம்மாளினது அப்போதைய மனநிலைமை விவரித்துக் கூறுவதற்கு சிறிதும் சாத்தியமற்ற பரம சங்கடமான நிலைமையாக இருந்தது. அந்த அம்மாள் போலீஸ் ஸ்டேஷன், சப்

ஜெயில், மாஜிஸ்டிரேட்டின் கச்சேரி, போலீஸ் இன்ஸ்பெக்டரது மாளிகை முதலிய இடங்களுக்குச் சென்று முடிவில், கோகிலாம்பாள் போலீஸ் இன்ஸ்பெக்டராலேதான் வஞ்சிக்கப்பட்டிருக்க வேண்டுமென்ற தீர்மானத்துடன் திரும்பி பங்களாவிற்கு வந்ததாக முன்னரே கூறியிருக்கிறோம். கோகிலாம்பாள் மனததிண்மையும், கற்புநிலை தவறாத் தன்மையும் வாய்ந்த உத்தமகுணப் பெண்மணியாதலால், அவள் இன்ஸ்பெக்டரது சூழ்ச்சி வலையிற் பட்டு அதிலிருந்து தப்பமாட்டாமல், ஒருகால் தனது உயிரை மாய்த்துக் கொண்டிருப்பாளோ என்ற எண்ணமே அந்த அம்மாளினது மனத்தில் உறுதியாக எழுந்ததாகையால், அவளது நிலைமை கட்டிலடங்காத மகா கொடிய நிலைமையாக இருந்தது. அததனை வருஷகாலம் தங்கப் பதுமைபோலத் தான் வளர்த்த தனது அருங்குணப் புதல்வியைத் தான் இனி உயிருடன் காண முடியாமல் போய்விடுமோ என்ற கவலை அந்த அம்மாளின் உயிரை ஓயாது பருகியபடி இருந்தது. அவள் திடீரென்று காணமல் போனதைப்பற்றித் தான் பிறருக்கு எவ்விதமான சமாதானம் கூறுகிறது என்ற கவலை இன்னொரு புறததில் அந்த அம்மாளினது மனத்தைக் கலக்கி நிலைதடுமாறிப் பைத்தியங் கொள்ளச் செய்து கொண்டிருந்தது. அந்த இரவில் தாம் வேறு எங்கும் போய் அவளைத் தேடவும் மாட்டாமல், அநதப் பரம வேதனையான நிலைமையை சகித்துக்கொண்டிருக்கவும் மாட்டாமல் பூஞ்சோலையம்மாள் தன்னையும் உலகையும் மறந்து நடைப்பிணப்போல வந்து தனது பங்களாவிற்குள் புகுந்து ஸ்திரீகளின் மகாலுக்குள் நுழைந்தாள். அவ்விடத்தில் ஒரு பக்கததில் சுமார் பதினேழு பதினெட்டு வேலைக்காரர்களும், இன்னொரு புறத்தில் சௌந்தரவல்லியம்மாளும் மிகுந்த கவலையும் கலக்கமும் தோற்றுவித்தவராய் இருந்தனர். பூஞ்சோலையம்மாளைக் கண்டவுடனே சௌந்தரவல்லி "அம்மா! வந்தீர்களா!" என்று ஆவலோடு பதறிக் கதறியவண்ணம் குபீரென்று எழுந்து தனது தாயினிடம் ஓடிவந்தாள். அதுபோலவே, மற்ற வேலைக்காரர்களும் மிகுந்த மனவெழுச்சியோடு சரேலென்று எழுந்து "அம்மா! பெரிய குழந்தை அகப்பட்டதா?" என்று ஆவலாய்க் கேட்டபடி வந்து நெருங்கினர். பூஞ்சோலையம்மாள் திரும்பி வந்த காலததில் ஒருகால் கோகிலாம்பாள் தனக்கு முன்னால் பங்களாவிற்கு வந்திருந்தாலும் இருக்கலாம் என்ற ஒருவித நம்பிக்கையும் சந்தேகமும் கொண்டு வந்தாள். வேலைக்காரர்கள் அந்த அம்மாளிடம் கேட்ட

கேள்வியிலிருந்து அந்த அற்ப நம்பிக்கையும் இல்லாமல் போகவே, சகிக்க வொண்ணாத துயரமும் வேதனையும் எழுந்து முன்னிலும் பலமாகக் கப்பிக்கொண்டன. அந்த அம்மாளது மனதும் தேகமும் நிலைகொள்ளாமலும், கட்டிலடங்காமலும் தத்தளித்துத் தள்ளாடிய தாதலால், அவள் அதிதூரம் நடந்து போக ஆற்றாதவளாய் எதிரிலிருந்த ஒரு வெல்வெட்டு ஸோபாவின்மேல் "உஸ்! அப்பா" வென்று கூறியபடி அலுத்துத் தளர்ந்து முற்றிலும் ஓய்ந்து வேரற்று வாடிப்போன கொடிபோலத் துவண்டு அப்படியே சாய்ந்துவிட்டாள்.

தாங்கள் கேட்ட கேள்விக்குத் தங்கள் எஜமானியம்மாள் எவ்வித உததாரமும் கூறாமல் களைத்துப் போய்த் தளர்ந்து சாய்ந்து விட்டதைக்கண்ட வேலைக்காரர்கள் வெளியில் ஏதோ விபரீதமான காரியம நிகழ்ந்திருக்க வேண்டுமென்றும், கோகிலாம்பாள் காணப் படவில்லையென்றும் யூகித்துக்கொண்டு துடிதுடித்துப்போய் அக்கினித் தணல்களின்மேல் நிற்போரைப்போல் சகிக்க வியலாத வேதனையில் பட்டு மெய்ம்மறந்து போய், விஷயம் இன்னதென்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்ற தமது பேராவலை அடக்கவும் மாட்டாமல், பூஞ்சோலையம்மாளை வருத்தவும் மனமற்று இரு தலைக் கொள்ளி எறும்புபோல் நின்று விட்டனர்.

தங்களது எஜமானியம்மாளது பரம துக்ககரமான நிலைமையைக்காண சகியாதவராய் அவர்கள் மனமார்ந்த அநுதாபமும், இரக்கமும், துக்கமும், சஞ்சலமும் கொண்டு உருகித தவித்து நின்றனர்.

செளந்தரவல்லியோ வெளிப்பார்வைக்கு மாததிரம் மற்றவர்களைக் காட்டிலும் அதிக விசனமடைந்தவள் போல நடித்தாளானாலும், தனது தாய் கண்ணபிரானது கடிததத்திற்கிணங்கிக் கோகிலாம்பாளைத தனிமையில் அனுப்பியது பெருத்த குற்றமாதலால், அந்தக் குற்றததிற்கு அந்த தண்டனை தனது தாய்க்குப் போதியதல்லவென்று நினைத்து, தான் ஏற்கெனவே தீர்மானிததிருந்தபடி தனது தாயையும் அக்காளையும் எல்லோருக்கு முன்னாலும் அவமானப்படுததியே தீரவேண்டுமென்ற முடிவை முன்னிலும் அதிக உறுதியாக செய்துகொண்டு தனது தாயண்டை நெருங்கிப்போய் நின்று "அம்மா! அம்மா! ஏனம்மா ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? அக்காள் எங்கே? இன்று காலை முதல் நான் என் காரியங்களைக் கவனித்துக் கொண்டு என் விடுதியில் இருக்

தேன். இன்று காலையில் அக்காள் தனிமையில் புறப்பட்டு எங்கேயோ போனதாகவும், அவளைத் தேடிக்கொண்டு நீங்களும் மத்தியானம் 4-மணிக்குப் புறப்பட்டுப் போனதாகவும் வேலைக்காரர்கள் சொன்னார்கள். அதைக் கேட்க என் மனம் தவிதவித்துப்போய் விட்டது. நீங்கள் தேடிக்கொண்டு போனதிலிருந்து, அக்காளுக்கு ஏதாவது அபாயம் நேர்ந்திருக்குமோ என்ற கவலை உண்டாகி விட்டது. நீங்களும இந்நேரம் திரும்பி வராதிருந்தது எங்கள் எல்லோருக்கும் வேதனையாக இருந்தது. நீங்கள் மாததிரம் இப்போது தனியாக வந்ததைப் பார்க்க எங்களுடைய வேதனை அதிகப்படுகிறது. உங்களோடு கூட அக்காள் ஏன் வரவில்லை?'' என்று நயமாகவும் பணிவாகவும் கூறினாள்.

அதைக்கேட்ட பூஞ்சோலை யம்மாளினது நிலைமை முன்னிலும் பன்மடங்கு கேவலமான தாகிவிட்டது. அவளது மனவேதனை அபரிமிதமாகப் பெருகியது. அததனை சிப்பந்திகளுக்கு முன்னால் கோகிலாம்பாளைப் பற்றிய உண்மையை வெளியிட அந்த அம்மாளுக்குச் சிறிதும் மனமொபபவில்லை. வெளியிடாமல் விஷயததை அடியோடு மறைதது வைப்பதும் அநுசிதமாகத தோன்றியது. தான் தனது இளைய புதல்வியைத தனியாக அழைததுப் போய் அவளிடததில் மாத்திரம ரகஸியமாகச் சில தகவல்களைக் கூறலாமென்றாலோ, அது சிப்பந்திகளுக்கு சந்தேகாஸ்பதமாகத தோன்றும். ஆகவே, அந்த இக்கட்டான நிலைமையில தான எவ்விதமாக நடந்து கொள்வதென்பதை நிசசயிக்க மாட்டாதவளாய்ப் பூஞ்சோலை யம்மாள் சிறிதுநேரம் தவிததுத தயங்கி மௌனமாயிருந்த பின்னர் சௌந்தரவல்லியை நோக்கி நிரம்பவும் வாஞ்சையாகவும் பக்ஷமாகவும் பேசததொடங்கி "சௌந்தரா! கொஞ்சம் பொறம்மா! நான் போய் வந்த அலுப்பில், என்னால் வாய் திறந்து கூடப் பேசமுடியவில்லை. கொஞ்சம் களைப்புத தீர்ந்தவுடன், எலலா சங்கதியையும் சொல்லுகிறேன்'' என்று கூறினாள்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி தனது தாயின் மனநிலைமையை ஒருவாறு யூகிததுணர்ந்து கொண்டாள். உண்மையை வெளியிட இஷ்டமிலலாமையால் தனது தாய் அவ்வாறு சாக்குப் போக்குச் சொல்லுகிறாளென்று நினைத்துக்கொண்ட அந்த மடந்தை முன்னிலும் நயமாகவும் பணிவாகவும தனது தாயை நோக்கி "அம்மா! தங்களுக்கு களைப்பாக இருந்தால், தாகததுக்கு ஏதா

வது கொண்டுவரச் சொல்லட்டுமா ? அல்லது, ஆகாரம் ஏதாவது வரவழைக்கட்டுமா ? நீங்கள் என்றைக்கும் இல்லாமல் இன்று இப்படிப் புதுமாதிரியாக நடந்துகொள்வது எங்களுக்கு நிரம்பவும் வேதனையாக இருக்கிறது. முக்கியமாக அக்காள் உங்களோடு வரவில்லையே என்கிற விஷயந்தான் எங்களைக் கொல்லுகிறது கொஞ்சம் பொறுக்கும்படி நீங்கள் சொல்லுகிறீர்கள் எங்கள் மனம் அந்தக் கொஞ்ச நேரத்திற்குள் பைத்தியங்கொண்டு விடும் போலிருக்கிறது. நீங்கள் அதிகமாகப் பேசவேண்டாம். இரண்டொரு வார்த்தையில் சங்கதியைச் சொல்லுங்கள்.'' என்று நயமாக வற்புறுத்திக் கூறினாள்.

அதைக் கேட்ட பூஞ்சோலையம்மாள் தான் என்ன செய்வது அல்லது என்ன சொல்வது என்பதை அறியாமல் முற்றிலும் தவித்துச் சிறிது நேரம் மௌனமாக இருந்த பின்னர், கண்ணூ சௌந்தரா ! இப்பேர்ப்பட்ட தொந்தரவான சந்தர்ப்பத்தில், எனக்கு இவ்வளவு தூரம் உபசார வார்த்தை சொல்லவேண்டுமென்ற ஆசையும் உணர்ச்சியும் உன் மனசில் உண்டானதைக் காண, எனக்கு நிரம்பவும் சந்தோஷம் உதிக்கிறது. குழந்தாய் ! எனக்குப் பசி தாகம் முதலிய உபத்திரவம் எதுவுமில்லை. இரண்டொரு நாளாய் ஏற்பட்டுக் கொண்டேபோகும் மனவேதனையைத் தாங்கமுடியாத அலுப்பே தவிர வேறொன்றுமில்லை. நான் கொஞ்சநேரம் நிம்மதியாகப் படுத்திருந்தால், அதுதான் எனக்கு நிரம்பவும் ஹிதமாக இருக்கும். ஆனாலும், உங்களுக்கு விஷயம் தெரியாமல் இருப்பது கஷ்டமாக இருக்கிறதென்று நீ சொல்லுகிறபடியால், நான் பேசாமல் இருப்பதும் சரியல்ல. அம்மா ! நம்முடைய கோகிலாவைக் காலையில் ஓரிடத்துக்கு நான் அவசரமாக அனுப்பி வைத்தேனல்லவா. அவள் மத்தியானத்துக்குள் எப்படியும் திரும்பி இங்கே வந்திருக்கவேண்டும் ; வரவில்லை. ஆகையால், நான் அவளைத் தேடிக்கொண்டு அவள் போன இடத்துக்குப் போனேன். அவள் அங்கே போய்க் கொஞ்சநேரம் இருந்தபின் புறப்பட்டு இங்கே வந்துவிட்டதாக அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் அவள் இதுவரையில் இங்கே வரவில்லை. அவள் வந்தபோது நம்முடைய சொந்தக்காரர் யாராவது கண்டு, தம்முடைய வீட்டுக்கு வந்துவிட்டுப் போகும்படி சொல்லிக் கட்டாயப்படுத்தி அழைத்துக்கொண்டு போயிருப்பார்களோ என்னவோ தெரியவில்லை. நானும் நம்முடைய உறவினர்களான இரண்டொருவருடைய வீடுகளுக்குப் போய்ப் பார்த்து

விட்டு வந்தேன். அவள் அகப்படவில்லை. ஒருவேளை அவள் எனக்கு முன்னால் இங்கே வந்திருப்பாளோ வென்று எண்ணிக் கொண்டே வந்தேன். வந்தவுடன் நீங்கள் கேட்ட முதல் கேள்வியே அவள் இங்கே வரவில்லை யென்ற அர்த்தத்தைக் கொடுத்து விட்ட தாகையால், என்னுடைய சோர்வு அதிகமாய்விட்டது" என்றாள்.

அதைக்கேட்ட சௌந்தரவல்லி யம்மாள், "அதெப்படியம்மா! நடுவழியில் எவர்களாவது கண்டு தங்களுடைய வீட்டுக்கு வரும்படி கூப்பிட்டால், அக்காள் அங்கே போகலாமா? போனாலும் இரவு நேரம்வரையில் வீட்டை நினைக்காமல் இருக்கலாமா? நாமெல்லோ ரும் அக்காளைப் பற்றிக் கவலைப்படுவோ மென்ற விஷயம், எவ்வ ளவோ புத்திசாலியான அக்காளுக்குத் தெரியாதா? அவளென்ன அறியாத குழந்தையா? காரியம் அந்த மாதிரி நடந்திருக்குமா வென்பது எனக்கு சந்தேகமாக இருக்கிறது" என்றாள்.

பூஞ்சோலையம்மாள், "தான் சீக்கிரமாக வந்து விடலா மென்று அந்த இடத்துக்குப் போயிருக்கலாம். போன இடதத்தில் எதிர் பாராத இடைஞ்சல் ஏதாவது நேரிட்டிருக்கலாம். அதனால், அவள் உடனே புறப்பட்டு வர முடியாமல் போயிருக்கலாம். வேறு மனி தரையும் அனுப்பக் கூடாத நிலைமையி லிருக்கலாம். எதையும் நாம் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை" என்றாள்.

சௌந்தரவல்லி, "ஆம். வாஸ்தவந்தான். நீங்கள் சொல்வது போலவும் காரியம் நடந்திருக்கலாம் காலையில் அக்காள் போனது நம்முடைய சொந்தக்காரர்களுடைய வீட்டுக்கா, அல்லது, இதற்கு முன் நம்முடன் அதிகமாய்ப் பழகாத அன்னிய மனிதருடைய வீட்டுக்கா?" என்றாள்.

பூஞ்சோலையம்மாள் சிறிது நேரம் யோசனை செய்தாள். தான் உண்மையை மறைத்து ஒரு பொய் சொன்னதிலிருந்து மேன்மேலும் பொய்யான தகவல்களைச் சொல்லிக்கொண்டே போகவேண்டி யிருக்கிறது என்ற கவலையும் கலக்கமும் அடைந்தாளானாலும், முத லில் சொன்னதை மாற்றிக் கூற வேறு வகையில்லா திருந்தமை யால், கோகிலாம்பாள் உறவினரான ஒருவரது வீட்டிற்கே போனாள் என்பதை ஊர்ஜிதப்படுத்துவதே உசிதமான தென தீர்மானித துக் கொண்டாள். அதற்கு முன் பழக்கமில்லாத அன்னியரது வீட்டிற்கு, யௌவனக் குமரியான கோகிலாம்பாளை அனுப்புவ

தென்றால், அது வேலைக்காரர்களுக்கு சம்சயமாகவும், விகாரமாகவும் தோன்றுமென்று நினைத்துக்கொண்ட பூஞ்சோலையம்மாள், "என்ன கண்ணா! நீ இந்தக் கேள்வியைக் கேட்கவும் வேண்டுமா? இதற்கு முன் பழகாத அன்னியர் வீட்டுக்கு நம்முடைய கோகிலாவை அனுப்புவேனா நம்முடைய சொந்தக்கார மனிதருடைய வீட்டுக்குத்தான் அனுப்பினேன்." என்றாள்.

சௌந்தரவல்லி:—ஓகோ! அப்படியா! நான் அதிக விவேகமில்லாத சின்னப் பெண்தானே! நீங்கள் சொன்னால்தான் எதுவும் எனக்குத் தெரிகிறது. நானே இதையெல்லாம் அவ்வளவு குறியாக யூகிக்க என்னால் முடியுமா? அக்காள் நல்ல விவேகி; அவளாக இருந்தாள், எதையும் சரியானபடி யூகித்துச் சரியாகச் சொல்லிவிடுவாள். ஆம் அம்மா! அது இருக்கட்டும். நீங்கள் அக்காளை யார்வீட்டுக்கு அனுப்பினீர்கள்?

பூஞ்சோலையம்மாள்:—(நிரம்பவும் தவித்துப்போய்த் தான் மேன்மேலும் பொய் சொல்ல நேருகிறதே யென்று நினைத்துத் ததளித்து, அப்பொழுது தான் பின் வாங்குவது உசிதமல்லவென்று நினைத்து) இதோ ராயபுரத்தில் உன்னுடைய சிற்றப்பாவுக்கு மருமகப்பிள்ளை இருக்கிறாரல்லவா? அவருடைய வீட்டுக்குத்தான் போனாள்.

சௌந்தரவல்லி:—ஓகோ அப்படியா! இன்கம்டாக்ஸ் கலெக்டர் ஆபீசில் பெரிய மானேஜர் வேலையில் இருப்பதாகச் சொன்னார்களே. அந்த ஐயாவின் வீட்டுக்குத்தானே? அவர்களுடைய பெயர் பொன்னுரங்க முதலியார் இல்லையா?

பூஞ்சோலையம்மாள்:—ஆம். அவருடைய வீட்டுக்குத்தான் போனது.

சௌந்தரவல்லி:—ஏனம்மா, நம்முடைய கோகிலா அந்த ஐயாவுடன் இதற்குமுன் பேசிப் பழகியதுண்டா? இதற்குமுன் அவள் அவருடன் பேசியிருந்தாலும் அவர் அவ்வளவு நெருங்கிய பந்துவல்ல வாகையால் புத்தியறிந்த பெண்ணான நம்முடைய கோகிலா இப்போது அவருடன் பேசுவது ஒழுங்காகுமா?

பூஞ்சோலையம்மாள்:—கோகிலா அவரோடு பேசுவாளா. அவருடைய சம்சாரத்துடன்தான் பேசுவாள்.

ஸௌந்தரவல்லி:—ஓகோ! அப்படியானால் சரிதான். அதி ருக்கட்டும். நானும் எத்தனையோ வருஷகாலமாய்ப் பார்த்திருக் கிறேன். நம்மிடம் யாராவது எதைப்பற்றியாவது பேச இஷ் டப்பட்டால், அவர்களே நேரில் இங்கே வந்திருக்கிறார்களே யன்றி இப்படி யாரும் நம்மைக் கூப்பிட்டதில்லையே. அதுவும் நம்முடைய கோகிலா மாத்திரம் தனியாய்ப் போகவேண்டி அவ் வளவு முக்கியமான காரியம் அவர்களுக்கும் நமக்கும் என்ன இருக்கிறது?

பூஞ்சோலையம்மாள்:—அந்த ஐயா அவர்களுடைய கச்சேரிக் குப் போகவேண்டி யிருப்பதால், அவர்களே நேரில வரமுடியாமல் போயிருக்கலாம். அவர்களுடைய சம்சாரத்தைத் தனிமையில் அனுப்பிவைக்கவும் முடியாமலிருந்திருக்கும். நம்முடைய பங்களா வில் நடந்த விஷயங்கள் சம்பந்தமாக ஏதோ முக்கியமான சில ரகசியங்களை நேரில் சொல்லவேண்டுமென்றும், அதற்காக நான் உடனே புறப்பட்டு வரவேண்டுமென்றும எழுதினார்கள். நான் போக முடியவில்லை. ஏனென்றால், அந்தக் கற்பகவல்லியம்மாளைப் பற்றி எந்த சமயத்தில் எவ்விதமான தகவல் கிடைக்குமோ வென் றும், அதற்குத் தகுந்தபடி நடந்துகொள்ள அவளுக்குத் தெரியுமோ தெரியாதோ வென்றும் நினைத்து, நான் இங்கே இருந்து கொண்டு அவளை அனுப்பி வைத்தேன். அவள் போய் அந்த ஐயாவுடைய சம் சாரத்தினிடம் பேசி விஷயங்களைத் தெரிந்துகொண்டு வரும்படி அவளை அனுப்பி வைத்தேன். அவ்வளவுதான் சங்கதி.

ஸௌந்தரவல்லி:—ஓகோ! சரிதான். மத்தியானம் நீங்கள் புறப் பட்டுப் போனீர்களே! அவர்களுடைய வீட்டுக்குத்தான் போய் அக் காளைத் தேடினீர்களோ?

பூஞ்சோலையம்மாள்:—ஆம். அங்கேதான் போய்ப் பார்த்தேன்.

ஸௌந்தரவல்லி:—அம்மாள் மாத்திரந்தான் இருந்தார்களா, ஐயாவும் இருந்தார்களோ?

பூஞ்சோலையம்மாள்:—அம்மாள் மாத்திரம் இருந்தார்கள்.

ஸௌந்தரவல்லி:—அவர்கள் அவசரமாக நமக்குச் சொல்ல எண்ணிய முக்கிய சங்கதி இன்னதென்பதை நீங்கள் அந்த அம்மா ளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டீர்களல்லவா?

பூஞ்சோலையம்மாள்:—அதைத தெரிந்து கொள்ளாமலா வந்திருப்பேன்.

சௌந்தரவல்லி:—என்ன சங்கதியம்மா அது?

பூஞ்சோலையம்மாள்: - சௌந்தரா! கொஞ்சநேரம் பொறுத்துக்கொள். நான் எல்லா சங்கதியையும் உன்னிடம் விவரமாகச் சொல்லுகிறேன். நம்முடைய கோகிலா இன்னமும் வீட்டுக்கு வரவில்லையே என்ற கவலையினால் எனக்கு இப்போது புத்தி சுவாதீனத்தில் இல்லை உன்னோடு நான் என்ன பேசுகிறேனென்பது கூடத் தெரியவில்லை. கொஞ்சநேரம் நான் பேசாமல் இப்படியே நிம்மதியாகப் படுத்திருந்தால் தான், என் உடம்பு கட்டுக்கடங்கும் போலிருக்கிறது. கொஞ்சம் பொறம்மா

சௌந்தரவல்லி:—சரியம்மா! இப்படியே படுதது க்களைப்பாருங்கள். நீங்கள் யாருடனும் பேசவேண்டாம். எல்லா விஷயங்களையும் இனி நானே கவனிக்கிறேன்—என்று கூறினாள்.

அதைக் கேட்ட பூஞ்சோலையம்மாள் எல்லா வேலைக்காரர்களும் சூழ்ந்து நிற்கையில் சௌந்தரவல்லி அருசிதமான கேள்விகளைக் கேட்டுக் கொண்டே போனதைப்பற்றி மிகுந்த சஞ்சலமும் வேதனையும் அடைந்து, அவள் எப்பொழுது ஓய்வாளென்று ஆவலோடு எதிர்பார்த்தா ளாதலால், அவள் அவ்வளவோடு தன்னைவிட்டதைப்பற்றி மிகுந்த ஆறுதலடைந்து தனது கண்களை மூடிக்கொண்டு துவண்டு ஸோபாவில் சாய்ந்து கொண்டாள். அங்கு கூடிநின்ற வேலைக்காரர்களெல்லோரும் பூஞ்சோலையம்மாள் கூறிய வரலாற்றை உண்மையென்றே நம்பி கோகிலாம்பாள் காணாமல் போயிருந்ததைப்பற்றி அளவற்ற கலக்கமும் குழப்பமும் திகிலும் அடைந்து சகிக்கவொண்ணு த கவலையும் வேதனையும் கொண்டு தவிதது நின்றனர். அப்பொழுது சௌந்தரவல்லி யம்மாள் சிறிது தூரம அப்பால் சென்று ஒரு வேலைக்காரனை அழைத்து ரகஸியமாக அவனுடன் பேசி, இராயபுரத்திலிருக்கும் பொன்னுரங்கம் முதலியார் வந்தால், அவரை அழைதது க் கொண்டுபோய்த தனியான ஓர் அறையில் உட்கார வைத்துவிட்டுத் தன்னிடம் வந்து தெரிவிக்கும்படி கூறி அவனை வெளியில் அனுப்பி வைத்தபின், இன்னொரு வேலைக்காரியை அழைத்து கோகிலாம்பாள் வரும் பக்ஷததில், அவளை அவ்விடத்திற்கு அழைத்து வராமல் தனியான ஒரு விடுதிக்கு அழைத்துப்

போகும்படி கூறி அவளையும் அனுப்பிவிட்டுத் தனது தாய்க்கருகில் வந்து சேர்ந்தாள். பிறகு கால்நாழிகை யாயிற்று. ஒரு வேலைக்காரன் தடதடவென்று அங்கே ஓடிவந்தான். அவனைக் கண்ட மற்ற வேலைக்காரர்க ளெல்லோரும் அவன் எவ்விதமான செய்திகொண்டு வந்திருக்கிறானோ என்ற ஆவலும் மனவெழுச்சியும் கொண்டு அவனது முகத்தை உற்றுப் பார்த்தனர். உடனே சௌந்தரவல்லி அவனை நோக்கி, "என்னடா! யார் வந்திருக்கிறது? அக்காளா?" என்று ஆவலோடு வினவினாள். அப்பொழுது சுய உணர்வோடிருந்த பூஞ்சோலையம்மாளும் திடுக்கிட்டு சகிக்கவொண்ணாத ஆவலும் துடிப்பும் அடைந்து ஒருகால் கோகிலாம்பாள்தான் வந்திருப்பாளோ என்ற நினைவைக் கொண்டு தனது கண்களைத் திறந்து பார்த்தாள். வெளியிலிருந்து ஓடிவந்த வேலைக்காரன் சௌந்தரவல்லியை நோக்கி, "அம்மா! வாசலில் ஐந்தாறு வண்டிகள் வந்திருக்கின்றன. நம்மைச் சேர்ந்த ஜனங்கள் சுமார் இருபது முப்பது பேர் வந்திருக்கிறார்கள்." என்றான்.

அவன் கூறிய சொற்கள் பூஞ்சோலையம்மாளது செவியிலும் நன்றாகப் பட்டனவாதலால், அந்த அம்மாள் திடுக்கிட்டுத தனது கண்களை விழித்துக்கொண்டு அந்த வேலைக்காரனைப் பார்த்து, "ஏனப்பா, அவர்களோடு நம்முடைய முதத குழந்தையும் வந்திருக்கிறதாவென்று பார்ததாயா? என்று மிகுந்த ஆவலோடு வினவினாள்.

வேலைக்காரன், "வரவில்லை யம்மா! நானும் அதைததான் முக்கியமாக கவனிததேன். ஒவ்வொரு வண்டியிலிருந்தும் இறங்கிய எல்லா மனிதரையும் நான் உற்றுப் பார்ததேன். நம்முடைய பெரிய குழந்தை காணப்படவில்லை." என்றான்.

அதைக் கேட்ட பூஞ்சோலையம்மாள் ஒருவாறு திகைத்துப் போய், "அப்படியானால், இவர்கள் எதற்காக இப்போது இங்கே வந்திருக்கிறார்க ளென்பது தெரியவில்லையே! இவர்களுக்கு இந்த விஷயத்தை யாராவது தெரிவிததிருப்பார்களோ என்னவோ தெரியவில்லையே! நான் அலுத்துப் போய் இருக்கும் அசந்தர்ப்ப வேளையில் இவர்களெல்லோரும் வந்து தொண தொணவென்று கேள்விகள் கேட்பார்களே! நான் எப்படி இவர்களைத் திருப்தி செய்யப் போகிறேன்" என்றாள்.

உடனே சௌந்தரவல்லியம்மாள் அந்த வேலைக்காரனை நோக்கி "ஏனப்பா, வந்திருப்பவர்கள் எல்லோரும் ஆண் பிள்ளைகளா, பெண் பிள்ளைகளும் இருக்கிறார்களா'' என்றாள்.

வேலைக்காரன், "பெண் பிள்ளைகளும் இருக்கிறார்கள்.'' என்றான்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி தனது தாயை நோக்கி, "அம்மா! நீங்கள் உடம்பை அலட்டிக் கொள்ளாமல் பேசாது படுத்துக் கொண்டிருங்கள். வருகிறவர்களுடன் நான் பேசுகிறேன். உங்களுக்கு உடம்பு சரியாக இல்லையென்பதையும், நான் இவர்களிடம் தெரிவிக்கிறேன்; இவர்கள் உங்களை உபத்திரவிக்காமல் பார்த்துக் கொள்ளுகிறேன். இன்று சாயங்காலம் நான் தூங்கி விழித்தேன். விழித்தவுடன் உங்களையும் காணவில்லை; புஷ்பாவதியம்மாளையும் காணவில்லை. நான் உடனே வேலைக்காரர்களைக் கூப்பிட்டு விசாரித்தேன். அக்காளைத் தேடிக் கொண்டு நீங்கள் பகல் நான்கு மணிக்கே எங்கேயோ போய்விட்டதாகச் சொன்னார்கள். புஷ்பாவதி அம்மாளுக்கு உடம்பில் ஏதோ தொந்தரவு ஏற்பட்டுப்போனதாகவும், தான் போய்ப் படுத்துத் தூங்கினால் அது சரியாய்ப் போகுமென்றும், தானே எழுந்து வருகிறவரையில் யாவரும் வந்து தன்னை எழுப்பவேண்டாமென்றும் அந்த அம்மாள் வேலைக்காரிகளிடம் சொல்லிவிட்டு தனியான ஓரிடத்தில் படுத்துத் தூங்குவதாகவும் கேள்வியுற்றேன். நான் உடனே போய்ப்பார்த்தேன். அந்த அம்மாள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை எழுப்பக் கூடாதென்று வந்து விட்டேன். ஆனால் உங்கள் இரண்டு பேரைப் பற்றித்தான் எனக்கு நிரம்பவும் அதிகமாக திகில் உண்டாகி விட்டது. நான் பிரமாதமாக நடுங்கிப்போய் விட்டேன். நான் சும்மா இருக்கவும் முடியவில்லை; நான் எங்கேபோய் உங்களைத் தேடுவதென்பதும் தெரியவில்லை. நான் உடனே ஒரு காரியம் செய்தேன். நம்முடைய வேலைக்காரர்களில் நாலைந்து மனிதரைக் கூப்பிட்டு இந்த ஊரிலுள்ள நம்முடைய சொந்த ஜனங்களின் வீடுகளுக்கெல்லாம் போய் இந்த மாதிரி நீங்கள் இருவரும் திரும்பி வரவில்லையென்ற சங்கதியைச் சொல்லி, அவர்களை உடனே அழைத்து வரும்படி சொல்லியனுப்பினேன். சிலருக்கு டெலிபோன் மூலமாகவும் செய்தியனுப்பினேன். ஆனால், நீங்கள் குறித்த ராயபுரம் பொன்னுரங்க முதலியாருக்கு மாத்திரம் நான் ஆள் அனுப்பவில்லை. அவ

ரைப் பற்றிய ஞாபகம் எனக்கு உண்டாகவில்லை யாகையால் நான் அவர்களுடைய வீட்டுக்கு மாத்திரம் ஆளை யனுப்பவில்லை" என்றாள்.

அந்தச் செய்தியைக் கேட்ட பூஞ்சோலையம்மாள் நிரம்பவும் திடுக்கிட்டு நடுநடுங்கிப் போனாளானாலும், சௌந்தரவல்லி பொன்னுரங்க முதலியாரது வீட்டிற்கு ஆள் அனுப்பவில்லை யென்ற விஷயம் அந்த அம்மாளுக்கு ஒருவித ஆறுதலையும் மனோதிடத்தையும் உண்டாக்கியது. ஆயினும் கோகிலாம்பாள் தனியாக அனுப்பப்பட்ட விஷயத்தைத் தமது பந்துக்களுக்குத் தெரிவிக்க நேருமே என்றும், அவர்கள் அதைப்பற்றிப் பின்னால் ஏதேனும் வம்பு பேசுவார்களோ வென்றும் பூஞ்சோலையம்மாள் பெரிதும் கவலையுற்று, சௌந்தரவல்லி யம்மாள் அவ்வளவு தூரம் செய்தி சொல்லி அனுப்பி இருக்க, அதை அப்போது தான் எப்படி மாற்றுவது என்று நினைத்து நினைத்துப் பார்த்தாள். எவ்வித யுக்தியும் தோன்றவில்லை. அவ்வாறு அந்த அம்மாள் தவித்துத் தத்தளித்து மௌனத்தில் ஆழ்ந்திருக்க, சௌந்தரவல்லி யம்மாள் உடனே வேலைக்காரனைப் பார்த்து, "வந்த ஜனங்கள் வெளியில் காத்திருப்பார்கள். நீ உடனே போய் எல்லோரையும் இங்கே அழைத்துக் கொண்டு வந்து சேர், மற்ற வேலைக்காரர்கள் எல்லோரும் இப்படியே இருங்கள். எங்கேயும் போய்விடவேண்டாம்; வருகிறவர்களுக்கு நாற்காலிகள் போட்டு உபசரிக்க வேண்டி யிருக்கும்" என்றாள். முன் குறிக்கப்பட்ட வேலைக்காரன் உடனே வெளியில் போய் விட்டான். மற்றவர்கள் அவ்விடத்திலேயே கும்பலாக நின்றனர். பூஞ்சோலையம்மாளினது நிலைமை சிறிதும் சகிக்க வொண்ணாததாக இருந்தது. தாம் ரகஸியத்தில் செய்த தவறான காரியம் அதத்னை ஜனங்களுக்கும் தெரிந்து போய்விடுமே என்றும், தங்களுக்கு அதனால் பழிப்பும் அவமானமும் உண்டாகி விடுமே என்றும் நினைத்துக் கலங்கி வேதனை யுற்றவளாய்த் தனது கண்களை மூடியபடி பூஞ்சோலையம்மாள் ஸோபாவில் சாய்ந்திருந்தாள்.

ஐந்து நிமிஷநேரம் கழிந்தது. உறவினர்கள் எல்லோரும் அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனர். பின்னி கம்பெனி துபாஷ் சம்பந்த முதலியார், அவருடைய மனைவி, அக்கவுண்டண்ட் ஜெனரல் ஆபீஸ் சூபரின்டெண்ட் ஞானசாகர முதலியார், அவரது மனைவி, மெடிகல் காலேஜ் புரோபஸர் செல்வரங்கமுதலியார், அவ

ரது மனைவி, இஞ்சினீர் சிங்காரவேலு முதலியார், அவரது மனைவி மயிலை கபாலீசர் தர்மகர்த்தா மாதவராய முதலியார், அவரது மனைவி, ஹைகோர்ட் வக்கீல் சீநிவாச முதலியார், அவரது மனைவி, சாண்ட் பாங்கி காசியர் சதாசிவ முதலியார், அவரது மனைவி, ஹம்பக் இன்ஷூரன்ஸ் கம்பெனியின் டைரக்டர் சடகோப முதலியார், மூர்மார்க்கெட் லாட்டரி அண்ட் கம்பெனி மூர்த்தி முதலியார், அவரது மனைவி, மோசம்பேட்டை ஜெமீந்தார் அண்ணாத்தை முதலியார் முதலிய கனதனவான்களும் அவரது சீமாட்டிமார்களும் ஜாஜ்வல்லியமாக மின்னிய வைர ஆபரணங்கள் பட்டாடைகள் முதலியவை நிறைந்தவர்களாய் வெகு ஆடம்பரமாக உள்ளே வந்து தடதடவென்று நுழைந்துவிட்டனர். மிகுந்த கண்ணியமும் பெருமைப்பாடும், நாகரீகமும், புத்திசாலித்தனமும் வாய்ந்தவர்களான அத்தனை உறவினர்களையும் காணவே, பூஞ்சோலையம்மாளின் நாடி முற்றிலும் தளர்ந்து போயிற்று. பெருத்த திகிலும் கலக்கமும் நடுக்கமும் தளர்ச்சியும் உண்டாக்கிவிட்டன. அந்த அம்மாள் தட்டித் தடுமாறி எழுந்து சுவரின் ஒரு மூலையைப் பிடித்துக்கொண்டு குனிந்து நின்றவண்ணம் ஜனங்களை நோக்கி, "வாருங்கள். வாருங்கள். நாற்காலிகளில் உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்று மிருதுவான குரலில் கூறி உபசரித்தாள். அதற்குமேல் அந்த அம்மாளால் பேச இயலாமற் போய்விட்டது.

அவ்வாறு வந்த ஜனங்கள் ஆண்பாலாரும் பெண்பாலாரும் வெவ்வேறாகப் பிரிந்து இரண்டு கும்பல்களாக வந்தனர். ஆகவே சௌந்தரவல்லி பெண்பாலாரின் கும்பலை நோக்கிச் சென்று அவர்களை வரவேற்று உட்காரச் செய்தாள். உடனே வக்கீல் சீநிவாச முதலியார் சௌந்தரவல்லியை நோக்கி, "என்ன குழந்தை! அம்மாள் எங்கேயோ காணாமல் போய்விட்டதாக டெலிபோனில் சொன்னாயே! அம்மாள் எப்போது திரும்பி வந்தார்கள்? எங்கே போயிருந்தார்கள்? கோகிலா எங்கேயோ போனதாகச் சொன்னாயே? அது திரும்பி வந்ததா இல்லையா?" என்றார்.

உடனே சௌந்தரவல்லி அவரை நோக்கி, அம்மாள் இப்போதுதான் கொஞ்ச நேரத்துக்குமுன் வந்தார்கள். அக்காள் போன இடந் தெரியவில்லை." என்றாள்.

அதைக் கேட்ட உறவினருள் பலர் மிகுந்த வியப்பும் கவலையும் தோற்றுவித்து "என்ன ஆச்சரியம் இது! கோகிலாவென்ன சிறு

குழந்தையா? அவள் வயசான பெண். நல்ல விவேகி. அவள் காணுமல் போகிறதென்றால், அது கொஞ்சமும் நம்பத்தகாத சங்கதியாக அல்லவா இருக்கிறது! காலையில் அவள் யாருடைய வீட்டுக்குப் போனாள்?" என்று கேள்வி கேட்கலாயினர்.

உடனே சௌந்தரவல்லி, "அக்காள் எங்கே போனாள் என்ற விவரம் எனக்கு இதுவரையில் தெரியாது. இப்போதுதான் அம்மாள் சொல்ல, அதை நான் தெரிந்து கொண்டேன். இன்கம் டாக்ஸ் கலெக்டர் ஆபீஸ் மானேஜர் உத்தியோகத்தில் இருக்கும் ஐயா ராயபுரத்தில் இருக்கிறார்களல்லவா. அவர்கள் இன்று காலையில் ஒரு கடிதம் அனுப்பினார்களாம், ஏதோ அவசரமான விஷயத்தைப்பற்றி அம்மாளுடன் பேசவேண்டுமென்றும், அம்மாள் உடனே புறப்பட்டு வரவேண்டுமென்றும் அவர்கள் எழுதி இருந்தார்களாம் கற்பகவல்லியம்மாள் தாம் தற்கொலை செய்து கொள்ளுவதாக ஒரு கடிதம் எழுதி வைத்து நேற்றிரவு சொல்லாமல் புறப்பட்டு எங்கேயோ போய்விட்டார்கள். அவர்களைத் தேடி அழைத்து வரும்படி அம்மாள் மனிதர்களை யனுப்பினார்கள். அவர்களைக்கண்டு பிடிக்க முடியாமல் போய்விட்டது. அந்த அம்மாளைப்பற்றி ஏதாவது தகவல் திடீரென்று கிடைத்தால் தாம் அதற்குத் தகுந்த அவசரமான நடவடிக்கை ஏதாவது எடுத்துக்கொள்ள வேண்டியிருக்குமென்று நினைத்து அம்மாள் இங்கேயே இருந்துகொண்டு, கோகிலாவைத் தனியாக ராயபுரத்திற்கு அனுப்பி வைத்தார்களாம். காலையில் போன கோகிலா மத்தி[illegible]ம நாலுமணி வரையில் திரும்பி வராததைக் கண்டு அம்மாள் கவலைப்பட்டு, அவளைத் தேடிக்கொண்டு புறப்பட்டுப் போனார்களாம்! போய்விட்டு இப்போதுதான் திரும்பி வந்தார்கள். அம்மாள் ராயபுரத்திலுள்ள அந்த ஐயாவின் வீட்டுக்குப் போய் விசாரித்ததில், கோகிலா வந்து கொஞ்சநேரமிருந்தபின் விஷயங்களைத் தெரிந்துகொண்டு புறப்பட்டு வந்துவிட்டதாக அவர்கள் சொன்னார்களாம். அம்மாள் அங்கிருந்து புறப்பட்டு கோகிலா வேறு சொந்தக்காரர் எவர்களுடைய வீட்டுக்காவது போயிருப்பாளோ வென்று போய்த் தேடிப்பார்த்துவிட்டு எங்கேயும் அவளைக் காணுமல் அலுத்துப்போய் இப்போதுதான் வந்து என்னிடம் விஷயத்தைத் தெரிவித்தார்கள். உடனே நீங்களும் வந்தீர்கள். ஒரு நாளுமில்லாத புதுமையாக அக்காள் தனியாகப் போனதையும், அவளைத் தேடிக்கொண்டு அம்மாள் போனதையும் பிற[illegible]

வராமல் இரு[illegible]

விட்டேன். என்ன செய்வதென்பதே தெரியாமல் போய்விட்டது. இந்த ஆபத்து சமயத்தில் நம்முடைய சொந்த ஜனங்களையாவது வரவழைப்போம் என்று நினைத்து உடனே உங்களெல்லோருக்கும் செய்தி சொல்லியனுப்பி, இந்த இரவு வேளையில், நீங்கள் இவ்வளவு தூரம் வரும்படியான கஷ்டத்தைக் கொடுத்து விட்டேன்" என்றாள்.

அந்த வரலாற்றைக் கேட்ட உரவினர் எல்லோரும் கோகிலாம் பாளைப்பற்றி மிகுந்த கவலையும் விசனமும் அடைந்து பதறலாயினர். உடனே சதாசிவ முதலியார், "என்ன ஆச்சரியம் இது! பொன்னுரங்க முதலியார் நிரம்பவும் பெரிய மனிதர் ஆகிவிட்டார் போலிருக்கிறதே! இவர்களுக்கு ஏதாவது சங்கதி சொல்ல வேண்டுமென்றால், அவரே நேரில் வந்து பெரிய அம்மாளிடத்தில் அதைச் சொல்லிவிட்டுப் போக எவ்வளவு நேரம் பிடிக்கப்போகிறது; ஒரு மணி நேரங்கூடப் பிடிக்காதே! அவருடைய பொழுது என்ன அவ்வளவு கிராக்கியாகிவிட்டதா வென்ன. இந்த வீட்டில் யாரும் ஆண் பிள்ளைகள் இல்லையென்பது அவருக்குத் தெரியாதா? அதுவுமல்லாமல், இவ்விடத்தில் நிச்சயதார்த்தம் நடந்ததையும், இடையில் நேரிட்ட விஷயங்களையும் அவர் அறியாரா? இந்த சமயத்தில் தானா, இந்த வீட்டுப் பெண்பிள்ளைகள் அந்தச் சீமானைத் தேடிக் கொண்டு அவருடைய சமூகத்துக்குப் போகவேண்டும். இதென்ன பணதிமிரா, அல்லது, உத்தியோக மமதையா என்பது தெரியவில்லையே!" என்றார்.

உடனே சடகோப முதலியார், "இரண்டும்தான் இருக்கும். அவரென்ன இலேசான மனிதரா. நேற்று நம்முடைய ரெண்டிபன்னெட் கம்பெனியில் அவர் 7-ரூபாய் சம்பளத்தில் பார்சல் கட்டுகிற வேலையில் தொண்ணூந்து நின்றவர் இன்று இன்கம்டாக்ஸ் ஆபிசில் முன்னூறு ரூபாய் வாங்கினால், அவருடைய கௌரதை எவ்வளவு தூரம் உயிர்ந்துவிட்ட தென்பதை நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன். அப்பேர்ப்பட்ட சீமான் தானே இங்கே வருவாரோ! இவர்கள்தான் அவரிடம் போக வேண்டும்" என்று நிரம்பவும் குத்தலாக மொழிந்தார். உடனே மாதவராய முதலியார், "அதைப்பற்றி நாம் விசாரிக்காமல், அவர் பேரில் குறை கூறுவது சரியல்ல. ஒருவேளை

றல்லவா. அதன் பிறகாவது அவர்கள் கொஞ்சம் எச்சரிப்படைந்து, பெண் திரும்பி வந்தபோது, அதை ஜாக்கிரதையாக வீட்டில் கொண்டுவந்து விடும்படி யாரையாவது மனிதரைத் துணை யாக அனுப்பி இருக்கக்கூடாதா. அல்லது, அவருடைய சம் சாரம்தான் பெண்ணை இங்கே கொண்டுவந்து விட்டுவிட்டுப் போக லாகாதா? சில மனிதர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள். தங்களுக் கென்றால் ஒரு நியாயம்; மற்றவருக்கென்றால் இன்னொரு நியாயம். அவருடைய சொந்தப் பெண்ணாக இருந்தால், அவர் இப்படி நிரா தரவாக அனுப்புவாரா?" என்று நிரம்பவும் இளக்காரமாக மொழிந்தார்.

வக்கீல் சீநிவாச முதலியார், "அதெல்லாம் போகட்டும் பெண் அவ்விடத்தை விட்டு வந்த பிறகு, பெரியம்மாள் அங்கே போய்ப் பெண் பங்களாவுக்கு வரவில்லை யென்று சொல்லித் தேடினார்களே, அவர் ஒழுங்கான மனிதராக இருந்தால், அப்போது அவர் என்ன செய்யவேண்டியது. இந்த அம்மாளோடு அவரும் கூடவந்து எங் கெங்கே போய்த் தேடவேண்டுமோ அங்கங்கே போய்த் தேட வேண்டும்; அதுவுமன்றி இப்போது இங்கேயும் வந்திருக்க வேண்டு மல்லவா. எதிலும் சம்பந்தப்படாமல் இப்படி அன்னிய மனிதர் போல நடந்து கொண்டிருக்கும் அவர் என்னவிதமான ரகஸியச் செய்தியை இவர்களுக்குச் சொல்லி யிருப்பாரென்பது தெரிய வில்லையே!" என்றார்.

உடனே ஞானசாகர முதலியார், "அவர் எந்த ரகஸியத்தை யாவது சொல்லியிருக்கட்டும். அதை யெல்லாம் நாம் இப்போது கேட்பது சரியல்ல. இன்றைக்கில்லா விட்டாலும் அவரை நாம் நாளைய தினமாவது சந்திப்போம்; அப்பொழுது இந்த நியா யத்தை நேருக்கு நேர் கேட்போம். அது இருக்கட்டும். பெண் காணமல் போயிருப்பதாக நாம் முதலில் போலீசாருக்கு அறி விக்க வேண்டுமே. பெரிய அம்மாள் தேடிப் போர்த்து வந்த சமயத் தில், போலீஸ் ஸ்டேஷனில் எழுதி வைததாகளா இல்லையா என்பது தெரியவேண்டும். இல்லாவிட்டால, இப்போதாவது நாம் போய்ச் சொல்லிவிட்டு வரவேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லியம்மாள் உடனே தனது தாயண்டை ஓடி, "ஏனம்மா! நீங்கள் ராயபுரத்திலுள்ள அவர்கள்

வீட்டுக்குப் போய்விட்டு வேறு எங்கெங்கோ போய்த் தேடியதாகச் சொன்னீர்களே! இதைப்பற்றி போலீஸ் ஸ்டேஷனில் எழுதி வைத்தீர்களா?'' என்றாள்.

பூஞ்சோலையம்மாள் அந்தக் கேள்விக்கு மறுமொழி கூற மாட்டாது விழித்துத் தத்தளிக்கலானாள். சிறிதும் சம்பந்தப் படாதவரான பொன்னுரங்க முதலியாரைப்பற்றி தான் அபாண்டமான செய்தியைச் சொல்லியதிலிருந்து தங்கள் உறவினர்களெல்லோரும் அவர் மீது ஆத்திரப்பட்டு அவரை தூஷிதததைக் கேட்க அந்த அம்மாளது மனம் பல வகையில் வேதனை யடைந்து தவித்தது. தங்களது ஜனங்கள் பொன்னுரங்க முதலியாரைக் கண்டு அதைப்பற்றி விசாரிததால், அவர் எல்லாவற்றையும் அவசியம் மறுத்து தமக்கு எந்த சங்கதியும் தெரியாதென்றும், தமது வீட்டிற்கு யாரும் வரவில்லை யென்றும் சொல்வது நிச்சயமாதலால், அப்பொழுது தனது நிலைமை சகிக்க வொண்ணாமல் ஆய் விடுமே என்ற எண்ணம் அப்பொழுதே தோன்றிப் பூஞ்சோலையம்மாளை வதைக்கலாயிற்று அதுவுமன்றி தான் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனதாகச் சொல்வதா, போகவில்லை என்று சொல்வதா என்பதையும் நிச்சயிக்க மாட்டாதவளாய், கல்சிலை போல் அப்படியே சிறிது நேரம் ஓய்ந்து நின்று விட்டாள்; தான் போலீஸ் ஸ்டேஷனில் பதிய வைதது விட்டதாகச் சொன்னால், எந்தப் போலீஸ் ஸ்டேஷனில் பதிய வைத்தது என்ற கேள்வி பிறக்கும் அலலது, சிலர் உடனே அந்த ஸ்டேஷனுக்குப் போய்க் கேட்பார்கள். தான் சொன்னது பொய்யாகி விடும். தான் பதிய வைக்க வில்லை யென்றால், யாராவது உடனே ஓடி கோகிலாம்பாள் பொன்னுரங்க முதலியாரின் வீட்டுக்குப் போனது முதலிய பொய்த தகவல்களை யெல்லாம் மெய் போல எழுதி வைப்பார்கள். உடனே போலீசார் பொன்னுரங்க முதலியாரிடம் போய் விசாரித்தாலும் விசாரிக்கலாம். அவர் எல்லாம் பொய் யென்று மறுப்பது நிச்சயம். என்று பூஞ்சோலை யம்மாள் பலவாறு எண்ணமிட்டுத் தததளித்து "அம்மா சௌந்தரா! கோகிலா அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு வந்து விட்டாள் என்ற செய்தியைக் கேட்ட பிறகு என் புததியே ஸ்வாதீனத்தில் இல்லாமல் போய்விட்டது. அதன் பிறகு நான் எங்கெங்கே போனே னென்பதே எனக்கு இப்போது சொல்லத தெரியவில்லை. என் மனம் இப்போது முன்னிலும் அதிகமாகக்

கலங்கிப் போயிருப்பதால், எல்லாம் ஒரே குழப்பமாக இருக்கிறது." என்றாள்.

உடனே சௌந்தரவல்லி, "அப்படியா! ராயபுரத்திலுள்ள பொன்னுரங்க முதலியார் அவர்களுடைய வீட்டுக்கு நீங்கள் போனது நிச்சயமாக நினைவிருக்கிறதல்லவா? நினைவில்லாவிட்டால் இப்போது வேறே யாரையாவது அங்கே அனுப்பி வைக்கிறோம்," என்றாள்.

பூஞ்சோலையம்மாள், "அங்கே போய்விட்டு வந்ததாகத்தான் நினைவிருக்கிறது" என்றாள்.

சௌந்தரவல்லி, "நீங்கள் அங்கே இருந்து புறப்பட்டு வந்தபோது, அந்த வீட்டு முதலியார் உங்களோடு வரவில்லையா?" என்றாள்.

பூஞ்சோலையம்மாள், "வரவில்லை. கோகிலா ஒருவேளை வேறே வழியாக இங்கே வந்து சேர்ந்திருப்பாளோ என்று நாங்கள் நினைத்தோமாகையால், அப்போது எங்கள் மனசில் அவ்வளவு பயம் ஏற்படவில்லை. அந்த ஐயாவும் கூட வந்து தேடவேண்டுமென்ற எண்ணம் உண்டாகவில்லை ஆகையால் அவர்கள் வரவில்லை" என்றாள்.

சௌந்தரவல்லி, "அப்படியானால் நீங்கள் உடனே நேரில் இவ்விடத்திற்கு வந்து பார்க்கவேண்டுமல்லவா. அதை விட்டு வேறு பல இடங்களுக்கெல்லாம் போய் அலைந்துவிட்டு இவ்வளவு நாழிகை கழித்து வந்தீர்களே. அவர்களுடைய வீட்டை விட்டுவந்த பிற்பாடு உங்கள் மனசில் கோகிலா பங்களாவுக்கு வந்திருக்கமாட்டாள் என்ற சந்தேகம் எப்படி உண்டாயிற்று?" என்றாள்.

அவள் அவ்வாறு கேள்விகள் கேட்டுக்கொண்டிருந்த தருணத்தில் ஒரு வேலைக்காரன் ஓடிவந்து சௌந்தரவல்லியம்மாளின் காதண்டை முகத்தை நீட்டி, "அம்மா! ராயபுரத்திலிருந்து பொன்னுரங்க முதலியார் வந்திருக்கிறார்கள். அவர்களைத் தனியான ஒரு விடுதியில் உட்கார வைத்திருக்கிறேன்" என்று ரகசியமாகக் கூறினான்.

அதைக் கேட்டவுடன், சௌந்தரவல்லி யம்மாள் திடுக்கிட்டுப் போனவள் போலக் காட்டிக்கொண்டு அவனை நோக்கி வாய்விட்டு உரத்த குரலில் பேசத் தொடங்கி "ஆகா! அப்படியா! ராய புரத்திலிருந்து அந்த முதலியாரும் வந்திருக்கிறார்களா! நான் அனுப்பிய ஆள்கள் தாமாகவே அந்த ஐயாவின் வீட்டுக்கும் போய்ச் சொல்லி யிருந்தாலும் இருக்கலாம். அல்லது அவர்களுக்கே வீட்டில இருக்கை கொள்ளாமல, அம்மாள் புறப்பட்டு வந்த பிற்பாடு தாமும் வீட்டை விட்டுப் புறப்பட்டுக் கோகிலாம்பாளைத் தேடிக் கொண்டு இங்கே வந்திருக்கலாம். சரி; போய் அவர்களையும் இவ் விடத்துக்கு அழைத்துக்கொண்டு வா. ஏன் அவர்களை வெளியில் நிற்க வைக்கிறாய்? நம்முடைய சொந்த ஜனங்கள் உள்ளே வருவதற்குக் கூட எங்களுடைய அனுமதி கேட்க வேண்டுமா? போ சீக்கிரம்" என்றாள். உடனே அந்த வேலைக்காரன் வெளியில் போய் விட்டான்.

இராயபுரம் பொன்னுரங்க முதலியார் அங்கு வராமல் அந்த மகா முக்கியமான சந்தர்ப்பத்தில் நிரம்பவும் அசட்டையாக இருந்து விட்டாரென்ற எண்ணத்தினால், உறவினருள் சிலர் அவர் மீது அருவருப்படைந்திருந்தனர்; சிலர் அவரே பெண்ணுக்கு ஏதேனும் தீங்கிழைத்திருப்பாரோ வென்று சந்தேகித்திருந்தனர். அவர் பூஞ்சோலையம்மாளையே வருமபடி கடிதம் எழுதினாராதலால், கோகிலாம்பாளுக்குக் கெடுதல் செய்ய வேண்டுமென்று அவர் கருதி யிருக்க மாட்டாரென்றும், அவள் காணாமல் போனது அவரால் நடந்தகாரியமல்லவென்றும் மற்றும் சிலர் தமக்குத்தாமே ஆட்சேபனை சமாதானங்கள் செய்து கொண்டிருந்த சமயத்தில் அவரே வந்து விட்டாரென்ற செய்தி கிடைக்கவே, அவர் கோகிலாம்பாளைப்பற்றி ஏதேனும் நலல செய்தி கொண்டு வந்திருப்பாரோ வென்று சிலர் நினைத்து அவரது வருகையை ஆவலுடன் எதிர்பார்த்தனர்; தனிமையில் இருக்கும் பெண் பிள்ளைகளை இராயபுரத்திற்கு வரும் படி அவர் அழைத்ததைப பற்றி அவரை நேருக்கு நேர் கண்டிக்க வேண்டுமென்று சிலர் ஆத்திரமடைந்து அவரது வருகையை எதிர் பார்த்தனர். அங்ஙனம் அவர்களது மனநிலைமை பலவாறாக இருக்க, பொன்னுரங்க முதலியார் வந்திருக்கிறார் என்ற செய்தியைக் கேட்கவே பூஞ்சோலை யம்மாளின் தேகம் கிடுகிடென்று ஆடியது. பிரமாண்டமான பேரிடி வந்து தாக்குவது போல, அந்த விபரீதச் செய்தி அந்த அம்மாளின் மனத்தில் பெருத்த அனர்த்தத்தை

விளைவித்தது. "ஐயோ! நான் பெரிய மனிதர்களான இத்தனை உறவினர்களுக்கு முன்பு அபாண்டமான பொய்யைச் சொல்லி விட்டேனே! அவர் இப்போது வந்து எல்லாவற்றையும் பொய் யாக்கி விடுவாரே! என்னையும் கோகிலாம்பாளையும் பற்றி இவர்க ளெல்லோரும் பலவாறாக சந்தேகித்து முற்றிலும் கேவலமாக மதிப்பதோடு வெளியிலும் போய்த் தூற்றுவார்களே! இதனால் எனக்கும் என் குழந்தைகளுக்கும் என்றும் அழியாத மானக் கேடும், பழிப்பும், தாழ்ச்சியும் உண்டாகி விடுமே! ஈசுவரா! இந்த மகா பயங்கரமான அபாயத்திலிருந்து நான் எப்படித் தப்பி மீளப் போகிறேன். இவர்களுடைய முகத்தில இனி நான் எப்படி விழிக் கப் போகிறேன் ஐயோ தெய்வமே! நான் ஒரு சிறிய தவறு செய் தது விபரீதமான அனர்த்த பரம்பரையாய்ப் பெருகிவிட்டதே! கண்ணபிரான் எப்படிப்பட்ட பிராணுபாய நிலைமையி லிருந்தாலும், அவனுடைய கடிததகதைப் பார்ததவுடன், நான் கோகிலாம்பாளை அனுப்பியது பெருதத தவறு என்பது இப்போது தெரிகிறதே யொழிய, அப்போது என் மூடபுததிக்குப் படாமல் போய்விட்டதே. அந்தத் தவறுக்காக நானும், என் மூத்த பெண்ணும் என்னென்ன பிராயச் சித்தங்களை அநுப க்க வேண்டுமோ தெரியவில்லையே?" என்ற நினைவுகள் அம்மாளின் மனததில் பெருத்த திகிலையும் குழப் பததையும் தடுமாற்றத்தையும் உண்டாக்கி விட்டன. அந்த அம் மாள் நிலைகலங்கித தனது கண்களை மூடியபடி அபபடியே சுவரில் சாய்ந்து விட்டாள்.

அங்கே கூடியிருந்த உறவினர்களும், சிப்பந்திகளும் கோகிலாம் பாள் காணமற் போயிருக்கும் விஷயததிலேயே தங்களது முழுக் கவனத்தையும் செலுத்தி யிருந்தன ராதலால், பூஞ்சோலையம்மாளது மனத் தடுமாற்றததின் உண்மையான காரணததைப்பற்றி அவர்கள் அப்போதும் சந்தேகிக்காமல் இருந்தனர். சௌந்தரவல்லி யம்மாள் தனது தாய் நிரம்பவும் அவமானப்பட்டு நரகவேதனை யநுபவிக் கிருள் என்று உணர்ந்து மிகுந்த திருப்தியும் அதிகரிதத ஊக்கமும் அடைந்து, தான் எடுதத காரியததைக் கடைசிவரையில் நிறை வேற்றி வைத்தே மறுவேலை பார்க்க வேண்டுமென்ற தீர்மானத்தை முன்னிலும் அதிகமாக ஊர்ஜிதப் படுத்திக்கொண்டு, துஷ்டர்களை யும், அக்கிரமிகளையும் சிறிதும் இறக்கமின்றிக் கடுமையான தண்ட னைக்கு உள்ளாக்கும் கடவுள் போலவும், நியாயாதிபதி போலவும்,

சிறிதும் மனத்தளர்ச்சியாவது, இரக்கமாவது கொள்ளாமல் மிகுந்த மனோ திடத்துடன் நின்றாள்.

ஐந்து நிமிஷகாலத்தில் பொன்னுரங்க முதலியார் சிறிதும் கபடமற்ற முகத்தோற்றத்தோடு அங்கே வந்து சேர்ந்தார். ஆயினும், கோகிலாம்பாளும் அவளது தாயும் எப்படிக் காணாமல் போயிருப்பார்களென்ற விஷயம் அவரது மனத்தில் மிகுந்த கவலையையும் ஆவலையும் பதைப்பையும் உண்டாக்கிய தென்பதை மாத்திரம் அவரது முகம் காட்டியது.

அவரைக் கண்டவுடன் அங்கிருந்தோரில் சிலர் அவரை அடிக்க வருபவர்போலச் சீறிப் பாய்ந்து பலவிதமான கேள்விகளைக் கேட்கலாயினர். வேறு சிலர் அவரைப் பார்த்துத் தாறுமாறாகத் திட்ட வாரம்பித்தனர். மற்றும் சிலர் குறுக்கில் விழுந்து அவர்களைத் தடுத்து ஆத்திரப்படாமல் நிதானமாக விஷயத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வதே ஒழுங்கென்றனர். சிலர், "பெண் எங்கே ஐயா?" என்றனர். சிலர், "பெண்ணைக் கொலைசெய்து விட்டீரா? உண்மையைச் சொல்லும்" என்றனர்.

தாம் அவ்வாறு நடத்தப்படுவோமென்பதைக் கனவிலும் நினையாதவரும் நிரபராதியுமான பொன்னுரங்க முதலியார் திக்பிரமை கொண்டு அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டார். இரண்டொரு நிமிஷ நேரம் வரையில் அவரது குன்றிய தேகம் குன்றிய படியே இருந்து விட்டது. ஆயினும், அவர் நிரம்பவும் தைரியசாலியாதலாலும், தாம் எவ்விதமான தவறும் செய்யா திருக்கையில் அவர்கள் தம்மிடம் அவ்வாறு தாறுமாறாக நடந்து கொள்ள வேண்டிய காரணமென்ன வென்பதை அறிய வேண்டுமென்று அவரது மனம் பதறிய தாகையாலும், அவர் கம்பீரமாக நிமிர்ந்து அங்கிருந்தோரைப் பார்த்து, "என்ன விபரீதம் இது? பெண் எங்கே யென்று என்னிடம் கேட்கிறீர்கள்! பெண்ணை நான் கொன்று விட்டதாகச் சொல்லி என்னை வைகிறீர்கள்! என்ன அடாப்பழி ஐயா இது! கொஞ்ச நேரத்துக்கு முன் யாரோ ஓர் ஆள் வந்து கோகிலா இன்று காலையில் வீட்டைவிட்டு எங்கேயோ போனது திரும்பி வரவில்லை யென்றும், அதைத் தேடிக்கொண்டு போன பெரிய அம்மாளையும் வெகு நாழிகையாகக் காணோமென்றும் சொன்னான் அந்த சமயத்தில் நான் சாப்பாட்டுக்கு இலையண்டை உட்காரப் போனேன் இந்தச் செய்தியைக் கேட்டவுடன், பரி

மாறப்பட்டிருந்த இலையை அப்படியே போட்டுவிட்டு, நானும் என் சம்சாரமும் புறப்பட்டு மோட்டார் வண்டியில் இங்கே வந்திருக்கிறோம். என்னைப் பார்த்து, "பெண் எங்கே" என்றால், எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! எல்லோரும் பதறாமல் விஷயத்தைச் சொல்லுங்கள். இவ்விடத்தில் என்ன நடந்தது, கோகிலா எங்கே போயிற்று, எப்பொழுது போயிற்று, பெரியம்மாள் எங்கே போனார்கள்; அவர்கள் வந்தார்களா இல்லையா, என்மேல் நீங்கள் என்ன காரணத்தினால் இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்" என்ற சங்கதிகளைக் கொஞ்சம் நிதானமாகச் சொல்லுங்கள்" என்றார்.

உடனே மூர்த்தி முதலியார் என்பவர் அவரைப் பார்த்து, "என்ன ஐயா! முழுப் பூசனிக் காயை இலைச்சோற்றில் மறைப்பதுபோலப் பேசுகிறீரே! எந்த விஷயத்தையும் அறியாத காக்கை பிடிக்கும் பைத்தியக்காரிபோலப் பேசினால், உம்மை விட்டுவிடுவார்களென்று எண்ணிக்கொண்டு இப்படி சாமர்த்தியம் செய்கிறீரா! மற்ற விஷயத்தைத்தான் அடியோடு புரட்டுகிறீரென்றால், அதோ கண்ணுக்கெதிரில் மலைபோல் நிற்கும் அம்மாளைப் பார்த்தும் பார்க்காதவர் போலப் பாசாங்கு பண்ணுகிறீரே!" என்றார். அதைக் கேட்ட பொன்னுரங்க முதலியார் அப்போதே நிமிர்ந்து பார்த்துப் பூஞ்சோலையம்மாள் நின்றதைக் கண்டு, "ஓகோ! அம்மாள் திரும்பி வந்துவிட்டார்களா? பெண் இன்னமும் வரவில்லையா!" என்று நிஷ்கபடமாகக் கூறினார். அதைக் கேட்ட மூர்த்தி முதலியார் முன்னிலும் அதிக ஆத்திரமடைந்து, "என்ன ஐயா நீர் கதையா பண்ணுகிறீர்? ஐயா! பொன்னுரங்க முதலியாரே! நான் நல்ல மாதிரியாகச் சொல்லுகிறேன். வீணாய் நல்ல உடம்பைக்கெடுத்துக்கொள்ளாதேயும். "நாம் செய்ததற்கு சாட்சி யார் இருக்கிறார்கள். இவர்கள் நம்மைப் போலீசாரிடம்தானே ஒப்பு விப்பார்கள். அவர்கள் சாட்சி யில்லாமல் என்ன செய்யப் போகிறார்களென்று நினைக்கவேண்டாம். உம்மை நாங்கள் போலீஸார் வரையில் அனுப்பப் போகிறதில்லை. நாங்களே உம்முடைய உயிரை உண்டு இல்லையென்று செய்துவிடுவோம். நிஜத்தைச் சொல்லிவிடும்" என்று அதட்டிக் கூறினார்.

உடனே வக்கீல் சீநிவாச முதலியார், "ஏன் சாட்சி இல்லை! இவர் எழுதியனுப்பிய கடிதம் இருக்கிறதல்லவா! அது ஒன்றே போதுமான சாட்சியமாயிற்றே" என்றார்.

அவ்வாறு மூலைக்கொருவராய் பொன்னுரங்க முதலியாரை அதட்டவும் வையவும் பயமுறுத்தவும் தொடங்கியதை உணர்ந்த பூஞ்சோலையம்மாள் சகிக்கவொண்ணாத திகிலடைந்து நடு நடுங்கிப் போய், அவ்வளவும் ஒன்றுக்குப் பத்தாய்ப் பிற்பாடு தனக்கு வந்து விளையப் போகிறதே யென்ற கவலைகொண்டு, தான் அப்பொழுதாவது உண்மையை உள்ளபடி வெளியிட்டு விடலாமா வென்று நினைத்தாள். ஆயினும் அதுவரையில் தான் பொய்யான தகவல்களைக் கூறிவிட்டு அப்பொழுது திடீரென்று மாற்றுவதற்கும் அந்த அம்மாளினது மனம் துணிவடையவில்லை. ஆகலால், அந்த அம்மாள் தான் என்ன செய்வதென்பதை நிச்சயிக்கமாட்டாமல் சோர்ந்து மயங்கிச் சுவரில் சாய்ந்தபடி நின்றாள்.

பொன்னுரங்க முதலியாரோ பைத்தியங் கொண்டவரைப் போலானார். அவர் பொறுமையோடு அதுவரையில் தம்மை யடக்கிக்கொண்டு, ஏதோ தவறு நடந்து போயிருக்கிற தென்று நினைத்து உண்மையை அறிய முயன்றார். மற்றவர் அவரிடம் மரியாதைக் குறைவான வார்த்தைகளை உபயோகித்ததைக் காணக் காண அவரது மனதில் ரௌத்திராகாரமான கோபம் பொங்கி யெழுந்ததானும், பெண் காணாமல் போயிருக்கிற சந்தர்ப்பத்தில் தாம் பதறி விகாரமாக நடந்து கொள்வது உசிதமல்ல வென்று நினைத்திருந்த பாடுபட்டுத் தமது ஆத்திரத்தை அடக்கிக்கொண்டே அதுவரையில் மொழிந்தார். கடைசியில் வக்கீல் சீநிவாச முதலியார் தாம் ஏதோ கடிதம் எழுதியதாகக் கூறியதைக் கேட்கவே, அவருக்கு மிதமிஞ்சிய கோபாவேசம் பொங்கிப் போய் விட்டது. அவர் தம்மை மறந்து உக்கிரமாகப் பேசத் தொடங்கி, "நீங்கள் எல்லோரும் கௌரவம் வாய்ந்த மனிதராயிருந்து இப்படி மாடுகளாக எப்பொழுது மாறினீர்களென்பது தெரியவில்லை. இந்த சங்கதியை இப்போதுதான் முதன் முதலாக நான் கேள்வியுற்று இங்கே வந்ததாக நான் சொல்லுகிறேன். அதைக் காதில் வாங்காமல் மனம் போனபடி நீங்கள் பேசுகிறீர்கள். நான் ஏதோ கடிதம் எழுதியதாக வக்கீல் முதலியார் சொல்லுகிறார். அது என்ன கடிதம் ஐயா! அதை எடுத்து இத்தனை ஜனங்களுக்கு முன்னால் காட்டுங்கள். நான் இவர்களுக்கு எப்போதாவது எவ்விதமான கடிதம் எழுதி இருந்தாலாவது, அதைக் கொண்டு வந்து காட்டுங்கள். நீங்கள் எனக்கு இந்த இடத்தில் எவ்விதமான சிக்ஷை நடத்தி வைத்தாலும், அதற்கு நான் உடன்படுகிறேன் நான் இவர்

களுக்குக் கடிதமே எழுதவில்லையென்றுருஜுவானால், பிறகு உங்களை நான் இலேசில் விடமாட்டேன். என் காலில் இருப்பதை எடுத்து, என்னை அவமரியாதையாகப் பேசின நாய்களை இவ்விடத்திலேயே அடித்தே தீருவேன்" என்று மிகுந்த ஆவேசத்தோடு கூறினார்.

அதைக் கேட்ட சிலர் உடனே பயந்து அடங்கிப் போயினர். சிலர் முன்னிலும் அதிகரித்த கோபாவேசமும் மூர்க்கத்தனமும் அடைந்து, "அடேய்! யாரையடா செருப்பா லடிக்கிறேனென்கிறாய்! ஆகா! அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா! எங்கே அடி பார்க்கலாம்" என்று மிகுந்த ஆத்திரத்தோடு கூறிப் பதறிய வண்ணம் தமது உடைகளை இறுக்கிக் கட்டிக்கொண்டு அவருடன் யுத்தம் செய்ய ஆயத்தமாயினர். உடனே வக்கீல் சீநிவாச முதலியார் நிரம்பவும் ஓங்கிய குரலில் பேசத்தொடங்கி, "ஐயா! எல்லோரும் தயவுசெய்து கொஞ்சம் நிதானியுங்கள். நாம் பெரிய மனிதர்களா யிருந்தும் இப்படிக் கேவலமாகச் சண்டை போடுவது விகாரமாக இருக்கிறது. நாம் கிரமப்படி எதையும் செய்வோம். அம்மா செளந்தரவல்லி! இந்தப் பொன்னுரங்க முதலியார் இன்று காலையில் உங்களுக்கு அனுப்பிய கடிதம் இப்போது எங்கே இருக்கிறது? அதை எடுத்துவர முடியுமா?" என்றார்.

செளந்தரவல்லி அந்தக் கடிதத்தை தான் அப்பொழுது வெளிப்படுத்துவது உசிதமல்லவென்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு சீநிவாச முதலியாரை நோக்கி, "அந்தக் கடிதத்தை நான் அம்மாளுடைய மேஜையின் மேலிருந்து எடுத்து வந்து மடியில் சொருகிக் கொண்டிருந்தேன். ஆனால் அதை நான் படிக்கவில்லை. கடிதம் என் அறையில் எங்கேயோ நழுவி விழுந்துவிட்டது. அதைத் தேடி எடுத்துக் கொண்டு வரும்படி ஒரு வேலைக்காரியை அனுப்பி வைத்திருக்கிறேன். அவள் வந்தவுடன் கடிதத்தை இந்த ஐயாவுக்குக் காட்டுவோம். அதற்குள் விஷயத்தை நன்றாகத்தான் இந்த ஐயாவுக்குச் சொல்லுங்களேன். இவர்களும் பொய் பேசக் கூடியவர்களல்ல. இவர்கள் தக்க பெரிய மனிதர்கள். இவர்கள் எழுதியது போல வேறே யாராவது பொய்க் கடிதம் எழுதி யனுப்பினாலும் அனுப்பி இருக்கலாம்" என்றாள்.

அதைக் கேட்ட சிலர், "அப்பொழுது கோகிலாம்பாளும், அம்மாளும் இவருடைய வீட்டுக்குப் போனதும் பொய்யாக இருக்க வேண்டுமே" என்றனர்.

சௌந்தரவல்லி, "அப்படியும் இருக்கலாம். அம்மாளுக்குத் தான் இப்பொழுது புத்தி சுவாதீனததிலில்லையே" என்றாள்.

அதைக் கேட்ட சீநிவாச முதலியார், "அம்மாளுக்கு புத்தி சுவாதீன மில்லாமல், போனது இப்பொழுது கால்நாழிகையாக வல்லவா? அதற்கு முன் உங்களிடம் பேசிய போதெல்லாம் சரியான நிலைமையில்தானே இருந்தார்கள். இருக்கட்டும். உன் இஷ்டப்படி விஷயததை நான் இவரிடம் சொல்லுகிறேன். ஐயா! பொன்னுரங்க முதலியாரே! இந்த வீட்டு எஜமானியம்மாளிடம் ஏதோ அவசர மான ரகஸிய சங்கதிகளைச் சொல்ல வேண்டுமென்றும், அவர்கள் உடனே புறப்பட்டு நேரில் உம்முடைய ஜாகைக்கு வரவேண்டு மென்றும் நீர் இன்று காலையில் கடிதம் எழுதி ஓர் ஆளிடம் கொடுத்தனுப்பினீர். வேறு அவசர ஜோலிகள் இருந்ததைக் கருதி இந்த அம்மாள் தாமே புறப்பட்டுவர முடியவில்லை யாகையால் தமது மூத்த பெண்ணை கோகிலாம்பாளை உம்முடைய வீட்டுக்கு அனுப் பினார்கள். பகல் 4-மணி வரையில் பெண் திருமபி வரவில்லை. அம்மாள் கவலை கொண்டு தாமே புறப்பட்டு உம்முடைய வீட்டுக்கு வந்தார்கள். பெண் அதற்கு முன்பே அவ்விடத்தி லிருந்து புறப் பட்டு வந்து விட்டதாக உம்முடைய சம்சாரம் சொல்லி அம்மாளை அனுப்பி வைத்தார்கள். அம்மாள் வேறு பல இடங்களில் போய்த் தேடி விட்டு கொஞ்ச நேரத்துக்கு முன் இங்கே வந்து கலங்கிப் போய் நிற்கிறார்கள். இந்த விவரம் உமக்குத தெரியாத தல்ல. அப்படி இருந்தும், நான் இதை இன்னொரு தடவை சொல்லும் படி செய்கிறீர். நீர் இப்போது நடந்துகொள்ளும் மாதிரியைப் பார்ததால், பெண் காணுமல் போன விஷயததில் உம்மேல் சம் சயம் கொள்ள இடம் கொடுக்கிறது. நீர் கடிதம் எழுதியதையும், இவர்கள் வந்து போனதையும் நீர் சாதாரணமாக ஒப்புக்கொண் டிருந்தால், பெண் ஒருவேளை வேறு எவ்விதமாக வாவது காணுமல் போயிருக்குமோ வென்றும் சந்தேகிக்க இடம் உண்டாகும். இப் போது உம்முடைய நடததையே உமமைக் காட்டிக்கொடுப்பது போல இருக்கிறது" என்றார்.

அவரது சொற்களைக் கேட்ட பொன்னுரங்கமுதலியார் நிரம்ப வும் பதறிப்போய், "ஆகா! என்ன ஆச்சரியம்! இது பெருத்த அண் டப் புளுகாக இருக்கிறதே! நான் இவர்களுக்கு எவ்விதமான கடித மும் என்றைக்கும் எழுதினதே கிடையாது. இவர்களிடம் அவ்

வளவு தூரம் உரிமைபாராட்ட நான் இவர்களுக்கு அவ்வளவு நெருங்கிய பந்துவுமில்லை இவர்களுக்கு நான் ரகஸியமாகச் சொல்லக் கூடிய முக்கிய சங்கதியும் ஒன்றுமில்லை. அப்படி நான் இவர்களுக்கு ஏதாவது சங்கதி சொல்ல எண்ணியிருந்தாலும், நானோ என் சம்சாரமோ நேரில் இங்கே வந்து இவர்களிடம் தெரிவித்திருப்போமே யன்றி, தனிமையிலிருக்கும் பெண்பிள்ளைகளான இவர்களை நான் என் வீட்டிற்கு அழைக்க ஒரு நாளும் துணிந்திருக்க மாட்டேன். அப்படிச் செய்தால், நான் இவர்களை நிரம்பவும் அகௌரவதையாக நடத்துகிற மாதிரியாகுமென்பது எனக்குத் தெரியாதா! அதுவுமன்றி இங்கே இது அசந்தர்ப்ப சமயமென்பதை நானறியாதவனா? நான் இன்று காலை பத்து மணிக்கு வீட்டைவிட்டுப் புறப்பட்டுக் கச்சேரிக்குப் போய் மாலை ஏழரை மணிக்கே வீட்டுக்குத் திரும்பி வந்தேன். என் கச்சேரியில் இருக்கிறவர்கள் எல்லோரும் அதை மெய்ப்பிப்பார்கள். இந்த அம்மாள் என்ன சொல்லுகிறார்கள்? நான் இன்று வீட்டிலிருந்ததாகவா சொல்லுகிறார்கள்?'' என்றார்.

சௌந்தரவல்லி, "இல்லை. காலையில் கோகிலாம்பாள் அங்கே வந்ததாகச் சொல்லும் சமயத்தில் நீங்கள் வீட்டில் இருந்தீர்களோ இல்லையோ என்பதை அம்மாள் சொல்லக் கூடவில்லை. மத்தியானம் நாலரை மணி சமயத்துக்கு அம்மாள் உங்களுடைய வீட்டுக்கு வந்ததாகவும், உங்கள் சம்சாரம் மாத்திரம் இருந்து, தகவல் தெரிவித்ததாகவும் சொன்னார்கள்.'' என்றாள்.

பொன்னுரங்க முதலியார், தமக்குப் பின்னால் நின்ற தமது மனைவியை நோக்கி "என்ன மலைப்புளுகு இது பார்த்தாயா? இன்று காலையிலாவது மத்தியானமாவது இந்த வீட்டுப் பெண்பிள்ளைகள் யாராவது நம்முடைய வீட்டுக்கு வந்தார்களா? நீயே எல்லாருக்கும் முன்னால் சொல்'' என்றார்.

உடனே அம்மாள், "இவர்கள் யாரும் எங்களுடைய வீட்டுக்கு இன்றைய தினமாவது வேறு என்றைய தினமாவது வந்ததே இல்லை இவர்கள் வேறு யாரைக் குறிக்கிறார்களோ என்னவோ. இதோ நான் பூஞ்சோலையம்மாளிடம் போய் நேரில் கேட்கிறேன்'' என்று கூறிய வண்ணம் விரைவாக நடந்து அந்த அம்மாள் நின்று கொண்டிருந்த இடத்திற்குப் போய், "அம்மா! அம்மா! கண்ணைத் திறந்து என்னைப் பாருங்கள்! எங்கள் வீட்டுக்கு நீங்கள் இன்று வந்தீர்களா? என் முகத்தை நீங்கள் பார்த்தீர்களா? என்னோடு நீங்

கள் பேசினீர்களா? சுவாமி சாட்சியாகச் சொல்லுங்கள். உங்களுக்கும் குழந்தைகள் இருக்கின்றன. எனக்கும் குழந்தைகள் இருக்கின்றன. யார் பொய் சொன்னாலும் சரி, அவர்களுடைய தலையில் உடனே இடி விழுந்து விடுவது நிச்சயத்திலும் நிச்சயம்! அம்மா! ஏனம்மா கண்ணை மூடிக் கொண்டு பேசாமல் நிற்கிறீர்கள்? சங்கதியை எங்களுக்கு முன்னால் சொல்லுங்கள்" என்று அதட்டிக் கூறினாள்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட, பூஞ்சோலையம்மாளது உயிரில் பெரும்பாகமும் போய் விட்டதென்றே கூறவேண்டும். சகிக்க வொண்ணாத பெருத்த அவமானத்தினாலும் பயத்தினாலும் அந்த அம்மாளினது கைகளும் கால்களும் வெட வெட வென்று ஆடுகின்றன. உடம்பு கட்டிலடங்காமல் செயலற்றுத் துவண்டு துவண்டு தாறுமாறாய்ப்போனது. மனம் இருளடையத் தொடங்குகிறது. அறிவு பிறழ்ந்து தடுமாறுகிறது. நிரபராதிகளான பொன்னுரங்க முதலியாரும், அவரது சம்சாரமும் தாங்கள் சொன்ன பொய்யின் பலனாய் மற்றவர்களால் அவமானத்திற்கும் துன்பத்திற்கும் ஆளாகிறார்களே யென்ற நினைவு கூர்மையான ஆயிரம் ஈட்டிகள் குத்துவது போல அவளது மனத்தைக் குத்திப் புண்படுத்துகின்றது. தான் முதலில் கூறிய பொய்யை அப்பொழுது மாற்றிப் பேசினால், கோகிலாம்பாள் வேறு எந்த இடத்திற்குப் போனாள் என்ற கேள்வியும், உண்மையைச் சொல்லாமல் பொன்னுரங்க முதலியாரின் மேல் குற்றம் சுமத்த வேண்டிய காரணமென்ன வென்ற கேள்வியும் பிறக்குமாதலால், அவைகளுக்குத் தான் எவ்விதமான சமாதானம் சொல்வதென்று பூஞ்சோலையம்மாளுக்கு விளங்கவில்லை, ஆகவே, எவ்விதமான மறுமொழியையும் தரமாட்டாமல் கலக்கமும் குழப்பமும் மயக்கமும் அடைந்து, கண்களைத் திறவாமல் தலையைப் பிடித்துக் கொண்டு சுவரில் சாய்ந்து நழுவி அப்படியே கீழே உட்கார்ந்து கொண்டாள்.

அந்த அம்மாளது நிலைமை அங்கிருந்தோர்க்கு முற்றிலும் பரிதாபகரமாக இருந்ததாகலால், அவர்களுள் ஒருவர், "பெண் காணாமற் போன விசனத்தில் அம்மாளுக்குக் கொஞ்சம் மயக்கம் உண்டாகி இருக்கும்போலிருக்கிறது. கொஞ்ச நேரம் பொறுத்திருக்கலாம். அவர்கள் தெளிவடைந்து சங்கதிகளை யெல்லாம் உள்ளபடி சொல்லுவார்கள். அப்பொழுது இந்தப் பொன்னுரங்க

முதலியாருடைய பேச்சு உண்மையானதா தப்பானதா வென்பது வெளிப்பட்டுப் போகிறது. எது எப்படி இருந்தாலும், இந்த வீட்டு அம்மாள் பொய் சொல்லுகிறவளல்ல பொன்னுரங்க முதலியாரின்மேல் அபாண்டப் பழி போட வேண்டுமென்று அவர்கள் ஒரு நாளும் எண்ண மாட்டார்கள். இவர்கள் தெளிவடைந்து, நமக்கு முன்னிலையில் எவ்விதமான தகவலைச் சொல்லுகிறார்களோ அது உண்மையாகத்தா னிருக்க வேண்டுமே யன்றி பொய்யாக இராது பெண் பொன்னுரங்க முதலியாருடைய வீட்டுக்குதான் போனது என்று இவர்கள் நமக் கெதிரில் இப்போது சொல்லிவிடும் பக்ஷத்தில், அதுவேதான் வேத வாக்கியம். பிறகு பொன்னுரங்க முதலியார் கோகிலாவைக் கொணர்ந்து ஒப்புவித்தே தீரவேண்டும்" என்று நிரம்பவும் கண்டிப்பாகவும் அழுத்தமாகவும் கூறினர். உடனே பொன்னுரங்க முதலியார், "சரி; அப்படியே செய்யுங்கள். இந்த வீட்டு அம்மாள் மாத்திரம் என்மேல் நேருக்கு நேர் இந்தக் குற்றத்தைச் சுமத்தும் பக்ஷத்தில், நீங்கள் என்னை எவ்விதமான தண்டனைக்கும் உட்படுத்தலாம். இந்த வீட்டு எஜமானி யம்மாள் தெளிவடைந்து பேசுவதற்கு எவ்வளவு நாழிகை ஆனாலும் சரி நாங்கள் இருக்கிறோம்" என்றார்.

அவ்வாறு அவர்கள் அவ்விடத்தில் ஒருவரோ டொருவர் சச்சரவு செய்து கொண்டிருந்த சமயத்தில், ஒரு வேலைக்காரன் சௌந்தரவல்லியண்டை மெதுவாக வந்து நெருங்கி, "அம்மா ! உங்கள் தமக்கை வந்து விட்டார்கள்." என்று ரகஸியமாகக் கூறினன். அதைக் கேட்ட சௌந்தரவல்லி, "சரி ; சந்தோஷம் ; அவள் இப்போது எங்கே இருக்கிறாள் ?" என்றாள். வேலைக்காரன், "நீங்கள் சொன்னபடி தனியான ஒரு விடுதியில் அழைத்துக் கொண்டுபோய் வைத்திருக்கிறேன்" என்றான். சௌந்தரவல்லி, "என்ன காரணம் சொல்லி அங்கே அழைத்துக்கொண்டு போனாய் ?" என்றாள். வேலைக்காரன், "உள்ளே யாரோ சில பெரிய மனிதர்கள் வந்திருக்கிறார்க ளென்றும், அவர்கள் போகிற வரையில் மறைவா யிருக்கும் படி நீங்கள் சொன்னதாகவும் சொல்லி அங்கே அழைத்துக் கொண்டு போனேன்'; என்றான். சௌந்தரவல்லி, "சரி ; நல்ல காரியம் செய்தாய். இங்கே நம்முடைய சொந்த ஜனங்கள் இன்னின்னார் வந்திருக்கிறார்க ளென்பது அவளுக்குத் தெரியாதே ?" என்றாள். வேலைக்காரன், "தெரியாது" என்றான். இவ்வாறு அவர்க

விருவரது சம்பாஷணையும் மற்ற எவருக்கும் தெரியாதபடி நிரம்பவும் தணிவான குரலில் ஒரே நிமிஷத்தில் நடந்தேறியது.

உடனே கோகிலாம்பாள் தனது அக்காளைப்பற்றி அதற்கு முன் எவ்விதமான தகவலும் தெரிந்து கொள்ளாதவள் போலவும், அவள் அன்றைய காலையி லிருந்து காணாமல் போயிருந்தவள் வந்துவிட்டதாக அப்பொழுதுதான் முதன் முதலில் தான் தெரிந்து கொள்ளுகிறவள் போல திடுக்கிட்டு மிதந்த களிப்பும் ஆநந்தமும் பெருத்த ஆவேசமும் கொண்டு தன்னை மறந்தவள் போலவும் நடித்து எல்லோரையும் பார்த்து, "கோகிலா வந்துவிட்டாள்! கோகிலா வந்துவிட்டாள்!" என்று உரக்கக் கூவினாள்.

அதைக் கேட்ட ஜனங்களெல்லோரும் திடுக்கிட்டு மிகுந்த ஆவலும் ஆவேசமும் களிப்பும் அடைந்து, "எங்கே? எங்கே?" என்று நாற்புறங்களிலும் திரும்பித் திரும்பி ஆசையோடு பார்த்தனர். அப்பொழுது அறை உணர்வோடிருந்த பூஞ்சோலையம்மாளுக்கு அந்த வார்த்தைகள் கனவுபோலத் தோன்றின. கோகிலாம்பாள் வந்துவிட்டாள் என்ற செய்தி பூஞ்சோலையம்மாளின் மனத்தில் உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் உண்டாக்கின வாறலும், தான் கூறிய வரலாற்றிற்கு மாருக அவள் தாறுமாருக உளறி, பந்து ஜனங்களுக்கு முன் இன்னம் அதிகரித்த அவமானத்தையும் தலைகுனிவையும் உண்டாக்கி விடப் போகிருளே என்ற அச்சமே பெரிதாக எழுந்தமையால், அந்த அம்மாளினது மன நிலைமை முன்னிலும் பன்மடங்கு கேவலமாக மாறிவிட்டது. காலையிலிருந்து காணாமல் போய் அருமையாய்த் திரும்பி வந்திருக்கும் கோகிலாம்பாளைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலும் இல்லாமல் போயிற்று. ஆகவே, அந்த அம்மாள் தனது நெற்றியைப் பிடித்துக்கொண்டு குன்றிப் போய் அப்படியே உட்கார்ந்து போய்விட்டாள்.

பந்து ஜனங்கள், "கோகிலாம்பாள் எங்கே?" என்று ஆவலுடன் கேட்டதற்கு மறுமொழியாக சௌந்தரவல்லி, அவள் இப்போதுதான் வந்தாளாம்; இங்கே ஜனக் கும்பல் அதிகமாயிருக்கிறதென்று வேலைக்காரர் சொன்னதைக் கேட்டு பக்கத்திலுள்ள அறைக்குள் போயிருக்கிருளாம். நாமெல்லோரும் நம்முடைய ராயபுரத்து முதலியார் ஐயா பேரில் அநியாயமாக சந்தேகப் பட்டோம். அம்மாள் இவர்களுடைய பெயரைக் குறித்து இத்தனை

வேலைக்காரர்களுக்கும் முன்னால்தான் சொன்னார்கள். அம்மாள் அப்படி ஏன் சொன்னார்கள் என்பதுதான் தெரியவில்லை. இருக்கட்டும். நீங்கள் எல்லோரும் கொஞ்ச நேரம் இங்கேயே இருங்கள். நான் போய் அக்காளைப் பார்த்து அவள் எங்கே போயிருந்தாள் என்ற உண்மையான தகவலைத் தெரிந்து கொண்டு வருகிறேன். பண்டமோரிடம் பழியோரிடம் என்கிறபடி நாம் அக்கிரமமாக எவர் பேரிலும் குற்றம் சுமத்துவது சரியல்ல. நம்முடைய உறவினர்களெல்லோரும் தக்க பெரிய மனிதர்கள். அவர்களுடைய உறவு இன்றோடு போகிறதல்ல. ஆகையால், நாம் ஆத்திரப்படாமல் உண்மையைத் தெரிந்து கொள்வதே நல்லது. ராயபுரத்து முதலியார் ஐயா பேரில் அம்மாள் சொன்னது அநேகமாய்த் தப்பாகத்தானிருக்குமென்று நான் எண்ணுகிறேன். கோகிலா என்ன சொல்லுகிறாளென்று கேட்டுப் பார்த்து விடுவோம்" என்று கூறிய வண்ணம், தங்கள் வேலைக்காரர்களெல்லோரையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு அவ்விடத்தை விட்டு வெளியில் சென்றாள். இரண்டு மூன்று பெரிய கூடங்களுக்கும் அறைகளுக்கும் அப்பால் இருந்த தனியான ஒரு விடுதியில் கோகிலாம்பாள் அப்பொழுதுதான் போய் உட்கார்ந்து கொண்டாள் தன்னைத் தேடிக்கொண்டு தனது தாய் போயிருப்பதாக சுந்தரமூர்த்தி முதலியார் கூறக் கேட்டது முதல் தனது தாயைப் பற்றிய கவலையே பெரிதாக அவளது மனத்தில் பெருகி, ஓயாத வேதனையை உண்டாக்கிக் கொண்டிருந்தமையால், அவள் பங்களாவிற்கு வந்தவுடன் தனது தாயைப் பற்றிய தகவலைத் தெரிந்து கொள்ளவே ஆவலுற்றாள். ஆயினும் வேலைக்காரன் சௌந்தரவல்லிக்குப் பயந்து, கோகிலாம்பாளிடம் வேறு எவ்வித தகவலையும் தெரிவிக்காமல் யாரோ சில பெரிய மனிதர்கள் வந்திருப்பதால், தனியாக கொஞ்ச நேரம் மறைவாயிருக்கும்படி சௌந்தரவல்லி சொல்லச் சொன்னாள் என்று மாத்திரம் தெரிவித்து விட்டு, பந்து ஜனங்கள் முதலியோர் கூடியிருந்த இடத்தை நோக்கி ஓடிவிட்டானாகலால், தனிமையில் விடப்பட்ட கோகிலாம்பாள் எந்த விவரத்தையும் தெரிந்து கொள்ள மாட்டாதவளாய்த் தத்தளித்திருந்ததன்றி, பங்களாவில் அப்பொழுது வேறு யார் வந்திருப்பார்களென்றும், அவர்கள் யாருடன் பேசிக் கொண்டிருப்பார்களென்றும் பலவாறு சிந்தனை செய்த வண்ணம் ஆவலே வடிவாக வீற்றிருந்தாள்.

அவள் இருந்த அறைக்குள் ஸௌந்தரவல்லி போய்ச் சேர்ந்தாள். அவளைத் தொடர்ந்து வேலைக்காரிகளும் அந்த அறைக்குள் நுழைந்தனர். ஸௌந்தரவல்லி தனது அக்காள் காலையிலிருந்து காணாமல் போனதைப்பற்றி மிகுந்த கலக்கமும் கவலையும் அடைந்து தவித்திருந்தவள் போலவும், அவள் திரும்பி வந்ததைக் கேட்டு அளவற்ற சந்தோஷமடைந்து அவளைப் பார்க்க ஆசைகொண்டு ஓடிவந்தவள் போலவும், காட்டிக்கொண்டு, "அக்கா! அக்கா! வந்தாயா! உன்னை யாராவது அபகரித்துக்கொண்டு போயிருப்பார்களோ என்று நாங்களெல்லோரும் நினைத்து இந்நேரம் தாமரை இலைத் தண்ணீர் போலத் தத்தளித்துப் போய் விட்டோம். நல்ல வேளையாக வந்து சேர்ந்தாயே! உன்னை யாரம்மா அழைத்துக் கொண்டு வந்தார்கள்? நீ தனியாகவா வந்தாய்? இப்போது எங்கிருந்து வந்தாய்?" என்றாள்.

அவளுக்குப் பக்கத்திலிருந்த சிப்பந்திகள் கோகிலாம்பாள் திரும்பி வந்ததைக் குறித்து மனப் பூர்த்தியான மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைந்து இனிமையாய் மலர்ந்த முகத்தினராய்க் கோகிலாம்பாளை நிரம்பவும் பக்ஷத்தோடும் பிரேமையோடும் பார்த்தபடி நின்றனராயினும், ஸௌந்தரவல்லி தனது அக்காளிடம் சம்பாஷித்துக் கொண்டிருக்கையில், தாம் குறுக்கிட்டுப் பேசினால் இளையவளுக்குத் தம்மீது கோப முண்டாகுமோ வென்று அஞ்சி மௌனமாகவே நின்றனர். ஆயினும், அவர்களது அகத்தின் நிலைமை முகத்தில் ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. அவர்களெல்லோரையும் கண்ட கோகிலாம்பாள் திடுக்கிட்டு வெட்கத்தினால் குன்றிப் போனாள். தனது வரலாற்றில் அவர்கள் எவ்வளவு தூரம் தெரிந்துகொண்டிருப்பார்களோ என்ற சந்தேகம் அந்தப் பெண்மணியை வதைக்கத் தொடங்கியது. ஆயினும் ஸௌந்தரவல்லி கேட்ட கேள்விகள் அவளுக்கு மிகுந்த வியப்பைக் கொடுத்தது. தான் மைலாப்பூரில் இருந்தபொழுது சுந்தரமூர்த்தி முதலியார் தன் வரலாற்றை டெலிபோன் மூலமாய்ப் புஷ்பாவதிக்குத்தெரிவித்தாராதலால், அதைப் புஷ்பாவதி ஸௌந்தரவல்லிக்கும் தனது தாய்க்கும் மற்றவர்க்கும் சொல்லி இருக்க வேண்டுமென்று அவள் நினைத்திருந்தாள். தன்னைக் கண்டவுடன் ஸௌந்தரவல்லி கேட்ட கேள்விகளிலிருந்து, புஷ்பாவதி அந்தச் செய்தியை தன் தங்கையிடம் வெளியிடவில்லை யென்று நினைக்க இடம்கொடுத்தது. அதுவுமன்றி, நிச்சயதார்த்த தினத்திற்குமுன் தானும்

கண்ணபிரானும் பூஞ்சோலையில் தனியாயிருந்த காலத்தில் சௌந்தரவல்லி அங்கே வந்து நிரம்பவும் கோபமாய் பேசிவிட்டு வந்ததற்குப் பிறகு அவள் கோகிலாம்பாளுடன் பேசாமலிருந்த குரோதம் பாராட்டிக் கொண்டிருந்தாளாதலால், அப்படி இருந்தவள் அவ்வளவு தூரம் மாறுபட்டுத் தன்னிடம் நிரம்பவும் வாஞ்சையாகவும் உருக்கமாகவும் பேசியதைக்காணக் கோகிலாம்பாளின் மனம் அத்யந்த சந்தோஷத்தினால் பொங்கிப் பரவசமடைந்தது. அவள் தன்னிடம் கொண்டிருந்த கோபமும் குரோத நினைவும் மாறிப் போய்விட்டன வென்றும், அவள் தன்னிடம் பழைய படி அந்தரங்கமான பாசமும் வாத்சல்யமும் உடையவளாயிருக்கிறாளென்றும் கோகிலாம்பாள் நினைத்து விட்டதன்றி, அவளிடம் தான் எதைப்பற்றியும் கபடமாகப் பேசுவது ஒழுங்கல்ல வென்றும் எண்ணி அவளை நோக்கி, "அம்மா! சௌந்தரா! நீ கேட்ட கேள்விகளுக்கெல்லாம் நான் பதில்சொல்லுகிறேன். நம்முடைய அம்மாள் பங்களாவுக்குத் திரும்பிவந்து விட்டார்களா இல்லையா என்ற விஷயத்தை மாத்திரம் நீ முதலில் தெரிவித்து விடு. அதைப் பற்றித் தான் என் மனம் நிரம்பவும் சஞ்சலமடைந்து கொண்டிருக்கிறது" என்று அன்பொழுக வினவினாள்.

உடனே சௌந்தரவல்லி, "அம்மாள் பங்களாவுக்கு வந்து விட்டார்கள். அம்மாள் உன்னைத் தேடிக்கொண்டு பங்களாவை விட்டுப் போனார்கள் என்ற சங்கதி கூட உனக்குத் தெரிந்திருக்கிறதே! அதை உன்னிடம் யார் சொன்னார்கள்?" என்றாள்.

கோகிலாம்பாள், "சௌந்தரா! நீ பேசுவதைப் பார்த்தால், உனக்கு என்னைப் பற்றிய தகவல் எதுவுமே தெரியாதுபோலிருக்கிறதே! உனக்கு மாத்திரந்தான் அது தெரியாதா, அம்மாள் முதலிய மற்ற எவருக்குமே தெரியாதா என்பது தெரியவில்லையே! புஷ்பாவதியம்மாள் இப்போது நம்முடைய பங்களாவில் இருக்கிறார்களல்லவா? அவர்கள் உன்னிடம் எவ்விதமான தகவலும் தெரிவிக்கவில்லையா?" என்றாள்.

சௌந்தரவல்லி, "அக்கா! இன்று காலையில் எழுந்த பிறகு நான் வழக்கப்படி என்னுடைய ஜோலிகளையே கவனித்துக் கொண்டிருந்தேன். நீ பங்களாவை விட்டுப் புறப்பட்டு இன்று காலையில் எங்கேயோ போனாயென்பது கூட எனக்குத் தெரியாது. நீயும்

அம்மாளும், புஷ்பாவதியும் ஒன்றாக இருக்கிறீர்க ளென்றே நான் நினைத்திருந்து விட்டேன். அதுவுமன்றி முக்கியமாக எனக்கு இன்றைய காலையிலிருந்து உடம்பு சரியாகவே இல்லை. நான் படுக்கையை விட்டு எழுந்து வெளியில் வரவே இல்லை. சாப்பாட்டைக் கூட நான் படுக்கையறைக்கே வரவழைத்துக்கொண்டேன். கொஞ்ச நேரம் தூங்குவதும், கொஞ்ச நேரம் விழித்துக் கொண்டபடி படுத்திருப்பதுமாய் நான் என் படுக்கையறையிலேயே சாயங்காலம் ஆறு மணிவரையில் இருந்ததில, அதன் பிற்பாடு உடம்பு சரியான நிலைமைக்கு வந்தது. பூஞ்சோலை பக்கம் நடந்து போய் விட்டு வர வேண்டுமென்ற ஆசையுண்டாயிற்று. நான் எழுந்து உள்ளே பார்க்கிறேன் யாரும காணப்படவில்லை நீங்கள் மூன்று பேரும் சேர்ந்து ஒரு வேளை பூஞ்சோலைக்குத்தான் போயிருப்பீர்களோ வென்ற சந்தேகமும் உண்டாயிற்று. அதை நிச்சயப்படுத்திக்கொள்ள வேண்டு மென்று நான் உடனே வேலைக்காரரைக் கூப்பிட்டு விசாரித்தேன். அப்போதுதான் எனக்கு எல்லா சங்கதியும் தெரிந்தது. திருவல்லிக்கேணியி லுள்ள நம்முடைய நெருங்கிய பந்து வொருவர் அம்மாளிடம் ஏதோ அவசரமான சங்கதி பேசவேண்டு மென்றும், அவர்கள் உடனே புறப்பட்டுவர வேணடு மென்றும் கடிதம் எழுதி அனுப்பினாராம். அம்மாள் போக முடியவில்லையாம், உன்னை அனுப்பினார்களாம். அங்கே போன நீ மததியானம் நாலு மணிவரையில் திரும்பி வரவில்லையாம் அதன் மேல் அம்மாளுக்கு உன்னைப்பற்றிய கவலை உண்டாகி விட்டதாம். உன்னைத் தேடிப் பார்தது அழைத்துக் கொண்டு வருவதற்காக அம்மாளும் பங்களாவை விட்டுப் புறப்பட்டுப் போயிருப்பதாகச் சொன்னார்கள். புஷ்பாவதியம்மாளையாவது கண்டு விவரம் என்ன என்பதை நன்றாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளலா மென்று நினைத்து அந்த அம்மாள் எங்கே என்று கேட்டேன். அந்த அம்மாள் அதற்குக் கொஞ்ச நேரத்துக்கு முன்புதான் டெலிபோனில் யாருடனோ பேசிக் கொண்டிருந்தார்களாம். டெலிபோனை விட்டு வந்தவுடனே, அந்த அம்மாளுக்கு உடம்பில் ஏதோ சங்கடம் ஏற்பட்டுப் போய் விட்டதாம் ; உடனே அவர்கள் போய்ப் படுத்துக் கொண்டார்களாம் ; தாமே எழுந்து வருகிறவரையில் தம்மை யாரும் எழுப்ப வேண்டாமென்றும், தாம் படுத்து நித்திரைசெய்து தாமாக எழுந்தால்தான் உடம்பு சரிப்பட்டு வரும்போலிருக்கிற தென்றும் சொல்லிவிட்டுப் படுததார்களாம். அந்த அம்மாள் இன்னம் எழுந்திருக்கவில்லை.

டெலிபோனில் யார் என்ன சங்கதி சொன்னார்களோ தெரியவில்லை, அது ஏதாவது விபரீதச் சங்கதியாக இருக்க வேண்டுமென்று வேலைக்காரர்கள் சொன்னார்கள். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்.'' என்றாள்

அதைக் கேட்ட கோகிலாம்பாளின் மனத்தில் ஒரு யோசனை தோன்றியது. தனக்கு சிப்பாயிகளால் நேரிட்ட அபாயத்தைப் பற்றிய வரலாறு எதையும் புஷ்பாவதி சிப்பந்திகளிடம் வெளியிடவில்லை யாதலால், தானும் அதை அப்பொழுது அவர்களுக்கெதிரில் வெளியிடாமல், பிற்பாடு சௌந்தரவல்லிக்கும் தனது தாய்க்கும் மாத்திரம் தனிமையில் வெளியிடலாமென்றும், அந்தச் செய்தி வேறு யார் மூலமாகிலும் பின்னர் சிப்பந்திகளுக்கு தெரிந்தாலும், அதனால் கெடுதல் இல்லையென்றும் நினைத்துக்கொண்டாள் அதுவுமன்றி, தான் சிப்பாயிகளிடத்தில் அகப்பட்டுக்கொண்ட அபாய சங்கதியைக் கேட்டதனால் உண்டான மன அதிர்ச்சியைத் தாங்க மாட்டாமல் புஷ்பாவதி அயர்ந்து தளர்ந்து படுத்துவிட்டாள் என்றும் கோகிலாம்பாள் எண்ணிக் கொண்டவளாய் சௌந்தரவல்லியை நோக்கி, "ஓகோ! அப்படியா சங்கதி! அப்படியானால் புஷ்பாவதியம்மாள் யாரிடத்திலும் எந்த சங்கதியையும் வெளியிடவில்லையா? அம்மாள் இப்போதுதான் திரும்பிவந்ததாகச் சொன்னாயே. அம்மாள் கூடப் புஷ்பாவதியம்மாளிடம் பேச சந்தர்ப்பம் ஏற்பட்டிராது போலிருக்கிறது'' என்றாள்

சௌந்தரவல்லி:—ஆம் அம்மாளும் புஷ்பாவதியை இன்னம் பார்க்கவில்லை. நீ பேசுகிற மாதிரியிலிருந்து, நீ தான் டெலிபோன் மூலமாய் புஷ்பாவதிக்கு ஏதோ செய்தியனுப்பியவள் என்று எண்ண வேண்டியிருக்கிறது !

கோகிலாம்பாள்:—நான் அந்த அம்மாளுக்கு எந்த சங்கதியையும் சொல்லவில்லை. அவர்களுடைய தமயனார்தான் டெலிபோன் மூலமாய் அவர்களுடன் பேசியது.

சௌந்தரவல்லி:—அவர்கள் எங்கே இருந்து பேசினார்கள் ? அது உனக்கு எப்படித் தெரிந்தது ?

கோகிலாம்பாள்:—காலையில் அம்மாள் என்னை ஓரிடத்துக்கு அவசரமாக அனுப்பினார்களல்லவா. அந்தக் காரியத்தை முடித்துக்

கொண்டு நான் மத்தியானத்துக்கு மேல் மைலாப்பூருக்குப் போக நேர்ந்தது. அவ்விடத்தில் புஷ்பாவதியம்மாளின் தமயனார் என்னைக் கண்டு அவர்களுடைய பங்களாவுக்கு வரும்படி கூப்பிட்டு அழைத்துக்கொண்டு போனார்கள். இவ்வளவு நேரம் அங்கே இருந்துவிட்டு இப்போது அங்கே இருந்துதான் நேராக நான் வருகிறேன். என்னைப்பற்றி நமுடைய அம்மாள் கவலைப்படுவார்களென்றும், நான் உடனே புறப்பட்டுப் போகவேண்டுமென்றும் நான் எவ்வளவோ சொல்லியும் அவர்கள் கேட்காமல், நான் கொஞ்சநேரம் அங்கே இருந்துதான் வரவேண்டுமென்று நிரம்பவும் பிடிவாதம் பிடித்தார்கள். என் மனசிலும் ஒரு முக்கியமான எண்ணம் ஏற்பட்டிருந்ததாகையால் அதைக் கருதி நான் அவர்களுடைய விருப்பத்திற்கு அநுசரணையாக நடந்துகொள்ள நேர்ந்தது. அதாவது, நீ அவர்களையே கட்டிக்கொள்ள வேண்டுமென்று ஒரே உறுதியாக இருக்கிறாயென்பது எனக்குத் தெரியும். என் சம்பந்தமாக நேர்ந்த சில சம்பவங்களைக் கண்டு அவர்கள் ஒருகால் தங்களுடைய எண்ணத்தை மாற்றிக் கொண்டிருப்பார்களோ என்ற சந்தேகம் இருந்தது. அந்த விஷயத்தைப் பற்றி முடிவாகப் பேசி, அவர்கள் உன்னையே கட்டிக்கொள்வது என்ற வாக்குறுதியை நான் அவர்களிடம் வாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தேன். இன்னும் கொஞ்சநேரம் முன்னால் வரவேண்டுமென்று நான் பிரயத்தனப்பட்டேன். வண்டிக்காரர்கள் ஒருவர்கூட அகப்படவில்லை அவர்களுள் ஒருவன் வீட்டில் குழந்தை இறந்து போய்விட்டதாம். அதனால் ஒருவரும் இந்நேரம் வரையில் அகப்படவில்லை. இப்போதுதான் வந்தார்கள். நான் உடனே புறப்பட்டு வந்து சேர்ந்தேன். வந்த உடன் உன்னைக் கண்டு முக்கியமான இந்த சந்தோஷ சங்கதியை உனக்குச் சொல்லவேண்டுமென்று என் மனசு துடித்துக்கொண்டிருந்தது அதற்குத் தகுந்தபடி உன்னையே நான் முதலில் கண்டேன்—என்று அந்தரங்கமான பிரியத்தோடும் பரிவோடும் கூறினாள்.

தனது அக்காள் தன்மீது அவ்வளவு ஆழ்ந்த பிரியம் வைத்திருக்கிறாள், என்பதையாகிலும், அவளைத் தான் மற்றவருக்கெதிரில் மானபங்கப் படுத்துவது அக்கிரமம் என்பதையாகிலும் சௌந்தரவல்லி சிறிதும் உணராமல், தனது அக்காள் தன்னிடம் கபடமாகவும் தந்திரமாகவும் பேசுகிறாளென்றும், தான் தீர்மானித்துக்கொண்டபடி அவளை எல்லோருக்கும் எதிரில் அவமானப்படுத்தியே தீரவேண்டுமென்றும் எண்ணிக் கொண்டவளாய்த் தானும் அவளி

டம் கபடமாகவும் தந்திரமாகவும் நடந்து, அவளைக் கவிழ்த்துவிட நினைத்து நிரம்பவும் நயமாக மறுமொழி கூறத் தொடங்கி "அக்கா! உன்னுடைய நல்ல மனசைப்போல வேறே யாருக்கு இருக்கப் போகிறது ? ஆதியிலிருந்தே அவர்களுக்கு உன்பேரில் தான் கண். இப்போது இந்த நிச்சயதார்த்தம் இப்படி அலங்கோலமாய் முடிந்த பிறகு நீயே உன்னுடைய பழைய தீர்மானத்தை மாற்றிக் கொண்டு எனக்குப் போட்டியாகவந்து விடுவாயோ என்று நான் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தேன். நீ இப்போது சொன்னதிலிருந்து என் சந்தேகம் தப்பானதென்று நிச்சயமாயிற்று. இந்த சங்கதி இருக்கட்டும். இதைப்பற்றி நாம் தனியாகப் பேசிக் கொள்வோம். நம்முடைய அம்மாள் வெளியில் போய்விட்டு வந்தது முதல், உன்னைக் காணோமே என்ற திகிலில பிதத்துக் கொண்டவர்கள் போல ஒரே கலக்கமாகவும் கவலையாகவும் அப்படியே கல்போல உட்கார்ந்திருக்கிறார்கள். நீ வந்துவிட்டதாக வேலைக்காரன் வந்து என்னிடம் சொன்னான். அதை நான் அம்மாளிடம் உடனே சொன்னால், அவர்களுக்கு அது எப்படி இருக்குமோ வென்று உன்னோடு பேசி எல்லா விஷயங்களையும் தெரிந்துகொண்டு உன்னையும் உடனே அம்மாளிடம் அழைத்துக்கொண்டு போகலாமென்று ஓடி வந்தேன்." என்றாள்.

அந்த வார்த்தையைக் கேட்ட கோகிலாம்பாளுக்குத் தனது தாயைப்பற்றி மிகுந்த கவலையும் ஆவலும் பெருகி விட்டன. அந்தக் கலவரத்தில், யாரோ சில பெரிய மனிதர்கள் உள்ளே வந்திருப்பதாக வேலைக்காரன் கூறியதைப் பற்றிய நினைவு அவளுக்கு அப்பொழுது உண்டாகவில்லை. அவள், "சரி; போவோம், வா" என்று கூறியவண்ணம் எழுந்தாள். அவளை அழைத்துக்கொண்டு நடக்கத் தொடங்கிய சௌந்தரவல்லி, "இன்று காலையில் நீ திருவல்லிக்கேணிக்கு ஏதோ அவசரமான காரியமாய்ப் போனதாகக் கேள்வியுற்றவுடன் எனக்கு ஓர் எண்ணந்தா னுண்டாயிற்று. இவ்வளவு தூரம் உரிமை பாராட்டி நம்மை அழைக்கக் கூடியவர்களும், நீ தனிமையில் போய்ப் பேசக்கூடியவர்களுமான நம்முடைய நெருங்கிய பந்து திருவல்லிக்கேணியில் வக்கீல் சீனிவாச முதலியாரைத் தவிர வேறு யாருமில்லையே. நீ அநேகமாய் அங்கே தான் போயிருக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன். நிச்சயதார்த்த சமயத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து மாப்பிள்ளையைக் கைது செய்த விஷயமாய் வக்கீல் ஐயா ஏதாவது

யோசனை சொல்லுவதற்காக அம்மாளைக் கூப்பிட்டிருப்பார்களோ வென்றும் நினைத்தேன். ஆனால் அதைப்பற்றி யெல்லாம் நான் உன்னிடம் கேட்டால், என்னை மதித்து நீ உள்ள சங்கதியைச் சொல்லவே மாட்டாயென்றும் நினைத்துக் கொண்டேன். இப்போதும் அதைப்பற்றி நான் உன்னிடம் கேட்க வேண்டுமென்ற ஆசையும் தூண்டியது. கேட்கக் கூடாது என்ற எண்ணமும் அதைத் தடுத்தது. நீ இப்போது என்னிடத்தில் நிரம்பவும் பிரியமாகப் பேசுவதைக் கண்டவுடன், நீ என்னை மதித்து உண்மையைச் சொல்வாயென்ற எண்ணம் எழுந்து தூண்டியதாகையால், நான் என் மனசிலிருந்ததை அப்படியே சொல்லி விட்டேன்" என்றாள்.

அதைக் கேட்ட கோகிலாம்பாள் இரண்டொரு நிமிஷநேரம் ஆழ்ந்து சிந்தனை செய்து பார்த்தாள். தனது தாய் அன்று காலையில் தான் திருவல்லிக்கேணிக்குப் போனதாகச் சொல்லி இருக்கிறாளென்பதால், அந்தப் பேட்டையில் தங்களுக்கு நெருங்கிய பந்து வக்கீல் சீனிவாச முதலியாரைத் தவிர வேறு யாரும் இல்லையாதலால், அவரது வீட்டுக்கே தான் போனதாகச் சொல்ல வேண்டுமென்று தனது தாய் தனக்குள் எண்ணிக்கொண்டிருக்க வேண்டுமென்பது கோகிலாம்பாளுக்கும் நிச்சயமாகப் பட்டது. அத்தனை வேலைக்காரர்களுக்கும் முன்னிலையில் சௌந்தரவல்லி தன்மீது குறை கூறியதுபோலப் பேசியதைக் கேட்டு, அக்காளுக்கும் தங்கைக்கும் உள்ளுக்குள் ஒருவித மனஸ்தாபம் ஏதோ இருப்பதாய் வேலைக்காரர் எண்ணிக் கொள்ளும்படி தான் இடங்கொடுக்கக் கூடாதென்று நினைத்த கோகிலாம்பாள் நிரம்பவும் பட்சமாக அவளிடம் பேசத்தொடங்கி, "என்ன சௌந்தரா! என்னிடம் நீ இப்படி வித்தியாசம் பாராட்டிப் பேசுகிறாய்! உனக்குத் தெரியாத ரகஸியம் உண்டா? அப்படியும் இதில் ரகஸியம் என்ன இருக்கிறது? அம்மாள்தான் உன்னைத் திருவல்லிக்கேணிக்கு அனுப்பியதாகச் சொன்னார்களென்கிறாயே! அந்த ஊரில் நமமுடைய நெருங்கிய பந்து வேறே யார் இருக்கிறார்கள். வக்கீல் ஐயாவின் வீட்டுக்குத்தான் நான் போயிருக்க வேண்டுமென்று நீயேதான் சொல்லி விட்டாயே. இதைப்பற்றி மறுபடியும் ஏன் சந்தேகமாய்க் கேட்கிறாய்?" என்றாள்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி "நீ திருவல்லிக்கேணிக்குப் போனதாக யாரோ வேலைக்காரர்தான் என்னிடம் நேரில் சொன்

ணர்கள். அம்மாள் என்னிடம் அந்த மாதிரி சொல்லவில்லை. சரி அது எப்படியாவது இருக்கட்டும். அதைப்பற்றிக் கவலையொன்று மில்லை. எப்படியாவது நீ க்ஷேமமாய்த் திரும்பி வந்து சேர்ந்தாயே. அதுதான் முக்கியமான சங்கதி. வா நாம் போகலாம்.'' என்று கூறியபடி கோகிலாம்பாளை அழைத்துக் கொண்டு தனது தாயும் மற்ற உறவினரும் இருந்த கூடத்திற் கருகில் போய்ச் சேர்ந்தாள். அவர்களுடன் மற்ற வேலைக்காரர்களும் தொடர்ந்து சென்றனர். அந்தக் கூடத்திற்குள் நுழைவதற்கு முன் செளந்தரவல்லி கோகிலாம்பாளை நோக்கி, "நீயும் அம்மாளும் காணாமல் போகவே, எனக்கு திகில் அதிகமாய்விட்டது. புஷ்பாவதியம்மாளுடைய நிலைமையும் அப்படியாகிவிட்டதாகையால் நான் வேலைக்காரர்களை கூப்பிட்டு என் திகிலை வெளியிட்டேன். அவர்கள் ஓடி நம்முடைய மனிதரில் சிலரை அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவர்களும் அம்மாளண்டை இருக்கிறார்கள்'' என்று கூறிய வண்ணம் கூடத்திற்குள் நுழைந்து விட்டாள்.

அதைக் கேட்ட கோகிலாம்பாள் ஒருவாறு திடுக்கிட்டுப் போனாளாலும் வக்கீல் சீநிவாச முதலியாரும் அங்கே வந்திருப்பாரென்ற எண்ணம் அவளது மனதில் உடனே உண்டாகவில்லை. செளந்தரவல்லி கூடத்திற்கு போய்விட்டாளாதலால், தான் பின் தங்குவது சரியல்லவென்று நினைத்து கோகிலாம்பாளும் கூடத்திற்குள் சென்றாள். அவளைத் தொடர்ந்து வேலைக்காரர்களும் அங்கே வந்து சேர்ந்தனர். உடனே செளந்தரவல்லி எல்லோரையும் பார்த்து உரத்த குரலில் பேசத்தொடங்கி, "இதோ நம்முடைய கோகிலா வந்துவிட்டாள்! அவள் வேறே எங்கேயும் போகவில்லை. திருவல்லிக் கேணியில் நம்முடைய பந்துவான வக்கீல் ஐயா ஒருவர் இருக்கிறார்களாமே. அவர்களிடத்திலிருந்துதான் கடிதம் வந்ததாம். அவர்களுடைய வீட்டுக்குத்தான் அவளை அம்மாள் அனுப்பினார்களாம். அங்கே போய்க் காரியத்தைப் பார்த்துக் கொண்டு, மைலாப்பூருக்கு வேறொருவர் வீட்டுக்குப் போய்விட்டு அங்கிருந்து நேராக வருகிறாளாம். போன இடத்தில் தனக்கு எவ்வித அபாயமும் நேரவில்லையென்று அக்காள் சொல்லுகிறாள். அதுதான் முக்கியமான சந்தோஷ சங்கதி. வீட்டிலிருந்த உங்களெல்லோரையும் எங்கள் வேலைக்காரர்கள் அழைத்துவந்து இந்த இரவு காலத்தில் வீண் பிரயாசைக்கும் மனவேதனைக்கும் ஆளாக்கி விட்டார்கள். அது தான் எங்கள் மனசுக்கு வருத்தமாக இருக்கிறது. உபயோகமற்ற

விஷயம் பிரமாதமாக வளர்ந்து விட்டது. திருவல்லிக்கேணியி லிருந்து அந்த வக்கீல் ஐயா வரவில்லைபோ லிருக்கிறது. அவர்கள் வந்திருந்தால், நம்முடைய கவலையெல்லாம் இப்போதே தீர்ந்து போயிருக்கும். நான் அந்த ஐயாவை அவ்வளவாகப் பார்த்த தில்லை அவர்கள் இப்போது இங்கே இருக்கிறார்களோ இல்லையோ வென்பது தெரியவில்லை'' என்று தந்திரமாகவும் நயமாகவும் கூறிய படி ஒரு பக்கமாகப் போய் நின்றாள்.

அவள் கூறிய வார்த்தையைக் கேட்டு, அங்கிருந்த பெருத்த ஜனக்கும்பலைக் கண்ட கோகிலாம்பாள் திடுக்கிட்டு முற்றிலும் பிர மித்து நடுநடுங்கி ஸ்தம்பித்து அப்படியே நின்றுவிட்டாள்.

சௌந்தரவல்லி கூறிய சொற்களைக் கேட்கவே, அந்தக் கும்ப லில் இருந்த பலர் ஒரே காலத்தில் பேசத்தொடங்கி பல மாதிரி யான கேள்விகள் கேட்டு உரத்த சப்தம் செய்யத் தொடங்கினர். இராயபுரம் பொன்னுரங்க முதலியார் மற்றவர்க ளெல்லோரையும் விட அதிக பலமாகக் கூச்சலிட்டுத் துள்ளிக் குதித்து ''ஆகா! என் னுடைய யோக்கியதை யென்ன! கண்ணியம் என்ன! எல்லோரும் சேர்ந்து என்மேல் அபாண்டப் பழி சுமத்த ஆரம்பித்து விட் டீர்களே! தானே திருட்டுத் தனமெல்லாம் பண்ணிவிட்டு வக்கீல் முதலியார் என்னையல்லவா போலீஸ்காரரிடம் ஒப்பித்து விடுவதா கப் பயமுறுத்துகிறார்! தாம் எழுதிய கடிதத்தை வைத்துக்கொண்டு என்னைத் தண்டிக்கிறவ ரல்லவா இவர்! ஆகா! வக்கீல் இருந்தாலும் இப்படி யல்லவா இருக்கவேண்டும்! அடடா; என்ன மேதாவி ஐயா இவர்!'' என்று அடுக்கடுக்கான வசை மொழிகளால் வக்கீல் சீநிவாச முதலியாரைத் தாறுமாறாக இகழ்ந்து கைகளையும் கால்களை யும் ஆட்டிக்கொண்டு பிரமாதமாக நிர்த்தனம் செய்கிறார். சீநிவாச முதலியாருக்குப் பரிந்துபேசிய மூர்த்தி முதலியார் ''போதுமையா! அடக்குமையா! சீநிவாச முதலியார் கடிதம் எழுதியதாகப் பெண் சொல்லுகிறது; ராயபுரம் பொன்னுரங்க முதலியார் கடிதமெழுதிய தாகவும், அவருடைய வீட்டுக்கே தாங்கள் போனதாகவும் அம்மாள் சொல்லுகிறார்கள். எதையா நிஜம்? இவர்களுக்குள்ளேயே பித்த லாட்டமாக இருக்கிறதே ஐயா! இதில் யார் சொல்வது புரட்டு, யார் சொல்வது மெய்யென்பது தெரிந்த பிறகல்லவா, நீங்கள் ஒருவரை யொருவர் திட்டிக்கொள்ள வேண்டும். அதையும் விசாரித்துப் பார்த்து விடுவோம்'' என்றார்.

மூர்த்தி முதலியார் "அம்மாளுக்குத்தான் புத்தி ஸ்வாதீன மில்லாமல் இருக்கிறதே. ஏதோ புத்திக் குழப்பததில் அவர்கள் தான் தப்பாக உளறி இருக்கவேண்டும். கோகிலா நல்ல அறிவோ டிருப்பதால், அது சொல்வதுதான் நிஜமாயிருக்க வேண்டும்." என்றார்.

சதாசிவ முதலியார் "அடே போய்யா; அது மாத்திரம் எப் படி நிஜமாயிருக்கும்? பெண்ணுக்குததான் எவராலும் யாதொரு அபாயமும் நேரவில்லையே. அப்படி யிருக்க, சீநிவாச முதலியார் இதை ஒப்புக் கொள்ளாமல் ஏனையா மறுக்கவேண்டும்? பெண்ணைக் காணுமையால், தாயார் பைத்தியங் கொண்ட மாதிரி இருக்கிறார் கள். இத்தனை ஜனங்கள் கூடிக தவிக்கிறார்கள். பங்களா அல்லோல கல்லோலப் படுகிறது. சீநிவாச முதலியார் கடிதம் எழுதிய தன்மேல் பெண் அவருடைய வீட்டுக்கு வந்து போயிருந் தால், அதை அவர் சாதாரணமாக ஒப்புக்கொண்டிருப்பாரே யன்றி அதை மறைக்க வேண்டிய பிரமேயமே இல்லையே! ஆகை யால் பெண் சொல்வதும் தப்பு அம்மாளைப்போல பெண்ணுக் கும் புத்தி மாறாட்டம் ஏற்பட்டிருப்பதாகவே நாம் கருதவேண்டும்" என்றார்.

உடனே மாதவராய முதலியார் "சீநிவாச முதலியார் ஒப்புக் கொள்ளாமல் மறுத்ததனாலேயே, பெண் அவருடைய வீட்டுக்கு வரவில்லையென்று சொல்லிவிட முடியுமா? அவரே கடிதம் எழுதி இருக்கலாம். பெண் அவருடைய வீட்டுக்குப் போய்விட்டுப் பிறகு அங்கிருந்து வேறு எங்கேயாவது போயிருக்கலாம். அம் மாளுக்கு அந்த விஷயம் தெரியாதாகையால், பெண் வரவில்லையே என்று கேட்டதி லிருந்து, பெண்ணுக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்திருந்தால், அந்தப் பழி தம்மை வந்து சாருமோ வென்று பயந்து சீநிவாச முதலியார் தமக்கு எதுவுமே தெரியாதென்று அடியோடு எல்லாவற்றையும் மறுதது விட முயன்றிருக்கலாம் காரி யம் ஏன் அம்மாதிரி நடந்திருக்கக் கூடாது?" என்றார்.

உடனே சீநிவாச முதலியார் கோகிலாம்பாளை நோக்கிக் கோபப் பார்வையாகப் பார்த்து "என்ன கோகிலா இது? ஏன் இப்படி நீ மொட்டைத தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டு பேசுகிறாய்? நான் இன்று காலையில் உங்களுக்குக் கடிதம்

எழுதினேனென்று நீ பிரமாணிக்கமாகச் சொல்லுவாயா? நான் எழுதியதாகச் சொல்லும் கடிதத்தைக் காட்டுவாயா? அல்லது, நீ தான் இன்றைய தினம் காலையில் என் வீட்டுக்கு வந்த துண்டா? எங்கே என் முகத்தைப் பார்த்துச் சொல். நீ என் வீட்டுக்கு வந்ததாகச் சொல்லுகிறாயே. நீ அங்கே என்னென்ன அடையாளங்களைப் பார்த்தாய்? சொல் பார்க்கலாம். வீட்டின் உள் பக்கம் வெளிப்பக்கமெல்லாம் எப்படிக் கட்டப்பட்டிருக்கின்றன வென்று சொல்" என்று கூறினர்.

கோகிலாம்பாள் தனது கடைக்கண்ணால் அங்கிருந்த ஜனங்களெல்லோரையும் விரைவாகப் பார்த்து, இன்னின்னார் வந்திருந்தன ரென்பதை உடனே தெரிந்து கொண்டாள்; தங்களது சொந்த ஜனங்கள் அத்தனை பேரும் தங்கள் பங்களாவிற்குள் வந்திருப்ப ரென்பதையாவது, அத்தகைய சச்சரவுகள் ஏற்படுமென்பதை யாவது கோகிலாம்பாள் கனவிலும் நினைத்தவ ளன்றாதலால், அத்தகைய எதிர்பாராத பயங்கரமான நிலைமையில் தான் அகப்பட்டுக் கொண்டதை உணரவே, அவளுக்குத் தனது உயிர் போய்விட்டது போலவே இருந்தது. அவமானத்தினாலும், மன வேதனையினாலும் அவளது தேகம் குன்றி உட்கார்ந்து போயிற்று. முகம் சடக்கென்று மாறி விகாரப்பட்டுப் போயிற்று. மனதோ, அயர்ந்து தளர்வுற்று செயலற்றுப் போய்விட்டது. அவள் உடனே தனது தாயின் நிலைமையையும் கவனித்துணர்ந்தாள். தான் இராயபுரம் பொன்னுரங்க முதலியாரது வீட்டிற்குப் போன தாகத் தனது தாய் கூறியதாக மூர்த்தி முதலியார் சொன்னதையும் அவள் கவனித்தாள். அந்தக் கும்பலில் பொன்னுரங்க முதலியார் இருந்ததையும் அவள் கண்டாளாதலால், தான் அப்பொழுது அகப் பட்டுக் கொண்டதுபோல, தனது தாயும் பொய் சொல்லிவிட்டு எக்கச் செக்கமாக அகப்பட்டுக் கொண்டு தத்தளிக்கிறா ளென்றும் கோகிலாம்பாள் உடனே யூகித்துக் கொண்டாள். உடனே அவளது மனதில் இன்னொரு முக்கியமான சந்தேகம் தோன்றியது. தனது தாய் தான் இராயபுரம் பொன்னுரங்க முதலியாரின் வீட்டிற்குப் போனதாகச் சொல்லி இருக்க, சௌந்தரவல்லி அதை வேறு விதமாக மாற்றி, தான் திருவல்லிக்கேணிக்குப் போனதாகத் தனது தாய் சொன்னாளென்று கூறியதன் முகாந்தரம் எதுவாக இருக்குமென்று அந்த மடந்தை சிந்தித்துப் பார்த்தாள். சௌந்தர வல்லி தங்களை அத்தனை ஜனங்களுக்கும் முன்பு மானபங்கம்

படுத்தும் பொருட்டு அவ்வாறு சூழ்ச்சி செய்திருப்பா ளென்று அவள் சிறிதும் நினைக்கவே இல்லையாதலால், சௌந்தரவல்லியைப் பற்றி தப்பான எண்ணம் கொள்ள அவளது மனம் இடம் தர வில்லை; ஆகவே, தனது தாய் காலையில வேலைக்காரனிடத்தில் ஒரு விதமாகவும், அப்பொழுது சொந்த ஜனங்களுக்கு முன்பு வேறு விதமாகவும் தகவல் கொடுத்திருக்க வேண்டுமென்றே கோகிலாம் பாள் தனக்குள் சமாதானம் செய்து கொண்டாள். அவ்வாறு அவள் தனக்குள் எண்ணமிட இரண்டொரு நிமிஷ காலமே பிடித்தது. தானும், தனது தாயும் கண்ணியம் வாய்ந்த அந்தனை ஜனங்களுக்கும் முன்னிலையில் அவ்வாறு விகாரமான நிலைமையிலிருந்து அவளால் சகிக்க வொண்ணுத மகா சங்கடமான நிலைமையாக இருந்தது. அவ்வாறு தாம் அவமானததிற்கு ஆளாவதும் அவளது மனத் திற்குச் சிறிதும் ஒவ்வாதிருந்தமையால், அந்தப் பெண்மணி அங்கி ருந்த சொந்த ஜனங்களை நோக்கி நிரம்பவும் நயமாகவும் பணிவாக வும் பேசத் தொடங்கி "ஒன்றுமில்லாத சங்கதி இவ்வளவு தூரத்திற்கு வளரவும், தக்க பெரிய மனிதர்களான நம்முடைய சொந்த ஜனங்கள் ஒருவர்மே லொருவர் ஆத்திரமாகப் பேசிக் கொள்ளவும் காரணம் ஏற்பட்டதைக் ாண, என் மனம் தவிக் கிறது. இன்று காலையில் ஒரு முக்கியமான காரியமாக அம்மாள் என்னை ஓரிடததிற்கு அனுப்பி வைததார்கள். அது இன்ன இட மென்று வேலைக்காரர்களுக்குத் தெரிந்தால், அவர்கள் அதைப்பற்றி மேன்மேலும் கேள்விகள் கேட்பார்கள். அவைகளுக்கு நாங்கள் சமாதானங்கள் சொல்ல வேண்டியிருக்கும். அலலது, அதை அவர் கள் அன்னியரிடம் பிரஸ்தாபிப்பார்கள். அன்னியர்கள் அதைப பற்றி மனம்போனபடி புரளிசெய்து வம்பு வளர்ப்பார்கள். அதற் கெல்லாம் இடம் கொடுக்க எங்களுக்கு இஷ்டம இல்லை. அதுவு மன்றி இநத பங்களாவில் நாங்கள் நிச்சயதார்த்தம் நடத்த எதத னித்த சமயத்தில் எங்களுக்கு அவமானம் நேரிட்டது எல்லோர்க் கும் தெரிந்த விஷயமல்லவா. அந்த துக்கததினுல், வேலைக்காரர்க ளிடம் அவ்வளவு தாராளமாகக் குடும்ப விஷயங்களைப் பற்றிப் பேச எங்களுக்கு லஜ்ஜையாக இருந்தது. ஆகையால் நாங்கள் அவர்களி டம் உண்மையான தகவலைச் சொல்லவில்லை, ஆகவே, என்னை ஓர் அவசர காரியமாய்ச் சொநதககாரருடைய வீட்டுககு அனுப்பி இருப்பதாக அம்மாள்சொல்லி இருக்கலாம்; எங்கே யாருடையவீட் டுக்கு என்று யாராவது கேட்டதன்மேல் தடுக்க முடியாமல் யாரா

வது உறவினர் ஒருவருடைய பெயரை ஒப்புக்காகச் சொல்லியிருக்கலாம். ராயபுரத்திலுள்ள பொன்னுரங்க முதலியார் ஐயாவின் வீட்டுக்கு நான் போனதாக அம்மாள் சும்மா சொல்லி வைத்தார்கள் போலிருக்கிறது. அவ்வளவே தவிர நான் உண்மையில் அவர்களுடைய வீட்டுக்கும் போகவில்லை! வக்கீல் ஐயாவுடைய வீட்டுக்கும் போகவில்லை. அவர்களுள் எவர்பேரிலும் நாங்கள் எவ்விதமான குற்றமும் சுமத்தவில்லை. நான் இப்பொழுது வந்தவுடன் என் தங்கை சௌந்தரவல்லியம்மாள் வந்து "நீ திருவல்லிக்கேணியிலுள்ள நம்முடைய நெருங்கிய பந்து ஒருவர் வீட்டுக்குப் போனதாக வேலைக்காரர்கள் சொன்னார்களே. அந்த ஊரில் வக்கீல ஐயாவைத் தவிர நமக்கு நெருங்கிய பந்து யாரும் இல்லையே; நீ அவர்களுடைய வீட்டுக்கா போயிருந்தாய்?" என்று கேட்டாள் வேலைக்காரர்களெல்லோரும் அவர்களுடன் கூட வந்திருந்தார்கள். அம்மாள் அப்படிச் சொல்லியிருந்தால், நான் அதைப் பொய்யாக்கக் கூடாதென்றும், பிற்பாடு தனிமையில் சௌந்தரவல்லிக்கு உண்மையைச் சொல்லலாமென்றும் எண்ணி "ஆம் அங்கேதான் போயிருந்தேன்" என்று சும்மா சொல்லி வைத்தேன். நீங்கள் எல்லோரும் இங்கே வந்திருப்பீர்களென்றாவது, இந்த உபயோகமற்ற பேச்சு இவ்வளவு பிரமாதமான அநர்த்தத்தை விளைவிக்கும் என்றாவது நானும் எதிர் பார்க்கவில்லை; அம்மாளும் எதிர் பார்க்க மாட்டார்கள். இதுதான் உள் மர்மம்."

அதைக்கேட்ட சௌந்தரவல்லி தனது அக்காளை நோக்கி, நயமாகப் புன்னகை செய்து சிநேகபாவமாய்ப் பேசுகிறவள்போல நடித்து "ஓகோ! அப்படியா சங்கதி! கண்டால் காமாட்சி நாயக்கர், காணாவிட்டால் பள்ளிப்பயல் என்றும், கண்டால் சாமி சாமி காணாவிட்டால் பாப்பான் என்றும் சிலர் நடந்து கொள்வதுண்டு. அதுபோல இருக்கிறது காரியம். சொந்தக்காரர் இல்லாவிட்டால், அவர்களுடைய பெயரை எப்படி வேண்டுமானாலும் உபயோகித்துக்கொள்ளுகிறது. அவர்கள் இருந்தால் அவர்களிடம் நிரம்பவும் மரியாதையாக நடந்து கொள்ளுகிறது. இந்த மாதிரி நியாயம் மூடஜனங்களிடத்தில் இருக்கத் தகுந்ததென்றல்லவா நான் நினைத்தேன். நாகரீகம் கண்ணியம் முதலியவை வாய்ந்த நம்மைப் போன்றவர்களிடத்தில்கூட இந்த நியாயம் இருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. நீ சொன்னதை அப்படியே உண்மையென்று நினைத்து நான் கூட ஏமாறிப் போய் இங்கே வந்து அப்படியே சொல்லி விட்டேன்.

அதனால் இப்போது நானல்லவா முட்டாளாகி விட்டேன், உண்மையான ஒரு சங்கதியை வெளியிடாமல் மறைத்து வைப்பது கூட அவ்வளவு உசிதமான ஒழுக்கமல்ல. இருந்தாலும், பிறருக்கு அதனால் அநியாயமான கெடுதல் நேரக்கூடியதாக இருந்தால், அதனால் மற்றவருக்குக் கெடுதல் நேராது என்ற நிச்சயம் இருந்தால், சில சந்தர்ப்பங்களில், உண்மையை மறைத்து வைக்கலாம். ஆனால், எப்படிப்பட்ட சந்தர்ப்பமாக இருந்தாலும், உண்மையை மாற்றி பொய்யான தகவல்களை மாத்திரம் உற்பத்தி பண்ணிச் சொல்வது கூடவே கூடாது. நீ இப்போது வக்கீல் ஐயாவின் பெயரை அநாவசியமாக இழுத்து விட்டாயே! இதனால் எவ்விதமான கெடுதலும் அவமானமும் நேருமென்று நீ எண்ணவே இல்லை. யாருக்கும் எவ்வித கெடுதல் செய்ய வேண்டுமென்றும் நீ கருதவில்லை, பின்னால் வேலைக்காரர்களுடைய அஜாக்கிரதையினால நமக்கு கெடுதல வராமல் இருக்க வேண்டுமென்ற முன் எச்சரிக்கையாகவே நீ இந்தக் கற்பனையைச் சொன்னாய் அது இப்பொழுது பிறருக்கும் நமக்கும் எப்படிப்பட்ட சங்கடத்தையும் அவமானத்தையும் உண்டாக்கிவிட்டது பார்த்தாயா ?'' என்று கணீர் கணீர் என மணியடிப்பது போல மொழிந்தாள்.

அதைக்கேட்ட கோகிலாம்பாள் தனது தங்கையின் ஒழுங்கான மனப்பான்மையைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சியும் பூரிப்பும் கொண்டவளாய் அவளை நோக்கிப் புன்னகை புரிந்து "சௌந்தரா! மனிதர் பட்டுப் பட்டுத்தானம்மா தேர்ச்சி யடையவேண்டும். நான் ஒன்றை நினைத்து, நிரம்பவும் புத்திசாலித்தனமாய் நடந்துகொள்வதாக எண்ணிக்கொண்டு அப்படி சொல்லி விட்டேன். அது இப்படிப்பட்ட விபரீதத்தில் வந்து முடிந்தது. நீ என்னிடம் வந்து "திருவல்லிக் கேணியிலுள்ள வக்கீல் முதலியார் வீட்டுக்குத்தானே போயிருந்தாய்' என்று கேட்டவுடனே என் பாடு கஷ்டமாகிவிட்டது. 'ஆம்' என்று ஒப்புக்கொள்வது பொய். 'இல்லை' என்றால் நீ விடமாட்டாய் மறுபடி கேள்வி கேட்பாய். பிற்பாடு தனிமையில் சொல்லுகிறேன்' என்றால், வேலைக்காரர்கள் தங்களிடம் நான் அவ்வளவு நம்பிக்கை கூட வைக்கவில்லையே என்றும், நான்போகக்கூடாத இடம் எதற்கோ போனதாகவும் எண்ணிக் கொள்வார்கள். சில காரணங்களை முன்னிட்டு, நான் உண்மையை அவர்களுக் கெதிரில் சொல்லப் பிரியப் படவில்லை. ஒரு குடும்பமென்றால், வேலைக்காரர்களுக்குச் சொல்லக் கூடிய சங்கதிகளும் இருக்கும், சொல்லத் தகாத சங்கதிகளும்

இருக்கும். யுக்தா யுக்தம் பார்த்து நடந்து கொள்ள வேண்டு மல்லவா. அதைக் கருதி நான், நீ கேட்டதற்கு, சுலபமாக, "ஆம்" என்று சொல்லி வைத்தேன். பிறகு தனிமையில் உன்னிடம் உண் மையைச் சொல்லலா மென்பது என்னுடைய எண்ணம்" என்று முற்றிலும் சிநேக பாவமாகவே கூறினாள்.

அவ்வாறு கோகிலாம்பாள் கூறியதைக் கேட்டவள் போல சௌந்தரவல்லி தனக்கருகில் நின்ற ஒரு வேலைக்காரியைப் பார்த்து ஒருவித சைகை காட்டினாள் அவள் வெளியில் சென்றாள். உடனே சௌந்தரவல்லி தனது அக்காளை நோக்கி, "ஆம் அக்கா! நீ சொல் வதுபோல மனிதர் பட்டுப் பட்டுத்தான் தேர்ச்சி யடையவேண்டும். ஆனால் ஒவ்வொருவர் ஒவ்வொருவிதமாகத் தேர்ச்சி யடைகிறார்கள். அகப்பட்டுக் கொள்ளலாம் தந்திரமாகப் பொய் சொல்வதிலும், புரட்டுகள் செய்வதிலும் சிலர் தேர்ச்சி யடைகிறார்கள். சிலர் நாணயத்திலும் நல்ல நடத்தையிலும் தேர்ச்சி யடைகிறார்கள். ஒரே அநுபவம் அவரவருடைய மனப் போக்கின்படி வெவ்வேறு விதமான பலனைத் தருகிறது. ஆனால் நீ இந்த சம்பவங்களிலிருந்து நல்ல நடத்தையில் தான் தேறியிருப்பா யென்பது நிச்சயம். அது எப்படியாவது இருக்கட்டும். உனக்கு ராயபுரத்து முதலியார் ஐயா வும் எவ்விதக் கெடுதலும் செய்யவில்லை. வக்கீல் ஐயாவும் எவ்வித கெடுதலும் செய்யவில்லை. நீ எங்கேயோ ஒரு காரியமாகப் போய் விட்டு பத்திரமாக வீடு வந்து சேர்ந்து விட்டாய். அதுவே பெருத்த சந்தோஷமாயிற்று. வெளியில் போன உனக்கு என்ன விதமான அபாயம் நேர்ந்ததோ என்று நம்முடைய அம்மாள் எண்ணிப் பைத்தியம் பிடித்தவர்கள் போல் மாறி அப்படியே உட் கார்ந்து போய் விட்டார்கள். நீ போன காரியத்தைப் பார்த்துக் கொண்டு எவ்வித அபாயமு மில்லாமல் சுதாரணமாக வந்து விட்டா யென்ற சங்கதியை நான் போய் அம்மாளிடம் சொல்லி அவர்க ளைத் தேற்றலாமல்லவா?" என்று நயமாகவும் வேடிக்கை போல வும் மொழிந்தாள். அவளது சொற்களைக் கேட்ட கோகிலாம் பாளுக்குத் தனது தாயை எப்படியாவது தான் தேற்ற வேண்டு மென்ற நினைப்பே முக்கியமாகத் தோன்றியது. அவள் உடனே சௌந்தரவல்லியை நோக்கி, "நம்முடைய அம்மாள் எங்கே இருக் கிறார்கள்? ஏராளமான ஜன நடமாட்ட முள்ள இவ்வளவு பெரிய பட்டணத்தில் பட்டப்பகலில் ஒரு மனிதருக்கு மற்ற மனிதரால் அபாயம் நேர்ந்துவிடுமென்று அம்மாள் பயப்படவேண்டிய காரண

மென்ன ?" என்றாள். அதைக் கேட்ட சௌந்தரவல்லி அங்கு ஒரு மூலையில் கண்களை மூடியபடி மயங்கி உட்கார்ந்திருந்த பூஞ் சோலை யம்மாளிடம் சென்று, " அம்மா! அம்மா! கோகிலா வந்து விட்டாள்! அவளுக்கு என்ன அபாயம் நேர்ந்திருக்குமோ வென்று பயந்தீர்களே! எதுவும் நேரவில்லையாம். அவள் சௌக்கியமாக வந்து சேர்ந்து விட்டாள்" என்று உரக்கக் கூறினாள். அப் பொழுதே தெளிவை யடைந்து திடுக்கிட்டுத் தனது கண்களை விழித்துப் பார்த்த பூஞ்சோலையம்மாள், " ஆ! கோகிலா வந்தாளா! எங்கே அவள்? என் புத்திக் குறைவினால் அவளை அனுப்பியதும் போதும். இன்று காலை முதல் இதுவரையில் நான் பட்டபாடும் போதும். வயசுப் பெண்ணை அனுப்பினோமே, இது சோம்பேறிகள் நிறைந்த அயோக்கியப் பட்டண மாயிற்றே, அவள் என்னவிதமான எக்கச் செக்கத்தில் மாட்டிக் கொண்டாளோ என்று நினைக்கநினைக்க எனக்குக் குலை நடுக்கம் எடுத்துக் கொண்டது. நல்ல வேளை யாக அவள் எல்லா வற்றிற்கும் தப்பி க்ஷேமமாக வந்து சேர்ந்தாளே. அதுவும் சுவாமி செயல்தான்" என்று உற்சாகத் தோடு கூறிக் கோகிலாம்பாளின் முகத்தை வாஞ்சையோடு உற்று நோக்கினாள்.

அவ்வாறு அந்த அம்மாள் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் சுந்தரமூர்த்தி முதலியார் மெதுவாக வந்து அந்தக் கும்பலில் நுழைந்து கொண்டார் அவரை உடனே உள்ளே அழைத்து வருவதற்காகவே சௌந்தரவல்லி சற்று நேரத்திற்கு முன்பு சைகை செய்து ஒரு வேலைக்காரியை வெளியில் அனுப்பி வைத்தாள். அந்த சமயத்தில் அந்தக் கும்பலின் ஒரு பக்கத்தில் புஷ்பாவதியும் காணப் பட்டாள். கடைசியாகப் பூஞ்சோலையம்மாள், " நல்ல வேளையாக அவள் எல்லாவற்றிற்கும் தப்பி க்ஷேமமாக வந்து சேர்ந்தாளே! அதுவும் சுவாமி செயல் தான்" என்று கூறி முடித்தவுடன், சுந்தர மூர்த்தி முதலியார் கணீரென்று ஒலித்த குரலில் உரக்கப் பேச வாரம்பித்தது, ஆம், அம்மா! இதை சுவாமியின் செயலென்றுதான் சொல்லவேண்டும், இல்லா விட்டால், இப்பேர்ப்பட்ட மகா பயங்கர மான அபாயம் நேர்ந்ததற்கு சுவாமியின் சகாயம் மாத்திரம் இல்லா திருந்தால், இந்நேரம் கோகிலாவின் மானமும் பிராணனும் ஒருங்கே அழிந்து போயிருக்கும். மனிதர் மூலமாகத்தானே தெய் வம் காப்பாற்ற வேண்டும் என்பது ஒருபுற மிருந்தாலும், இப் பொழுது நாமெல்லோரும் தெய்வ கடாக்ஷத்தைத்தான் முக்கிய

மாகப் பாராட்ட வேண்டும்'' என்று நிரம்பவும் நயமாகவும் பரிவாக வும் கூறினர்.

அதற்கு முன் கோகிலாம்பாளும், சௌந்தர வல்லியும் பேசிக் கொண்டதை மிகுந்த வியப்போடு கவனித்துக் கேட்டபடி மௌனமாக நின்று கொண்டிருந்த உறவினர்க ளனைவரும் திடுக் கிட்டு அப்பொழுது பேசியது யார் என்று உற்றுப் பார்த்து, அது சுந்தரமூர்த்தி முதலியார் என்று உணர்ந்து, அவர் எவ்விதமான புதிய செய்தியைத் தெரிவிக்கப் போகிறாரோ வென்று மிகுந்த ஆவலுடன் அவரது வாயைப் பார்த்தபடி நின்றனர். தான் எதிர் பாராத விதமாய் அவர் அந்த அசந்தர்ப்ப வேளையில் அங்கே வந்து பேச ஆரம்பித்ததைக் கண்ட கோகிலாம்பாள் திடுக்கிட்டு நடுநடுங்கி மிகுந்த திகில் கொண்டு குன்றிப் போய் தான் என்ன செய்வதென்பதை உணராமல் தலை குனிந்து நின்றாள். அப் பொழுது தனது தாய்க்கருகில் போய் நின்று கொண்டிருந்த சௌந் தர வல்லியம்மாள் சுந்தரமூர்த்தி முதலியாரைக் கண்டவுடன் கட்டி லடங்கா மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைந்தாளாயினும் ஒருவித நாணமும் கொண்டவளாய்த் தனது உண்மையான மனநிலைமையை மறைத்துக் கொண்டு தனது தாயைப் பார்த்து, "அம்மா இதென்ன புதைவாணம்போலப் புதிய புதிய சங்கதியாய்க் கிளம்புகிறதே தனக்கு எவ்வித அபாயமும் நேர வில்லை யென்று இப்போது தானே நம்முடைய கோகிலா சொல்லி வாயை மூடினாள். அவ ளுக்கு மகா பயங்கரமான அபாயம் நேரிட்டதாகவும், அதிலிருந்து தெய்வந்தான் அவளைக் காப்பாற்றிய தென்றும் இப்போது ஒரு புதிய சங்கதி பிறக்கிறதே! பட்டுப் பட்டுத்தானே மனிதர் தேற வேண்டுமென்று கோகிலா சொன்னபோது, அவள் இனி நிஜத்தை மறைக்கமாட்டா ளென்றல்லவா நான் எண்ணிக் கொண்டேன். பேஷ்! அக்காள் நல்ல வழியில்தான் தேர்ச்சி யடைந்திருக்கிறாள்!'' என்றாள். அவளது சொற்கள் கோகிலாம்பாளின் மனத்தை வாள் களால் அறுப்பது போலவிருந்தன. சகிக்கவொண்ணாத வெட்கமும் அவமானமும் அடைந்து கோகிலாம்பாள் தலை குனிந்து குன்றி நின் றாள். சௌந்தரவல்லி அவ்வாறு கோகிலாம்பாளை இழிவு படுத் திப் பேசியதைக் கண்டு பொறாத பூஞ்சோலையம்மாள் சௌந்தர வல்லியை அடக்கித் தணிவான குரலில் "என்ன, சௌந்தரா! கொஞ்சம் கூட முன் பின் யோசிக்காமல வார்த்தைகளைக் கொட்டு கிறாயே! நீ இப்படிப் பேசினால், இத்தனை ஜனங்களுக்கும் முன்னால்

அக்காளை அவமானப்படுத்துகிற மாதிரியல்லவா. அதுவுமன்றி, அதோ வந்திருப்பது உன்னைக் கட்டிக்கொள்ளப் போகும் ஐயா வல்லவா. அவர்களுக் கெதிரில் நீ வாயைத் திறக்கலாமா, அல்லது அவர்களுக்கு நேரில்தான் வரலாமா! அப்பால் போய் மறைவாக இரம்மா'' என்று அவளுக்கு மாத்திரம் கேட்கும்படியாக மொழிந்து விட்டு, சுந்தரமூர்த்தி முதலியாரைப் பார்த்து உரத்த குரலில் பேசத் தொடங்கி ' நீங்கள் சொல்வதைப் பார்த்தால், கோகிலா ஏதோ அபாயத்திலிருந்து கடவுள் செயலால் தப்பி வந்ததாகத் தெரிகிறது. நாங்களும் அதே சங்கதியைத்தான் பிரஸ்தாபித்துக் கொண்டிருந்தோம். கொட்டிக் கொட்டி அளந்தாலும் குறுணி முக்குறுணி யாகுமா என்று பழமொழி சொல்வார்கள். குழந்தை சௌக்கியமாக வீடு வந்து சேர்ந்தாள். அவ்வளவோடு நாம் சந் தோஷப்பட்டு இந்த விஷயத்தை இதோடு நிறுத்துவோம். நம்முடைய சொந்த ஜனங்களெல்லோரும் இந்த இரவு வேளையில் இப்படிப்பட்ட தொந்தரவுக்கு ஆளானதுதான் என் மனதை வருத்து கிறது எல்லோரும் போஜனம் செய்தார்களோ என்னவோ தெரிய வில்லை. நான் உள்ளே போய் இலைபோடச் சொல்லுகிறேன். எல் லோரும் போஜனம் செய்து இன்றிரவு இங்கேயே படுத்திருந்து காலையில் போகலாம். எல்லோரும் தயவு செய்து இங்கேயே இருக்க வேண்டும்'' என்று நிரம்பவும் நயமாகவும் பணிவாகவும் கூறினாள்.

அதைக் கேட்டவுடனே அங்கிருந்த ஜனங்களுள் பலர் "நாங் கள் சாப்பிட்டாய் விட்டது. எங்களுக்குப் போஜனம் தேவையில்லை. நாங்கள் படுக்கைக்கு வீட்டுக்கே போகிறோம். எப்படியாவது கோகிலா சௌக்கியமாக வந்து சேர்ந்தாளே! அதுவே பெருத்த விருந்து சாப்பிட்ட மாதிரி.'' என்று ஒரே காலத்தில் கூறினர். சிலர் எங்கள் வீட்டில் சாப்பாடெல்லாம் செய்து தயாராய் வைக்கப்பட் டிருக்கிறது. சாப்பிட உட்காரப்போன சமயத்தில், இந்தச் செய்தி யைக் கேட்டு உடனே புறப்பட்டு ஓடிவந்தோம் நாங்கள் வீட்டுக்கே போய்ச் சாப்பிடுகிறோம். இல்லாவிட்டால், அங்கே தயார் செய் திருப்பதெல்லாம் வீணாய்த்தானே போகும். அதுவுமல்லாமல் இங்கே திடீரென்று இந்த இரவில் இத்தனை பேருக்கும் சாப்பாடு போடுவதென்றால், அதுவும் உங்களுக்கு அசௌகரியமாக இருக் கும். வேண்டாம். நாங்கள் வீட்டுக்கே போகிறோம். எங்களுக்கும் நேரமாகிறது. குழந்தை கோகிலா எங்கெங்கோ போய் அலைந்து கஷ்டப்பட்டு வந்திருக்கிறது. மற்றவர்களும் இன்னம் சாப்பிட

வில்லைபோ லிருக்கிறது. ஆகையால் நீங்கள் போய் உங்கள் காரியத்தைப் பாருங்கள். நாங்கள் உத்தரவு வாங்கிக் கொள்ளுகிறோம்" என்றனர்.

கோகிலாம்பாளுக்கு என்ன விதமான அபாயம் நேரிட்டதென்பதைத் தெரிந்து கொள்ளாமல், அவ்விடத்தை விட்டுப்போகச் சிலருக்கு மனமில்லையாதலால், அவர்கள் சுந்தரமூர்த்தி முதலியாரிடம் நெருங்கிப் போய், "கோகிலா ஏதோ பெரிய அபாயத்திலிருந்து தப்பியதாகச் சொன்னீர்களே; அது என்ன சங்கதி? அதைக் கேட்டுத் தெரிந்து கொண்டால்தான், மனம் நிம்மதியடையும் போலிருக்கிறது" என்றனர். மற்றவர்களும் அதைத் தெரிந்துகொள்ளப் பிரியப் பட்டனராயினும், அது பூஞ்சோலையம்மாளுக்கு இஷ்டமில்லையென்று உணர்ந்து பேசாமல் இருந்தனர். ஆனால் சிலர் அதைப்பற்றி சுந்தரமூர்த்தி முதலியாரைக் கேட்கவே, அவர்களும் அவரது வாயைப் பார்த்தபடி நின்றனர். அந்தக் குறிப்பை அறிந்த சுந்தரமூர்த்தி முதலியார் அவ்விஷயத்தை வெளியிட மனமற்றவர் போலவும், அவர்களது வற்புறுத்தலைத் தடுக்கமாட்டாமல் அரை மனதோடு அதை வெளியிடுகிறவர் போலவும் நடித்து, "இன்று காலை முதல் பெண்ணைக் காணாமையால் இந்த வீட்டு எஜமானியம்மாளும் மற்றவர்களும் நிரம்பவும் அல்லலும் மனவேதனையும்பட்டு, போஜனத்தைக்கூட அலட்சியம் செய்து தவித்திருந் திருக்கிறார்கள். இந்த சமயத்தில் நான் பயங்கரமான வரலாற்றை யெல்லாம் சொல்லி, அவர்களுடைய அவஸ்தையை அதிகப்படுத்துவது உசிதமாகப் படவில்லை. நேற்று முதல் இவ்விடத்திலேயே இருக்கும் என் தங்கைக்கு நான் டெலிபோன் மூலமாக இந்தச் சங்கதியைத் தெரிவித்தேன். அவள் அதை இங்கிருந்து எல்லோருக்கும் சொல்லி இருப்பாளென்று நினைத்து, நான் இப்போது இந்தப்பிரஸ்தாபத்தை எடுத்து விட்டேன் இல்லாவிட்டால் நான் இதைக் குறித்துப் பேசியே இருக்கமாட்டேன்" என்றார்.

உடனே புஷ்பாவதி நாணிக்கோணி நாகணவாய்ப் புள் மழலையாகப் பேசுவதுபோல மிருதுவாகப் பேசத் தொடங்கி "இல்லையண்ணா! நீங்கள் டெலிபோனில் அந்தச் சங்கதியைச் சொன்னீர்களல்லவா, அதைக் கேட்டவுடன் எனக்குத் தலை நடுக்கம் எடுத்துக் கொண்டது. கைகால்களெல்லாம் கட்டிலடங்காமல் உதறவாரம்பித்தன. மூளையும் சுழல வாரம்பித்தது. என்னால் நிற்க முடியா

மல் போய்விட்டது. பெரியம்மாளும் அப்போது இங்கே இல்லை. சௌந்தரவல்லி தூங்கிக்கொண்டிருந்தது. நான் என் உடம்பின் ஸ்திதியை ஒரு வேலைக்காரியிடத்தில் சொல்லிவிட்டு, என்னை எழுப்ப வேண்டாமென்று கேட்டுக்கொண்டு போய்ப் படுத்தவள் இப்போதுதான் கொஞ்சம் தெளிவடைந்து எழுந்து வருகிறேன்" என்றாள். அதைக் கேட்ட உடனே அருகிலிருந்த ஜனங்களெல்லோருக்கும், அந்த அபாயம் இன்னதென்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலும் துடிப்பும் அபாரமாகப் பெருகின. பூஞ்சோலையம்மாளுக்கும் அதை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் ஒருபுறத்தில் எழுந்ததானாலும், தமது ஜனங்களெல்லோரையும் அனுப்பிவிட்டுத் தனிமையில் அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென எண்ணினாள்; ஆனால் ஜனங்களை எப்படிப் போகச் சொல்வது என்பதையறியாது தவிக்கலானாள். கோகிலாம்பாளது நிலைமையோ பரமவேதனையானதாக இருந்தது. தனக்கு எவ்வித அபாயமும் நேரவில்லையென்று தான் சிறிது நேரத்திற்கு முன்பு சௌந்தரவல்லியிடம் கூறியது பொய்யாகப் போய்விட்டதே யென்றும், அதற்தனை ஜனங்களும் தன்னைப்பற்றி எவ்விதமான கேவல அபிப்பிராயம் கொண்டு வெளியில் போய்த் தூற்றுவார்களோ என்றும் எண்ணி பெருத்த கலக்கமும் அச்சமும் அடைந்து குன்றிப்போய் முற்றிலும் தளர்வுற்று ஒய்ந்து நின்றபடி தனது கடைக்கண்ணால் சுந்தரமூர்த்தி முதலியாரது முகத்தை ஒரு முறை பார்த்தாள். அவ்வாறு பார்த்தது அங்கிருந்த தமது ஜனங்களுக்கு முன், எந்த வரலாற்றையும் தெரிவிக்க வேண்டாமென்று அவள் அவரிடம் நயந்து வேண்டிக்கொள்வது போல இருந்தது. சுந்தரமூர்த்தி முதலியார் அதைக் கவனித்தும் கவனிக்காதவர் போலத் தமது பார்வையை வேறு பக்கத்தில் திருப்பிக் கொண்டார்.

அப்பொழுது வக்கீல் சீநிவாச முதலியார் சுந்தரமூர்த்தி முதலியாரைப் பார்த்து, "ஐயா! நீங்களும், உங்கள் தங்கையும் சொன்ன வார்த்தைகள் எங்களுடைய ஆவலைத் தணிப்பதற்குப் பதிலாக அதை அபாரமாகப் பெருக்கிவிட்டது. சங்கதியை நீங்கள் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டாம். இரண்டொரு வார்த்தையில், இன்னாரால் இன்னவிதமான அபாயம் நேர்ந்தது என்பதை மாத்திரம் சொல்லிவிடுங்கள். அதைக் கேட்டுக் கொண்டு நாங்கள் வீட்டுக்குப் போகிறோம்; எங்களுக்கும் நேரமாகிறது" என்றார்.

சுந்தரமூர்த்தி முதலியார் விஷயத்தை வெளியிட விரும்பாதவர் போலத் தமது முகத தோற்றததை மாற்றிக்கொண்டு சீநிவாச முதலியாரை நோக்கி, "இந்த ஊரில் நம்முடைய பெண்களுக்கு யாரால் அபாயம் நேரக்கூடு மென்பதை நான் சொல்லவும் வேண்டுமா? நம்முடைய துரைததனததார் மணிக் கணக்குப்படி மாமிசத்தைப் போட்டு ஊட்டி வளர்த்து ஊர்சுற்ற விட்டிருக்கும் சண்டைக் கடாக்கள் இருக்கிறார்களே. தெரியாதா?" என்றார்

மற்றவர் யார் யார்? வெள்ளைக்கார சோல்ஜர்களா? என்று வியப்போடும் ஆவலோடும் வினவினர். சுந்தரமூர்ததி முதலியார், "இல்லை. அவர்களாக இருந்தால், இந்நேரம், கோகிலாம்பாள் மறு உலகததுக்குப் போயிருப்பது நிச்சயம் நம்முடைய கருப்பு சோல்ஜர்கள் இருக்கிறார்களல்லவா. அவர்கள் தான் சிப்பாயிகள். அவர்களிடததில் நம்முடைய கோகிலா கால விதநியாசததினால் இன்று அகப்பட்டுக் கொண்டது. எங்கேயாவது ஒரு மிருகம் செததுக் கிடந்தால், வெகு தூரததிற்கு அப்பால் இருக்கும் கழுகிற்கு மூக்கில் வியர்வை உண்டாகுமாம். அது உடனே வேட்டைக்குப் புறப்பட்டு விடுமாம். அதைப்போல எங்கேயாவது யௌவனப் பெண்ணொருததி தனியாக இருக்கிறாளென்றால், அந்த சங்கதி எப்படியோ, நம்முடைய சண்டைக் கடாக்களுக்குத் தெரிந்து போகிறது. எப்படியாவது அவர்கள் பெண்ணை அபகரித்துக் கொண்டு போய் விடுகிறார்கள்" என்று பெரிய பீடிகை போட்டுப் பேசவாரம்பிததார்.

அதைக் கேட்கவே, அங்கிருந்தோர் நிரம்பவும் திகிலடைந்து நடுநடுங்கிப் போய்க கோகிலாம்பாளைப்பற்றிப் பலவகையில் சந்தேகங் கொள்ளத தொடங்கி சுந்தரமூர்ததி முதலியாரது வாயையே பார்ததபடி இருந்தனர்.

உடனே சுந்தரமூர்த்தி முதலியார் கோகிலாம்பாளுக்கு நேர்ந்த அபாயத்தைப் பற்றிய வரலாற்றைக் கூறத தொடங்கி, அவள் அன்றைய தினம் காலையில் பெட்டி வண்டியில் உட்கார்ந்து சென்ற சமயததில சாரதி முருகேசனைப் போலீசார் கைதிசெய்துகொண்டு போனதை தூரததிலிருந்து பார்தத காசாரி மினியன் தான் வண்டிக்குப பின்னால் ஓடியதாகவும், கோகிலாம்பாள் போலீஸ் இன்ஸ்பெக்டருடைய வீட்டு வாசலில் வண்டியை விட்டிறங்கி கையில் பலகார மூட்டையோடு உள்ளே போய் வெகு நேரம இருந்து மறுபடி

வெளியில் வந்ததாகவும், தான் அதுவரையில் அவ்விடத்திலேயே இருந்து அவனை வண்டியில் வைத்து அழைத்து வந்ததாகவும், வந்தபோது தனக்கு வயிற்றுவலியும் மயக்கமும் வந்தமையால, தவறாக வண்டி வெகுதூரம் தெற்கில் வந்து கோட்டைக் கடுத்த இரும்புப் பாலத்தண்டை வந்து விட்டதாகவும், அவ்விடத்தில் தான் வண்டியை நிறுததிவிட்டுக் கீழே இறங்கிப் பாலததடியில் போய் தேகபாதையை நிவர்ததி செய்துகொண்டு கொஞ்ச நேரத்தில் தான் மேலே வந்து பார்ததாகவும், வண்டியும் கோகிலாம்பாளும் காணப்படவில்லை யென்றும், தான் உடனே பெருதத பீதியும் நடுக்கமு மடைந்து பல இடங்களில் போய்த் தேடிப் பார்த்துவிட்டு ரஸ்தாவோடு தெற்கே மைலாப்பூர் வரையில் வந்து தமது பங்களா ற்குள் நுழைந்த அந்த வரலாற்றை மினியன் தம்மிடம் வெளியிட்டதாகக் கூறியதன்றி, உடனே தாம் கைததுப்பாக்கியுடன் புறப் பட்டுப் போனதுமுதல் கோகிலாம்பாளை சிப்பாயிகளின் வசத்திலிருந்து மீட்டுத் தமது பங்களாவிற்கு கொணர்ந்து தேற்றிக் காப் பாற்றியது வரையில் விரிவாகவும் தெளிவாகவும் வளர்க்காமலும் எடுத்துரைத்தார்.

அதைக் கேட்கவே அங்கிருந்த ஜனங்க ளெல்லோரும் முற்றிலும் பிரமிதது ஸ்தம்பிதது ஓய்ந்துபோய் அப்படியே நின்றுவிட் டனர்.

நாலைந்து சிப்பாயிகள் தாழைக்காட்டில் தனிமையில் கோகிலாம்பாளை மானபங்கப் படுதத எத்தனிததை அப்பொழுதே கண்ணிற் கெதிரில காண்பவர்போல அவர்களெல்லோரும் கிடு கிடுதது நடுங்கிப் போயினர். அந்த மகா பயங்கரமான காட்சி அவர்களது மனத்தைக் கலக்கியதைவிட, அவள் தனிமையில் போலீஸ் இன்ஸ் பெக்டாரது மாளிகைக்குப் பலகார மூட்டையுடன் போய் வெகு நேரம் இருந்துவிட்டு வெறுங் கையோடு திரும்பி வந்தாளென்ற மகா விபரீதமான செய்தி அவர்களது புததி முற்றிலும் மயங்கித தெறித்துப் போகும்படி செய்து விட்டது. கோகிலாம்பாள் அப்படியும் நடந்து கொள்வாளா என்ற மலைப்பும் சந்தேகமும் பிரமாதமாக எழுந்தன. சுந்தரமூர்ததி முதலியார் கோகிலாம்பாளுக்கு முன்னால் வெளியிட்டதை அவள் மறுக்காமல் மௌனமாக நின்றதிலிருந்து, அது உண்மையான வரலாறாகததான் இருக்க வேண்டு மென்று எலலோரும் எண்ணிக் கொண்டனர். அதற்கு அநுசரணை

யாகத் தாயும் மகளும் உண்மையை வெளியிட வெட்கி, மகள் அன்று காலையில் சொந்தக்காரருடைய வீட்டிற்குப் போனுளென்று பொய்யான தகவல் கூறியதும், சுந்தரமூர்த்தி முதலியார் கூறிய வரலாறு உண்மையான தென்பதை ஊர்ஜிதப் படுத்தியது. ஆகவே, ஜனங்கள் எல்லோரும் அந்த வெட்கக்கேடான நிலைமையில் தாம் என்ன சொல்வதென்பதை யறியாதவராய்ச் சிறிதுநேரம் வியப்பே வடிவாக மாறி ஓய்ந்து மௌனமாக நின்றனர். அந்த வரலாற்றைப் பூஞ்சோலை யம்மாளும் கேட்டுக் கொண்டே இருந்தமையால், தனது குமாரத்தி இன்ஸ்பெக்டரது வீட்டிற்கு துன்மார்க்கமான உத்தேசத்தோடு சென்றுள் என்று எல்லோரும் சம்சயம் கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டுப் போனதை உணர்ந்தும், பிறகு கோகிலாம்பாளுக்கு சிப்பாயிகளால் நேரிட்ட மகா பயங்கரமான அபாயத்தைக் கேட்டும் அந்த அம்மாள் சகிக்கவொண்ணுத அவமானமும் விசனமும் கலக்கமும் மனவேதனையும் அடைந்து இடிந்து குன்றி அப்படியே உட்கார்ந்து போய்விட்டாள். கோகிலாம்பாளது மன நிலைமையை நாம் கூறுவதைவிட யூகித்துக் கொள்வதே எளிதென்று எண்ணுகிறேம். தான் இன்ஸ்பெக்டருடைய வீட்டிற்குள் போய் வந்ததைப் பற்றி அவர்களுக்குத் தான் திருப்திகரமான எவ்வித சமாதானம் கூறுகிறது என்பதை அறியாமல அவள் முற்றிலும் சோர்ந்து சில நிமிஷநேரம் அப்படியே உயிரற்ற பதுமைபோலாய் விட்டாள்.

அதுதான் சமயமென்று கண்ட சௌந்தரவல்லி இன்னெரு தந்திரம் செய்தாள். தனக்குப் பக்கத்திலிருந்த வேலைக்காரியிடம் கொடுத்து வைத்திருந்த ஒருகடிதத்தை அவள் அப்பொழுதே கண்டெடுத்துக் கொணர்ந்து கொடுப்பதுபோல நடிக்கச்செய்து, அதைத் தனது கையில வாங்கி மிகுந்த வியப்பும் ஆவலும் கொண்டவள் போல நடித்து, ''இதோ அந்தக் கடிதமும் அகப்பட்டுப் போய் விட்டது. இதை நான் படிக்கிறேன். எல்லோரும் கேளுங்கள். இதையார் எழுதியது என்கிற உண்மை இப்பொழுதாவது விளங்கிப் போகும். இப்போது ஒருவர்மே லொருவருக்கு ஏற்பட்டிருக்கிற சம்சயமும் உடனே நீங்கிப்போகும்'' என்று கூறிய வண்ணம், மற்றவர் அதற்கு என்ன மறுமொழி கூறப் போகிறார்கள் என்பதை எதிர் பார்க்காமல கடிதத்தைப் பிரித்து மடமட வென்று படிக்கத தொடங்கினுள். அந்தக் கடிதம் கண்ணபிரான் சிறைச்சாலையிலிருந்து கோகிலாம்பாளுக்கு எழுதியதென்பதை நாம் மறுபடி

குறிப்பது அநாவசியம். ஷை கடிதத்தின் உள் விவரம் முன்னோரிடத்தில் வந்திருக்கின்றதானாலும், வாசகர்களின் சௌகரியத்தைக் கருதி அதை நாம் மறுபடி இங்கு குறிக்கிறோம். ஷை கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

சௌபாக்கியவதி கோகிலாம்பாள் அம்மாளுக்கு ஈசனருளால் சர்வா பீஷ்டமும் சர்வ மங்களமும் உண்டாவதாக

நாமிருவரும் ஒன்றுபட்டு வாழ்வதற்குப் பரிபக்குவமான காலம் இன்னமும் வரவில்லை என்பது இன்றையதினம் காலையில் ஏற்பட்ட புதிய இடையூறிலிருந்து நன்றாகத் தெரிகிறது. நேற்று சாயுங்காலம் நாமிருவரும் பூஞ்சோலையில் தனியாக சந்திக்க நேர்ந்துபோனது தெய்வச் செயலென்று நேர்ந்த இடையூறுதான் நம்முடைய சுகவாழ்க்கைக்குக் கடைசியான இடையூறாக இருக்குமென்று நான் நினைத்தேன். அதைக் காட்டிலும் பிரமாதமான பேரிடியாக இப்போது வந்து வாய்த்திருக்கிறது. பலாக்கனியின் வெளியில் கோடிக்கணக்கில் முட்களை நிறுத்தி, உட்புறத்தில் மாதுரியமான சுளைகளை வைத்துப் பத்திரப்படுத்தி யிருப்பதுபோல, மனிதருக்காக கடவுள் படைத்திருக்கும் ஒவ்வோர் இன்பத்தையும் பற்பல இடைஞ்சல்கள் சூழ்ந்து பாதுகாத்திருக்கச் செய்திருக்கிறார்.

அன்றையதினம் நீயும், உன் தங்கையும் கடற்கரைக்குப் போக ஆசைப்பட்டு, ஸாரட்டில் ஏறிக்கொண்டு போனகாலத்தில் மோட்டார் வண்டியினால் உங்களுக்குப் பிராணாபாயமான விபத்து நேரப்போகிறதென்பதை நீங்கள் கனவிலும் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள். அதுபோல, நேற்றையதினம் சாயுங்காலம நீ பூஞ்சோலைக்குப் போகுமுன், ஊஞ்சற் பலகையினடியில் நாகப்பாம்பு வருமென்பதை நீ எதிர்பார்த்தே இருக்க மாட்டாய். மனிதருடைய உயிரும் உடலும் எங்கெங்கே போகின்றனவோ, அங்கங்கே அவைகளின் நிழல்போல, அபாயமும் கூடவே இருந்து வருகிறது என்று அன்றையதினம் நீயே சொல்லி யிருக்கிறாய். ஆகையால் இன்றைய தினம் எனக்கு அபாயம் நேர்ந்ததைப்பற்றி நான் உனக்கு அதிகமாக சமாதானம் சொல்ல வேண்டுமென நினைக்கவில்லை. என்மேல் சுமத்தப்பட்டிருக்கும் மகா இழிவான இந்தத் திருட்டை நான் செய்யக்கூடியவனல்லவென்பது உன் மனசுக்கே நிச்சயமாகத் தெரிந்த விஷயம். ஆனாலும் இதனால் உனக்கு அபாரமான

விசனமும் சகிக்க முடியாத அவமானமும் மனவேதனையும் ஏற்பட்டிருக்குமென்பதைப்பற்றிச் சந்தேகமே இல்லை. நான், திரிகரண சுத்தியாக, இந்தக் குற்றத்தையாவது வேறே எந்தக் குற்றத்தையாவது செய்தவனல்லவாகையால், பரம தயாளுவும் மகா நீதிமானுமாகிய கடவுள் என்னை அநியாயமாகத் தண்டிக்க மாட்டாரென்று நான் உறுதியாக நம்பியிருக்கிறேன். ஆகையால், உனக்கும் எனக்கும் ஏற்பட்டுள்ள இந்த அவமானத்தையும் துயரத்தையும் ஈசுவரன் அதி சீக்கிரத்தில் நிவர்த்தி செய்து, நாமிருவரும் ஆநந்த மடையும்படி சேர்த்து வைப்பா ரென்பதை நீ நிச்சயமாக நம்பலாம்.

கடவுள் பரம தயாநிதி யாகையால், அவருடைய மக்களாகிய நாம் அநியாயமாக வருந்துவதை அவர் பார்த்துக்கொண்டு அசட்டையாக இருக்காமல், எப்படியும் ஒருவழி காட்டி உதவுவாரென்பது என்னுடைய விஷயத்தில் மெய்யாகிவிட்டது நான் இருக்கும் இந்த நிராதரவான நிலைமையில், ஒரு முக்கியமான அதிகாரியின் அநுதாபமும் உதவியும் எனக்கு ஏற்பட்டிருக்கின்றன. நான் இந்தக் குற்றத்தைச் செய்யவில்லையென்பதை அவர் சந்தேகமறத் தெரிந்துகொண்டிருக்கிறாராகையால் அவருக்கு என் விஷயத்தில் இப்படிப்பட்ட பெருத்த தயாளமும் இரக்கமும் உண்டாகி இருக்கின்றன. உடனே ஒரு வக்கீலை யமர்த்தி, என் பொருட்டு மாஜிஸ்டிரேட்டினிடத்தில் போய் வாதாடச் செய்தால், என்னை ஜாமீனின்மேல் இப்போது விடுவித்துக்கொண்டு போகலாமென்றும், பிறகு இந்த வழக்கின் விசாரணை நடக்கும்போது, தக்க ஆதாரங்களைக் காட்டி, சாட்சியங்களை விடுத்து, விடுதலை பெறலாமென்றும், மேற்படி அதிகாரி யோசனை சொல்லுகிறார். அது எனக்கும் யுக்தமாகவே தோன்றுகிறது; நான் இந்தத் திருட்டு விஷயமாக உன் மனம் திருப்தி யடையும்படி சில சமாதானங்களை நேரில் சொல்லிக்கொள்ள வேண்டி இருப்பதாலும், வக்கீல் விஷயமாக ஆகவேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் சொல்லவேண்டி இருப்பதாலும், நான் இருக்குமிடத்திற்கு நீயே நேரில் வரும்படியான சிரமத்தை உனக்கு நான் கொடுக்கலாமென்று துணிந்து இந்தக் கடிதத்தை அனுப்பலானேன். நீ இங்கே வருகிறாயென்பதைப் பிறர் அறிந்துகொண்டால், அதனால், உனக்கு ஒருவித இழிவும், பழிப்பும், அதைப்பற்றிப் பிறர் புரளி செய்யும்படியான சந்தர்ப்பமும் ஏற்படும். அதுவுமன்றி, நீ என்னிடத்தில் வந்து என்னைப்

பார்ப்பதற்கு அனுமதி கொடுத்துள்ள, முன் குறிக்கப்பட்ட பெரிய உத்தியோகஸ்தருக்குப் பெருத்த துன்பம் நேர்ந்துவிடும் ஆகை யால், நீ வருவது எவருக்கும் தெரியாதபடி மறைவான ஒரு பெட்டி வண்டிக்குள் உட்கார்ந்துகொண்டுவந்தால், இந்தக் கடிதம் கொண்டு வரும் ஆள் உன்னை நேராக என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வருவான். மற்ற சகலமான விஷயங்களையும் நாம் சவிஸ்தாரமாக நேரில் பேசிக்கொள்ளலாம்.

வீட்டிற்குள் அந்தப்புரத்தில் தெய்வம் போல வைத்துப் போற்றப்படத் தகுந்தவர்களான உன்னைப்போன்ற மெல்லியலார்களை அன்னிய புருஷர்கள் இருக்கக்கூடிய இப்படிப்பட்ட பொது ஸ்த லங்களுக்கு வரும்படி அழைப்பது, ஆண்மைத்தனமுள்ள புருஷர் செய்யத்தக்க காரியமல்லவானாலும், வேறே வழியில்லா திருப்ப தாலும், இந்த உலகத்தில் உன்னைத்தான் நான் என்னுடைய உயிருக்குயிராக மதிப்பதாலும், நீ உன்னுடைய உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் எனக்காகத் தத்தம் செய்துவிட்டதாக நேற் றைய தினம் உறுதிமொழி கூறியதைக் கருதியும், நான் இந்த அபா யத்திலிருந்து என்னைத் தப்புவிப்பதான பெருத்த கீர்த்தியையும், புண்ணியத்தையும் உனக்கே உண்டாக்கிக்கொடுக்க எண்ணி உனக்கு இவ்வாறு எழுதத் துணிந்தேன்.

ஆனால், இன்னொரு முக்கியமான விஷயம். இந்தக் கடிதம் உன்னிடத்தில் வந்து சேரும்போது, அவ்விடத்தில் நிலைமையும், சந்தர்ப்பமும் சரியாக இருந்தால் மாத்திரம், நீ புறப்பட்டு வரலாம்; அங்கே அசந்தர்ப்பமாக இருந்தால், நீ உன்னுடைய சௌகரியம் போல நடந்து கொள்ளலாம்

உன்னிடத்தில் நான் இவ்வளவு அதிகமாக உரிமை பாராட்டி இந்தக் கடிதம் எழுதிய விஷயத்தைப்பற்றி நீ ஆயாசப்பட மாட்டா யென்று நான் உறுதியாக நம்பி இருக்கிறேன். மற்றவை நேரில்,

இங்ஙனம் அன்பன்,

கண்ணபிரான்.

—என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தை சௌந்தரவல்லி கணீ ரென்ற குரலில் விரைவாகப் படித்து முடித்தாள் தான் தனது அக்காளின் முகத்தையாவது, அம்மாளின் முகத்தையாவது பார்த்

தால், அதைப்படிக்க வேண்டாமென்று அவர்கள் சைகை செய்வார்களென்றும், அதை மீறித தான் படித்தால் தான் வேண்டுமென்றே எல்லா ஏற்பாடுகளையும் செய்ததாகத் தன்மீது சம்சயம் கொள்வார்கள் என்றும் நினைதது அந்தக் கடிதம் முடிகிறவரையில் வேறு எந்தத் திக்கிலும் தனது பார்வையைச் செலுததாமல் சௌந்தரவல்லி தான் நடிக்க உத்தேசித்திருந்த கபட நாடகத்தை முடிவு வரையில் நடித்துப் பூர்த்தி செய்துவிட்டு, முற்றிலும் வியப்பும் கலக்கமும் அடைந்தவள் போலத் தோன்றி, "என்ன ஆச்சரியம் இது! சிறைச்சாலையிலிருக்கிற கைதியல்லவா கோகிலாம்பாளை வரும்படி அழைத்திருக்கிறார்! இது ஒன்றுக்கொன்று பொருந்தவில்லையே! சிறைச்சாலையி லிருக்கிறவர் கடிதம் எழுதினால் கோகிலாம்பாள் பலகாரததுடன் போலீஸ் இன்ஸ்பெக்டருடைய வீட்டுக்குப் போக வேண்டிய காரண மென்ன! ராயபுரத்திலுள்ள முதலியார் ஐயாவும், திருவல்லிக்கேணியிலுள்ள வக்கீல் ஐயாவும் கடிதம் எழுதியதாக இவர்கள் சொலவதென்ன! அது அம்பட்டன் வீட்டுக் குப்பையைக் கிளறுவது போலத்தான் இருக்கிறது. இது எப்படியாவது இருக்கட்டும். வீட்டுக்குப் பெரியவர்கள் செய்யும் காரியத்தில் நான் தலையிடுவது சரியல்ல எனக்கென்ன அவ்வளவு பெரியதனம். நான் என்னுடைய இடத்துக்குப் போகிறேன்" என்று கூறியவண்ணம் அந்தக் கடிததததை தனது அம்மாளிடம் போட்டுவிட்டு அவ்விடததை விட்டு, அப்பால் போய் விட்டாள். அங்கிருந்த ஜனங்கள், அந்தப் பரம விகாரமான நிலைமையில் பூஞ்சோலையம்மாளிடத்திலாவது கோகிலாம்பாளிடததிலாவது சமாதானங்கள் கேட்டுக் கொண்டிருக்க மனமற்றவராய் எவரிடததிலும் சொல்லிக் கொள்ளாமல் ஒருவர் பின்னொருவராய் எல்லோரும் அவ்விடத்தை விட்டு நழுவி வெளியில் போய் விட்டனர்.

வேலைக்காரர்களும் வெட்கிப் போய்ப் பல விடங்களுக்கும் சென்று மறைந்து கொண்டனர் புஷ்பாவதி, கோகிலாம்பாள் பூஞ்சோலையம்மாள் ஆகிய மூவருமே அந்தக் கூடததில் மிஞ்சி நின்றனர்.

பூஞ்சோலையம்மாளும் கோகிலாம்பாளும் அப்படியே இடிந்து உட்கார்ந்து போய் விட்டார்கள். சகிக்கவொண்ணாத அபாரமான அவமானத்தினாலும் வெட்கத்தினாலும் அவர்களது உடம்பு குன்றி முற்றிலும் தளர்ந்து சோர்வடைந்து விழுந்து போய்விட்டது.

அங்கே வந்திருந்த ஜனங்கள் இருந்ததைவிட திடீரென்று புறப்பட்டுத் தங்களிடம் சொல்லிக் கொள்ளாமல் அசட்டையாக அவ்விடத்தை விட்டுப் போனதே ஆயிரம் ஈட்டிகளால் குத்தியது போலவும், தங்களை அவர்கள் கேவலம் பதர்களாக மதிப்பதுபோலவும், தங்களை ஜாதியினின்று விலக்கி விட்டதாய்ச் சொல்லிவிட்டுப் போனது போலவும் இருந்தது. அந்த சமயத்தில் அவ்விடத்தில் புஷ்பாவதி நின்றதனால், அவர்களது அவமானமும், இழிவும் ஆயிரமடங்கு அதிகமாய்த் தோன்றின. மனிதர் தவறிக் கீழே வீழ்ந்தவுடன், தங்களது உடம்பில் ஏற்படும் காயங்களையும், அதனால் உண்டாகும் துன்பத்தையும் கவனியாமல் அருகில் வேறு மனிதர் எவரேனும் இருக்கின்றனரோ வென்பதையே முதலில் கவனிப்பது உலக இயல்பு. தங்களுக்கு ஏற்படும் அவமானத்தைவிட, அதைப் பிறர் கவனிப்பதாகிய அவமானமே அதிகமாய் உறைப்பது சகஜமாதலால், அன்னிய மனுஷியும், தங்களை நிரம்பவும் கண்ணியமாக மதித்துள்ளவளும், தங்களுடன் கலியாண சம்பந்தம் செய்துகொள்ளப் போகிறவளுமான புஷ்பாவதி அந்த சமயத்தில் அவ்விடத்தில் இருந்ததே அவர்களிருவருக்கும் பெருத்த துன்பமாக இருந்தது. யார் என்ன பேசுவது என்பது உணராமல் இருவரும் அயர்ந்து தளர்ந்து செயலற்று கால் நாழிகைநேரம் அப்படியப் படியே கற்சிலைகள் போல நின்று விட்டனர்.

புஷ்பாவதி தானும் மற்றவர்கள் செய்ததுபோல அந்த சமயத்தில் அவர்களை விடுத்துப் போய்விடுவது உசிதமல்லவென்றும், தாம் கருதியிருந்த கபட நினைவு பலிதமாகப் போகிற தருணத்தில் தான் அவ்விடத்திலேயே இருந்து தமது கோரிக்கையைப் பூர்த்தியாக நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்றும் நினைத்ததன்றி, தன் மீது அவர்கள் சிறிதும் சந்தேகம் கொள்ளாமல் இருக்குமாறு தான் நிரம்பவும் தந்திரமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும் தனக்குள் தீர்மானம் செய்து கொண்டாள். தனது புதல்வியான கோகிலாம்பாளுக்கு இன்ஸ்பெக்டரது வீட்டிற்குள் என்னவிதமான அபாயம் நேரிட்டதோ வென்பதைக் கேட்டறிய வேண்டுமென்ற ஆவல் பூஞ்சோலையம்மாளது மனதில் எழுந்து தூண்டிக் கொண்டிருந்தது. தனது தாய் ஒருவேளை கண்ணபிரானைக் கண்டு அவனுடன் சம்பாஷித்திருப்பாளாதலால், அவன் கடிதமெழுதித் தன்னை வரவழைத்த முகாந்தரம் என்ன வென்பதைத் தெரிந்து கொண்டு வந்திருப்பாளாதலால், அதைக் கேட்டறிய வேண்டுமென்ற

ஆவல் கோகிலாம்பாளின் மனதில் துடித்துக் கொண்டிருந்தது. ஆயினும் அப்பொழுது அவ்விடத்தில் புஷ்பாவதி இருந்ததைக் கருதி அவர்கள் தங்களது ஆவலை அடக்கிக் கொண்டதன்றி, அவ்விடத்தில் தங்களுக்கு நேரிட்ட இழிவைக் கண்ட புஷ்பாவதி தங்களிடம் எவ்விதமாக நடந்து கொள்ளுவாளோ என்றும் தங்களை நிரம்பவும் இளக்காரமாக மதித்து தூஷணையான சொற்களை உபயோகிப்பாளோ வென்றும் நினைந்துப் பெரிதும் கவலைகொண்டு அஞ்சிக் கலங்கித் தவித்திருந்தனர்.

ஆனால் புஷ்பாவதி அதற்குமுன் அவர்களிடம் காட்டியதை விடப் பன்மடங்கு அதிகமான வாஞ்சையும், உரிமையும், பரிவும், இரக்கமும் காண்பித்து நிரம்பவும் நயமாக அவர்களை உபசரித்து அவர்களிருவரும் ஸோபாவின்மீது சௌகரியமாக உட்கார்ந்து கொள்ளச் செய்ததன்றி அவர்கள் சிறிதும் எதிர்பாரா விதமாக அவர்களிடம் கரைகடந்த அன்பும் பட்சமும் காட்டிப் பேசவே, அதைக் கண்ட மற்ற இருவருக்கும் மனம் ஒருவாறு நிலைக்கவாரம்பித்தது அவர்களது தேகமும், மனமும் ஸ்திமிதப்படத்தொடங்கின. அவர்களது இயற்கையான நிலைமையும், மனத்தெளிவும், அமைதியும் மறுபடி தோன்றலாயின அதைக் கண்ட புஷ்பாவதி அவர்களிருவரையும் நோக்கி நிரம்பவும் பரிவாகவும், உருக்கமாகவும் பேசத் தொடங்கி, "என்ன கால விதிபரீதம் இது! பட்ட காலிலேயே படும் கெட்ட குடியே கெடும் என்பது சரியாயிருக்கிறதே, மனிதர் ஏற்கெனவே புண்பட்டுக் கிடக்கையில், மேன்மேலும் மனம் புண்ணாகத் தக்க காரியங்களே நேருகின்றனவே! அதுவுமல்லாமல் நாம் கெட்ட வழியில போக வேண்டுமென்று சொப்பனத்திலும் எண்ணாமல், ஒழுங்கான வழியிலேயே நடந்து கொண்டு போகையில், நாம் எதிர்பார்க்காத இடிகள் வருகின்றனவே! அதை என்னவென்று சொல்லுகிறது! நீங்கள் இருவரும் சன்மார்க்க நெறியை விட்டு ஒரு மயிரிழையும் தவறி நடக்கக்கூடியவர்களன்று; கெட்ட காரியம் எதையும் மனசால் கூட நினைக்கிறவர்களன்று. அப்படி இருந்தும், கால விபரீதம் இப்படித் தாறுமாறாக வந்து விடுகிறதே! கோகிலாம்பாள் எப்படியும் கண்ணபிரான் முதலியாரைத் தான் கட்டிக்கொள்ள வேண்டுமென்று உங்களுக்குள் முடிவான தீர்மானம் ஏற்பட்டுப் போயிருக்கிறது. அவர் கடிதம் எழுதினார். அவரிடம் உங்களுக்கு ஏற்பட்டிருந்த அளவு கடந்த பிரியத்தினால் நீங்கள் கோகிலாவை அனுப்பினீர்கள். அவர் பொது ஸ்தலமான

போலீஸ் கச்சேரியில் இருக்கிறார். அவ்விடத்திற்குக் கோகிலா போனால், அவளுக்கு யாரும் எவ்விதமான கெடுதலும செய்து விட முடியாது அவ்விடத்தில் அவளுக்கு எவ்வித இழிவும் நேர்ந்து விடப் போகிறதில்லை. பெண் தைரிய சாலியா யிருந்தால், அங்கே போய் வருவதில் எவ்விதமான கெடுதலுமில்லை. ஆனால் கலியாண மாகாத யௌவனக் குமரி தனிமையில் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் தனக்கு வரிக்கப்பட்டிருக்கும் புருஷருடன் பேசினளென்றால், அது பார்ப்பதற்கு விகாரமாக இருக்கு மென்ற எண்ணத்தினால் நீங்கள் அதை ஒரு விதமாக மறைத்துச் சொன்னீர்கள். அதில் தப்பிதம் என்ன இருக்கிறது. ஒன்று மில்லை. என்னிடம் கூட நீங்கள் இப்படி மாற்றிச் சொன்னீர்களே என்ற எண்ணங் கூட என் மனசில் உண்டாக வில்லை. இவ்விதமான சங்கதிகளை உள்ள படி வெளியிட லஜ்ஜைப்படுவது சர்வ சகஜமான விஷயமே. மானத் தில் கண்ணும் கருத்தும் உடைய மனிதர் யாரும் இப்படித்தான் நடந்து கொண்டிருப்பார்கள். ஆனால், நாம் யாரும் எதிர் பாரா விதமாக உங்களுடைய பந்து ஜனங்களெல்லோரும் இங்கே வந்து கும்பலாகக் கூடியதனாலல்லவா, காரியம் விகாரமாகி விட்டது. உங்களுடைய வேலைக்காரர்கள், நிரம்பவும் அவசரப்பட்டு அவர் களைக் கூட்டிக் கொண்டு வந்து விட்டார்கள். ஆனால் நாம் அவர்க ளுடைய நிலைமையையும் எண்ணிப் பார்த்தால் அவர்கள் உங்களிடம் வைத்திருக்கும் பிரியத்தினாலும் பட்சத்தினாலும் அவர்கள் போய் மற்றவர்களிடம் இதைச் சொல்லி இருக்கிறார்க ளென்றே நினைக்க வேண்டி யிருக்கிறது. ஆகையால் நாம் அவர்களைக் கண்டிப்பதற்கு மில்லை. இதெல்லாம் காலவித்தியாசத்தினால் ஏற்பட்டதென்று தான் நாம் சொல்லவேண்டும். இன்று கோகிலாவுக்கும், உங்களுக் கும் நிரம்பவும் பொல்லாத வேளை யென்றே நினைக்கிறேன். இன்னம் ஏதோ பெருத்த அபாயம் நேரவேண்டியது. அது இவ்வளவோடு விட்டு விட்டது. இல்லாவிட்டால், சிப்பாயிகளிடத்தில் அகப்பட்ட பெண் மீண்டு வருவதுண்டா? அதுவும் கோகிலா எவ்விதமான களங்கமு மில்லாமல் திரும்பி வந்திருப்பதைப் பார்த்தால், இன்று மலைபோல வந்த ஆபத்து பனிபோல விலகிப் போயிருக்கிறது" என்று நிரம்பவும் நயமாகத் தேனொழுகுவது போலக் கூறினாள்.

அவள் தங்களிடம் அவ்வாறு சர்வ சாதாரணமாக நடந்து கொள்வா ளென்பதை அவர்களிருவரும் சிறிதும் எதிர்பார்த்தவர்க ளன்றாதலால், அவர்கள் மிகுந்த உற்சாகமும் மனத்திடமும் இன்ப

கரமான மனவெழுச்சியு மடைந்தனர். உடனே கோகிலாம்பாள் புஷ்பாவதியை நோக்கி, "அம்மா! இன்றையதினம் என் மானத்தையும் உயிரையும் காப்பாற்றியது உங்கள் தமயனாரே! அவர்கள் இன்று பெருத்த புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார்கள். இல்லாவிட்டால் இந்நேரம் என் பிணம் மைலாப்பூருக்கு அப்பாலுள்ள தாழைக் காட்டில் கிடக்கும். காக்கைகளும் நரிகளும் அதைத் தின்று கொண்டிருக்கும். அந்தச் செய்தி இவர்களுக்குக் கூட எட்டி இராதென்றே நினைக்கிறேன். இதற்கு முன் இரண்டு தடவைகளில் இன்னொரு புண்ணியவான் என் உயிரைக் காப்பாற்றினார். இன்று உங்கள் தமையனார் தெய்வம் போல நல்ல சமயத்தில் வந்து தோன்றி, எல்லோரையும் துப்பாக்கியால் சுட்டு ஒரு நிமிஷத்தில் ஓட்டி விட்டார்கள். அது மாத்திரமல்ல. அதன் பிறகு அவர்கள் என்னை உங்களுடைய பங்களாவுக்குக் கொண்டுபோய், அவ்விடத்தில் எனக்குச் செய்த உபசாரங்களை நான் என்னவென்று சொல்லப் போகிறேன்! அதை ராஜோபசார மென்றே சொல்ல வேண்டும்." என்று நிரம்பவும் உருக்கமாகக் கூறினாள்.

அதைக் கேட்ட பூஞ்சோலை யம்மாளது கண்களும் மனதும் நன்றியறிதலின் பெருக்கினால் முற்றிலும் கலங்கி இளகிப்போயின. அந்த அம்மாளும் புஷ்பாவதிக்கு உபசார வார்த்தை கூறத் தொடங்கி, "நமக்கு வேறே ஆண் துணை இல்லை யல்லவா. இவர்கள் இருவரும்தான் இனி உங்கள் குடும்பத்துக்குப் பற்றுகோல் என்று சொல்வது போலக் கடவுள் இந்த அபாயங்களைக் காட்டி இவர்க ளிருவரையும் கொண்டு அவைகளை நிவர்த்தி செய்திருக்கிறார் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. எல்லாம் சர்வேசனுடைய திருவிளையாட்டு. நம்மால் ஆவது ஒன்று மில்லை. ஆனால் உங்கள் தமையனாருக்கு மாத்திரம் ஒரு மனக் குறை இருக்கலாம். அவருக்கு நம்முடைய கோகிலாவைக் கட்டிக் கொள்ள வேண்டு மென்கிற ஆசை உள்ளூற இருப்பது நன்றாகத் தெரிகிறது. அந்த ஒரு விஷயத்தில்தான் நாங்கள் செயலற்றவர்களாய் இருக்கிறோம். நாங்கள் இரண்டு பேரும் சேர்ந்து இந்தக் கலியாண ஏற்பாட்டை மாற்ற நினைத்தால் கூட, காரியம் ஒரு நாளும் நிறைவேறாது. நம்முடைய சௌந்தரவல்லி இவரைத்தான் கட்டுவே னென்று ஒரே பிடிவாதமாக இருக்கிறாள். உங்கள் தமயனார் கோகிலாவையே கட்டிக்கொண்டாலும், அல்லது, அன்னியர் வீட்டுப் பெண் எவளை யாகிலும் கட்டிக் கொண்டாலும், சௌந்தரவல்லி உடனே கிணற்

றில் விழுந்து தன்னுடைய உயிரை மாய்த்துக்கொண்டு விடு வாள். இது நிச்சயமான சங்கதி நீங்கள் இந்த இரண்டொரு தினங்களாய் இங்கிருந்து பழகியதில், அவளுடைய குணம் உங்களுக்கே நன்றாகத் தெரிந்திருக்கலாம். உங்கள் தமயனாருடைய மனம் இன்னமும் பழைய மாதிரியே இருக்கும் பக்ஷத்தில் அதை எப்படியாவது நீங்கள்தான் மாற்றித் திருப்பவேண்டும். இந்த விஷயத்தில் நான் உங்களைத்தான் மலைபோல நம்பி யிருக்கிறேன்" என்றாள்.

உடனே கோகிலாம்பாள் பேசத் தொடங்கி, "அம்மா! நான் இவர்களுடைய பங்களாவில் இருக்கபொழுது இந்தப் பிரஸ்தாபம் வந்து ஒரு விதமாக முடிவாகிவிட்டது. நீங்கள் எண்ணியது போலவேதான் இவர்களுடைய தமயனார் முதலில் பிரியப்பட்டு அதை என்னிடமே நேரில் தெரிவித்தார்கள். நான் அவர்கள் ஏற்றுக் கொள்ளும்படியான சமாதானங்களைச் சொன்னதன்மேல் அவர்கள் அதை ஏற்று செளந்தராவையே தாம் கட்டிக் கொள்வதாய் ஒப்புக்கொண்டு விட்டார்கள் அந்த சந்தோஷச் செய்தியை உங்கள் மூவரிடமும் முதன் முதலில் சொல்ல வேண்டுமென்ற ஆசையோடு நான் இங்கே ஓடி வந்தேன். வந்த இடத்தில் இவ்விதமான விபரீதம் நேர்ந்துவிட்டது." என்றாள்.

உடனே புஷ்பாவதி நிரம்பவும் பரிவாகவும் உருக்கமாகவும் பேசததொடங்கி, "என் தமயனாரும் சரி, நானும் சரி, எப்போதும் நியாயததுக்குக் கட்டுப் படுகிறவர்கள். எங்களுக்கு மனிதரே பிரதானம். நீங்கள் மூவரும் தங்கமான மனிதர்கள். உங்கள் மூவருடைய குணத்தழகும் ஒரே மாதிரியாகவே இருக்கிறது. கோகிலாவுக்கும், செளந்தராவுக்கும் அதிக பேதம் பாராட்டி நாங்கள் ஆரம்பததில் பேசியது தவறென்பதை இப்போது நாங்களே நன்றாக உணர்ந்து கொண்டோம். எந்தப் பெண் மூலமாயாவது, உங்களுடைய சம்பந்தம் எங்களுக்கு ஏற்பட்டால், அதுவே போதுமானது. கிரக சாரததினால் உங்களுக்கு இந்த இரண்டு மூன்று தினங்களாய் நேரும் அவமானத்தைக் கண்டு வேறே மனிதரா யிருந்தால், உங்களுடைய சம்பந்தம் உதவாதென்று நினைத்துக் கொண்டு பேசாமல் போயிருப்பார்கள். எங்களுடைய குணம் அப்படிப் பட்டதல்ல. பழகப் பழகப் பாசம் அதிகரிப்பதுதான் உத்தமமான சிநேகிதர்களுடைய லக்ஷணம். யானைக்கும் அடி சறுக்கு

வது உலக இயல்பு. அப்படி இருக்க, ஒரு மனிதருக்கு ஏதோ வேளைப் பிசகினால் ஓர் அபாயம் நேரிட்டுவிட்டால், அதைக்கொண்டு அவர்களை அதோடு வெறுத்து விலக்கி விடுகிறதென்றால், அது அதமகுண முடையவர்கள் செய்கிற காரியம். எங்களுடைய மனசு எப்படிப் பட்டதென்பது இன்னம் போகப் போகத்தான் உங்களுக்கு நன்றாகத் தெரியும்.'' என்றாள்.

பூஞ்சோலையம்மாள், "இதுவும் ஈசனருள்தான் அழிப்பவரும் அவரே ; ஆக்குகிறவரும் அவரே ; நாங்கள் இப்படிப்பட்ட பொல் லாங்குகளை அநுபவிக்கையில் எங்களுக்கு ஆறுதலாகவும் துணை யாகவும் தங்களைப்போன்ற உத்தம நண்பர்களையும் கடவுள் எங்க ளுக்கு உண்டாக்கிக் கொடுத்திருக்கிறார். இல்லாவிட்டால், எங்களு டைய கதி நிர்க்கதியாகி விடுமல்லவா ? கடவுள் பாம்பையும், தேளை யும், வியாதிகளையும் சிருஷ்டிக்கிறார்; அவைகளுக்குப் பரிகார மானமருந்துகளையும் கூடவே சிருஷ்டித்து வைத்திருக்கிறா ரல்லவா. கல்லிற் குள்ளிருக்குந் தேரைக்கும், முட்டைக் குள்ளிருக்கும் கரு வுக்கும் ஆகாரத்திற்கு ஏற்பாடு செய்கிற கடவுள் நம்மைக் காப் பாற்றாமல் விட்டுவிடப் போகிறாரா வென்று முன்னே குழந்தைகள் சொன்னது சாதாரணமான சொல்லா'' என்றாள்

புஷ்பாவதி, "ஆமம்மா! நீங்கள் சொல்வது உண்மையான சங்கதிதான். இருந்தாலும் நாங்கள் உங்களுக்கு அவ்வளவு பிர மாதமான உதவி எதையும் செய்து விடவில்லை. அப்பேர்ப்பட்ட உதவி எதுவும் உங்களுக்குத் தேவையான நிலைமையில் நீங்களும் இருக்கவில்லை. ஆதிமுதல் நாங்கள் உங்களுக்குச் செய்வதெல்லாம் வாய் வார்த்தையாகிய உதவிதான். மனசில் பிரிய மிருப்பதை நாங்கள் வாய் வார்த்தையால் காட்டி, உங்களுக்கு வரும் தொந் தரவை எங்களுக்கு வந்த தொந்தரவைப்போல உணர்கிறோம். அவ் வளவுதான் நாங்கள் செய்கிறோம். வேறொன்று மில்லை. இதை நீங் கள் ஒரு பெரிய சங்கதியாகப் பாராட்டி ஏன் பேசுகிறீர்கள் ! அது இருக்கட்டும். நம்முடைய கோகிலா வெளியில் போயிருந்தது சம் பந்தமாக என் மனசில் ஒரு சந்தேகம் உண்டாகிக் கொண்டே இருக்கிறது. சிறைச்சாலையில் இருக்கிற முதலியார் தாமிருக்கும் இடத்துக்கு வரும்படி யல்லவா கடிதம் எழுதி இருக்கிறார். நம்மு டைய கோகிலா போலீஸ் இன்ஸ்பெக்டருடைய வீட்டுக்குப் போக வேண்டிய காரண மென்ன ? அதுதான் எனக்கு விளங்க வில்லை

உங்கள் குடும்ப சம்பந்தமான விஷயங்களில் நான் தலையிட்டு, ரகஸியங்களை அறிய முயற்சிப்பது தகாத காரியமானாலும், என் மனதை வதைத்துக் கொண்டிருக்கும் சங்கதியை உள்ளபடி வெளியிட்டு விட்டேன். உங்களுக்கு யுக்தமாகத் தோன்றினால், சொல்லலாம், இல்லாவிட்டால், சொல்ல வேண்டுமென்று கட்டாயமில்லை'' என்று நிரம்பவும் நயமாகக் கூறினாள்.

உடனே கோகிலாம்பாள் தான் அன்றைய தினம் காலையில் பங்களாவிலிருந்து புறப்பட்டுச் சென்றது முதல் போலீஸ் இன்ஸ்பெக்டரது வீட்டிற்குள்ளிருந்து தந்திரமாகத் தப்பி வெளியில் வந்தது வரையிலுள்ள வரலாறு முழுதையும் விரிவாக எடுத்துக் கூறினாள். அதைக் கேட்ட பூஞ்சோலையம்மாள் அளவற்ற பிரமிப்பும் நடுக்கமும் கொண்டாளானாலும், கோகிலாம்பாள் அத்தகைய அபாயத்திலிருந்து எவ்விதமான களங்கமுமின்றித் தப்பி வந்ததைக் குறித்து மிகுந்த மகிழ்ச்சி யடைந்தவளாய் வாய்திறந்து பேசமாட்டாமல் ஸ்தம்பித்து மௌனமாக உட்கார்ந்திருந்தாள். கோகிலாம்பாள் வேண்டு மென்றே இன்ஸ்பெக்டரிடம் சென்றதாக புஷ்பாவதி எண்ணி இருந்தவளாதலால், அவளுக்கும் அந்த வரலாறு வியப்பையும் திகைப்பையும் தந்தது. கோகிலாம்பாள் கூறியது உண்மையான வரலாறாக இருக்குமோ, அல்லது, தானிருப்பதைக் கருதி அவள் அவ்வாறு பொய் சொல்லுகிறாளோ வென்றும், புஷ்பாவதி சந்தேகித்தவளாய், அவர்களை நோக்கி, "என்ன ஆச்சரியம் இது! ஜனங்களுக்கு இவ்விதமான அபாயங்கள் நேராமல் தடுப்பதற்காக ஏற்படுத்தப் பட்டவர்களான போலீஸ் அதிகாரிகளே இப்படிச் செய்வதென்றால், இது வேலியே பயிரை அழிக்கிற மாதிரியல்லவா இருக்கிறது. கோகிலா சொல்லும் வரலாற்றைப் பார்த்தால், அந்த இன்ஸ்பெக்டரிடம் கோகிலா தற்செயலாகப் போய் அகப்பட்டுக் கொண்டதாக எண்ண இடமில்லையே. அவர் கோகிலாவை அடைய வேண்டு மென்று எல்லா ஏற்பாடுகளையும் ஆயத்தமாய்ச் செய்து வைத்திருந்ததாக வல்லவா தோன்றுகிறது. சிறைச்சாலையிலிருக்கும் முதலியார் கடிதத்தில் கோகிலாவை அழைத்திருக்கிறார் என்பது அவர்களுக்கு எப்படித் தெரிந்தது? அவர் எழுதிய கடிதத்தை இவர்கள் நடுவில் பிரித்துப் பார்த்திருக்க வேண்டு மென்றே எண்ண வேண்டியிருக்கிறது. இவ்வளவு அபாயமும் அந்தக் கடிதத்திலிருந்து உண்டானதாகத்தான் தோன்றுகிறது என்ன இருந்தாலும், அவர் இந்த மாதிரி கடிதம் எழுதியது ஆச்சரியமா

கத்தான் இருக்கிறது அவர் நன்றாகப் படிக்க புத்திசாலி அப்படி இருந்தும் கொஞ்சமும் முன்பின் யோசியாமல் கடிதம் எழுதிவிட்ட தாகத் தெரிகிறது. வீட்டில் வேறே பெரியவர்கள் இல்லையா? அவருடைய தாயார் இல்லையா? நீங்கள் இல்லையா? நீங்கள் யாராவது வரவேண்டுமென்று அவர் அழைத்திருக்கலாகாதா? அறியாத சிறு பெண்ணைத்தானா அவர் கூப்பிடவேண்டும்'' என்றாள்.

அவ்வாறு புஷ்பாவதி கண்ணபிரானின்மீது குற்றம் சுமத்திப் பேசியது கோகிலாம்பாளின் மனத்தில் சுருக்கென்று தைத்து மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கியதானாலும், அவள் கூறியது நியாயமான வார்த்தையென்பதையும் அவள் உணர்ந்தவளாகையால், அதற்கு எவ்வித மறுமொழியும் கொடாமல் தனது மனதை ஒருவாறு அடக்கிக் கொண்டவளாய்த் தனது முகத்தை அப்புறம் திருப்பிக் கொண்டாள்.

அவளது விசனத்தைக் கண்ட பூஞ்சோலையம்மாள் உடனே புஷ்பாவதியை நோக்கி, ''அம்மா! அவர் பேரிலும் குற்றமே இல்லை. நான் இவளைத் தேடிக்கொண்டு போனேனல்லவா. போய் அவரைப் பார்த்து சங்கதியை விசாரித்தேன். போலீசார் அவரையும் ஏமாற்றி அந்தக் கடிதத்தை எழுதி வாங்கிக்கொண்டு வந்திருக்கிறார்கள். அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் இவளை எப்போது பார்த்தானோ தெரியவில்லை. அதிலிருந்து அவனுக்கு துர்ப்புத்தி பிடித்துப் போயிருக்கிறது போலிருக்கிறது. அவன் வெகு தந்திரமாக இத்தனை காரியங்களையும் செய்து, கோகிலா தன்னுடைய வீட்டுக்கு வரும்படி சூழ்ச்சி செய்திருக்கிறான்'' என்று கூறி கண்ணபிரானிடத்தில் தான் கேட்டுத் தெரிந்துகொண்ட வரலாறு முழுதையும் எடுத்துக் கூறினாள். அதைக் கேட்ட கோகிலாம்பாளின் மனதும் ஒருவித மகிழ்ச்சியடைந்தது. தனக்குக் கடிதம் எழுதிய விஷயத்தில் தனது மணாளன் மூடத்தனமாக நடந்து விட்டானென்ற அபிப்பிராயம் அவளுக்குள் இருந்து வதைத்துவந்ததாகையால், அது உடனே விலகிப் போயிற்று. கண்ணபிரான் தவறான காரியம் எதையும் செய்து விடவில்லையென்றும், போலீசார் அவனை ஏமாற்றி விட்டார்களென்றும் கோகிலாம்பாள் உணர்ந்து கொண்டாள்.

அந்த வரலாற்றைக் கேட்ட புஷ்பாவதி நிரம்பவும் வியப்பாகப் பேசத் தொடங்கி, '' அடாடா! அந்த நாய்க்கு வந்த கேடுகால

மென்ன? அவன் போலீஸ் இன்ஸ்பெக்டராயிருந்து விட்டால், ஊரிலிருக்கும் பெண்கள் மேலெல்லாம் தான் துராசைகொள்ளலா மென்றும், தான் அவர்களை அபகரித்துப் போய் பலாத்காரம் செய்ய லாமென்றும் நினைத்துக் கொண்டான் போலிருக்கிறதே! நிச்சய தார்த்தம் நடந்த காலத்தில் வந்து அவரைப் பிடித்துக்கொண்டு போனானே அந்த இன்ஸ்பெக்டர்தானே!'' என்றாள். பூஞ்சோலை யம்மாள், "ஆம், அவனாகத்தான் இருக்கவேண்டும்'' என்றாள்.

புஷ்பாவதி, "அவனை நான்கூடப் பார்த்திருக்கிறேனே! அவன் பனைமரத்தைப் போலல்லவா இருந்தான். குழந்தைகள் அவனைப் பார்த்தால், அவன் தான் எமதர்மராஜனோ என்று பயந்து நடுநடுங் கிப்போய் விடுவார்களே! அவனுக்கா இப்படிப்பட்ட கேடு காலம் வந்தது! அவனுக்கு வெகு சீக்கிரம் அழிவுகாலம் வந்து விடும். போலீஸ் அதிகாரியாயிருந்தால் மாத்திரம் அவன் அக்கிரமம் செய் தால் அவன் என்றென்றைக்கும் தப்பித்துக்கொண்டிருக்கமுடியுமா? எப்பேர்ப்பட்ட மாயாவியான இந்திரஜித்தனையும், அவனை வெகு சுலபத்தில் வென்று அழித்துவிடக்கூடிய தந்திர ஜித்தன் ஒருவன் எப்படியும் தோன்றுவான்.'' என்றாள்.

அதைக் கேட்ட பூஞ்சோலையம்மாள், "ஆமம்மா! அக்கிரமம் நீடித்து நிற்காதென்பது பிரத்தியக்ஷமான சங்கதிதானே அப் படித்தான் இவனுடைய கதியும் முடியும். அதுவுமன்றி நம்முடைய கோகிலா தெய்வத்துக்கு சமதையானவள். அவளுடைய மனம் புண்படும்படி அக்கிரமம் செய்தவன் வெகு சீக்கிரத்தில் அழிந்து நாசமாய்ப் போய்விடுவான். அதையும நாம் நம்முடைய காதல் கேட் கத்தான் போகிறோம்'' என்றாள்.

புஷ்பாவதி, "இந்தப் படுபாவி இன்ஸ்பெக்டரால் ஏற்பட்ட அபாயம் அவ்வளவோடு போகாமல், சொந்த ஜனங்களுக்கு முன்பு பெருத்த அவமானமாகவும் தலை குனிவாகவு மல்லவா முடிந்துவிட் டது. இப்போது இங்கே வந்திருந்த உங்களுடைய சொந்த ஜனங்களெல்லோரும் கோகிலாவைப பற்றி முற்றிலும் தப்பான அபிப்பிராயத்தோடல்லவா திரும்பிப் போயிருக்கிறார்கள். என் தமயனார் கூட அவர்களுடன் போய் விட்டதைப் பார்த்தால் அவரும் மற்றவரைப் போலத் தப்பான அபிப்பிராயம் கொண் டிருக்கிறாரென்றல்லவா தோன்றுகிறது. நீங்கள் இருவரும் ஜனங்

களுக்கு முன்பு வாயை மூடிக்கொண்டு பேசாமலிருந்தது சரியல்ல. இப்போது என்னிடம் சொன்ன வரலாறு முழுதையும் நீங்கள் எல்லோருக்கும் முன்னால் தெரிவித்திருந்தால், அவர்களுடைய தப்பபிப்பிராயம் நீங்கிப் போயிருக்குமே. நல்ல சமயத்தில் பேசாமல் இருந்து விட்டீர்களே!" என்றாள்.

பூஞ்சோலையம்மாள் சிறிதுநேரம் மௌனமா யிருந்தபின், "அம்மா! வேளைப் பிசகுக்குத் தகுந்தபடி மனிதருக்கு சமயத்தில் நல்ல யோசனையும் படுகிறதில்லை. இன்று காலையிலிருந்தே நாங்கள் புத்திக் குறைவான காரியங்களைச் செய்ய நேர்ந்துவிட்டது. சிறைச்சாலையில் இருக்கிறவர் கோகிலாவை வரும்படி அழைத்தா ரல்லவா. அவர் அழைத்திருந்தாலும், அவளை அனுப்புவது யுக்தமான காரியமல்ல வென்பது என் புத்தியில் பட்டிருக்க வேண்டும். அவளை இங்கேயே வைத்துவிட்டு நான் போயிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால், போலீஸ் இன்ஸ்பெக்டருடைய எண்ணத்திலும் மண் விழுந்து போயிருக்கும். எங்களுக்கும் இப்படிப்பட்ட பெரிய அவமானம் நேரிட்டிருக்காது. காணிச் சோம்பல் கோடிக் கேடு என்று சொல்லுவார்கள். அது போல ஓர் அற்ப விஷயத்தில் நாம் எச்சரிக்கைக் குறைவாக நடந்துவிட்டால், அது பெருத்த அனர்த்தத்தில் போய் முடிகிறது. இன்று காலையில இவளை அனுப்பியது பெரிய தவறு. அதன் பிறகு, இன்ன சொந்தக்காரருடைய வீட்டுக்கு இவள் போனாளென்று பொய்யாக ஒருத்தருடைய பெயரைக் குறித்தது இரண்டாவது பெருத்த தவறு. இந்த இரண்டு விஷயங்களில் நானும் சரி, கோகிலாவும் சரி, இருவரும் குற்றவாளிகளே. அதற்குத் தகுந்தபடி கடுமையான தண்டனை எங்கள் இருவருக்கும் கிடைத்து விட்டது. நான் சொன்னது போலவே, கோகிலாம்பாளும் வேறொரு சொந்தக்காரருடைய பெயரைச் சொல்லி விட்டாள். அவர்களிருவரும் நேரில் வந்து விட்டார்கள் 'ஐயோ நாம் இப்பேர்ப்பட்ட பொய்யைச் சொல்லி விட்டோமே என்கிற திகிலே எங்களுடைய உயிரில் பெரும் பாகத்தையும் வாங்கி விட்டதன்றி, நாங்கள் வாயைத் திறந்து பேசவும் மாட்டாதபடி எங்களைக் கோழைக ளாக்கிவிட்டது அதனால்தான் நாங்கள் மற்ற வரலாறுகளைச் சொல்லக் கூடாமல் போய்விட்டது. எப்போதும் தன் வினை தன்னைச் சுடுமல்லவா. அது இப்போது எங்கள் விஷயத்தில் நிஜமாக முடிந்தது. இனி என்ன செய்கிறது.

வெள்ளம் தலைக்குமேல் போய் விட்டது. எங்களுக்கு எவ்வளவு அதிகமான அவமானமும் இழிவும் ஏற்படக் கூடுமோ அவ்வளவும் ஏற்பட்டு விட்டன இனி நாங்கள் எங்களுடைய சொந்த ஜனங்களுடைய முகத்தில் விழிப்பதற்கே வகை இல்லாமல் போய்விட்டது'' என்றாள்.

உடனே புஷ்பாவதி நிரம்பவும் பரிவாகவும் அநுதாபத்தோடும் மறுமொழி கூறத்தொடங்கி "ஏனம்மா அப்படிச் சொல்லுகிறீர்கள்! நீங்கள் என்ன அப்படிப்பட்ட தலைபோகிற குற்றத்தைச் செய்து விட்டது. ஒன்று மில்லையே உண்மையில் நடந்த சங்கதியை தக்க சமயத்தில் எடுத்துச் சொல்லத் தவறிப் போய் விட்டீர்கள். அதைத்தான் உங்கள் குற்றமாகச் சொல்ல வேண்டும். மற்றபடி நீங்கள் என்ன செய்துவிட்டீர்கள். திருடிவிட்டீர்களா கொலை செய்து விட்டீர்களா, அல்லது, செய்யத்தகாத வேறு காரியத்தைச் செய்துவிட்டீர்களா! நீங்கள் ஏதோ பெருத்த தவறைச் செய்து விட்டதாக ஒரு பொய்த் தோற்றம் ஏற்பட்டுப் போய் விட்டதே தவிர வேறொன்றுமில்லை'' என்றாள்.

பூஞ்சோலையம்மாள், "ஆமம்மா! அதுபொய்த் தோற்றமென்பது உங்களுக்கு மாத்திரந்தானே தெரியும் மற்ற ஜனங்களெல்லோரும் அதை நிஜமென்றுதானே நம்பிக்கொண்டிருக்கிறார்கள்'' என்றாள்.

புஷ்பாவதி, "இப்பொழுதுதான் என்ன மோசம் முழுகிப் போய்விட்டது. நாளைய தினம் காலையில் உங்களுடைய நெருங்கிய பந்து யாரையாவது வரவழைத்து அவரிடம் விஷயங்களை யெல்லாம வெளியிட்டு, இப்போது இங்கே வந்து விட்டுப் போன ஒவ்வொருவருடைய வீட்டுக்கும் அவர் போய் உண்மையான வரலாற்றைச் சொல்வதோடு, அதை நீங்கள் இன்ன காரணத்தினால் இப்போது வெளியிடவில்லை என்பதையும் தெரிவித்துவிட்டு வரும்படி செய்துவிட்டால் எல்லாம்சரியாய்ப்போகிறது. யாரும் அதைப்பற்றி சம்சயம் கொள்ளமாட்டார்கள்'' என்றாள்.

பூஞ்சோலையம்மாள் சிறிது நேரம் ஆழ்ந்து சிந்தனை செய்த பின், "ஆம், நீங்கள் சொல்வது நல்ல காரியமென்றுதான் படுகிறது. ஆனால் இன்னொரு விஷய மிருக்கிறதல்லவா இந்தக் கலியாணம் நிறைவேறா திருக்கையில், அந்த மனிதர் அவ்வளவு தூரம் உரிமை

பாராட்டிக் கோகிலாவுக்குக் கடிதம் எழுதியதும், அதற்கிணங்க, நான் இவளை தனிமையில் அனுப்பியதும் முற்றிலும் தப்பான செய்கைகள் தானே. அதை நாம் எப்படி மறுக்க முடியும். அதைப் பற்றி எங்கள் மனிதருக்கு எங்கள்மேல் அருவருப்பும் இழிவான அபிப்பிராயமும் இல்லாமல் போகுமா?'' என்றாள்.

புஷ்பாவதி, ''உங்கள் பேரில் உங்கள் ஜனங்கள் எவ்வித கெட்ட அபிப்பிராயமும் கொள்ளாமல், முற்றிலும் நல்ல அபிப்பிராயத்தையே கொண்டு விடுவார்களென்று நான் சொல்லவில்லை. இப்போது எல்லோருடைய மனசிலும் மகா விபரீதமான சம்சயம் ஏற்பட்டுப் போயிருக்கிறது. அதாவது நம்முடைய கோகிலா தானே சம்மதித்து ஏதோ துன்மார்க்கமான கருத்தோடு இன்ஸ்பெக்டருடைய வீட்டிற்குப்போய் வந்திருக்க வேண்டுமென்ற தப்பபிப்பிராயம் இப்போது ஏற்பட்டிருப்பது சகஜமே. அது எவ்வளவு பெரிய தீங்கு சிறைச்சாலையில் இருப்பவர் கடிதம் எழுதியதும், அதன்படி கோகிலாம்பாள் அவரிடம் போனாளென்பதும், அவ்வளவு பெரிய குற்றமாகுமா? எப்படியும் கோகிலா அவரையே கட்டிக்கொள்ளப் போகிறாள் என்ற நிச்சயம் ஏற்பட்டிருக்கிறது கலியாணச் சடங்கு முடிவதற்குள் மாப்பிள்ளையும், பெண்ணும் அன்னியோன்யமாய் ஒருவரோடொருவர் பழகிவிட்டார்கள் என்ற ஓர் ஏச்சைத் தவிர மற்ற கெடுதல் எதுவும் ஏற்படாது. அந்த விபரீதமான பெரிய அவதூறுக்கும் இந்தச் சிறிய ஏச்சுக்கும் வித்தியாச முண்டல்லவா'' என்றாள்.

அதைக் கேட்ட கோகிலாம்பாள், ''நீங்கள் சொல்வது சரியான யோசனைதான். ஆனாலும் அதில் இன்னொரு விஷயமிருக்கிறது. இன்ஸ்பெக்டரால் எனக்கு ஏற்பட்ட விபத்தைப் பற்றிய வரலாற்றை நாங்கள் இப்போதே வெளியிட்டிருந்தால், அது உண்மையாகப் பட்டிருக்கும். ஓர் இரவு கழித்து நாளையதினம் போய் அதைச் சொன்னால், நாங்கள் ஏதோ பொய்யான சமாதானம் சொல்வதாகவும் ஜனங்கள் எண்ணலா மல்லவா'' என்றாள்.

புஷ்பாவதி, ''எல்லோருமே அப்படி எண்ணி விடுவார்களா. கபடிகளா யிருக்கும் இரண்டொருவர் அந்த மாதிரியான சந்தேகத்தைக் கொள்ளலாம். பெரும்பாலோர் அதை உண்மை யென்றே ஏற்றுக் கொள்வார்கள் அந்தக் கபடிகளும் அதற்குமுன் நிச்சயமாக

எண்ணியிருந்த விஷயம் சந்தேகத்துக்கு மாறிவிடு மல்லவா. ஆகை யால், அதுவும் ஒரு விததத்தில் அநுகூலந்தானே'' என்றாள்.

அதைக்கேட்ட கோகிலாம்பாள் மறுமொழி கூறாமல் மௌனத்தில் ஆழ்ந்து விட்டாள். பூஞ்சோலையம்மாள் உடனே பேசத் தொடங்கி "சரி; இன்னம் இரவு முழுதும் எல்லோரும் யோசனை செய்வோம். காலையில் ஏதாவது தக்க பரிகாரம் தேடுவோம்'' என்று கூறினாள்.

அதைக் கேட்ட புஷ்பாவதி, "சரி; அப்படியே ஆகட்டும் இப் போது மணி ஒன்பதுக்கு மேலிருக்கலாம் போலிருக்கிறது. வாருங் கள் போகலாம். நீங்கள் இருவரும் இன்று முழுதும் எங்கெங்கோ போய் அவஸ்தைப் பட்டுவிட்டு வந்திருக்கிறீர்கள் உள்ளே போய் இராத்திரி போஜனத்தை முடித்துக் கொண்டு படுத்துக் கொள் ளுங்கள். பொழுது விடியட்டும். அதன் பிறகு யோசனை செய்ய லாம்'' என்றாள்.

உடனே பூஞ்சோலை யம்மாள், "ஆம். வாருங்கள் போவோம். எனக்கு இந்த மனவேதனையில் பசியே உண்டாகவில்லை விருந் தாளியாக வந்திருக்கும் உங்களைக்கூடநான் இதுவரையில் விசாரிக்க முடியாமல் போய்விட்டது. வேலைக்காரிகள் உங்களுக்கு தாகத்திற் குக்கூடக் கொடுத்திருக்கமாட்டார்கள் போலிருக்கிறது. சரி; வாருங் கள் சமயலறைக்குப் போவோம்'' என்றாள்.

உடனே கோகிலாம்பாள், தனது தாயை நோக்கி, "அம்மா! நான் இராத்திரி சாப்பாட்டை இவர்களுடைய பங்களாவிலேயே முடித்துக் கொண்டு வந்து விட்டேன். எனக்கு இப்போது உடம்பு நிரம்பவும் அவஸ்தையாக இருக்கிறது. நான் போய்ப் படுத்துக் கொள்ளுகிறேன். நீங்கள் இவர்களை அழைத்துக் கொண்டு போய் சாப்பாடு செய்து வையுங்கள்'' என்று கூறி அநுமதி பெற்றுக் கொண்டு தனது சயன அறைக்குப் போய் விட்டாள்.

புஷ்பாவதியும் பூஞ்சோலையம்மாளும் சமயலறையை நோக்கிச் சென்றனர். அவர்களிருவரையும் விடுத்து, நாம் கோகிலாம்பாளைத் தொடர்ந்து செல்வோம். அந்த நற்குணவதி தான் சயனித்துக் கொள்ளப் போவதாகக் கூறிவிட்டுத் தனது விடுதிக்குச் சென்று அவ்விடத்திலிருந்த மஞ்சத்தின் மீது உட்கார்ந்து சாய்ந்து கொண்

டாளானாலும், தான் சயனித்துத் தூங்க வேண்டு மென்ற எண்ணத் தையே அவள் கொள்ளவில்லை. பெரிய மனிதர்களான தனது சொந்த ஜனங்களெல்லோருக்கும்முன்னால், தான் போலீஸ் இன்ஸ் பெக்டரிடம் துன்மார்க்கமான சம்பந்தம் வைத்துக் கொண்டிருப்ப தாய் ருஜா ஏற்பட்டுப் போனதை யெண்ணி யெண்ணி அந்த மடந் தையின் மனம் சகிக்க வொண்ணாத அபாரமான அவமானமும் வெட்கமும் அடைந்து சோர்ந்து தளர்ந்து ஓய்ந்து உட்கார்ந்து போய் விட்டது. அவளது தேகம் குன்றிச் செயலற்று வீழ்ந்து போயிற்று. அபாரமான துக்கமும் அழுகையும் ஊற்றெடுத்துப் பொங்கி யெழுந்தன. அவள் தனது கைகளிரண்டையும் வைத் துத் தனது முகத்தை மறைத்துக் கொண்டு கண்ணீர் சொரிந்து தேம்பித் தேம்பி அழத் தொடங்கித் தன்னையும் உலகையும் முற்றி லும் மறந்து விசனக் கடலில் மூழ்கி நைந்துருகிய வண்ணம் அலங் கோலமாக கட்டிலில் இரண்டொரு நாழிகை காலம் சாய்ந்து கிடந் தாள். அவளது மனத்தில் பலவகைப்பட்ட எண்ணங்கள் தோன்ற வாரம்பித்தன. "அடாடா! என்ன என்னுடைய ஜாதக விசேஷம்! இப்படிப்பட்ட அபாண்டமான அவதூறுக்கும் மானபங்கத்துக்கும் ஆளாகவா நான் பெண் பிறந்தேன். ஐயா தெய்வமே! நான் மன சாலும் கெட்ட காரியத்தை எண்ணா திருக்கையில், பெருத்த இடி போன்ற இந்தப் பொல்லாங்கு வந்து சம்பவித்து விட்டதே! இனி நாளைய தினம் ஆளை அனுப்பி எவ்விதமான சமாதானம் சொன்னா லும், இந்தக் களங்கம் இனி மறையவா போகிறது! இன்ஸ்பெக்ட ருடைய விஷயத்தில நாங்கள் சொல்லி யனுப்பும் சமாதானத்தை ஜனங்கள் ஒருவேளை ஒப்புக்கொண்டாலும், இவர் எனக்குக் கடித மெழுதியதும், அதற்கிணங்கி நான் போனதும் அசாதாரணமான விஷயங்களாதலால், அதுபற்றியாகிலும், ஜனங்கள் என்னைக் குறித்து இழிவான அபிப்பிராயங் கொண்டு இளக்காரமாகவும் தூஷணையாகவும் பேசுவது நிச்சயமான விஷயம்! ஆகா! நான் என்ன காரியம் செய்துவிட்டேன்! எவ்வளவுதான் நான் அவரிடம் ஆசை வைத்திருந்தாலும், அவருக்கு எவ்விதமான துன்பம் நேருவ தாக இருந்தாலும், ஜனங்களால் ஏற்படுத்தப்பட்ட ஒழுங்கான மார்க்கத்தை மீறித் தவறான வழியில் சென்றதனாலல்லவா, இத்தனை யும் வந்து விளைந்திருக்கின்றன. நான் செய்த பெருந் தவறுக்கு இந்த தண்டனை நியாயமானதாகவே இருக்கிறது. ஜனங்களை யாவது, கால வித்தியாசத்தையாவது நோவது மூடத்தனமேயன்றி

வேறல்ல. நிச்சலனமாக இருக்கும் ஒரு குளத்தின் நடுவில் ஒரு சிறிய பருக்கைக் கல்லைப்போட்டாலும், அதனால் ஒன்றன்பின்னாகப் படிப்படியாய் அலைகள் எழுந்தெழுந்து வந்து கரையின்மேல்போய் மோதித் திரும்புவதுபோல, நாம் செய்யும் அற்பத் தவறு ஒன்றன்மேலொன்றாகத் தோன்றும் பல இடர்களையும், துன்பங்களையும், துயரத்தையும் தொடர்ச்சியாக நமது ஆயிசுகாலம் முடிய உண்டாக்கி, நம்மை ஒழியாவேதனைக்கும் ஓயாத சஞ்சலத்திற்கும் ஆளாக்கும் என்பதும், ஒருவிதமான சிறிய காரணம், பலவிதமான வெவ்வேறு காரியங்களாக மாறி பாதிக்கின்றனவென்பதும் பிரத்தியக்ஷமான விஷயம், ஆதலால் இப்போது எனக்கு ஏற்படும் பெரிய அவதூறு என் ஆயிசுகாலம் முடிய நீடித்து நிற்பதோடு அதற்குப் பிறகும் இந்தக் குடும்பத்தைப் பாதித்தே தீரும். இதைக் கருதித்தான், மானம் கெடவரின் வாழாமை முன்னினிதே என்று முன்னோர் இதற்கு ஒரு சிறந்த பரிகாரம் சொல்லியிருக்கின்றனர். என் பிராணபதியின் தாயார் தற்கொலை செய்துகொள்ளப் போவதாகக் கடிதம் எழுதி வைத்துவிட்டுப் போனதைக் கண்டு நான் அந்த அம்மாளின்மேல் ஆயாசம் கொண்டேனே. அவர்கள் செய்யத் தீர்மானித்துக்கொண்ட காரியம் நியாயமானதென்றே இப்போது நினைக்கவேண்டி இருக்கிறது. எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் மானபங்கத்தைக்காட்டிலும், அவர்களுக்கு ஏற்பட்டது ஆயிரமடங்கு அதிகமானதென்றே சொல்லவேண்டும். தக்க பெரிய இடத்தில் தமது குமாரருக்குக் கலியாணம் செய்யத் தீர்மானித்து நிச்சயதார்த்தம் நடத்துகையில் ஆயிரக்கணக்கான கனதனவான்களின் முன்னிலையில் திருட்டுக் குற்றத்தின்மேல் அவரது புத்திரரைக் கைதி செய்தது அற்ப சொற்பமான விஷயமா? அதை யார்தான் சகித்துக்கொண்டு உயிரோடிருப்பார்கள். போதாக்குறைக்கு, அந்த அம்மாளே ஒரு குடிகாரத் துருக்கனுக்கு ஆசை நாயகியாயிருந்தாளென்பதான அவதூறு ஏற்பட்டதே. அதைக் கேட்டவுடனேயே அவர்களுடைய பிராணன் போயிருக்கவேண்டும்; தப்பி நின்றது அரிய சம்பவமென்றே எண்ணவேண்டும். தமது குமாரரின் மேல் அவருக்கு இருக்கும் அபாரமான வாஞ்சையினாலும், தாம் சிறிதும் தவறு செய்யவில்லையென்ற மனோதிட்டத்தினாலுமே, அவர்களுடைய உயிர் போவது தடைப்பட்டிருக்கவேண்டும். ஆகவே, அவர்கள் தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்தது நியாயமான காரியமாகவே தோன்றுகிறது. இப்போது இன்ஸ்

பெக்டர் சம்பந்தமாக எனக்கு ஏற்பட்டிருப்பது எப்படி அபாண்டமான அவதூறோ, அதுபோலவே, அவர்கள்மீது ஏற்பட்டதும் அபாண்டமாகத்தான் இருக்கும். ஆயினும், முறிந்துபோன பால் மறுபடி ஒரு பொழுதும் பழைய நிலைமைக்கு வாராததுபோல ஜனங்களின் மனதில் ஏற்பட்ட சம்சயம் சுத்தமாக மாறப் போகிறதுமில்லை. நிஷ்களங்கமான பழைய மதிப்பும் பெருமையும் தூய்மையும் உண்டாகப் போகிறதில்லையென்பதைக் கருதியே அவர்கள் தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்திருக்கிறார்கள். அவர்கள் அபாரமான உலக அநுபவமும், விவேக முதிர்ச்சியும் உடையவர்கள். எல்லாவற்றையும் சீர்தூக்கியே அவர்கள் இந்தத் தீர்மானத்திற்கு வந்திருக்க வேண்டுமென்பது நிச்சயம். ஆகவே நானும், எனக்கு ஏற்பட்டிருக்கும் மானபங்கத்தைப் போக்கிக்கொள்வதற்கும், இது என் குடும்பத்தாரை பாதிக்காமல் என்னோடு மட்டும் ஒழிந்து போவதற்கும் சாதனமாக நான் என் உயிரை விட்டு விடுவதே உசிதமான காரியம். நான் தவறான காரியம் எதையும் செய்யவில்லையென்று ஆள்மூலமாய்ச் செய்தி சொல்லியனுப்பியும், வேறு வகையில் ருஜுப்படுத்தியும், ஜனங்களுடைய கெட்ட அபிப்பிராயத்தை மாற்ற முயலுவதைவிட நான் உயிரை விட்டு அதன் மூலமாய் நான் நிரபராதி என்று உலகத்தாருக்கு மெய்ப்பிப்பதே சுலபமானதும், உடனே கைமேல் பலனளிக்கத் தக்கதுமான காரியம்; அதைத்தான் நான் இப்போது செய்ய வேண்டும். நம்முடைய பூஞ்சோலைக்குள் ஏராளமான பெரிய கிணறுகள் இருக்கின்றன. எதிலாகிலும் ஒன்றிற்குள் விழுந்து நான் உயிரை விட்டு விடுகிறேன். ஊழ்வினையினால் உண்டாகும் துன்பங்களையும், துயரத்தையும், மானக்கேட்டையும், நம்முடைய புத்தி சாலித்தனத்தினாலும், முயற்சியினாலும் வெல்ல வேண்டுமென்பது உலக நீதியானாலும், என் விஷயத்திலும், என் புருஷர், மாமியார் முதலியோர் விஷயத்திலும் ஏற்பட்டுள்ள ஊழ்வினைத் துன்பங்கள் மகா விபரீதமானவைகளாய் இருக்கின்றனவாதலால், இவைகளுக்கெல்லாம் சத்தியாக்கிரகமே மருந்து, இத்தனை இடர்களையும் நாம் எதிர்த்து நின்றுவது உயிர்வாழ ஆசைப்படுவதைவிட அவற்றை ஏற்றுக்கொண்டு உயிரை விட்டு விடுவதே சத்தியாக்கிரகம். உயிரோடு கூடவே எல்லா அல்லல்களும் தொலைந்துபோம்'' என்று கோகிலாம்பாள் தனக்குள்ளாகவே எண்ணமிட்டுக் கிணற்றில் விழுந்து தனது உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டுமென்ற தீர்

மானத்திற்கு வந்தவளாய், அதற்குப் பூர்வ பீடிகையாய் காகிதம், எழுதுகோல் முதலியவற்றை எடுத்துத் தனது தாய்க்கு ஒரு கடிதம் எழுதத் துவக்கினாள். அவ்வாறு எழுதும்பொழுது சகிக்கவொண்ணாத மனவெழுச்சியும் வாஞ்சை முதலிய உணர்ச்சிகளும் பொங்கியெழுந்து அந்த மடந்தை எழுதிய கையை நடுக்குவித்தன. அடிக்கடி கண்ணீர்த் துளிகள் அவள் எழுதிய கடிதத்தின் மேல் விழுந்தன. தான் இறந்து போனதைக் கண்டு தனது நற்குணத்தால் சிறிதும் பொறாமல் அலறிப் புலம்பி அழுது தனது உயிரையும் விட்டு விடுவாளோ என்ற எண்ணம் தோன்றி அந்தப் பெண்மணியின் மனத்தை முற்றிலும் வதைத்து வாட்டியதானாலும், அந்த மாது சிரோன்மணி தனது மனவுறுதியில் தளர்வுறாமல் கடிதத்தை எழுதி முடித்து அதை உறைக்குள் போட்டு ஒட்டித் தனது மேஜைக்குள் வைத்தபின் சரேலென்று எழுந்து அவ்விடத்தை விட்டு வெளிப்பட்டாள்.

அப்பொழுது இரவு பத்துமணி சமயமாயிருக்கலாம் எங்கும் இருளும் நிச்சப்தமும் குடிகொண்டிருந்தன. பகல் முழுதும் கோகிலாம்பாளும் அவளைத் தேடிச்சென்ற பூஞ்சோலையம்மாளும் திரும்பி வாராமையால் ஏற்பட்ட கவலையினாலும், சஞ்சலத்தினாலும், அதன் பிறகு சொந்த ஜனங்களை அழைத்து வரப் பல தெருக்களுக்கும் ஓடிப்போய்த் திரும்பி வந்த அலுப்பினாலும், பின்னர் சொந்த ஜனங்களுக்கெதிரில் வெளியான விபரீதச் செய்திகளைக் கேட்டதனால் ஏற்பட்ட கலவரத்தினாலும், தங்கள் எஜமானிமார்களுக்கு அன்றையதினம் உண்டான மான பங்கத்தை யுணர்ந்ததனால் ஏற்பட்ட அவமானத்தினாலும் வேலைக்காரர்கள் எல்லோரும் மிகுந்த கலக்கமும் விசனமும் தளர்ச்சியும் அடைந்து சோர்ந்து போய்த் தங்களது இராப்போஜனத்தைக்கூட நினையாமல் மறைவான இடங்களில் படுத்து அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். உள்புறத்தில் கதவுகள் மூடப்படாமல் திறந்தபடியே விடப்பட்டிருந்தன. சில இடங்களில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. சில இடங்கள் இருளடைந்திருந்தன. அந்த நிலைமையில் நமது கோகிலாம்பாள் தனது விடுதியை விட்டு வெளிப்பட்டு சந்தடி செய்யாமல் மெல்ல மெல்ல நடந்து பல கூடங்களையும் தாழ்வாரங்களையும் கடந்து சென்று பூஞ்சோலைக்குள் நுழையலானாள். தான் செல்வதை எவரேனும் காண்கிறார்களோ வென்ற அச்சத்தினால், அந்த மடக்கொடி தயங்கித் தயங்கி நின்று திரும்பித் திரும்பி

நாற்புறங்களையும் பார்த்த வண்ணம் சித்தப் பிரமை கொண்டவள் போன்ற தோற்றத்தோடு எதிரிலிருந்த தென்னஞ் சோலைக்குள் புகுந்து அப்பால் சென்றாள். அவளது தேகம் வெளிப் பார்வைக்கு அயர்ந்து செயலற்று காற்றில் பறக்கும் சருகுபோலச் சீவனற்றுத் தோன்றியதாயினும் அவளது மனத்தில் அகோரமான வலிய மல்ல யுத்தம் நடந்து கொண்டிருந்தது. தோட்டத்தில் சிறிது தூரம் நடந்த சமயத்தில் அவளது கண்கள் தாமாகவே பின் பக்கம் திரும் பித் திரும்பி ஆசையோடு தங்கள் கட்டிடத்தைப் பார்த்தன. அவள் "ஐயோ! நான் பிறந்து வளர்ந்து ஓடி விளையாடி இந்தப் பதினாறு வருஷ காலம் இருந்து வந்த ரமணீயமான இந்த பங்களாவை நான் பார்ப்பது இதுவே கடைசி முறையல்லவா! இனி மறுபடி நான் இந்த வைபவங்களை யெல்லாம் காணப் போகிறேனா!" என்று, தனக்குத் தானே எண்ணமிட்டுக் கண்ணீர் விடுத்து நைந்திளகி உருகிய வண்ணம் மேலும் நடந்தாள். நடக்கவே, அவளது தாயான பூஞ்சோலையம்மாள் தனது சுந்தரமான இனிய வதனத் தோடு எதிரே வந்து நின்று, "கோகிலா! கண்ணூ! நான் உன்னை விட்டுப் பிரிந்து ஒரு நிமிஷமும் உயிர் வாழ்ந்திருக்க சகியேன். அம்மா! நீ இந்தக் காரியத்தைச் செய்யாதே! நீயும், நானும் இறந்து போய்விட்டால், ஒன்றையு மறியாத பேதையான நம்முடைய சௌந்தரவல்லி அநாதரவாக இருந்து தவிக்க நேரும் அந்தப் பாவம் நம்மைத்தான் சேரும் வேண்டாம் என் தங்கமே! வீட்டுக்கு வந்து விடு" என்று கூறித் தனது மோவாயைப் பிடித்துக் கொண்டு கெஞ்சி நயந்து நிரம்பவும் வேண்டிக் கொண்டது போல, மானஸீகமான ஒரு தோற்றம் அந்த மடவன்னத்திற்கு ஏற்பட்டது. உண்மையிலேயே தனது தாய் அங்கே வந்திருக்கிறாளோ என்று நினைத்து அஞ்சி நடுங்கிய வண்ணம் அவள் திரும்பித் திரும்பி நாற்புறங்களிலும் உற்று நோக்கி, அது வெறும் பிரமையே யன்றி உண்மையான தல்ல வென்று தீர்மானித்துக் கொண்டாள். ஆயினும் பூஞ்சோலையம்மாளது கனிந்த வசீகரமான முகம் கோகிலாம்பாளின் அகக் கண்ணை விட்டகலாமல் எதிரில் தோன்றிக் கொண்டே இருந்தமையால், கோகிலாம்பாளது மன இளக்கமும் கலவரமும் அதிகரித்துப் போயின. அவள், "ஐயோ! நான் என் அறையை விட்டுப் புறப்பட்டு வந்த போது, அப்படியே அம்மாளுடைய படுக்கை யறைக்குப் போய், அவர்களுடைய முகத்தை ஒரு தடவை பார்த்து விட்டு வராமல் போனேனே! எப்போதும் ஒரே

மாதிரியான வாஞ்சையோடு குழந்தை குழந்தை என்று அல்லும் பகலும் அநவரதமும் மாறாத பிரியத்தோடு கூப்பிட்டு என்னை உயிருக் குயிராய் மதித்து வரும் என் ஆருயிர்த் தாயின் இன்பகரமான வடிவத்தை இந்தக் கண்கள் இனி காணப் போகின்றனவா! அவர்களைக் காண்பதனால், என் மனம் அடையும் இன்பத்தை இனி நான் அநுபவிக்கப் போகிறேனா? நான் இப்போதாவது திரும்பிப் போய் அவர்களுடைய முகத்தைப் பார்த்துவிட்டு வரலாமென்றால், அப்படிச் செய்தால், அதனால் என் மன உறுதி தளர்வடைந்து போய்விடுமோ என்ற நினைவுண்டாகிறது. அல்லது, அம்மாளாவது மற்றவராவது விழித்துக்கொண் டிருந்தால், அவர்களுக்கு நான் சமாதானம் சொல்ல நேருமோ, அல்லது, என்னுடைய எண்ணம் நிறைவேறாமல் அவர்கள் தடுத்து விடுவார்களோ என்னவோ! ஐயோ! என் தங்கை சௌந்தரவல்லியைக்கூட நான் பார்க்காமல் வந்து விட்டேனே! ஆ! என்ன காலம் வந்துவிட்டது! என்ன மானபங்கம் ஏற்பட்டுவிட்டது! உயிருக் குயிரான மனிதர்களை விட்டு ஒரே விரக்தியும் மன வுறுதியும் கொண்டு உயிரை விட வேண்டிய மகா கஷ்டமான நிலைமை ஏற்பட்டு விட்டதே!'' என்று எண்ணமிட்டு தனக்குத்தானே ஆட்சேபனை சமாதானங்கள் செய்து கொண்டு தென்னந் தோப்பைக் கடந்து கமுகு மரங்களும் பூஞ்செடிகளும் அடர்ந்திருந்த பாகத்திற்குள் நுழைந்து சிறிது தூரத்திற் கப்பாலிருந்த பெரிய கிணற்றை நோக்கி நடந்தாள். அந்த இடத்தை யடுத்தாற்போல இருந்த மணல் நிறைந்த வாவியின் கரையிலேதான் முன்னொரு நாள் கண்ணபிரானுடன் அந்த அணங்கும் தனித்திருந்து சம்பாஷித்ததாதலால், அந்த நினைவு மின்னல் மின்னுவதுபோல அவளது மனத்தில் விரைவாகத் தோன்றியது. தோன்றவே, ''ஐயோ! என் பிராண காந்தருக்கும் எனக்கும் ஏற்பட்ட சம்பந்தம் கடைசியில் கிஞ்சிப் போகமாகவல்லவா முடிந்து போய்விட்டது அவருக்கும் எனக்கும் ஏதாவது சம்பந்தம் ஏற்பட்டால், அதற்குமுன் அபசகுனமாக ஏதேனும் கெடுதல் நேர்ந்துகொண்டே வந்தது ஆதியிலிருந்து என் மனத்தில் உறுத்திக்கொண்டே இருந்தது. அதன் கருத்து இப்போதுதான் தெளிவாக விளங்குகிறது. நான் இப்படி அற்பாயிசாய் மாண்டு போய்விடுவே னென்பதையும், அவரை நான் கட்டிக் கொள்ள வேண்டுமென்னும் ஏற்பாடு ஒருநாளும் நிறைவேறப் போகிறதில்லை என்பதையும் ருசிப்பிக்கும் அறிகுறிகளே அவைகள்

என்பது இப்போது நன்ருய்த் தெரிகிறது! முதன் முதலில் நானும் என் தங்கையும் கடற்கரை ரஸ்தாவில் வந்துகொண்டிருந்த காலத்தில், அவரது காற்று வாடை எங்கள் வண்டியில் வீசியது தான் தாமதம். உடனே வண்டிக்கும், குதிரைக்கும், எங்களுக்கும் பெருத்த பிராணுபாயம் வந்து நேரிட்டு விட்டது. பிறகு நான் இந்த இடத்தில் வந்து தனியாக உட்கார்ந்து ஊஞ்சலாடிக்கொண்டிருக்கையில் இங்கே அவர் வர, அவரது காற்று வாடை வீசிய படியால், நாகப்பாம்பிஞல் எனக்கு அபாயம் நேரத்தக்க மகா பயங்கரமான நிலைமை ஏற்பட்டுப் போயிற்று. அதுமட்டுமா? முதன் முதலாக அவருடைய உடம்பு என்மீது பட்டதுதான் தாமதம் என் தங்கை திடீரென்று வந்து சேர்ந்தாள், என் கற்பை நான் அறவே இழந்துவிட்டேன் என்று அவள் தப்பான எண்ணங் கொண்டு என்னை இளக்காரப்படுத்தி நிரம்பவும் இழிவான வார்த்தைகளால் என்னைத் தூற்றும்படியான நிலைமை ஏற்பட்டது. பிறகு சகல ஜனங்களுக்கும் எதிரில் மந்திரச் சடங்குகள் மூலமாய் என்னை அவருக்கு உரியவளாக்க நிச்சயதார்த்தம் நடந்த காலத்தில், மகா விபரீதமான சம்பவங்கள் நேர்ந்து முதலில் அவரையும், பிறகு அவரது தாயையும் பிரித்துக்கொண்டு போய்விட்டன. அதுவும் போதாதென்று, நான் அவருடைய கடிதத்தைக் கண்டு அவரைப் பார்க்கப் போனதிலிருந்து எத்தனை தீமைகளும், என்றைக்கும் அழியாத மானக்கேடும், முடிவில் என் தலைக்குச் சேட்டும் வந்து நேரிட்டு விட்டன. நடுவழியிலேயே போலீஸ்காரன் வழிமை மறித்து முருகேசனை இழுத்துக்கொண்டு போய்விட்டான். பிறகு நான் போலீஸ் இன்ஸ்பெக்டருடைய வீட்டில் மாட்டிக்கொண்டேன். அங்கிருந்து தந்திரமாக நான் தப்பித்து வெளியில் போனுல், என்னை அழைத்துப்போன காசாரி பிணியனுக்கு தேக அசௌக்கியமும் புத்தி மாருட்டமும் உண்டாகி விட்டன. அதன் பயனுக, வண்டி தெற்கே வெகுதூரம் போக, அவ்விடத்தில் நான் சிப்பாயிகளிடம் அகப்பட்டுக் கொள்ள நேர்ந்து விட்டது. அவையெல்லாவற்றிலும், சற்றுநேரத்திற்குமுன் சகலமான சொந்த ஜனங்களுக்கு முன்பு எனக்கு ஏற்பட்ட மானபங்கம் என் உயிரை வாங்கத் தக்கதாகிவிட்டது. அன்றைய தினமாவது என்முகம் அவரது முகத்தில் படும்படி நான் விட்டிருந்ததான சிறிய தவறுக்கு நான் இடங்கொடுத்துவிட்டேன். கண்டிப்பாகப் பார்த்தால் அப்போதே நான் என் கற்பை இழந்தவளாகிவிட்டேன். அது நல்ல வேளையாக

ஜனங்கள் வரையில் எட்டாமல் போய்விட்டது இப்போது, நான் அந்த இன்ஸ்பெக்டர் விஷயத்தில் அணுவளவுகூடத் தவமுன வழிக்கு இடங்கொடாமல் முற்றிலும் பரிசுத்தமாகவே திரும்பி வந்திருந்தாலும், ஜனங்களுடைய மனதத்தில், நான் அடியோடு கெட்டுப் போய்விட்டேன் என்ற அபிப்பிராய மல்லவா ஏற்பட்டு விட்டது படிப்படியாக அபாயங்கள் பெருகி முடிவில என் உயிருக்கே காலபாசம் வந்து சேரும்படி செய்துவிட்டனவலலவா ஆழ்ந்து யோசிக்க யோசிக்க, இதற்கு முன் நான் கொண்டிருந்த எண்ணம் தவமுனதெனத தெரிகிறது. அவரையும் என்னையும் சேர்தது வைக்கவே, அபாயங்க ளெல்லாம் நேர்ந்தன வென்றல்லவா இதற்குமுன் நான் எண்ணி அவைகளை ப்ற்றி வருந்தாமல் சந்தோஷமடைந்து கொண்டிருந்தேன். இப்போது பார்த்தால் எல்லாம் வேறுவிதமான அர்த்தத்தைத் தருகிறது. ரோஜா மல்லிகை முதலிய மலர்கள் புஷ்பிக்கும் சமயததில் புழுக்கள் சில வற்றில் புகுந்து, அவற்றை நாசமாக்கிச் சீர்குலைதது அடியோடு அழிகது விடுவதுபோல, என்னுடைய கற்பையும் சிறிதளவு சளங்கப் படுததி, எனக்கும், என் குடும்பததாருக்கும் என்றும விலகாதமான ஹானியையும் மதிப்புக் குறைவையும் உண்டாக்கி அடியோடு என் உயிரை வாங்குவதற்கு அவருடைய காற்று வாடையே காலகோடி விஷமாக ஏற்பட்டதுபோ லிருக்கிறது. குபேர சம்பத்தையும் அபரிமிதமான போக பாக்கியங்களையும் துறந்து நான் என் உயிரை விடவேண்டி யிருக்கிறதே என்பதைப் பற்றி நான் கொஞ்சமும் விசனப்பட வில்லை யானுலும், நான் என் கற்பை இழந்துவிட்டேன் என்ற தீராக் களங்கத்தையும், விபரீதமான அபவாதத்தையும் எனக்கும் என் குடும்பததாருக்கும உண்டாக்கி வைதது விட்டுப் போகிறேனே என்பதுதான் என்னுல் தாங்க முடியாத துயரமலையாக இருந்து இப்போதே என் உயிரில் பெரும் பாகததையும் குடிதது விட்டது. நான் செய்த பிழைக்கு பிராயச்சித்தமாக நான் என்னுடைய ஜீவ தசை முடிய அடையக்கூடிய இம்மைச் சுகம் யாவற்றையும் இழந்து, ஈசனுடைய பொன்னடியில் என்னையே நான் பலியாகக் கொடுதது விடுகிறேன். அப்போதாவது, கடவுள் என் களங்கத்தை விலக்கி, நான் கன்னி கழியாத பதிவிரதையாகவே இறந்தேன் என்பதை எங்கள் சொந்த ஜனங்கள் உணர்ந்து திருப்தி அடையும்படி செய்தருளுவா ரென்பதே என் உறுதியான நம்பிக்கை. இதோ கிணறு வந்துவிட்டது. அதற்குள்

இருக்கும் தண்ணீர் அசைவது வாவாவென்று என்னை அழைப்பது போலவே இருக்கிறது. மளமளவென்று போய் விழுந்து விடுகிறேன். இப்படிப்பட்ட காரியங்களையெல்லாம் உடனுக்குடன் சரேலென்று நிறைவேற்றி விடவேண்டும் இல்லாவிட்டால் ஏதாவது இடையூறு நேர்ந்துவிடும். அல்லது, என் மன உறுதியில் தளர்வு ஏற்பட்டாலும் ஏற்பட்டுவிடும். நான் வெற்றுடம்போடு விழுந்தால், என் உடம்பு உள்ளே ஆழ்ந்து போகாமல் மேலே மிதக்கும். மரணாவஸ்தைக் காலத்தில் கைகள் ஒருவேளை தாமாகவே பக்கத்திலிருக்கும் படியைப் பிடித்துக் கொள்ளும். அந்த இடையூறுக்கெல்லாம் இடம் கொடுக்காமல் செய்வதைத் திருந்தச் செய்துவிட வேண்டும். ஆகையால், இதோ கிடக்கும் கருங்கல்லை எடுத்து மடியில் இறுகக் கட்டிக்கொண்டு உள்ளே விழுந்து விடுகிறேன்" என்று கோகிலாம்பாள் தீர்மானித்துக் கொண்டவளாய் எதிரில் கிடந்த கருங்கல்லை எடுத்து மடியில் வைத்துத் தனது முன்றானையைத் தன் உடம்பில் இறுகச்சுற்றி முடிந்துகொண்டு கிணற்றின் கைப்பிடிச் சுவரின்மீது ஏறி நின்று, ஓரங்களில் நீண்டிருந்த படிகளில் தனது உடம்பு படாதிருக்குமாறு கிணற்றின் நடுப்பாகத்தைப் பார்த்துப் பொதேலென்று குதித்து விட்டாள்.

---

16-வது அதிகாரம்

## காக்கை உட்காரப் பனம்பழம் வீழ்ந்தது

இனி நாம் நமது அருங்குண நண்பர்களான குஞ்சிதபாத முதலியாரையும், திவான் சாமியாரையும் கவனிப்போம். தஞ்சை கலெக்டர் தங்கமணி நாடார் விசாரணை நடத்தி, அதன் விவரங்களையும், தமது அபிப்பிராயத்தையும், சிபார்சையும் சென்னை கவர்னருக்கு எழுதியனுப்பியதன்மேல், அவரால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவின் நகல்களும், திவான் சாமியாரால் தயாரிக்கப்பட்ட விளம்பரமும் இந்தியா முழுதிலுமுள்ள ஒவ்வோர் ஊருக்கும் அனுப்பப்பட்ட விஷயம் முன்னரே கூறப்பட்டதல்லவா அதன்பிறகு அவர்கள் சுமார் ஒரு மாதகாலம் வரையில் பொறுத்துப் பார்த்தனர். கிழவரது இளைய சம்சாரத்தைப் பற்றிய செய்தி எங்கிருந்தாலும் திடீரென்று வந்து சேருமென்று தந்தையும் புதல்வரும் ஆவல்கொண்டு ஒவ்வொரு நிமிஷமும் தபாலை எதிர்பார்த்துப் பார்த்து ஏமாறிப்

போய், அவள் அநேகமாய் இரங்கூன், சிங்கப்பூர் முதலிய அயல் நாடுகளுள் எதற்கேனும் போயிருக்க வேண்டும். அல்லது, இந்த தேசத்திலேயே இருந்தால், போலீசாரது கண்ணில் படாமல் பெரிய பட்டணங்களில எதிலாகிலுந்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டனர். ஆயினும் சென்னை துரைத்தனத்தார் வெளியிட்ட உத்தரவு அவள் வரையில் எட்டியிருக்குமோ இராதோ என்பதை மாத்திரம் அவர்கள் சந்தேகமற நிச்சயிக்க மாட்டாதவர்களா யிருந்தனர். அதன்பிறகு இன்னொரு மாதகாலம் கழிந்தது. திருவடமருதூரில் குஞ்சிதபாத முதலியாரது வீடுகளையும் நிலங்களையும் வாங்கி யனுபவித்து வந்தவர்கள் திருவையாற்றுக்கு வந்து குஞ்சிதபாத முதலியாரைக் கண்டு தங்களுக்குச் சேரவேண்டிய பணதொகையைப் பெற்றுக்கொண்டு சொத்துக்களை அவரது வசதில் விட்டுவிட்டதாகப் பததிரம் எழுதி ரிஜிஸ்டர் செய்து கொடுத்துவிட்டுச் சென்றனர். குஞ்சிதபாத முதலியாரிடம் அதிகாரம் பெற்ற அவரது குமாஸ்தா ஒருவர் திருவடமருதூருக்குச் சென்று சகலமான ஸ்தாவர சொத்துக்களையும் ஒப்புக்கொண்டு கிழவரது பிரதிநிதியாக இருந்து அவைகளின் நிர்வாகங்களை நடத்தத் தொடங்கினர். தமது ஜெனன பூமியாகிய திருவடமருதூருக்கே தாம் போய்விட வேண்டுமென்ற அவா கிழவரது மனத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. தாம் அந்த ஊருக்குச் சென்றால், ஜனங்களால் தமக்கு எவ்விதமான கெடுதலும் ஏற்படாதென்ற நம்பிக்கையும் தைரியமும் இருந்தனவாறுலும், உடனே புறப்பட்டு அங்கே போவது கிழவருக்கு ஒருவாறு கிலேசமாயிருந்ததுபற்றி அவர் மேலும் இரண்டொரு மாதகாலம் கழிதது, அது பழைய கதையான பிற்பாடு தாம் அங்கே போகலாமென்று தீர்மானிதது அதுவரையில் தாம் திருவையாற்றிலேயே இருக்க வேண்டுமென்று முடிவு செய்துகொண்டார். அதற்குள் தமது மனைவி முதலியோர் அகப்பட்டுப் போகும் பட்சததில், அவர்களோடு ஒன்றாய்ப் போவதே நல்லதென்றும் கிழவர் எண்ணிக் கொண்டிருந்தார். ஆனல் தமது மனைவியான கமலவல்லியைத் தாம் இனி அடைவது துர்லபம் என்ற அபிப்பிராயம் அவரது மனத்தில் தோன்றத தோன்ற, அவருக்கு உலகப் பற்றில் ஒருவித விரக்தியும் பற்றின்மையும் பெருக வாரம்பித்தன. அவர் ஒரு நாள் திவான் சாமியாரை நோக்கி, “அப்பா யோகலிங்கம்! அவ்வளவுதான் எனக்கும் அவளுக்கும் பிராப்தம்! விட்டுத் தள்ளு கழு

தையை. அவள் என்ன நிதானத்தில் இருக்கிறாள் என்று பார்க்க வேண்டுமென்கிற ஒரு சபலத்தினால் நான் அவளைக் கண்டு பிடிக்க வேண்டுமென்று சொன்னேனே யன்றி வேறல்ல எனக்கோ வயசு ஏராளமாக நிறைந்து விட்டது. இனி எனக்கு சம்சாரம் எதற்காக. காடு வாவா என்கிறது வீடு போபோ என்கிறது. மிகுதியுள்ள சொற்ப காலத்தையும் நான் பரமாத்மாவின் திருப்பணிகளிலேயே போக்கி, மறுமைக்கு எனக்கு அத்யாவசியமான திருவருட் செல்வத்தைத் தேடும் வழியைப் பார்க்கிறேன். சம்சாரம் இருந்தால் அந்த வேலை குந்தகப்பட்டுப் போகும். அதற்கு அவகாசமே இல்லாமல் போய்விடும். இப்போது நான் இருக்கும் நிலைமையே நல்லது. இப்படியே இருந்து விடுகிறேன். அவளைக் கண்டு பிடிப்பதற்காக நீ இனி எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. நீ திருவனந்தபுரத்திலிருந்து கொண்டு வந்த செலவமே எனக்கு அபரிமிதமாக இருந்தது; அதோடு, நீ என் பொருட்டு பாடுபாடெல்லாம் பட்டு, திருவடமருதூரிலிருந்த என் ஸ்தாவர சொத்துக்களையும் மீட்டுக் கொடுத்தாய்; அதுவுமன்றி, என் க்ஷயரோகத்தை நிவர்த்தி செய்து, எனக்கு தேகாரோக்கியத்தையும் மனோதிடத்தையும் உண்டாக்கி வைத்து, சகலமான சுகபோகங்களையும் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறாய். நான் கடைசிவரையில் இந்த நிலைமையிலேயே இருந்து என் பொழுதை யெல்லாம் தெய்வ பூஜையிலேயே நான் போக்கிக் கொண்டிருந்தபடியே இந்த மண்ணுலகை விட்டு ஈசனுடைய பொன்னடிக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறேன். ஆனால் நான் கடைசியாக உன்னிடம் கோருகிற வேண்டுகோள் ஒன்றிருக்கிறது. அருமைச் செல்வனை என் குமாரனை இனி நான் இந்த ஜென்மத்தில் பார்க்க முடியாமல் செய்துவிட்டு அவன் எனக்கு முன்பாக எம்பெருமான் திருவடி மலரை யடைந்து விட்டான். நான் எவ்வளவுதான் அழுது புரண்டாலும், அவனுடைய திருமுகத்தை நான் இனி காணப் போகிறதில்லை. அவனுடைய குழந்தை ராஜாபகதூரின் நினைவும், அவனுடைய தாயான காந்திமதியின் நினைவும என் மனதை விட்டு மாறமாட்டேனென்கின்றன. அந்த ஏக்கம் தீராமல் இருந்து என் உயிரை வறட்டிக் கொண்டே இருக்கிறது. இந்தக் கமலத்தைக் கண்டு பிடிப்பதை விட்டு, இவ்வளவு பிரயாசையையும், அவர்களிருவரையும் கண்டு பிடிப்பதில் நீ திருப்பினால், அது பலன் தருமென்று நினைக்கிறேன்.

நான் இறப்பதற்குள் அவர்களிருவரது முகத்தையும் நான் ஒருதரமாவது பார்க்காவிடில், என் தாகவிடாய் தணியாது. என் ஏக்கமும் தீராது. என் ஜென்மமும் கடைத்தேறாது. நான் மறு ஜென்மத்தில் நிம்மதியற்ற அலகையாய்த்தான் பிறந்து உழலுவேன். என்னப்பனே! என் தேசிகத் தெய்வமே! இந்த என்னுடைய ஒரு வேண்டுகோளை மாத்திரம், நீ அவசியம் பூர்த்திசெய்து வைத்துவிடவேண்டும். என்னிடம் நீ இப்போது ஒப்படைத்திருக்கும் அபாரமான செல்வத்தையெல்லாம் நான் என்றைய தினம் அந்த ராஜாபகதூரிடம் ஒப்புவிக்கிறேனோ, அன்றுதான் எனக்கு மோக்ஷ தினம். அது கிடைத்துவிட்டால், மறுமையில் எனக்கு மோக்ஷம் கிடைப்பது நிச்சயத்திலும் நிச்சயம். எப்படியாவது நீ முயற்சி எடுத்து இதை நிறைவேற்ற வேண்டுமப்பனே. நீ என்னைவிட வயதில் சிறியவனு யிருக்கிறாய். இல்லாவிட்டால், நான் என் இருகைகளையும் குவித்து நிரம்பவும் பணிவாக உன்னிடம் கேட்டுக் கொண்டிருப்பேன். ஆனால், உலகைத் துறந்த சாமியாராயிருந்தால், அவர் வயசில் சிறியவரா யிருந்தாலும், அவரை விருத்தர்கள் கூட வணங்கலாம். ஆனாலும், நான் உன்னை வணங்குவதை நீ பல தடவைகளில் ஆட்சேபித்திருக்கிறு யாதையால், நான் உன்னை நினைத்து உன்னுடைய மூதாதைகளுக்கு ஆயிரங் கோடி நமஸ்காரம் செய்கிறேன். என்னப்பனே யோகலிங்கம்! நான் உனக்கு அடிக்கடி கொடுத்துக் கொண்டிருக்கும் பிரயாசை அநந்தமானாலும், இந்தஒரு பிரயாசையையும் நான் கொடுத்தே தீரவேண்டியிருக்கிறது.'' என்று நிரம்பவும் உருக்கமாகவும், தாழ்மையாகவும், நயமாகவும், வாஞ்சையாகவும் கூறி வேண்டிக் கொண்டார்.

தமது மனையாட்டியான காந்திமதியம்மாளையும் புதல்வன் ராஜா பகதூரையும் காண வேண்டுமென்று கிழவர் ஏக்கங்கொண்டு வருந்திக் கூறிய மொழிகளைக் கேட்க, திவான் சாமியாரது மனதும் கண்களும் கலங்கிப் போயின. தாம் எத்தனையோ ஊர்களுக்குப் போய் அலைந்து பார்த்தும், எத்தனையோ முயற்சிகள் செய்தும் அவர்களிருவரையும் கண்டு பிடிக்க இயலாமல், அவர்கள் இனி அகப்பட மாட்டார்களென்று தீர்மானித்தது, விரக்தி யடைந்திருப்பதை திவான் சாமியார் குஞ்சிதபாத முதலியாரிடம் வெளியிட விரும்பவில்லை. கமலவல்லி இரங்கூன் முதலிய அயல் நாடுகளில் இருந்தால், அவளைக் கண்டு பிடிப்பது சாத்தியமற்ற காரியமென்றாம், அவள் ஒருகால் பெரிய பட்டணம் எதிலாகிலும் இருந்தால்,

தாம் ஒவ்வொரு பட்டணமாகச் சென்று தம்மாலேன்ற வரையில் முயற்சிசெய்து, ஒவ்வொரு பெரிய பட்டணத்திலுமுள்ள ஒவ்வொரு தெருவிற்கும் போய் ஒவ்வொரு வீட்டிலுமுள்ள மனிதர்களிடத்தி லும் பேசி கமலவல்லியைக் கண்டு பிடிப்பதில் தமது ஆயுளேயே செலவழித்து அப்படியாயினும் அவளைக் கிழவரிடம் சேர்த்துவைக்க வேண்டுமென்று தமக்குள் தீர்மானித்திருந்தாராதலால், அவ்வாறு தாம் கமல வல்லியைத் தேடிக்கொண்டு போகையில், காந்திமதியம் மாளையும் ராஜா பகதூரையும் மறுபடி தேடிப் பார்க்கலாம என்ற எண்ணத்துடன் திவான் சாமியார் கிழவரை நோக்கி நிரம்பவும் பணிவாகவும் பயபக்தி விநயத்தோடும் பேசத்தொடங்கி, "அப்பா! உங்களுக்கு எது பிரியமோ அதை நான் அவசியம் செய்கிறேன். உங்கள் குமாரரும் நானும் ஒன்றாக இருந்தவர்க ளல்லவா. அவரு டைய பிரதிநிதியாக நான் இப்போது உங்களுடைய திருப்பணி விடைகளைச் செய்து வருகிறேன். இனி என் ஆயிசு காலம் முடிய இதே நிலைமையில் இருந்து உங்களுடைய ஆசை எதுவோ அதைப் பூர்த்தி செய்வதே என்னுடைய தவமாக நான் செய்வேனென் பதை நீங்கள் உறுதியாக வைத்துக் கொள்ளலாம். நான் ஒன்றன் பின்னொன்றாகப் பெரிய பட்டணங்களில் போய் இருந்து அவர்களைத் தேடிப் பார்க்கலாமென்று எனக்குள் முடிவு செய்திருக்கிறேன். நான் வெளியில் போனாலும், அடிக்கடி திரும்பிவந்து உங் களையும் பார்த்துக்கொண்டுதான் இருப்பேன். முதலில் தஞ்சாவூரை எடுத்துக்கொண்டு அந்த ஊரில் ஆராய்ச்சி செய்து பார்க்கப் போகி றேன். பிறகு கும்பகோணம், பிறகு மாயவரம், இப்படி ஒன்றன் பின்னொன்றாகப் பெரிய பட்டணங்களி லெல்லாம ஆராய்ந்துபார்த்து விடுகிறேன் வேலைக்காரர்கள் எல்லோரும் யோக்கியமானவர்கள். அவர்கள் உங்களை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்வார்கள். நான் நாளையதினமே புறப்பட்டுப் போகலாமென்று நினைக்கிறேன். அதற்கு நீங்கள் உத்திரவு கொடுக்க வேண்டும்." என்றார்.

கிழவர், "அப்படியே செய்யப்பனே! ஆனால் ஒரே தொடர்ச்சி யாய்ப் பல நாட்கள் வெளியில் இருந்துவிடாதே அடிக்கடி உன் முகத்தையாவது நான் பார்க்கும்படி செய்துகொண்டிரு." என்றார்.

உடனே திவான் சாமியார் அப்பொழுதே எதையோ நினைத்துக் கொண்டவர் போலக் கிழவரை நோக்கி, "அப்பா! இன்னொரு விஷயம் உங்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று

நான் பல தினங்களாய் எண்ணி யிருந்தேன். சந்தர்ப்பம் சரிப்பட வில்லை. அதாவது, உங்கள் இளைய சம்சாரத்தின் தகப்பனுருடைய பெயர் இராமலிங்க முதலியாரல்லவா. அவர் உங்களிடம் தவசிப் பிள்ளையாக அமர்ந்த போதாவது, அதற்குப் பிறகாவது, அவருடைய சொந்த ஊர் எது வென்பதை அவர் சொன்னதுண்டா? சொல்லி இருந்தால், அந்தப் பெயரை ஞாபகப்படுத்தி எனக்குச் சொல்லுங்கள். நான் போகும்போது, அந்த ஊரிலும் போய் விசாரித்துப் பார்க்கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட கிழவர், "அப்பா யோகலிங்கம்! அந்த இராம லிங்கம் என்னிடம் வேலையி லமர்ந்தபோது தன்னுடைய சொந்த ஊர் பாபநாசத்துக்குக் கிழக்கில் ஒரு மயில் தூரத்தில் இருப்பதாக வும், தனக்கு அங்கே சொற்ப நிலம்கூட இருப்பதாகவும், அதற்கு என்னவோ பெயர் என்றும் சொன்னன். அந்தப் பெயர் நினைவிற்கு வரவில்லை.'' என்றார்.

அதைக் கேட்ட திவானினது முகம் சந்தோஷத்தினல் ஜ்வலித்தது. கமலவல்லியின் இருப்பிடத்தை அப்பொழுதே கண்டு விட்டதுபோல, அவரது மனதில் ஒருவித நம்பிக்கையும் துணி பும் உண்டாயின. அவர் கிழவரை நோக்கி, "ஆகா! நான் இந்தத் தகவலை முன்னமேயே உங்களிடம் கேட்காமல், திருவடமருதூரில் போய்ப் பலரிடம் கேட்டுப் பார்த்தேன். ஒருவரும் இந்தத் தகவலைச் சொல்லவே இல்லை. நான் இப்போது அந்த ஊருக்குப் போய் ஒரு நிமிஷத்தில் துப்பு விசாரித்து உங்கள் சம்சாரத்தின் இருப்பிடத் தைக் கண்டு பிடித்து விடுகிறேன். நாளைய தினம் வரையில் நான் இங்கே என்ன செய்யப் போகிறேன். ஒன்றுமில்லை. இப்போதே புறப்பட்டுப் போகிறேன்.'' என்று கூறிக் கிழவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு, உடனே திருவையாற்றை விட்டுப் புறப்பட்டுச் செல்ல லானர். அவசரமாக ஏதேனும் ஊருக்குப் போகவேண்டிய சந்தர்ப் பங்களில் மாத்திரம் திவான் சாமியார் குதிரை வண்டி, ரயில் வண்டி முதலிய போக்கு வரத்து வசதிகளை உபயோகப்படுத்திக் கொள் வதை வழக்கமாக வைத்துக்கொண் டிருந்தார். மற்ற சமயங் களில் அவர் கால் நடையாகவே பிரயாணம் செய்து வந்தார். ஏனெனில் தாம் தமது தந்தையைத் தற்செயலாகக் கண்டது போல தமது மனிதர்களான மற்றவர்களையும் தாம் ஒருகால் காண நேரிட் டாலும் நேரிடலாம் என்ற முன் யோசனையினல், அவர் அவ்வாறு

ஊரூராய் நடந்து சென்றார். ஆகவே, அன்றைய தினம் அவர் பாபநாசத்திற்குப் பக்கத்திலுள்ள ஊருக்குப்போனால் தனது சிறிய தாயாரைப்பற்றிய செய்தி அநேகமாய்க் கிடைத்து விடுமென்ற நம்பிக்கையும் ஆவலும் எழுந்து தூண்டியதாகையால், அவர் திருவையாற்றி லிருந்து குதிரை வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டு தஞ்சைக்குப் போய், அவ்விடத்தி லிருந்து ரயில் வண்டியின் மூலமாய்ப் பாபநாசம் போய்ச் சேர்ந்து அங்கிருந்து உடனே புறப்பட்டுத் தமது தந்தை குறிப்பிட்ட ஊரை யடைந்து இராமலிங்கம், கமலவல்லி முதலியோரைப் பற்றி அந்த ஊர் கிராமமுன்சீப்பு, கர்ணம், இன்னும் மற்ற ஜனங்கள் முதலியோரிடம் தந்திரமாக விசாரித்துப் பார்த்தார். தமது தந்தை பிழைத்துக் கொண்டது சம்பந்தமாக சென்னை துரைத்தனத்தாரும் தாமும் வெளியிட்ட விளம்பரங்களை அந்த ஊரார் படித்து நன்றாக நினைவில் வைத்துக்கொண் டிருந்தார்களென்பதை திவான் சாமியார் நிச்சயமாகத் தெரிந்து கொண்டார். அதுவுமன்றி, இராமலிங்கம் கமலவல்லி முதலியோரைப்பற்றி முக்கியமான ஒரு தகவலும் அவருக்குக் கிடைத்தது. சுமார் இரண்டு வருஷ காலத்திற்கு முன்பு இராமலிங்கமும், அவனது புதல்வனும், அந்த ஊருக்கு வந்து சில நாட்கள் வரையில் தங்கி இருந்து, பூர்வீகமாய் அவர்களுக்குச் சொந்தமா யிருந்து வந்த நிலத்தை அவர்கள் அந்த ஊரிலிருந்த ஷண்முக வாண்டையார் என்ற ஒருவரிடம் விற்றுவிட்டுப் பணத்தைப் பெற்றுக்கொண்டு போனதாகவும், அப்பொழுது அவர்கள், தங்களுக்குத் திருவடமருதூரி லிருந்த சொத்துக்களையும் விற்றுவிட ஏற்பாடு செய்து கொண்டிருந்ததாகவும், எல்லாவற்றையும் பணமாக்கி எடுத்துக் கொண்டு மதுரைக்குப் போய்க் குடியேற உத்தேசித்ததாகவும், அவ்விடத்தில் அரிசி மில்கள் வைத்து ஏதோ பெரிய வர்த்தகம் செய்யப் போவதாகவும், இராமலிங்கம் ஷை ஷண்முக வாண்டையாரிடம் சொன்னதாக அவர்கள் தெரிவித்தனர். அந்த முக்கியமான தகவல் தெரியவே, திவான் சாமியார் முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த ஆவலும் நம்பிக்கையும், உற்சாகமும், மனவெழுச்சியும கொண்டு, தாம் எப்படியும் வெகு சீக்கிரத்தில் தமது சிற்றன்னையைக் கண்டு பிடித்து அழைத்து வந்து தமது தந்தையிடம் சேர்த்துவிடலாம் என்று நினைத்து பலமான மானஸீகக் கோட்டை கட்ட வாரம்பித்து விட்டார். ஆயினும் அவரது மனத்தில் இன்னொரு சந்தேகமும் தோன்றி

யது. அவ்வளவு குறிப்பான செய்தி அந்த ஊராருக்குத் தெரிந்திருக்க, அவர்கள் சென்னை துரைத்தனத்தாரது உத்தரவு கிடைததவுடன் அந்த முக்கியமான தகவலை கிராம முன்சீப்பு ஏன் மேலதிகாரிகளுக்குத தெரிவிக்க வில்லை யென்று திவான் விசாரித்தார். வாய்ப் பேச்சாகக் கேள்விப்பட்ட அந்தச் செய்தி யைத தாம் மேலதிகாரிகளுக்கு எழுதினுல், அது சம்பந்தமான விசாரணைக்குத் தாம் மேலதிகாரியின் கச்சேரிக்கும், இன்னும் மதுரை முதலிய தூர தேசங்களுக்கும் போக நேருமென்ற பயத் தினுல், கிராம முன்சீப்பு அதை வெளியிடாமல் இருந்துவிட்டா ரென்பதையும் திவான் தெரிந்து கொண்டார்.

திவான் அன்றையதினம் மாலையிலேயே அந்த ஊரை விட் டுப் புறப்பட்டுப் பாபநாசததிற்கு வந்து ரயிலேறினர். தாம் அங் கிருந்து நேராக மதுரைக்குப் போக வேண்டுமென்ற ஆவல் எழுந்து அவரைத் தூண்டியதானுலும், அவ்விடததில் ஒருகால் தாம் பல தினங்கள் வரையில் இருக்க நேரிடின் தாம் வராததைக் குறித் துத் தமது தந்தை கவலையுற்று வருந்துவாரென்று எண்ணித் தாம் தமது தந்தையிடம் தெரிவித்துவிட்டு மதுரைக்குப் போவதே உசிதமான காரியமென்று தீர்மானித்துக்கொண்டு அன்றைய தினம் இரவு பதினெரு மணிக்குத் தஞ்சைக்குப் போய்ச் சேர்ந்தார். அவ்விடத்தி லிருந்து திருவையாறு வடக்குத் திக்கில ஆறு மயில் தூரத்தி லிருக்கிறதென்ற விஷயம் முன்னரே சொல்லப்பட் டிருக் கிறது. இரவு பதினெறு மணிக்குமேல் அவ்விடததிலிருந்து திருவை யாற்றுக்குப் போகக்கூடிய குதிரை வண்டி அன்றையதினம் கிடைக் காமல் போய்விட்ட தாகையால், அவர் அன்றிரவு தஞ்சை ரயில் ஸ்டேஷனிலேயே படுததிருக்க நேர்ந்தது. அதுவுமன்றி, தாம் அப்பொழுதே திருவையாற்றிற்குப் போனுலும், தாம் அங்கே போய்ச் சேரும்பொழுதே நடுநிசி வேளைக்கு மேலாகிவிடு மென் றும், அப்பொழுது நன்றாய் அயர்ந்து தூங்கிக்கொண் டிருக்கும் தமது தந்தைக்கு நித்திராபங்கம் ஏற்படுமேயொழிய, அவர் தமது இளைய தாரததைப் பற்றிய அநுகூலமான செய்தியைக் கேட்டால், அதைப்பற்றி கவலையும், ஆவலும் கொள்வாரென்றும், அதனுல், அவருக்கு இரவெல்லாம் தூக்கமில்லாமல் போய்விடுமென்றும் திவான் சாமியார் நினைத்தாராகையால் அதைக்கருதியும் தாம் அந்த இரவைத் தஞ்சையிலேயே கழித்துவிட்டு விடியற்காலை யில் எழுந்துபோக வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு அவர்

அவ்விடத்திலேயே படுத்திருந்தார். அவ்விடத்தில் எப்பொழுதும் வந்து போய்க்கொண்டிருந்த ஏராளமான ஜனங்கள் சளசளவென்று ஓயாமல் பேசிக் கூச்சலிட்டு அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்தமையாலும், எங்கு பார்த்தாலும் நிறைந்திருந்த வாழைப்பழத் தோல்கள், வெற்றிலை பாக்குத் தம்பலம் முதலியவற்றை நாடிப் பட்டாளம் பட்டாளமாய் வரும் கொசுக்களின் கடியைத் தாங்கமாட்டாமலும், திவான் சாமியார் தூக்கம் பிடியாதவராய்ப் புரண்டு கொண்டே படுத்திருந்தார். அதுவுமன்றி, தாம் எப்பொழுது மதுரைக்குப் போய்ச் சேர்ந்து தமது சிற்றன்னையைக் கண்டு பிடித்து அழைத்துவந்து தமது தந்தையிடம் சேர்த்துவைக்கப் போகிறோம் என்ற ஆவலும் துடிப்பும் அவரது மனத்தில் எப்போதும் நிறைந்திருந்து அவரைத் தூங்கவிடாமல் அடித்தமையாலும், அவர் விடியற்காலம் நான்கு மணி வரையில் தூங்காமலேயே அவ்விடத்தில் படுத்திருந்தார். அதற்குமேல் அவருக்கு அவ்விடத்தில் இருக்கை கொள்ளவில்லை. தாம் அவ்விடத்தில் இருந்து வதைப்பட்டு வருந்திக் கிடப்பதைவிட, நடந்து சென்று கொண்டேயிருந்தால் பொழுது விடியும் சமயத்தில் தாம் திருவையாற்றுக்குப் போய்ச் சேர்ந்துவிடலாமென்று நினைத்தவராய், அவர் உடனே சரேலென்று எழுந்து அவ்விடத்தை விட்டு வடக்கு திக்கில் சென்ற ரஸ்தாவின் வழியாக நடக்கத் தொடங்கினார். முறையே தஞ்சைப்பட்டணம், வடவாறு, கருத்தட்டான் குடி, வெண்ணாற்றங்கரை, அம்மன் பேட்டை, வெட்டாறு முதலிய வற்றைக் கடந்து, நமது திவான் சாமியார் கண்டியூர் என்ற ஸ்தலத்தை யடைந்த சமயத்தில், பொழுது நன்றாக விடிந்து போக, சூரியனும் கீழ்த் திசையில் கிளம்பி விட்டான். கண்டியூர் என்பது பாடல் பெற்ற சிறந்த புண்ணிய ஸ்தலங்களுள் ஒன்று. அந்த ஊருக்குள்ளாகவே ரஸ்தா செல்லுகின்றது. சிவன் கோவிலும், விஷ்ணு கோவிலும் ரஸ்தாவின் ஓரத்திலேயே இருக்கின்றன. ஊரையடுத்தாற்போல ஓர் ஆறு வெகு ரமணீயமாகச் செல்கின்றது. அந்த ஊரைச் சுற்றி நாற்புறங்களிலும் தென்னஞ்சோலைகளும், கருப்புத் தோட்டங்களும், வெற்றிலைக் கொடிக்கால்களும், நெற்பயிர்களுமே நிறைந்து ஒரே பசுமையாகவும் குளிர்ச்சியாகவும் காணப்படும். தஞ்சைப் பட்டணத்தின் காய் கறி மார்க்கெட்டில் பிரதி தினமும் மலை மலையாக வந்து குவியும் வெற்றிலைக் கட்டுகள், வாழை இலைக் கட்டுகள் தேங்காய் மூட்டைகள், காய்கறி

கள், கருப்பங்கழிக் கட்டுகள் முதலியவையாவும், கண்டியூர் முதலிய கிராமங்களி லிருந்தே உற்பத்தியாய் அங்கு போய்ச் சேருகின்றன வாதலால், அதற்குத் தக்கபடி கண்டியூர் நீர்வளம் நிலவளம் முதலிய சிறப்புகள் சம்பூர்ணமாய் அமையப் பெற்றிருந்தது. அவ்வூரிலிருந்த குடிமக்களும் ஆரோக்கியமான தேகமும், சுத்தமான பழக்கவழக்கங் களும் உடையவர்களாய் இருந்ததன்றி, தெய்வ பக்தியில் சிறந்தவர் களாயு மிருந்தனர். அவர்கள் அந்த ஊரிலிருந்த சிவாலயம் விஷ்ணு வாலயங்களில் அடிக்கடி மாறி மாறி வந்த திருவிழாக்களையும், புண் ணிய தினங்களையும் அதி விமரிசையாகக் கொண்டாடி வந்தனர். அப் பொழுது ஏராளமான பஜனைக் கோஷ்டிகள், தண்ணீர்ப் பந்தல்கள், தான தருமங்கள், சமாராதனை முதலியவை அபரிமிதமாக நடத்தப் படுவதுண்டு

நமது திவான் சாமியார் பாபநாசத்திற்குப் போய்த் திரும்பி வந்து கண்டியூரின் வழியாகச் சென்று கொண்டிருந்த அன்றைய தினம் அந்த ஊர் விஷ்ணு கோவிலில் வெண்ணெய்த் தாழி சேவை யாதலால், சூரியன் உதயமாகும் பொழுதே சுவாமியை முதலில் பல் லக்கில் வைத்து, அற்புதமாக அலங்கரித்துப் பாதாதி கேசம் வரை யில் வைர ஆபரணங்கள் வைர முடி முதலியவற்றையும் ரோஜா, ஜாதி மல்லிகை முதலிய புஷ்ப மாலைகளையும் அணிவித்து, கையில் தங்கக் குடத்தைப் பொருத்தி, கிருஷ்ணபகவானுகிய குழந்தை தவழ்ந்தபடி இடது கையால் குடத்தைப் பிடித்துக்கொண்டு வலது கையால் வெண்ணெயை எடுத்துத் தமது விளையாட்டுத் தோழர் களுக்குக் கொடுக்கும் பாவனையை நன்றாகக் காட்டி இருந்த காட்சி கண் கொள்ளா அதிசயக் காட்சியாக இருந்தது தவழ்ந்தபடிஇருந்த தெய்வீகக் குழந்தையின் பின்னழகைக் காண்பதற்கே பதினுயிரங் கண்கள் போதா வென்று நினைக்கத் தக்கபடி ஒரே அழகு மயமாக அமைந்திருந்தது. அவ்வாறு அலங்கரிக்கப் பட்டிருந்த சுவாமி பல்லக்கி லமர்ந்து ரஸ்தாவின் நடுவில் வர, முன்னும் பின்னும் சுமார் ஐம்பதினுயிரம் ஜனங்கள் ஸ்நானம் செய்து மடியுடுத்தி தம் தம் ஜாதியாசாரப்படி திருமணே, விபூதியோ அணிந்து, கைகட்டி பக்தி பரவசர்களாய்ச் சூழ்ந்து சென்று கொண்டிருந்தனர். பஜனைக் கோஷ்டியார் மகா அற்புதமான தியாகராஜ கிருதிகளைப் பாடிக் கல்லும் கரையும்படி தெய்வ பக்தியும் இன்பத்தையும் அள்ளி வீசிக் கொண்டே வந்தனர். இரட்டைத் தங்க நாகசுரக் காரர்களும் தவில் காரர்களும் ஒருவரோ டொருவர் போட்டி யிட்டுத் தமது

முழுத் திறமையையும் வெளிப்படுத்தி, அது தெய்வகானமோ வென்று எல்லோரும் எண்ணி அதிலேயே லயித்துப் பரவச மடைந்து போகும்படி செய்து கொண்டிருந்தனர். அடிக்கடி நிவே தனங்களும், கற்பூர ஹாரத்தியும் நடந்தேறின. இடையிடை யில் வாழைப்பழம், சர்க்கரை, வெற்றிலைப்பட்டி, விசிறிகள், பானகம், நீர்மோர், வடைப்பருப்பு, வெல்லவல், தயிரவல், முத லியவை தாராளமாக வழங்கப்பட்டன. சுமார் அரைப்பர்லாங்கு தூரம் வரையில் ரஸ்தாவில் ஒரே ஜன நெருக்கமாக இருந்ததாகை யால், வழிப்போக்கர்கள் தடைப்பட்டுப் போயினர். போக்கு வண்டிகள் செல்ல மாட்டாமல் மூலை முடக்குகளில் போய் ஒதுங்கி நின்றன. நமது திவான் சாமியார் தாம் அவசரமாகத் திருவையாற் றிற்குப் போய் சந்தோஷச் செய்தியைத் தமது தந்தையிடம் தெரி வித்துவிட்டு உடனே திரும்பிவந்து காலை ஒன்பதரை மணிக்குத் தஞ்சையிலிருந்து புறப்படும் வண்டியிலேயே தாம் மதுரைக்குப் போகவேண்டு மென்ற தீர்மானத்தோடு நிரம்பவும் விசையாக வந்துகொண் டிருந்தாராலும், ரஸ்தாவை அடைத்துக் கொண்டு நின்ற ஜனக்கும்பலையும் நடுவிலிருந்த பல்லக்கையும் கண்டு நின்று பக்கத்திலிருந்த ஜனங்களிடம் விசாரித்து அன்று இன்ன விசேஷ மென்பதைத் தெரிந்து கொண்டார். அவரது முன்னோர்கள் அநு சரித்துவந்தது சைவ சமயமானாலும், நமது திவான் முதலியாருக்கு வைஷ்ணவ சமயத்தில் துவேஷ மில்லையாதலால், அவர் எவ்விடத் திலாவது விஷ்ணு கோவிலைக் கண்டால் அதன் வாசலில் நின்றபடி, பெருமாளை நமஸ்கரித்துவிட்டுப் போவது வழக்கம். எங்கேயாவது வீதிகளில் சுவாமி ஊர்வலம் வரக்கண்டால், அப்பொழுதும் அவர் நமஸ்காரம் செய்துவிட்டுப் போவது வழக்கம். ஆகவே, அவ்வளவு விமரிசையாக நடத்தப்பட்ட அந்த ஊர்வலத்தைக்காண, திவானும் பக்திப் பெருக்கடைந்து பூரித்துப்போய்த் தம்மை மறந்து தமது கைகளை எடுத்துக் குவித்துப் பெருமாளை நமஸ்கரித்து "சுவாமீ பெருமாளே! நான் முக்கியமான கருத்தோடு அவசரமாய்ப் போகை யில், நீர் வழிமறித்து நிற்பது, என் எண்ணம் பலித மடையக் கடவ தென்று ஆசீர்வதிப்பதுபோலத் தோன்றுகிறது. பகவானே! எனக்கு நீர்தான் துணையிருந்து என் கோரிக்கையைப் பூர்த்தி செய்ய வேண் டும். நான் எவ்வளவுதான் முயன்று பாடுபட்டாலும் உமது அருளி ருந்தாலன்றி, எதுவும் கைகூடாது கிருஷ்ண பரமாத்மாவே! நீரே கதி!" என்று தமக்குத்தாமே பலவாறு வேண்டிக்கொண்டு ஸ்தோத்

திரம் செய்தபின் கும்பலுக்குள் புகுந்து மேலும் வடக்கு திக்கில் செல்ல வாரம்பித்தார். மற்ற எல்லோரும் ஸ்நானம் செய்து சுத்தமாக இருந்தனராதலால், தாம் அவர்களுக்கிடையில் அசுசியாக இருந்தது அவருக்கு நிரம்பவும் துன்பகரமாக இருந்ததாகையால், தாம் சீக்கிரம் அவர்களைக் கடந்து அப்பால் போய்விட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார். அந்த ஊர்வலமும் ரஸ்தாவோடு வடக்கு திக்கில் மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. ஆகவே, அவர் அந்தக் கும்பலை விட்டு அப்பால் செல்லும்பொருட்டு நிரம்பவும் விசையாக ஜனங்களுக்குள் நுழைந்து போகவேண்டியிருந்தது சுவாமி தரிசனத்தின் பொருட்டு புதிய ஜனங்கள் நாற்புறங்களிலிருந்தும் வந்துகொண்டிருந்தமையால் திவான் சாமியாருக்கு முன்னும் பின்னும்பக்கங்களிலும் ஜனங்கள் புகுந்து நெருக்கியபடி இருந்தனர் அந்தக் கூட்டத்தில் ஆண்பாலர், பெண்பாலர், குழந்தைகள் முதலிய சகலரும் வித்தியாசமின்றி நெருங்கியிருந்தனர். அவ்வாறு ஊர்ந்து சென்ற ஜனக்கும்பலுக்குள் நமது திவான் சாமியார் அகப்பட்டு அதைக் கடந்து வெளியில் போய்விட வேண்டுமென்று விரைந்து முன்னால் சென்று கொண்டிருக்க, தெரு சிறிது குறுகலாக இருந்த ஓரிடத்தில் ஜனங்கள் செல்லமாட்டாமல் ஒருவர்மேலொருவர் விழுந்து நெருங்கித் தமக்குத்தாமே உபத்திரவத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தனர் அந்த இடத்தில் கையில் இரண்டு வயதுக் குழந்தையுடன் நின்ற சுமார் இருபது வயதுள்ள ஒரு ஸ்திரீ "ஐயோ! ஐயோ! திருடன் திருடன்! என் குழந்தையின் கழுத்துச் சங்கிலியை அறுத்துக் கொண்டு ஓடுகிறான்" என்று திடீரென்று பெருங் கூச்சலிட்டாள். அதைக் கேட்ட ஜனங்கள் "விடாதேயுங்கள். ஆளைப் பிடித்துக் கொள்ளுங்கள்" என்று கூவிய வண்ணம் அந்த ஸ்திரீயிருந்த இடத்தைச் சுற்றிலும் வந்து வளைத்துக் கொண்டனர். நமது திவான் சாமியார் அந்த ஸ்திரீயின் பக்கத்தில் நின்றாராதலால், அவர் திடுக்கிட்டு நடுநடுங்கி திகில் கொண்டு அப்படியே நின்று விட்டார். அவரைத்தவிர இன்னம் நான்கு மனிதர்கள் அந்த ஸ்திரீயைச் சுற்றிலும், நின்று கொண்டிருந்தனர். அவர்களையும் திவான் சாமியாரையும் வெளியில் விடாமல், நாற்புறத்திலுமிருந்த மற்ற ஜனங்கள் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு ஒவ்வொருவராய்ச் சோதனை போட்டு வெளியில் அனுப்பினர். மற்ற எவரிடத்திலும் நகைகள் அகப்படவில்லை. நமது திவான் சாமியாரைப் பிடித்து ஜனங்கள் சோதனை போட்ட காலத்தில, அவரது காஷாய

அங்கியில் தைக்கப்பட்டிருந்த பைக்குள் ஷை குழந்தையின் கழுத்தி லிருந்து அறுக்கப்பட்ட தங்கச் சங்கலியின் ஒருபாகம் கிடந்து அகப்பட்டு விட்டது, "இதோ அகப்பட்டான் திருடன்" என்று அவர்கள் பெருங் கூச்சலிட்டு நமது திவான் சாமியாரைப் பிடித்துக் கொண்டனர். அங்கு ஆயிரக்கணக்கில கூடியிருந்த ஜனங்களெல் லோரும் சுவாமியைத் தனியாக விட்டு, நகை திருடிய கள்வனைப் பார்க்க வந்து நெருங்கினர். தாடியும் மீசையும் ஜடையும் காஷாய அங்கியுமாய்ப் பரதேசிக் கோலத்துடனிருந்த நமது சாமியாரை கண்ட மற்ற ஜனங்கள், "இவனு சரட்டை அறுத்தவன்! அடெ பாவிப்பயலே உனக்கு சந்நியாசிக் கோல மெதற்கடா? ஊரார் சொத் தைக் கொள்ளை யடிப்பதற்காக இப்படி நீ ஆண்டிவேஷம் போட்டுக் கொண்டு திரிகிறாய். இழுத்துக்கொண்டு போங்கள் போலீஸ் டேஷ னுக்கு" என்றனர். வேறு சிலர், "கொடுங்கள் திருட்டு நாய்க்கு நல்ல சாப்பாடு" என்று கூறினர் உடனே சிலர் திவானது விலாப்பக்கத் தில் குத்தத் தொடங்கினர். வேறு சிலர் அவரது நீண்ட தாடியை சௌகரியமாகப் பிடித்து உலுக்க வாரம்பித்தனர் சிலர், "அடிக்க வேண்டாம், அடிக்க வேண்டாம்; மனிதன் திருடனாயிருந்தாலும், அவனுடைய காஷாய வஸ்திரத்துக்கும் திருவோட்டுக்கும் நாம் கொஞ்சம் மரியாதை பார்க்க வேண்டும். அடிக்க வேண்டாம். பாவம் பாவம். பேசாமல் போலீசாரிடம் ஒப்புவித்து விடுங் கள்" என்றனர். சிலர், "யார் வீட்டுக் குழந்தையின் நகையப்பா அது?" என்றனர். வேறுசிலர், "இதோ பாரப்பா, நம்முடைய மேலப்பண்ணை முதலியாருடைய குழந்தையின் கழுத்திலிருந்த சங்கிலியையல்லவா அறுத்து விட்டான். இரும்பை வெட்டும் கெட்டியான கத்திரியைப் போட்டு வெட்டி யிருக்கிறான் போலிருக் கிறதப்பா! சரடு இரண்டு துண்டாய்ப் போயிருக்கிறது இன்னொரு துண்டு போன இடந்தெரியவில்லை தேடுங்கள் ரஸ்தாவில் விழுந்து கிடந்தாலும் கிடக்கலாம்!" என்றனர்.

உடனே பலர் கீழே குனிந்து ரஸ்தாவில் தேடிப் பார்க்கத் தொடங்கினர். கதறி யழுதுகொண்டிருந்த ஷை குழந்தையை சமாதானப் படுத்தியபடி அதன் தாய் "அடெ பாவி! குழந்தை யின் கழுத்து வீங்கிப்போய் விட்டதே! இரத்தங்கூடக் கசிகிறதே! ஐயோ! என் தங்கம் வலியைத் தாங்கமாட்டாமல் துடிக்கிறதே! நான் என்ன செய்யப்போகிறேனப்பா! திருடனை விடாதீர்கள். அடடா! குழந்தையின் கை விரலிலிருந்த வைர மோதிரம்

கூட இல்லையே! அதையும் எடுத்துக் கொண்டிருக்கிறானே! ஐயோ! அது ஐந்நூறு ரூபாய்க்குப் போன மாசத்தில்தானே வாங்கினது. தங்கச் சங்கிலியின் முகப்பு மாத்திரம் இரண்டாயிரம் ரூபாயாயிற்றே. முகப்பு இருக்கிறதா பாருங்கள்.'' என்று கூறித் தனது கைகளைப் பிசைந்துகொண்டு நிரம்பவும் பரிதாபகரமாக அழுதவண்ணம் குழந்தையை சமாதானப்படுத்த வாரம்பித்தாள்.

அந்த ஸ்திரீயின் உடம்பிலும் குழந்தையின் உடம்பிலும் விலையுயர்ந்த ஏராளமான ஆபரணங்கள் காணப்பட்டன. அவள் ஒரு பெரிய செல்வவந்தரது மனையாட்டியென்பது பார்வைக்கே தெரிந்தது. அந்த ஊரில மேலப்பண்ணையென்பது வெற்றிலைத்தோட்டங்கள்யாவும் அடங்கிய பாகம். அது சுமார் லக்ஷம் ரூபாய் பெறத்தக்க பெரிய ஐவேஜி. அதன் சொந்தக்காரருக்கு வருஷத்தில் செலவுகள் நீங்கலாய்ப் பதினாயிரம் ரூபாய் மிச்சப்படும். அவரே அந்த ஊரில் முதலாவது மிராசுதார் என்று நன்கு மதிக்கப் பட்டிருந்த தன்றி, சகலமான வியவகாரங்களையும் அவருக்கே முதல் மரியாதையும் அபாரமான செல்வாக்கும் ஏற்பட்டிருந்தன. அவ்வளவு பெருமைப்பாடு வாய்ந்த கிராமத் தலைவரது குழந்தையின் மீதிருந்த நகையைக் களவாடி விட்டான் என்ற செய்தியும், களவாடியவன் குழந்தையின் கழுத்தில் இரத்தக்காயம் உண்டாக்கி விட்டான் என்ற செய்தியும் வெகு துரிதத்தில் பரவவே தோட்டங்களி லிருந்த அவரது ஆள்கள் சுமார் நூறு பேர் கையுந் தடியுமாக ஓடிவந்து விட்டனர். அந்த மிராசுதார் அன்றையதினம ஏதோ அவசர காரியத்தின் பொருட்டு வெளியூருக்குச் சென்றிருந்தாராதலால், அவர் மாத்திரம் காணப்படவில்லை. அவர் ஊரில் இருந்திருந்தால், அவரது மனையாட்டி அவ்வாறு தனியாக அவ்வளவு பெரிய ஜனக்கும்பலில் போக அவர் அநுமதி கொடுத்திருக்கவே மாட்டார். அவர் இல்லாமையால், அந்த அம்மாள் வெண்ணெய்த்தாழி சேவையைப் பார்க்க வேண்டுமென்ற ஆத்திரத்தில் சிறிதும் யோசியாமல் அவ்வாறு ஜனக்கும்பலில் போய் நுழைந்து விட்டாள். நுழைந்தது நெருக்கடியான இடமாதலால், அவ்விடத்தில் குழந்தையின் கழுத்துச் சங்கிலியும் கை மோதிரமும் ஒரு நிமிஷத்தில் களவாடப்பட்டுப் போயின. ஆகவே, ஜனங்கள் மிகுந்த ஆவேசமும் கோபமும் அடைந்து நமது திவான் சாமியாரைப் பிடித்து நிரம்பவும் வதைத்துப் போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துக்கொண்டுபோய் அவ்விடத்தி

விருந்த சப் இன்ஸ்பெக்டருக்கு முன்பாக நிறுத்தினார்கள். மேலப்பண்ணை முதலியாரின் சம்சாரமும் குழந்தையும் ஒரு வண்டியில் உட்கார்ந்து கொண்டு ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார்கள். நமது திவான் சாமியாரது அப்போதைய மனநிலைமை எவ்வாறு இருந்திருக்கு மென்பதை வாசகர்கள் மனதால் பாவித்துக் கொள்வதே சுலபமானது. தாம் உலகைத் துறந்த பரதேசியென்றும், தாம் திருடவில்லையென்றும் முதலில் திவான் சாமியார் கூறிப் பார்த்தார். அவர்கள் தம்மைச் சோதனை செய்து பார்த்து விட்டு விடுவார்கள் என்று நினைத்ததற்கு மாறாக தமது அங்கிப் பைக்குள்ளிருந்து தங்கச் சங்கிலித்துண்டு அகப்பட்டதைக் காண அவரே பிரமித்துப் போய்த் திருட்டு விழி விழிக்கத் தொடங்கினார். அது கண்கட்டு வித்தையா யிருக்குமோ, அல்லது, தமது கை ஒருகால் தமக்குத் தெரியாமல் நீண்டுபோய் அந்தத் திருட்டை நடத்தி இருக்குமோ என்று நமது சாமியார் பலவாறு நினைத்து சித்தப் பிரமை கொண்டவர்போலத் தோன்றி இழுத்த இடத்திற்கெல்லாம் பேசாமல் வரத்தொடங்கினார் தாம் திருடியதாக அவ்வளவு பரிஷ்காரமான சாட்சி ஏற்பட்ட பிறகு தாம் இல்லை என்று எப்படி மறுக்கிறது, மறுத்தாலும் மற்றவர்களுக்கு அது எப்படித் திருப்தி யளிக்கும் என்று தமக்குத் தாமே ஆக்ஷேபனை சமாதானம் செய்து கொண்டு ஊமைபோல இருந்து அவர்கள் கொடுத்த அடிகளை நிரம்பவும் பொறுமையோடு ஏற்றுக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்ந்தார்.

அவ்விடத்திலிருந்த சப் இன்ஸ்பெக்டரிடம் விவேகம் பகுத்தறிவு பொறுமை முதலிய மூன்றையும் தவிர மற்ற குணங்கள் பூர்த்தியாக இருந்தன. காளை மாடு கன்று போட்டிருக்கிறது" என்று யாராவது சொன்னால், "சரி; தாயையும் கன்றையும் கொட்டிலில் கட்டிமருத்துவம் பாருங்கள்" என்று சப் இன்ஸ்பெக்டர் உடனே உத்தரவு பிறப்பித்து விடுவார். அத்தகைய அதிமேதாவிக்கெதிரில் நமது திவான் சாமியார் திருட்டுக் குற்றம் சுமத்தப்பட்டவராய் நிறுத்தப்படவே, அவர் மிகுந்த ஆவேசமும் கோபமும் கொண்டவராய், "ஆ! அப்படியா! இவனா திருடினான்! ஆளைப் பார்த்தால், பெரிய பூச்சாண்டிபோல பலமாக வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறானே! அடே பரதேசி நாயே! உனக்கென்னடா கேடு காலம்! பெரிய மனிதர் வீட்டுப் பெண்பிள்ளை சுவாமி தரிசனத்துக்கு வந்தால், நீ அங்கே போய் இப்படிப்பட்ட காரியத்தையா

செய்கிறது? எங்கடா சங்கிலியின் இன்னொரு பாகமும் வைரமோதிரமும்? மரியாதையாக நிஜத்தை சொல்லிவிடு. இல்லாவிட்டால், போலீஸ் பலகாரம் சாப்பிட்டு வீணாய் மாண்டுபோவாய்'' என்று அதட்டி சிம்ம கர்ச்சனை செய்தார்.

அவரது மனப்போக்கையும் அவசர புத்தியையும் கண்ட திவான் தாம் அவரிடத்தில் எவ்விதமாகத் தமது உண்மையைத் தெரிவித்துக் கொள்ளுகிறது என்ற மலைப்பும் கவலையும் அடைந்தவராய்த் தடுமாறிய குரலில் பேசத்தொடங்கி, "ஐயா! இது தெய்வத்தின் சோதனையென்றே நினைக்கிறேன். சுவாமி சாட்சியாகச் சொல்லுகிறேன் நான் பிறந்தது முதல் இதுவரையில் அயலாருடைய பொருளை அபகரித்தது இல்லை; அபகரிக்க வேண்டுமென்று மனதால் எண்ணியதுமில்லை. வேறு யாரோ சங்கிலியை அறுத்து அதில் ஒரு துண்டை என் சட்டைப் பையில் போட்டு விட்டு ஓடிப் போயிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். சங்கிலியின் இன்னொரு பாகமும் போனவகை தெரியவில்லை நான் திருடியிருந்தால் எல்லாம் என்னிடம் இருக்க வேண்டும். அல்லது, மற்றவைரஸ்தாவிலாவது இருக்கவேண்டுமல்லவா'' என்றார்.

உடனே சப் இன்ஸ்பெக்டர், "உன்னுடன் இன்னும் யாராவது கூட்டாளி வந்திருக்கலாம். மற்ற நகைகளை அவன் எடுத்துக் கொண்டு தப்பி ஓடிப்போயிருக்கலாம். ஆகையால் நீ சொல்வதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது'' என்று முடிவாகக் கூறிவிட்டு, சில ஜெவான்களை அழைத்து திவானுடைய உடம்பை சோதனை செய்து பார்க்கும்படி உத்தரவிட்டார். உடனே ஜெவான்கள் அவர்மீது புலிகள்போலப் பாய்ந்து அவரது அங்கி வஸ்திரம் முதலியவற்றை விலக்கினர். அவரது இடுப்பைச்சுற்றி நீளமாய்க் கட்டப்பட்டிருந்த வண்டிக்காரன் பை யொன்று காணப்பட்டது சங்கிலியின் இன்னொரு பாகத்தையும் வைர மோதிரத்தையும் அவர் அதற்குள் வைத்துக்கொண்டிருக்கலாமென்ற நம்பிக்கையுடன் போலீசார் அந்தப் பையை அவிழ்த்து அதற்குள் கத்தையாய்த் திணிக்கப்பட்டிருந்த காகிதச் சுருளை வெளியில் எடுத்துப் போட்டனர். போடவே, அதைக் கண்ட சப் இன்ஸ்பெக்டரும் மற்ற ஜனங்களும் மிகுந்த பிரமிப்பும் ஆச்சரியமும் அடைந்து மூக்கின் மீது விரலை வைத்தனர். அவ்வாறு வெளியில் எடுக்கப்பட்ட காகிதங்கள் அத்தனையும் ஆயிரம் ரூபாய் நோட்டுகளாய் இருக்க,

அதைக் கண்ட போலீஸார் தமது கண்களை நம்பாமல் அவை நிஜமான நோட்டுகளோ, அல்லது, அவரால் தயாரிக்கப்பட்ட கள்ள நோட்டுகளாயிருக்குமோ வென்று சம்சயித்தது, அவைகளை நன்றாக ஆராய்ச்சி செய்து பார்த்தனர். எல்லாம் நிஜமான நோட்டுகளாகவே இருந்தன. உடனே போலீஸார் அவைகளை எண்ணிப் பார்த்தனர். 167 நோட்டுகள் இருந்தன. திவான் சாமியார் திருவனந்தபுரத்தி லிருந்து புறப்பட்ட காலத்தில் 2 லக்ஷம் ரூபாய்க்கு நோட்டுகள் வைத்திருந்தாரென்று சொன்னோமல்லவா. அவைகளில் அவர் அதுவரையில் முப்பத்திமூன்று நோட்டுகள்தான் எடுத்து மாற்றிச் செலவு செய்திருந்தார். கடைசி நோட்டு மாற்றியதில் மிஞ்சியிருந்த பணத்தைத் தமது தந்தையிடம் கொடுத்துவிட்டுத் தமது பிரயாணச் செலவுக்கு ஓர் ஐந்து ரூபாயை மாத்திரம் எடுத்து வந்திருந்தார். அதில் மிச்சமான சில்லரை அவரது அங்கிப் பையில் இருந்தது. கையில் திருவோடு, முதலியவற்றுடன் பிச்சைக்காரனைப் போலக் காணப்பட்ட பரதேசியிடம் முப்பத்தி மூவாயிரம் குறைய இரண்டு லக்ஷம் ரூபாய் இருப்பதென்றால், அந்த மனிதன் பெருத்த கொள்ளைக்காரனாகத்தான் இருக்க வேண்டுமென்றும், அவன் சந்நியாசி வேடம் போட்டுக் கொண்டிருந்தபடியே பல இடங்களில் கொள்ளை யடித்து அவ்வளவு பெருத்த பணத் தொகையைச் சேர்த்து வைத்திருக்க வேண்டுமென்றும் மேலப்பண்ணை முதலியாருடைய குழந்தையின் நகைகளை அவன் கழற்றினனென்பதைப் பற்றிச் சந்தேகமே இல்லை யென்றும் போலீசாரும் மற்ற ஜனங்களும் உடனே நிச்சயித்துக் கொண்டதன்றி, அவன் மகா அபாயகரமான முரட்டுத் திருடனாகத் தான் இருக்க வேண்டுமாதலால், அவனை உடனே நியாயஸ்தலத்திற்குக் கொண்டு போய்த் தண்டனை செய்வித்து சிறைச்சாலைக்கு அனுப்பி விட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டனர்.

சப்இன்ஸ்பெக்டர் திவான் சாமியாரை நோக்கி அவரது பெயர் என்ன வென்று வினவினர்.

திவான் சாமியார், "ஐயா! நான் உலகைத் துறந்து ஆறேழு வருஷ காலமாகிறது. அப்போது என்னுடைய பெயரையும் நான் துறந்துவிட்டேன் இப்போது எனக்குப் பெயரே இல்லை. என்னை எல்லோரும் பரதேசி, அல்லது, சாமியார் என்றுதான் கூப்பிடுகிறார்கள். அதுதான் இப்போது என் பெயராக வழங்குகிறது" என்றார்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர் நிரம்பவும் கோபங் கொண்டு, "ஓகோ! உனக்குப் பெயர் இல்லையோ! சரிதான்! நீ நல்ல பக்காத் திருட னென்பது நன்ருகத் தெரிகிறது. நீ இதற்கு முன் பலதடவைகளில் தண்டனை யடைந்திருக்க வேண்டுமென்றே நான் எண்ணுகிறேன். உன்னுடைய கைரேகை யடையாளத்தை எடுத்து இதோ நான் மேலதிகாரிகளுக்கு அனுப்பப் போகிறேன். அது போனல், உன்னுடைய பூர்வோத்திர மெல்லாம் உடனே தெரிந்து போகிறது! நீ உன் பெயரைச் சொல்லவேண்டாம் பத்திர மாக மூடி வைத்துக்கொள். அதிருக்கட்டும். உன்னுடைய சொந்த ஊர் இன்னதென்றுவது சொல்லுவாயோ, மாட்டாயோ ?" என்று நிரம்பவும் அருவருப்போடு கேட்டார். திவான் சாமியார் பெருந் தன்மையாகப் புன்னகை செய்தவராய், "பரதேசி என்பதிலேயே என்னுடைய ஊர் இன்னது என்பதும் அடங்கியிருக்க வில்லையா? அதன் அர்த்தத்தையே கவனித்துத் தெரிந்து கொள்ளுங்கள்" என்ருர்.

அதைக் கேட்ட சப் இன்ஸ்பெக்டர் முன்னிலும் அதிகரித்த கோபாவேச மடைந்து பல்லை நறநற வென்று கடித்து, "ஓகோ! அப்படியா! நீ மகா குறும்பஞக இருக்கிருயே! இன்றைய தினம் மாத்திரம் பொறுத்துக் கொள். நாளையதினம் நீ தஞ்சாவூர் முந்திரித் தோப்பு ஜெயிலுக்குள் போய்ச் சேர்ந்துவிடுவாய். அதுதான் உனக்குத் தகுந்த இடம். அங்கே போய் எந்திரத்தில் மாவரைத்தால், கருவமெல்லாம் வெகு சீக்கிரத்தில் அடங்கிப் போகும்" என்று கூறினர்.

அதைக் கேட்ட திவான் சாமியார் கம்பீரமான முகத்தோற்றத்தோடு நின்று, "எம்பெருமான் செயல். அவர் திருவுளம்பற்றி எந்த உத்தியோகத்தை நமக்குக் கொடுக்கிருரோ, அதை நாம் சந்தோஷத்தோடு உடனே ஏற்றுக்கொண்டு தீரவேண்டும் அவர் பார்த்து நம்மைப் பெரிய மகாராஜனுடைய பதவியில் வைத்தால், அப்போது நாம் எவ்வளவு சந்தோஷம் அடைவோம். மாவரைக்கும் உத்தியோகத்தைக் கடவுள் நமக்குக் கொடுத்தால், அப்போதும் நாம் சந்தோஷமாக அதைச் செய்யவேண்டியதுதான். நாம் அரைக்கும் மா எத்தனை மனிதருடைய பசியை நிவர்த்திக்கும்! அதுவும் ஒரு சத்கருமந்தானே" என்ருர்.

உடனே சப் இன்ஸ்பெக்டர் திவான் சாமியாரது கைரேகை யடையாளத்தை எடுத்து மேலதிகாரிகளுக்கு அனுப்பி விட்டு நாலைந்து சாட்சிகளின் வாக்கு மூலங்களை வாங்கி திவான் சாமியார் மீது பிராது தயாரித்து அதைக் கண்டியூருக்கு சம்பந்தப்பட்ட நீதிபதிக்கு அனுப்பியதன்றி திவான் சாமியாருக்கும் கைவிலங்கு பூட்டி கத்தி துப்பாக்கிகளுடனிருந்த இரண்டு ஜெவான்களுடன் அவரை நீதிபதியின் கச்சேரிக்கு அனுப்பி வைத்தார்.

நீதிபதி அந்த வழக்கைப் படித்துப் பார்த்துவிட்டு, அதன் விசாரணையைத் தாம் மறுநாட்காலை பதினொரு மணிக்கு எடுத்துத் துவக்குவதாய்க் கூறி, சாட்சிகளும், கைதியும் அப்பொழுது வந்து சேரவேண்டு மென்று உத்தரவு செய்தார். உடனே ஜெவான்கள் நமது திவான் சாமியாரை அவ்விடத்திலிருந்து அழைத்துப்போய் விசாரணைக் கைதிகளை வைக்கும் சப் ஜெயிலில் அடைக்க, அதன் காவற்காரன் தடித்த இரும்புக் கம்பிகளால் ஆன அதன் கதவுகளை மூடி வெளியில் பூட்டிவிட்டான். திவான் சாமியார் மறைவான ஒரு மூலைக்குப் போய்த் தரையின்மீது உட்கார்ந்து கொண்டார். அவரது மனத்தில் பல வகையான எண்ணங்களும் உணர்ச்சிகளும் எழுந்து உலப்பத் தொடங்கின. "ஈசா! இதுவும் உன் திருவிளையாடலா! என்னைத் திருடனாக்கி சிறைச்சாலைக்குள் அனுப்பி என் அழகைப் பார்க்கவேண்டு மென்பது உன் திருவுள்ளமா! அதையும் பார்த்து விட்டாய். இப்போது உன் மனம் குளிர்ந்ததா? நீ எப்படிப்பட்ட இழிவுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளாக்கினாலும், அது அக்கிரம மென்று சொல்ல நான் அருகனல்லன். நீ செய்வதெல்லாம் நீதியான காரியமாகத்தான் இருக்கும் அதன் உள்கருத்தை யூகித்தறிந்து கொள்ளத்தக்க ஞானம் எனக்கு இல்லையென்று சொல்ல வேண்டுமேயன்றி, வேறு எதையும் நான் சொல்வது சரியல்ல. நான் திவானாயிருந்த காலத்தில் எத்தனையோ, சப் இன்ஸ்பெக்டர்களும், சூபரின்டென்டெண்டுகளும், நீதிபதிகளும் எனக்கெதிரில் வந்து கைகட்டி வாய் புதைத்து நின்று என்னை வணங்கும்படி செய்ததும் நீயே இப்போது, அந்த நிலைமையைத் தலைகீழாய் மாற்றி யிருப்பதும் நீயே. வண்டி ஓடத்தில் ஏறுவது ஒரு காலம். ஓடம் வண்டியில் ஏறுவது இன்னொரு காலம். எத்தனையோ குற்றவாளிகளுடைய தண்டனையை முடிவாக ஒப்புக்கொள்ளும் அதிகாரத்தை நான் வகித்திருந்தேன். இப்போது நானே கைதியாகி சிறைச்சாலைக்குள் நுழைந்திருக்கிறேன். அந்தக் காலத்தில், நிரப

ராதியான மனிதர்கள் இவ்வாறுதான் தண்டனை யடைந்தார்களோ என்னவோ. அவர்களுடைய வதை இப்போது என்னைத் தாக்கி யிருக்குமென்றே நான் எண்ண வேண்டி யிருக்கிறது. இருந்தாலும், என்னை இரண்டொரு நாட்களோடு விட்டு விடப்போகிறாயோ, மாசக் கணக்கில், அல்லது, வருஷக் கணக்கில் இந்த நிலைமையிலேயே வைக்க விரும்புகிறாயோ என்பதுதான் தெரியவில்லை. நான் திடீ ரென்று இப்படி மாயமாய் மறைந்து போய்விட்டால், என்னையே சதமென்று நம்பி இருக்கும் என் விருத்தாப்பிய தந்தை எப்படி உயிர்வாழப் போகிறார். எனக்கு நேரிட்ட கதியை நான் அவருக்குச் சொல்லியனுப்பவும் மார்க்கமில்லை; சொல்லியனுப்பினாலும், அவர் அதைக்கேட்டு மனமுடைந்து வருந்தி உடனே இறந்து போனாலும் போய் விடுவார். ஆகையால், நான் நீடித்த காலத்துக்கு தண்டனை அடைந்தாலும், அதை அவருக்குத் தெரிவிக்காமல் இருப்பதே உசிதமாகப் படுகிறது. என்னிடத்தில் இருந்த பணத்தையெல்லாம் அவரிடத்தில் கொடுத்துவிட்டாவது வராமல் போனேன் அங்கே பணத்தை வைத்தால், எவரேனும் அதைக் கண்டு, அதை அப கரிக்க முயற்சித்து அதனால் கிழவரையும் கொன்று போட்டுவிடப் போகிறார்களே என்று பயந்தல்லவா, நான் பணத்தையெல்லாம் என்னிடமே வைத்துக் கொண்டிருந்தேன் இப்போது நான் சங் கிலியைத் திருடிவிட்டதாக அபாண்டப்பழி ஏற்பட்டிருப்பது போல, வேறு யாராவது தற்செயலாய் இழந்துள்ள பெரிய பணத் தொகையை நான் தான் திருடியவன் என்ற பழியும் வந்து சேர்ந்தா லும் சேரலாம். அப்போது இந்தப் பணமும் என்னை விட்டுப் போய்விடும். நல்ல வேளையாக திருவடமருதூரிலுள்ள ஸ்தாவர சொத்துகள் மறுபடி வந்து சேர்ந்திருக்கின்றன. அவைகளை வைத்துக்கொண்டு எப்படியாவது கிழவர் பிழைத்துப் போகலாம். என் சிற்றன்னை முதலியோரை அநேகமாய் மதுரையில் கண்டு பிடித்து விடலாமென்றும், அவர்களை மறுபடி கொணர்ந்து என் தந்தையிடம் சேர்த்து விடலாமென்றும் நினைத்து நான் நிரம்பவும் ஆவலும், ஆத்திரம் கொண்டு ஓடிவந்தேன், அதுதான் நிறை வேறே வழியிலலாமல் போய்விட்டது. நான் எவ்வளவுக் கெவ்வளவு அவசரப்பட்டேனே, அவ்வளவுக் கவ்வளவு முட்டுக்கட்டைவிழுந்து விட்டது. அதற்கு இன்னம் காலம் வரவில்லைபோ லிருக்கிறது. என் தந்தையை அவருடைய பழைய நிலைமைக்குக் கொண்டுவந்து வைத்து அவருடைய மனக்குறைகளை எல்லாம் நீக்கி, அவர் சந்

தோஷமாக இருக்கும்படி செய்ய நான் அவசரப்படுகிறேன். 'பதறாதே, மெதுவாய்ப் போ' என்று கடவுள் இதனால் காட்டுகிறார் போலிருக்கிறது. "சரி; நடப்பது நடக்கட்டும். என் கோரிக்கை பூர்த்தி யடையுமா அடையாதா என்பதை நாளையதினம் ஏற்படப் போகும் நியாயாதிபதியின் தீர்ப்பு நிச்சயிக்கட்டும்" என்று திவான் சாமியார் பலவாறு எண்ணமிட்டு நிலை கலங்கிக் களைத்துத் தளர் வடைந்து சுவரில் சாய்ந்திருக்க, முதல் நாளிரவு முழுதும் தூங்காம லேயே இருந்தவராதலால், அவர் சிறிது நேரத்தில் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்.

பிற்பகல் இரண்டு மணி சுமாருக்கு காவற்காரன் அவரை எழுப்பி, ஆகாரம் ஏதாவது தேவையா என்று வினவினான். திவான் சாமியாரது மனம் தமது தந்தையைப் பற்றி பெரிதும் ஏக்கமும் கவலையும் கொண்டு சகிக்க வொண்ணாத வேதனை யில் ஆழ்ந்திருந்த தாகையால் அவருக்கு போஜனம் வேண்டுமென்ற வேட்கையே தோன்ற வில்லை. ஆகவே அவர் தமக்குப் பசியில்லை யென்றும் ஆகாரம் தேவையில்லை யென்றும் கூறி விட்டார். அன்றைய தினம் இரவிலும் காவற்காரன் வந்து பகலில் கேட்டது போலவே ஒரு குரல் கேட்டுத் தனது பழியைக் கழித்துக்கொண்டு போய்ச் சேர்ந்து விட்டான். திவான் சாமியாருக்கு தமது அபார மான வியா குலத்தில் அன்னத்திலாவது தண்ணீரிலாவது புத்தி செல்லவே இல்லை. தாம் சந்தேகாஸ்பதமான நிலைமையில் அகப் பட்டுக் காண்டிருந்தமையால் மறுநாள் தம்மை நியாயாதிபதி எப்படி யும் ஆறுமாதம், அல்லது, ஒரு வருஷ காலத்திற்கு கண்டித்து விடு வார் என்ற ஒரு நிச்சயம் அவரது மனதில் எழுந்து அவரை வதைக்கத் தொடங்கியது. தாம் எவ்வித சமாதானம் கூறினாலும், அது செல்லுபடி யாகா தென்றும் அவர் உணர்ந்தார். தாம் அந்தக் குற்றத்தைச் செய்யவில்லை யென்று ருஜுப்படுத்தத் தமக்கு எவரும் சாட்சி இல்லை. ஆகவே, மறுநாள் தாம் தப்புவது துர்லபம் என்ற எண்ணமே அவரது மனத்தில் அடிக்கடி தோன்ற வாரம்பித்தது. தமக்கு நேரிட்ட கதியைத் தாம் தமது தந்தையிடம் தெரிவித்தால், அதுவே அவரைக் கொன்று விடுமென்றும் திவான் சாமியார் நினைத் தார். தாம் தமது இருப்பிடத்தை அவருக்குத் தெரிவிக்காமலேயே வருஷக்கணக்கில் அல்லது மாதக்கணக்கில் சிறைச்சாலையில் இருந் தால், அவர் தம்மைப்பற்றி அபாரமான கவலையும் ஏக்கமும் விசன மும் அடைந்து தம்மைத் தேடப் புறப்பட்டு விடுவாரென்றும்,

அதனால், அவருக்கு ஏதேனும் பெருதத பொல்லாங்கு சம்பவிக்கு மென்றும் அவர் உறுதியாக எண்ணினார் ஆகவே, அவர் விவரிக்க வொண்ணாத அபாரமான சஞ்சலங்கொண்டு நரக வேதனையடைந்து அன்றைய இரவைப் போக்கினார்.

மறுநாட் காலையில் காவற்காரர்கள் வந்து அதே கட்டிடத்தின் ஒரு பக்கத்தில் இருந்த கிணற்றண்டை அவரை அழைத்துப் போய் அவரது காலைக் கடமைகளை முடித்துக் கொள்ளும்படி கூற, அவர் தமது ஸ்நானததை முடித்துக்கொண்டு லக்ஷணமாய் விபூதி தரிதது தமது நியம நிஷ்டைகளை சுருக்கமாக முடிதது இரண்டொரு கைதண்ணீர் அருந்திவிட்டு மறுபடி சிறைச்சாலைக்குப் போய்ச் சேர்ந்தார்.

அன்றைய தினம் காலை சரியாகப் பதினொரு மணிக்கு நீதிபதி கச்சேரிக்கு வந்து சேர்ந்து, அந்தத் திருட்டு வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொண்டார். இரண்டு போலீஸ் ஜெவான்களினிடையில் தலை குனிந்தவராய் வந்த திவான் சாமியார் கைதிக்கூண்டில் நிறுத்தப் பட்டார். அந்த வழக்கில் சர்க்கார் கட்சியை நடததும்பொருட்டு பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் வந்து தயாராக காத்திருந்தார். அந்த நியாயஸ்தலத்தைச் சார்ந்த வக்கீல்களெல்லோரும் அந்த வேடிக்கையான வழக்கைக் கவனிக்க வேண்டுமென்று நிரம்பவும் ஆசையோடு உட்கார்ந்திருந்தனர். மேலப்பண்ணை முதலியாருடைய குழந்தையின் ஆபரணங்களை யாரோ ஒரு சாமியார் கழற்றிக் கொண்டாரென்றும், அவரிடம் லக்ஷக்கணக்கில் கொள்ளையடிக்கப்பட்ட பொருள் அகப்பட்டதென்றும் ஜனங்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டதில், அந்தச் செய்தி வெகு தூரம் வரையில் எட்டிப் போனமையால், விசாரணை காலததில் வேடிக்கை பார்க்க வேண்டுமென்று பல்லாயிரக்கணக்கில் ஜனங்கள் வந்து கச்சேரிக்குள்ளும், அதற்கு வெளியிலும் அடர்ந்து போயினர், காஷாய வஸ்திரம், ஜடைகள் முதலிய சந்நியாசிக் கோலத்துடனிருக்கும் ஒருவன் திருடிவிட்டானென்ற செய்தி மிகுந்த வியப்பை உண்டாக்கிய தாகையால், அதைக் கேள்வியுற்ற மற்ற பரதேசிகளும், பிச்சைக்காரர்களும் கூட வேடிக்கை பார்க்கும் பொருட்டு கச்சேரிக்கு வந்து சேர்ந்து விட்டனர். திவான் சாமியார் உண்மையில் நகைகளைத திருடிவிட்டாரென்றே சகலமான ஜனங்களும் உறுதியாக நம்பி இருந்தனராதலால், பெருத்த மகானைப் போன்ற

தோற்றத்தோடிருந்த மனிதர் அத்தகைய தீய காரியத்தை நடத்தி விட்டாரே என்ற ஆத்திரமும், பதைப்பும் காட்டி, காலம் கலி காலமையா! இப்படிப்பட்ட அக்கிரமம் நடந்தால், மழை ஏன் பெய்யும்? முன் காலத்தில், இராவண சந்நியாசி, அர்ச்சுன சந்நியாசி என்று ஏற்படவில்லையா! அவர்கள் பெண் பிடிக்கும் சந்நியாசிகள், இவர் கழுத்துமணி அறுக்கும் சந்நியாசி இப்பேர்ப்பட்டவர்களையெல்லாம் இலேசில் விடக்கூடாது. குதிரைச் சவுக்கை எடுத்துக்கொண்டு இரத்தம் பீரிட்டு அடிக்கிற வரையில் சக்கை சாறாய்ச் செய்துவிட வேண்டும் அதோடு இரண்டு வருஷம் மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனையும் கொடுத்துவிடவேண்டும். நியாயாதிபதி என்ன செய்யப் போகிறாரோ பார்க்கலாம்" என்று பலவாறு ஆத்திர மொழிகளை உபயோகித்த வண்ணம் விசாரணையின் தொடக்கத்தை நிரம்பவும் ஆவலோடு எதிர் பார்த்திருந்தனர்.

விசாரணை துவக்கமாயிற்று. பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் உடனே எழுந்து நின்று அந்த வழக்கின் சாராம்சத்தை எடுத்துக் கூறத் தொடங்கி, "நீதிபதியவர்களே! இந்த வழக்கில் அதிக சிக்கலான அம்சம் எதுவும் இல்லை. விஷயம் வெகு சுலபமானது. இந்தக் குற்றம் நடந்ததைப்பார்த்ததற்கு ஆயிரக்கணக்கில்சாட்சிகள் இருக்கிறார்கள் ஏராளமானசாட்சிகளைக்கொணர்ந்துவிட்டுகோர்ட்டாரவர்களுடைய அரிய பொழுதை வீணாக்க நாங்கள் விரும்பவில்லை. குற்றவாளியே தாம் இந்தக் குற்றத்தைச் செய்ததாக ஒப்புக்கொள்ளுவாரென்று நாங்கள் நம்புகிறோம். ஆகையால் தக்க மனிதராய்ப் பொறுக்கி நாலைந்து சாட்சிகளை மாத்திரம் கோரி இருக்கிறோம். அவர்களுடைய சாட்சியும் போதாதென்று நியாயாதிபதிகள் கருதும் பட்சத்தில் இன்னம் தேவையான சாட்சிகளை விடக் காத்திருக்கிறோம். இந்த வழக்கின் சாராம்சம் என்னவென்றால், கண்டியூர் பெருமாள் கோவிலில் இப்போது பிரம்மோத்சவம் நடந்துகொண்டிருக்கிறது. நேற்று எட்டாவது திருநாளாகையால் வெண்ணெய்த் தாழி சேவை நிரம்பவும் விமரிசையாக நடத்தப்பட்டது. சுவாமி கோவிலை விட்டுப் புறப்பட்டு ரஸ்தாவோடு வந்து கொண்டிருந்தார். சுமார் ஐம்பதினாயிரம் ஜனங்கள் சுவாமிக்கு முன்னும் பின்னுமாக நிறைந்து கூடவே வந்தனர். அப்போது கண்டியூர் மேலப்பண்ணை முதலியாருடைய சம்சாரம் தங்கள் கைக் குழந்தையுடன் சுவாமி தரிசனத்துக்கு வந்து ஜனக்கும்பலில் அகப்பட்டுக்கொண்டார். அவர்கள்

தக்க பெரிய மனிதர்களாகையால் அந்த அம்மாளின் மேலும் குழந்தையின்மேலும் விலையுயர்ந்த நகைகள் ஏராளமாக இருந்தன. நெருக்கடியான ஓரிடத்திற்கு அவர்கள் வந்த சமயத்தில் அம்மாளுக்குப் பின்புறமாக நின்றவர், முதுகுப் பக்கத்தில் தொங்கிய குழந்தையின் கைவிரலிலிருந்த வைர மோதிரத்தைக் கழற்றிக் கொண்டதன்றி, ஏதோ ஓர் ஆயுதத்தைக் கொண்டு குழந்தையின் கழுத்திலிருந்த சங்கிலியை வெட்டி எடுத்த சமயத்தில், அது குழந்தையின் கழுத்தில்பட குழந்தை திமிறவும் அழவும் ஆரம்பித்ததைக் கண்ட அம்மாள் அதன் கழுத்தைப் பார்க்க, சங்கிலி காணப்படவில்லை. குழந்தையின் கழுத்தில் வீக்கமும், இரத்தக்கசிவும் இருந்தன. உடனே அம்மாள் கூச்சலிட்டார்கள். உடனே ஜனங்கள் அம்மாளுக்குப் பக்கத்தில் நெருங்கி நின்ற மனிதர்களை வெளியில் விடாமல் வளைத்துக்கொண்டு ஒவ்வொருவராய்ச் சோதனை போட்டுப் பார்த்ததில், குழந்தைக்குப் பக்கமாக நின்று கொண்டிருந்த இந்த மனிதருடைய சட்டைப் பைக்குள் சங்கிலியின் ஒரு பாகம் இருந்து அகப்பட்டது. அதன் இன்னொரு பாகமும், வைர மோதிரமும் அகப்படவே இல்லை. அந்த இடத்தில் தரையை வெகுதூரம் வரையில் ஜனங்கள் கிளறிப் பார்த்தனர். அவை காணப்படவில்லை. இவரும் இன்னம் ஒருவரோ பலரோ சேர்ந்தும் இந்தத் திருட்டை நடத்தி இருக்க வேண்டுமென்பது பரிஷ்காரமாகத் தெரிகிறது. இவர்கள் ஆயுதத்தைக் கொண்டு தங்கச்சங்கிலியை வெட்டி எடுத்திருக்கிறார்கள். எடுத்தவுடன் அதன் கொக்கி கழன்று கொண்டதோ, அல்லது, இவர்களே அதைக் கழற்றி, தலைக்கு ஒரு பாகமாய் எடுத்துக் கொண்டார்களோ தெரியவில்லை. சங்கிலியின் இன்னொரு பாகம், வைர மோதிரம், நகையை வெட்டிய ஆயுதம் முதலியவைகளை எடுத்துக்கொண்டு மற்றவர் க்ஷணநேரத்தில் தப்பித்துக்கொண்டு அப்பால் போயிருக்க வேண்டுமென்றே நாம் யூகிக்கவேண்டியிருக்கிறது. இவர் குழந்தையின்மேலிருந்து நகையைக் கழற்றியதை யாரும் நேரில் பார்க்கவில்லை. திருடப்பட்ட சொத்தின் ஒரு பாகம் இவரிடமிருந்தது நிச்சயமாதலால், இவர் நகையைத் திருடிய குற்றத்தை யாவது, திருடுவதற்கு உடந்தையாயிருந்து திருட்டு சொத்தை வாங்கிய குற்றத்தையாவது செய்திருக்க வேண்டும். அதுவுமன்றி, இவர் உலகைத் துறந்து காஷாயந் தரித்துக் கொண்டிருக்கும் பரதேசி. இவர் உண்மையான துறவியாயிருந்தால், இவர் தம்மிடம் பணத்தையே வைத்துக் கொண்டிருக்க மாட்டார்.

இவருடைய உடம்பைப் போலீசார் சோதனை செய்து பார்த்த தில், இவருடைய இடுப்பில் கட்டப்பட்டிருந்த துணிப்பைக்குள் 167 ஆயிரம் ரூபாய் நோட்டுகள் இருந்து அகப்பட்டிருக்கின்றன. இவர் உண்மையான சாமியார் அல்லவென்பதும், வேஷக்காரச் சாமியார் என்பதும் நிச்சயமாகின்றன. அவ்வளவு பெரிய பணத் தொகை இவருக்கு எங்கிருந்து கிடைத்தது என்பதைப் பற்றியும் இவர் திருப்திகரமான சமாதானம் சொல்ல மறுக்கிறார். இவ ருடைய ஊர் பெயர் முதலியது எதைக் கேட்டாலும் இவர் வெளி யிடாமல் குதர்க்கமாக மறுமொழி கூறுகிறார் அநேகமாய் அந்தப் பெருத்த தொகையும் எவ்விடத்திலிருந்தாவது களவாடப்பட்ட தாகவே இருக்க வேண்டும். அந்தப் பணமும், களவாடப்பட்ட சங் கிலித் துண்டும் கோர்ட்டாரிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன. கோர்ட்டாரவர்கள் சாட்சிகளை விசாரித்து, கைதி என்ன குற்றம் செய்திருக்கிறதாகப் படுகிறதோ, அதற்குத் தக்க தண்டனையை அளிக்கும்படி கோருகிறேன். குழந்தையின் கையிலிருந்த வைர மோதிரத்தின் விலை ரூபாய் ஐந்நூறு முகப்புள்பட சங்கிலியின் விலை ரூபாய் இரண்டாயிரத்து முன்னூறு. இவையன்றி தக்க பெரிய மனிதருடைய குழந்தையின் உடம்பு காயப்பட்டுப் போய்விட்டது. இத்தனைக்கும் சேர்ந்து அவர்களுக்கு சுமார் ஐயாயிரம் ரூபாய் வரை யில் நஷ்ட ஈடு செய்து கொடுப்பதும் நியாயமாக இருக்கிறது. அது விஷயத்திலும் கோர்ட்டாரவர்கள் தக்க உத்தரவு பிறப்பிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். இதுதான் வழக்கின் சாராம்சம். இனி முதல் சாட்சி மேலப்பண்ணை முதலியாரைக் கூப்பிடலாம்'' என்று கூறிவிட்டு உட்கார்ந்து கொண்டார்.

உடனே மேலப்பண்ணை முதலியாரை சேவகன் கூப்பிட, அவர் தமது குழந்தையை எடுத்துக்கொண்டு வந்து சாட்சிக் கூண்டின் மேல் நின்று நியாயாதிபதிக்கு நமஸ்காரம் செய்தார். அவரது மினு மினுப்பான தேகமும், அவர் மீதிருந்த ஜரிகை வஸ்திரங்களும், வைரக் கடுக்கன், வைர மோதிரங்களும் ஒன்றுகூடி, அவர் தக்க பெரிய மனிதர் என்பதை எளிதில் வெளிப்படுத்தின. குழந்தையும் செழுமையான தோற்றமும் முகக்களையும் உடையதாய் இருந்த தன்றி, ஏராளமான ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது.

அவ்வாறு குழந்தையோடு மேலப்பண்ணை முதலியார் வந்து நிற்க, நீதிபதி அவரையும் குழந்தையையும் பார்த்து மேலான

அபிப்பிராயமும் மதிப்பும் கொண்டவராய் அவரிடம் நிரம்பவும் மரியாதையாகவே வார்த்தையாடத் தொடங்கினர். கச்சேரியில் கூடியிருந்த ஜனங்கள் எல்லோரும் குழந்தையோடு பெரிய மனிதர் கச்சேரிக்கு இழுக்கப் பட்டிருந்ததைக் கண்டு சகியாதவராய் அந்த ஆத்திரத்தை திவான் சாமியார் மீது திருப்பி தணிவான குரலில் அவரைத் தாறுமாறாக தூஷிக்கத் தொடங்கினர். மிகுந்த ஏக்கமும், கவலையும் கொண்டு வெட்கிச் சோர்ந்து தலை குனிந்து நின்ற திவான் சாமியார் தமது கடைக்கண் பார்வையால், மேலப்பண்ணை முதலியாரையும் அவரது குழந்தையையும் பார்த்து விட்டு முன்னிலும் அதிகமாய்க் கீழே குனிந்து கொண்டு, "ஈசா! இதுவும் உன் திருவிளையாடலா!" என்று தமக்குத்தாமே கூறிக் கொண்டார். அதன் பிறகு மேலப்பண்ணை முதலியாரிடத்தி லிருந்து பிரமாணத்தின் மேல் அடியில் கண்ட வாக்குமூலம் வாங்கப்பட்டது:—

நான் மேலப்பண்ணைக்குச் சொந்தக்காரர். என் பெயர் கந்தசாமி முதலியார். அந்தப்பண்ணை சுமார் லக்ஷம்ரூபாய்பெறும். நான் சர்க்காருக்கு வருஷத்தில் நிலவரி ரூபாய் 2500-ம், வருமான வரி ரூபா 300-ம் செலுத்துகிறேன். நேற்று நான் ஊரில் இல்லை; ஓர் அவசர காரியமாக வெளியூருக்குப் போய்விட்டு இன்று விடியற்காலையில் வீட்டுக்கு வந்தேன்; வந்தவுடன் இந்தச் செய்தியைக் கேள்வியுற்றேன். நேற்று நகை களவாடப்பட்ட சமயத்தில் நான் இல்லையாகையால், அதைப் பற்றி எனக்கு எந்தத் தகவலும் தெரியாது. இது என் குழந்தை; இதன்மேலிருந்த வைர மோதிரம், வைர முகப்புள்ள தங்கச்சங்கிலியும் களவாடப்பட்டுப் போனதாகக்கேள்வியுற்றேன். அவை இரண்டையும் எங்கள் ஊர் கிருஷ்ணபத்தர் செய்து கொடுத்தார். மோதிரம் ஐந்நூறு ரூபாய் அடங்கியது; சங்கிலி இரண்டாயிரத்து முன்னூறு ரூபாய் பிடித்தது. கோர்ட்டார் வசத்தில் இருக்கும் சங்கிலித்துண்டு என் குழந்தையின்மேலிருந்த சங்கிலியின் துண்டுதான். அவ்வளவுதான் எனக்குத் தெரியும், நானும் இந்தக் கைதியும் இதற்கு முன் ஒருவரை யொருவர் அறிந்தவர்களன்று; இவருக்கும் எனக்கும் பகைமையாவது வேறு எவ்வித சம்பந்தமாவது இல்லை. நேற்று நடந்த திருட்டு விஷயத்தை என் சம்சாரமும் மற்ற சாட்சிகளும் வந்து ருஜுப்படுத்துவார்கள்—என்று கூறினர்.

உடனே நியாயாதிபதி திவான் சாமியாரை நோக்கி, "ஏன் ஐயா! சாமியாரே! உம்முடைய கட்சியின் நியாயத்தை எடுத்துச்

சொல்ல நீர் வக்கீல் யாரையாவது அமர்த்த விரும்பவில்லையா?'' என்றார்.

திவான் சாமியார், "என்னுடைய நியாயம் எனக்கே சரியாக விளங்கவில்லை. நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டு, வக்கீல் என்ன செய்யப் போகிறார். ஆகையால் நான் வக்கீல் வைக்கவில்லை.'' என்றார்.

பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் நீதிபதியை நோக்கி, "ஆகா! எவ்வளவு குறும்புத்தனம் பார்த்தீர்களா! தன்னுடைய நியாயம் தனக்கே தெரியவில்லையாமே!'' என்றார். உடனே நீதிபதி கைதியை நோக்கி, "சரி; உம்முடைய இஷ்டம், அதிருக்கட்டும் இப்போது மேலப்பண்ணை முதலியார் வாக்குமூலம் கொடுத்ததைக் கேட்டீரே! இதில் ஏதாவது குறுக்கு விசாரணை செய்ய நீர் இஷ்டப்படுகிறீரா? எதையாவது கேட்க வேண்டுமானால் கேட்கலாம்.'' என்றார்.

திவான் சாமியார், "மேலப்பண்ணை முதலியாரவர்கள் பெரிய பிரபு வென்பது தெரிகிறது. இவர்கள் பிரமாணத்தின்மேல் கொடுத்த வாக்குமூலத்தில் முக்கியமான ஒரு விஷயத்தில் பொய் பேசி இருக்கிறார்கள். அதை நான் இப்போது எடுத்துக் காட்ட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. மற்றவர்களுடைய விசாரணையெல்லாம் முடிந்தபின், நான் குற்றவாளிதானென்று கோர்ட்டாரவர்களுக்குப் படும் பக்ஷத்தில், அப்போது இந்த சாட்சியை மறுபடி வரவழைத்து நான் குறுக்கு விசாரணை செய்வதற்கு மாத்திரம் அநுமதி கொடுக்க வேண்டும். அதோடு இன்னொரு வேண்டுகோளுமிருக்கிறது. இந்த சாட்சியின் சம்சாரமான அம்மாள் நேற்றைய தினமே கும்பலில் அகப்பட்டு நிரம்பவும் கஷ்டத்திற்கு இலக்காகி விட்டார்கள். ஸ்திரீ ஜாதியாகிய அவர்களை இத்தனை ஜனங்களுக்கு முன்னால் இந்தக் கச்சேரிக்கு வரும்படி செய்வது அவ்வளவு மரியாதையாகப் படவில்லை. அவர்கள் போலீசாரிடம் என்ன வாக்குமூலம் கொடுத்தார்களோ அதை அப்படியே நியாயாதிபதி யவர்கள் எடுத்துக் கொள்ளலாம். அதைப்பற்றி எனக்கு ஆட்சேபணையே இல்லை,'' என்று நிரம்பவும் மரியாதையாகக் கூறினார்.

அவர் கூறிய சொற்களைக் கேட்டு நியாயாதிபதியும் மற்றவர்களும் நிரம்பவும் ஆச்சரியமடைந்தனர். மேலப் பண்ணை முதலியார் பொய்ச் சாட்சி சொல்லி இருக்கிறார் என்று அவர் கூறியது எதைப்

பற்றி யென்று யோசிப்போரும், தக்க பெரிய மனிதரை அவர் அவ்வாறு தூஷித்து விட்டாரே என்று பதைத்து ஆத்திரங் கொள்வோரும், அவரது மனைவியை சாட்சியாக அழைத்து உபத்திரவப் படுத்த வேண்டா மென்று அவர் என்ன காரணத்தினால் சொல்லி யிருப்பாரென்று சந்தேகிப்போருமாய் எல்லோரும் சிறிது நேரம் குழப்பமடைந்து ஓய்ந்திருந்தனர்.

உடனே நியாயாதிபதி, "சரி; இவரை நீர் பின்பு வேண்டுமானால் குறுக்கு விசாரணை செய்ய நான் அநுமதி கொடுக்கிறேன். அந்த அம்மாளை வருவிதது வாக்குமூலம் வாங்கும் விஷயம் போலீசாரைப் பொறுத்தது. அவர் விசாரணையை நடத்தத்தான் வேண்டுமென்றால், நான் அப்படியே செய்தாக வேண்டும்" என்று கூறி பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரை நோக்கினார்.

உடனே பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் மிகுந்த ஆத்திரத்தோடு கனைத்துக்கொண் டெழுந்து, "கோர்ட்டார் அவர்களே! இந்த சாட்சி இந்தப் பிரதேசததில் மிகுந்த செலவாக்கும், மரியாதையும், பெருமைப் பாடும் வாய்ந்தவர், இவர் பொய் வாக்கு மூலம் கொடுததிருப்பதாக இந்தக் கைதி சொல்வது வேண்டுமென்றே இவரை இத்தனை ஜனங்களுக்கு முன் அவமானப் படுத்துவதற்கே யன்றி வேறல்ல. இவர் வாக்கு மூலம் கொடுத்திருப்பதில் விஷயம் ஒன்றுமே இல்லை. குழந்தையைக் கொண்டு வந்து காட்டி, நகைகளின் பெறுமானம், அவைகளைத தாம் செய்த இடம் முதலியவைகளைத்தான் இவர் சொல்லி யிருக்கிறார். இவருடைய சம்சாரததை விசாரிக்க வேண்டா மென்று அவர்களிடம் நிரம்பவும் அபிமானமும், மரியாதையும் வைத்தவர் போலப் பேசிய துவஞ்சகப் புகழ்ச்சியும் குறும்புத்தனமுமே யன்றி உண்மையான சொல்லல்ல. ஆகையால் கோர்ட்டா ரவர்கள் இதை கவனித்து, தீர்ப்பு எழுதும் போது, இந்த அவதூறுக்குத் தக்க பரிகாரம் இந்த சாட்சிக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டும்" என்றார்.

உடனே நியாயாதிபதி, "சரி; பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் ஆட்சேபிக்கிறார். அந்த அம்மாளைக் கூப்பிடுங்கள். விசாரிப்போம்" என்றார்.

உடனே சேவகன் மேலப்பண்ணை முதலியாருடைய சம்சாரத்தை அழைக்க, அந்த அம்மாள் மிகுந்த நாணத்தோடு தயங்கித்

தயங்கி வந்து சாட்சிக் கூண்டின்மேல் ஏறி நின்று கொள்ள, குமாஸ்தா சாட்சிப் பிரமாணத்தை அந்த அம்மாள் சொல்லும்படி செய்தார்.

பிறகு அந்த அம்மாள் தனது வாக்கு மூலத்தைக் கொடுக்கத் தொடங்கி, முதல் நாள் தான் குழந்தையுடன் சுவாமி தரிசனம்செய்யப்போனது, நகைகளை இழந்து கூச்சலிட்டது, சாமியாரது சட்டைப் பையிலிருந்து நகை அகப்பட்டது முதலிய விவரங்களை அதற்கு முன் பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் கூறியது போல எடுத்துரைத்தாள்.

உடனே நீதிபதி திவான் சாமியாரை நோக்கி, "ஐயா! இந்த அம்மாள் வாக்கு மூலம் கொடுத்ததைக் கேட்டீரே; இந்த அம்மாளிடம் ஏதாவது கேள்வி கேட்க விரும்புகிறீரா?" என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் சாட்சிக் கூண்டில் நின்ற ஸ்திரீயைப் பார்த்து நிரம்பவும் மரியாதையாகவும் அன்பாகவும் பேசத் தொடங்கி, "தாயே! உங்களைப் பார்த்தால் மகாலக்ஷ்மி போல இருக்கிறது. நீங்கள், நிரம்பவும் பாக்கியசாலி யென்பதைப் பற்றி சந்தேகமே இல்லை. இருந்தாலும், நீங்கள் ஏராளமான நகைகளை யணிந்து குழந்தையை எடுத்துக் கொண்டு இவ்வளவு பெருத்த ஜனக்கும்பலில் வந்ததனால், உங்களுக்கு என்னென்ன சங்கடங்கள் வந்தன பார்த்தீர்களா? பல ஜனங்களுக்கெதிரில் கச்சேரிவரையில் ஏறும்படியான துன்பத்தை, உங்களுடைய செய்கைதான் உண்டாக்கியது தாயே! உங்களுக்கு நான் அநந்த கோடி தரம் நமஸ்காரம் செய்கிறேன். இனிமேல் இந்த மாதிரி காரியம் செய்யாமல் முன்னெச்சரிக்கையாக நடந்து கொள்ளுங்கள். இவ்வளவுதான் நான் உங்களுக்குச் சொல்லத் தக்கது. இதைத் தவிர, நான் உங்களிடம் என்ன கேள்வியைக் கேட்கப் போகிறேன். நடந்ததை நடந்தபடி நீங்கள் சொல்லிவிட்டீர்கள். அம்மா! தாயே! நீங்கள் இங்கே நிற்கவேண்டாம். முன்னால் வீட்டுக்குப் போங்கள்" என்று நிரம்பவும் பரிவாகக்கூறி நமஸ்கரித்தார்.

அதைக் கேட்ட நீதிபதியும், மற்ற ஜனங்களும் திவான் சாமியார் ஒரு வேளை பைத்தியக்காரரா யிருப்பாரோ என்ற சந்தேகத்தைக் கொண்டனர். கைதி கூறிய ஒவ்வொரு வார்த்தையையும் அவ

ருக்கு விரோதமாகவே வியாக்கியானம் செய்யத் தயாராகக் காத்திருந்த பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் முன்னிலும் அதிக ஆக்கிரோஷத்துடன் எழுந்து நீதிபதியை நோக்கி, மேஜையைப் பலமாகத் தட்டி இந்தக் கைதியின் நடத்தையை நான் பலமாக ஆக்ஷேபிக்கிறேன். ஆரம்பத்திலிருந்தே இவர் குத்தலாகவும் குறும்பாகவுமே சாக்ஷிகளைத் தூஷிக்கிறார். கனம் கோர்ட்டார் இதற்கு இடம் கொடுக்கக் கூடாது'' என்று கூறி விட்டுக் கடுகடுத்த முகத்தோடு உட்கார்ந்து கொண்டார்.

உடனே நியாயாதிபதி திவான் சாமியாரைப் பார்த்து, "ஏனையா இப்படியெல்லாம் தாறுமாறாக நடந்துகொள்ளுகிறீர்? இது சட்ட சம்பந்தமான விவகாரங்களுக்கு மாத்திரம் இடங்கொடுக்கும் நியாயஸ்தலமென்பது உமக்குத் தெரியாதா? ஏன் இப்படிப் பைத்தியம் பிடித்தவர்போல சம்பந்தா சம்பந்தமில்லாமல் பேசுகிறீர்?'' என்றார்.

உடனே திவான் சாமியார் நிரம்பவும் பணிவாகவும் மரியாதையாகவும் பேசத் தொடங்கி, "திருட்டென்பதையே சொப்பனத்திலும் நினைக்காதவன் திருடனாவதும், சன்மார்க்கத்தையும், உண்மையையும் எடுத்துச் சொல்பவன், பைத்தியக்காரனாவதும், மரியாதையாகவும், வணக்கமாகவும் பேசுவது அவதூறும் தூஷணையும் ஆவதும் காலபலனேயன்றி, எப்போதும் நேரக் கூடியவைகளல்ல. குறுக்கு விசாரணை செய்யும்படி தாங்கள் கேட்டால், நான் இப்படித்தான் பைத்தியக்காரன் போல எதையாவது உளறிவைப்பேன். தாங்கள் என்னைக் கேட்காமலேயே இந்த விசாரணையை முடித்துத் தங்களுடைய தீர்ப்பைச் சொல்லிவிடுங்கள்'' என்றார்.

அதைக் கேட்ட நீதிபதி பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரை நோக்கி, "பார்த்தீரா? இப்போது என்னிடமே குத்தலாகப் பேசுகிறார். இவருடைய சுபாவமே இதுதான் போலிருக்கிறது. இவர் பைத்தியமாகவுமில்லை, தெளிவான அறிவுடையவராகவும் தோன்றவில்லை; இரண்டுங் கெட்டான். சரி; நாம் விசாரணையை மேலே நடத்துவோம்'' என்று கூறினார்.

திவான் சாமியார் எவரும் எதிர்பார்க்காதபடி ஏதோ வார்த்தைகள் சொல்வதை பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் குத்தலாகவும் குறும்பாகவும் வியாக்கியானம் செய்து, அவர் மேலப்பண்ணை

முதலியாரையும், அவரது மனைவியையும், முடிவில் நியாயாதிபதியையும் அவமதித்துப் பேசிவிட்டாரென்ற அபிப்பிராயமே அங்கிருந்த எல்லா ஜனங்களது மனத்திலும் பட்டதாகையால், அவர்கள் மிகுந்த ஆத்திரமும், ஆவேசமும் அடைந்து பதை பதைத்து திவான் சாமியாரை நன்றாக அடித்துக் கொன்றுவிட வேண்டுமென்று நினைத்துத் துடிதுடித்து நின்றனர்.

அதன் பிறகு வேறு மூன்று பிராசுதார்களும் தட்டாரக் கிருஷ்ணபத்தரும் ஒருவர்பின் ஒருவராய் வரவழைத்து விசாரிக்கப்பட்டனர். அவர்கள், அதற்கு முன் வாங்கப்பட்ட வாக்கு மூலங்களுக்கு அநுசரணையாகவே, தங்களது வாக்கு மூலங்களைக் கொடுத்தனர். ஒவ்வொருவரது வாக்கு மூலமும் முடிந்தவுடன் நீதிபதி திவானைப் பார்த்து குறுக்கு விசாரணை ஏதேனும் உண்டா என்ற பாட்டைப் பாடித் தீர்க்க, திவான் சாமியார் ஒன்றுமில்லையென்று கூறி விட்டார்.

உடனே நியாயாதிபதி பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரை நோக்கி, "இவ்வளவு பேர்தானா, இன்னம் சாட்சிகள் இருக்கிறார்களா?" என்றார்.

பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர், சாட்சிகள் ஆயிரக்கணக்கில் வேண்டுமானாலும் இருக்கிறார்கள். இப்போது இவர்கள் சொன்னதையே தான் மற்றவர்கள் சொல்லப் போகிறார்கள். ஆகையால், எல்லோரையும் வரிக்கவில்லை" என்றார்.

நீதிபதி:—இவர்களுடைய சாட்சியமே போதுமானது. இனி எதிர்கட்சியை விசாரிக்கலாம் ஐயா சாமியாரே! இவர்கள் சொன்னவைகளை யெல்லாம் கேட்டீரே! நீர் இந்தக் குற்றங்களைச் செய்தீரா இல்லையா?

தி. சாமியார்:—நான் எவ்விதமான குற்றமும் செய்ததாக சாட்சிகளுள் யாரும் சொல்லவில்லையே! குழந்தையின் மேலிருந்த நகைகளை நான் கழற்றியதைப் பார்த்ததாக யாரும் சொல்லவில்லையே! என் சட்டைப் பையில் நகையின் ஒரு துண்டு இருந்ததைக் கண்டு எடுத்ததாக இவர்கள் சொல்லுகிறார்கள். அதை நான் ஆதியிலிருந்தே ஒப்புக் கொண்டேன். இந்த சாட்சிகள் இவ்வளவு தூரம் அநாவசியமாக வந்து அலைய வேண்டியதே இல்லை; நீதிபதிக்கும்

அநாவசியமான சிரமம் ஏற்படவேண்டிய அவசியமே இல்லை. குழந்தையின் மேலிருந்த நகைகள் களவாடப்பட்டன வென்பது உண்மையான சங்கதி. அதில் ஒரு பாகம் என் சட்டைப்பையில் இருந்தது. அதை நான் திருடிப் போட்டுக்கொண்டேன் என்று யாரும் சொல்லவில்லை. அது எப்படி என் பைக்குள் வந்ததென்பது எனக்கே தெரியவில்லை. நகைகளை அபகரித்த திருடன் பக்கத்தி லிருந்த என் பையில் இந்தத் துண்டைப் போட்டுவிட்டுப் போயி ருப்பானென்றே நான் நினைக்கிறேன். ஏனென்றால், ஜனங்கள் என்னைப் பிடித்துக்கொண்டு, தன்னைத் துரத்தாமல் இருந்துவிடட்டு மென்றும், அதற்குள் தான் ஓடிவிடலாமென்றும் எண்ணியே அவன் இப்படிச் செய்திருக்கவேண்டும். ஆனால் இது யூகமே யன்றி அவன் என் பையில் போட்டதை நானும் பார்க்கவில்லை. அதனால் தான் என் நியாயம் எனக்கேவிளங்கவில்லை யென்று நான் கொஞ்ச நேரத்துக்கு முன் சொன்னது. ஆனால் உங்களுடைய சட்டம்வேறு மாதிரியாக இருக்கிறது. திருட்டுத சொத்து எவனிடத்திலாவது இருந்து அகப்பட்டால், அது நியாயமான வழியில் தன்னிடம் வந்து சேர்ந்ததென்று ருஜுப்படுதத வேண்டியது, அதை வைத்துக் கொண்டிருப்பவனைச் சேர்ந்த பொறுப்பு என்பதும் உங்கள் சட்டத் தின் விதி; அதன்படி பார்த்தால் நான் குற்றவாளியாகிறேன் என் பதில் சந்தேகமில்லை.

நீதிபதி:—சரி; நான் சொல்ல வேண்டியதை யெல்லாம் நீரே சொல்லிவிட்டீர். அப்படியானால், உமக்கு சாதகமாக சாட்சி சொல் லக் கூடியவர்கள் யாருமில்லையா? நான் தீர்ப்பை எழுதலாமா?

திவான் சாமியார்:—எனக்கு மனிதர் யாரும் சாட்சியில்லை. தெய்வந்தான் சாட்சி. நேற்று இந்தத் திருட்டு நடந்ததைப் பார்த் துக்கொண்டே வந்த பெருமாள் நிஜமான தெய்வம் என்பதைப்பற்றி சந்தேகமே இல்லை. அவரைத்தான் நான் நம்பி இருக்கிறேன். அவர் எப்படியும் வந்து நிஜததை மெய்ப்பிப்பார்.

நீதிபதி:—சட்டப்படி வியவகாரம் நடக்கையில், இந்த மாதிரி சொல்வதில் என்ன அநுகூலம் ஏற்படப் போகிறது. பிரயோசன மில்லை. நான் என் தீர்மானத்தை எழுதுகிறேன்—என்று கூறித் தமது பேனாவை எடுத்துத தீர்ப்பு எழுதத துவக்கினார். நியாயாதி பதி தாம் குற்றவாளி என்று தீர்மானித்து விட்டாராதலால்,

தம்மை ஒரு வருஷ காலத்திற்காவது தண்டித்து விடப்போகிறு ரென்று திவான் தீர்மானித்துக்கொண்டார். மற்ற ஜனங்களும் அது போலவே எண்ணிக் கொண்டனர்.

காகிதத்தை எடுத்து இரண்டொரு வரிகள் எழுதிய நீதிபதி உடனே நிறுத்திவிட்டு திவான் சாமியாரை நோக்கி, "ஐயா! இன்னொரு கேள்வி. நீர் ஆயிரம் ரூபாய் நோட்டுகளாய் 167 நோட்டுகள் வைத்திருந்தீரே; அவைகள் உம்மிடம் வந்தவகை யென்ன? நீர் சாமியாரான பொழுது அதற்கு முன் உம்மிடமிருந்த சொத்துகளை யெல்லாம் துறந்துதானே காஷாயம் வாங்கிக் கொண்டீர்? அதன் பிறகு நீர் என்ன தொழில் அல்லது வர்த்தகம் செய்தீர்? உமக்கு இவ்வளவு அபாரமான பொருள் எப்படிக் கிடைத்தது?" என்றார்.

அதே சமயத்தில் பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரும் எழுந்து நியா யாதிபதியை நோக்கி, "இன்னொரு விஷயமும் இருக்கிறது; இந்த வழக்கின் முதல் சாட்சியான மேலப்பண்ணை முதலியார் வாக்கு மூலம் கொடுத்த காலத்தில், அவர் பொய் வாக்கு மூலம் கொடுத்த தாக இவர் சொன்னார். அதுவும் தவறென்ற விஷயத்தை நீதிபதி யவர்கள் இந்த சந்தர்ப்பத்தில் விளக்கிவிட வேண்டும். இல்லாவிட் டால் தக்க பெரிய மனிதருடைய கண்ணியத்தை அது பாதிக்கும். அதுவுமன்றி அவருடைய சம்சாரம் வாக்குமூலம் கொடுத்த காலத் தில் மகா பாக்கியசாலி என்றும் மகாலக்ஷ்மி என்றும் வஞ்சகப் புகழ்ச்சி செய்து தூஷித்திருக்கிறார். அவைகளுக்கெல்லாம் இவர் பகிரங்கமான மன்னிப்புக் கேட்டுக்கொள்ளச் செய்யவேண்டும்" என்றார்.

உடனே திவான் சாமியார் நிரம்பவும் வணக்கமாக நியாயாதி பதியை நோக்கி, "முதல் சாட்சி மேலப்பண்ணை முதலியாரை முடி வில் குறுக்கு விசாரணை செய்யலாமென்று தாங்கள் எனக்கு அநுமதி கொடுத்திருக்கிறீர்கள். ஐந்து நிமிஷ நேரம் அவரைத் தாங்கள் மறு படி வரவழைத்துக் கூண்டின்மேல் நிறுத்தினால், தாங்கள் இருவரும் இப்போது கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் அவரைக் கொண்டே சமாதானம் சொல்விக்கிறேன்" என்றார்.

அவர் அவ்வாறு கேட்பாரென்று எவரும் எதிர்பார்க்கவில்லை யாதலால், அது நியாயாதிபதிக்கும், மற்ற எல்லோருக்கும் நிரம்ப

வும் அதிசயமாகத் தோன்றியது. அவர் பைத்தியங்கொண்ட மனிதராகத்தா னிருக்க வேண்டுமென்று எல்லோரும் தீர்மானித்துக் கொண்டதன்றி அவர் மேலப்பண்ணை முதலியாரிடம் என்ன தான் கேட்கப் போகிறாரென்பதை அறிய ஆவல் கொண்டு சந்தடி செய்யாமல் கவனித்துக் கொண்டிருந்தனர். நீதிபதியின் உத்தரவின்மேல் சேவகன் மறுபடி மேலப்பண்ணை முதலியாரை அழைத்து அவரை சாட்சிக் கூண்டின்மேல் நிற்க வைத்தான். முதலியாரும் பெரிதும், வியப்பும் பிரமிப்பும் அடைந்து அந்தச் சாமியார் தம்மிடம் என்ன விபரீதமான கேள்வியைக் கேட்பாரோ என்று அஞ்சிக் கலங்கியிருந்த கலவரத்தோடு அவரது முகத்தைப் பார்த்தார்.

திவான் சாமியார் அவரைப் பார்த்து, "முதலியார் ஐயா! நான் தங்களிடத்திலும், தங்கள் சம்சாரத்தினிடத்திலும் மரியாதைக் குறைவான வார்த்தைகளை உபயோகித்து தூஷித்து விட்டதாக போலீஸ் இன்ஸ்பெக்டர் அவர்கள் என்மேல் குற்றம் சுமத்துகிறார்கள். அதைத் தாங்கள் எவ்விதமாக எண்ணுகிறீர்களோ என்னவோ தெரியவில்லை. தங்களிடம் இப்போது லக்ஷம் ரூபாய் பெறுமான முடைய நிலம் இருக்கிறதல்லவா?" என்றார்.

சாட்சி, "ஆம். என்னுடைய நிலம் இபபோது லக்ஷம் ரூபாய் பெறும்" என்றார்.

திவான் சாமியார், "தாங்கள் இந்த அம்மாளைக் கலியாணம் செய்து கொண்டகாலத்தில் தங்களிடம் எவ்வளவு சொத்திருந்தது?;' என்றார்.

சாட்சி, "குறைவாகத்தான் இருந்தது" என்றார்.

திவான் சாமியார், "குறைவாக இருந்ததென்றால், இவ்வளவு தான் என்று குறிப்பாகச் சொல்ல முடியாதா?" என்றார்.

சாட்சி, "அவ்வளவு காலத்துக்கு முந்திய நிலைமையைப் புள்ளி விவரங்களுடன் சொல்ல, எனக்கு அவ்வளவு ஞாபகம் இல்லை?" என்றார்.

திவான் சாமியார், "அவ்வளவு காலமென்றால் அதிகமிராது போலிருக்கிறதே. உங்களுக்குக் கலியாணம் சுமார் ஏழு வருஷ

காலத்திற்குள்தானே நடந்திருக்க வேண்டும் அப்போதைய சங்கதி நினைவுக்கு வரவில்லையா?" என்றார்.

அதைக் கேட்ட சாட்சி, திடுக்கிட்டுத் திகைத்துப் போனார். யாரோ அன்னியர்போலக் காணப்பட்ட ஒரு பரதேசி தமக்குக் கலியாணமான விஷயங்களையெல்லாம் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறாரே என்று நினைத்து ஆச்சரியமடைந்தவராய், "ஆம், எனக்கு நினைவு உண்டாகவில்லை" என்றனர்.

திவான் சாமியார், "உங்களுக்கு நினைவு உண்டாகவில்லையா? அப்படியானால் நான் சொல்லுகிறேன் எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. அந்தக் காலத்தில் உங்களுக்கு இருந்த நிலம் சுமார் எழுநூறு எண்ணூறு ரூபாய் பெறும். அதையும் உங்கள் முன்னோர்கள் முன்னூறு ரூபாய்க்கு அடமானம் வைத்திருந்தார்கள். அப்போது நீங்கள் சுயமாக நானூறு ரூபாய் சம்பாதித்து வைத்துக் கொண்டிருந்தீர்கள். பிறகு ஓரிடத்திலிருந்து நாலாயிரத்து நானூறு ரூபாய் உங்களுக்கு சன்மானம் கிடைத்தது. கலியாணத்துக்கு முன் உங்கள் பெறுமானம் இவ்வளவுதானென்று நினைக்கிறேன்" என்றார்.

சாட்சியின் வாயிலிருந்து, "ஆம்" என்ற சொல் அவரையன்றி வெளிப்பட்டது. அதைக் கேட்ட ஜனங்களெல்லோரும், தங்கள் ஊர் மேலப்பண்ணை முதலியாரை வேண்டுமென்றே அந்தப் பரதேசி அவமானப் படுத்துகிறார் என்று நினைத்துக் கட்டிலடங்கா ஆவேசமும் பதைபதைப்பும் அடைந்து கோர்ட்டிலேயே அவரை அடித்துக் கொன்று போட்டுவிட வேண்டுமென்ற துணிவைக் கொண்டவர்களாய் நெருங்கினார்கள்.

உடனே பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் திவான் சாமியாரைப் பார்த்து நிரம்பவும் கோபமாகப் பேசத் தொடங்கி, "என்ன ஓய்! நாங்கள் உம்மிடம் கேட்ட கேள்விகளுக்கு உத்தரம் சொல்லாமல், நீர் மேன்மேலும் இந்த முதல் சாட்சியை அவமதிப்பாய்ப் பேசிக் கொண்டே போகிறீரே 'நாங்கள் கேட்டதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்றார்.

திவான் சாமியார், அமைதியாகவும் பணிவாகவும் பேசத் தொடங்கி, "ஐயா! தாங்கள் இருவரும் சேர்ந்து என்னிடம் மூன்று

கேள்விகள் கேட்டீர்கள். அவைகளுள் இரண்டு கேள்விகளுக்கு இந்த முதலியாரே சமாதானம் சொல்லி விட்டார் இன்னம் ஒன்றுதான் பாக்கி இருக்கிறது. அதையும் இவரே சொல்லச் செய்கிறேன்'' என்றார்.

நீதிபதி, ''எந்த இரண்டு கேள்விகளுக்கு இவர் சமாதானம் சொன்னார் ஐயா ?'' என்றார்

திவான் சாமியார், ''இந்த முதலியார் வாக்குமூலம் கொடுத்த காலத்தில், ''நானும் இந்தக் கைதியும் இதற்கு முன் ஒருவரை யொருவர் அறிந்தவர்களன்று'' என்று இவர் சொன்னார். இப்போது இவர்களுடைய பூர்வ வரலாற்றை நான் எடுத்துச் சொன்னேன். அதை ஆம் என்று இவர் ஒப்புக்கொண்டார். ஆகையால் இவர் கொடுத்த வாக்கு மூலத்தில் பொய்யான விஷயம் இருக்கிறதென்று நான் சொன்னதை அவதூறு என்று பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் கருதியது சரியல்ல வென்று இவரே சொல்வது போலாயிற்று. அதுவன்றி, நான் இவருடைய சம்சாரத்தை பாக்கிய சாலி என்றும் மகாலக்ஷ்மி யென்றும் சொன்னதும் அவதூறாகக் கருதப்பட்டது. இவர் அந்த அம்மாளைக்கலியாணம் செய்துகொள்ளு முன் சுயமாகப்பாடுபட்டு நானூறு ரூபாய் வைத்திருந்தார். இந்த அம்மாளைக்கட்டிக்கொள்ள வேண்டுமென்ற நினைவை இவர்கொண்டவுடனே இவருக்கு நாலாயிரத்து நானூறு ரூபாய் சன்மானம் கிடைத்தது இந்த அம்மாளைக்கலியாணம் செய்துகொண்டபிறகு, அது இப்போது லக்ஷம் ரூபாய்க்கு அதிகமாய்ப் பெருகி இருக்கிறது. கலியாணத்துக்கு முன் வெறும் கந்தனாக இருந்தவர் கலியாணம் ஆனபிறகு லக்ஷாதிபதியாகவும் மேலப்பண்ணைக் கந்தசாமி முதலியாராகவும் மாறி இருக்கிறார். ஆகவே, அந்த அம்மாளை மகாலக்ஷ்மி என்றும் பாக்கியசாலி யென்றும் நான் குறித்ததில் தப்பொன்றுமில்லை. நான் இவரையாவது இவருடைய சம்சாரத்தையாவது அவமரியாதைப் படுத்தவேண்டு மென்று இப்போதும் எண்ணவில்லை; இனியும் கனவில்கூட அதை நினைக்கக் கூடியவனல்ல.'' என்றார்.

அதைக் கேட்ட நீதிபதியும், பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரும் அப்படியே பிரமித்துப் போயினர். தாம் பைத்தியக்கார ரென்று மதித்த அந்தப் பரதேசி நிரம்பவும் சாமர்த்தியமாகவே பேசி எல்லோரையும் வென்று விட்டார் என்று உணர்ந்தனர். அந்தப் பர

தேசி கந்தசாமி முதலியாருடைய குடும்ப வரலாற்றை நன்றாகத் தெரிந்து கொண்டு, வேண்டுமென்றே எல்லா ஜனங்களுக்கும் முன்னால் பகிரங்கமாய் அவரை அவமானப்படுத்தி விட்டார் என்ற எண்ணமும் ஆத்திரமும் அவர்களது மனத்தில் எழுந்தன வானாலும் பரதேசி கூறியதில் குற்றம் கண்டு பிடிக்க வழி இல்லாமையால், தாம் என்ன செய்வதென்பதை யறியாமல் சிறிது நேரம் எதையோ சிந்திப்பவர்போலக் கீழே குனிந்திருந்தபடி மௌனம் சாதித்தனர். அங்கு நடந்த விபரீத சம்பாஷணையைக் கேட்டு ஜனங்கள் வியப்பும், பிரமிப்பும், கொதிப்பும் அடைந்து, மேலே என்ன நடக்கிறதென்பதை அறிய ஆவல் கொண்டு துடிதுடித்து நின்றனர்.

மேலப்பண்ணை முதலியாரது மன நிலைமையோ விவரிக்க வொண்ணாததாயிருந்தது. தமது பூர்வீக வரலாற்றை யெல்லாம் அந்தப் பரதேசி எப்படித் தெரிந்து கொண்டிருப்பா ரென்ற சந்தேகமே பெரிதாக எழுந்து அவரை உலப்பத் தொடங்கியது. சாமியாரது முகத்தை முதலியார் உற்று உற்றுப் பார்க்கிறார். தமது பூர்வீக வரலாற்றைத் தாம் தமது மனைவிக்கு மாத்திரம் ரகசியமாய்த் தெரிவித்து வைத்திருந்தாராதலால், அவள் மூலமாய் அது வெளிப்பட்டிருந்தாலன்றி வேறு யாருக்கும் தெரிய வகை யில்லை யென்று மேலப் பண்ணை முதலியார் நன்றாக உணர்ந்தவராய் சாமியாரை நோக்கி, "ஐயா! நீங்கள் யாரென்பது தெரியவில்லையே! நான் நிரம்பவும் ரகசியமாக வைத்திருக்கும் என் குடும்ப வரலாறு உங்களுக்கு எப்படித் தெரிந்தது? எந்தப் புண்ணிய மூர்த்தியின் கைராசியினாலும், ஆசீர்வாதத்தினாலும், அவர் எனக்குக் கொடுத்த செல்வம் இப்படி அமோகமாய்ப் பெருகியதோ, எந்தக் காருண்ய வள்ளலின் போதரவினால், நீங்கள் மகாலக்ஷ்மி யென்றும் பாக்கியசாலி யென்றும் அழைத்த இந்தப் பெண் எனக்கு சம்சாரமாகக் கிடைத்தாளோ அந்தப் புண்ணியாத்மா ஒருவருக்கே என் குடும்ப ரகஸியம் தெரிந்திருந்தது. அவரோ அகால மரணத்தினால் விண்ணுலக மடைந்து விட்டார். அப்படி இருக்க, வேறு எப்படி நீங்கள் இதைத் தெரிந்துகொண்டீர்கள்? தயவு செய்து சொல்லவேண்டும்" என்று நிரம்பவும் வணக்கமாகவும் விநயமாகவும் கூறித் தமது கைகளைக் குவித்து திவான் சாமியாரை நமஸ்கரித்தார். திருட்டுக் குற்றத்தைச் செய்தவரும், அவரையும் அவரது மனைவியையும்நிரம்பவும் அவமரியாதையாகப் படுத்தியவருமான கைதியிடம் முதலி

யார் அவ்வாறு பணிவாகவும் விநயமாகவும் நடந்துகொண்டது நியாயாதிபதி முதலிய எல்லோருக்கும் பெருத்த வியப்பைக் கொடுத்தது. அந்தச் சம்பாஷணையை நீதிபதி அநுமதிக்கக் கூடாதாயினும், விஷயம் அவருக்கும் சுவாரஸ்யமாக இருந்ததாகையால், அவர் பேசாமல் இருந்து விட்டார். மற்ற ஜனங்களும் ஆவலே வடிவாக நின்று நிரம்பவும் கவனமாக அந்த சம்பாஷணையைக் கவனித்தனர். கந்தசாமி முதலியார் மறுபடி உள்ளே அழைக்கப்பட்டவுடனே அவரது மனையாட்டியும் ஒரு பக்கமாக நின்று அவ்விடத்தில் என்ன நடந்ததென்பதைக் கவனமாய்க் கேட்டுக்கொண்டேயிருந்தாள்.

அப்பொழுது திவான் சாமியார் மேலப்பண்ணை முதலியாரை நோக்கி, "முதலியார் ஐயா! நான் இன்னான் என்பதை யாருக்கும் தெரிவிக்கக் கூடாது என்ற விரதத்தை நெடு நாளாக அநுஷ்டித்து வருகிறேன். ஆனால், சிலர் ஏதாவது குற்றத்தைச் செய்து விட்டு போலீசாரிடம் அகப்படாமல் மறைந்து திரியும் பொருட்டு சந்நியாசிக் கோலம் பூணுவது போல, நான் யாருக்கும் பயந்து கொண்டு இப்படி மறைந்து கொள்ளவில்லை. இவ்விடத்தில் சிலர் அபிப்பிராயப்பட்டது போல, நான் பெண் பிடிக்கும் அர்ச்சுன சந்நியாசியுமல்ல, கழுத்து மணி யறுக்கும் ருத்திராக்ஷப் பூனையுமல்ல, சில முக்கியமான காரணங்களால், நான் இந்த உலக விஷயங்களில் வெறுப்பும் விரக்தியும் அடைந்து எல்லாவற்றையும் துறந்து பரதேசிக் கோலம் பூண்டேன். இந்த நிலைமையில நான் என்னுடைய பழைய பெயர், பழைய பதவி முதலியவைகளைச் சொல்லிக் கொண்டே போனால், அதனால், எனக்கு கௌரவத்தைக் குறைவு ஏற்படுமே யன்றி அது அதிகரிக்காதென்று நினைத்து நான் எதையும் வெளியிடாமல் மறைத்து வைத்திருந்தேன். இப்போது நான் திருட்டுக் குற்றத்தைச் செய்து விட்டதாக இங்குள்ளோர் அபிப்பிராயப்படுகிறதாகத் தெரிகிறதாகையால், இதனால் எனக்குப் பெருத்த இழிவும் களங்கமும் ஏற்படுவது நிச்சயம். நீரும் நானும் பழைய சிநேகிதர்களாகையால், உம்மிடம் மாத்திரம் நான் இன்னான் என்பதை வெளியிட்டால், நான் இந்தத் திருட்டை நடத்தியிரேன் என்பது உம்முடைய மனசுக்காவது அவசியம் படுமல்லவா. நீதிபதியினால் நான் தண்டனையடைந்து சிறைச்சாலைக்குப் போனாலும் பிற்பாடாவது நீர் உண்மையை இந்த ஊராருக்குத் தெரிவிப்பீரல்லவா. அதைக் கருதி நான் இன்னான் என்பதை உமக்கு மாத்திரம் ரகஸியமாகத் தெரிவிக்கத் தடை

யில்லை. அது மாத்திர மல்ல. இதற்கு முன் நான் உம்மோடு பழகிய காலத்தில் நீர் இருந்ததற்கு, இப்போது அமோகமாய் விருத்தியடைந்து நிரம்பவும் சிலாக்கியமான பதவியி லிருப்பதைக் காண என் மனம் தாங்க முடியாத பரம சந்தோஷமடைகிறது. அதுவுமன்றி, நான் இன்னான் என்பதை அறிந்தால், நீரும், உம்முடைய மனையாளும் நிரம்பவும் சந்தோஷ மடைவீர்களாகையால், அந்த சந்தோஷத்தை இல்லாமல் செய்யவும் நான் விரும்பவில்லை. இந்த முகாந்தரத்தைக் கொண்டும் என் பெயர் முதலிய விவரங்களை உம்மிடம் வெளியிடுகிறேன். ஆனால், அதை நீர் எவ்விடத்திலும் பகிரங்கப்படுத்துவதில்லை யென்ற நிபந்தனைக்கு இணங்கினால், அதை நான் இப்போதே வெளியிடுகிறேன்.'' என்றார்

அதைக் கேட்ட மேலப்பண்ணை முதலியார் அப்போதே பல வகைப்பட்ட யூகங்களினாலும் நினைவுகளினாலும் உலப்பப்பட்டவராய்க் கட்டிலடங்கா ஆவலும் பதைபதைப்பும் கொண்டு, "அப்படியே ஆகட்டும். தங்களுடைய நிபந்தனைக்கு நான் கட்டுப்படுகிறேன்.'' என்றார்.

திவான் சாமியார், "சரி: அப்படியானால் எனக்குப் பக்கத்தில் வாரும். உம்முடைய காதில் ரகஸியமாகச் சொல்லுகிறேன்'' என்றார்.

உடனே மேலப்பண்ணை முதலியார் சாட்சிக்கூண்டை விட்டிறங்கி, நிரம்பவும் பரபரப்பாய் திவான் சாமியாரிடம் சென்றார். தாம் சட்டப்படி செய்ய வேண்டிய விசாரணைக்குப் புறம்பான அந்தனைய நடவடிக்கைகளுக்குத் தாம் இடங்கொடுப்பது ஒழுங்கல்லவென்று நீதிபதி உணர்ந்தாராயினும், அந்தக் கைதியின் மர்மத்தைத் தாமும் அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலும் ஆசையும் கொண்டவராய் விபப்பே வடிவாக மௌனமாய் இருந்து விட்டார். பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரும், மற்ற எல்லா ஜனங்களும் அவ்வாறே மிகுந்த ஆவலும் ஆச்சரியமும் அடைந்து அவர்களது சம்பாஷணையைக் கவனித்த வண்ணம் ஸ்தம்பித்து நின்றனர். அந்த இடம் முற்றிலும் நிச்சப்தமாக இருந்தது.

மேலப்பண்ணை முதலியார் திவான் சாமியாருக் கருகில் செல்ல, பின்னவர் முன்னவரது காதில் இரண்டு மூன்று நிமிஷம் வரையில் ஏதோ சில வரலாற்றைக் கூறினார். அதைக்கேட்ட

வுடனே, மேலப்பண்ணை முதலியார் கட்டுக் கடங்காத பெருத்த பிர வாகம் போல, அவரது மனததில் அபாரமான மகிழ்ச்சியும், ஆச்சரியமும், ஆனந்தமும் பொங்கிக் குபீரென்று கிளம்பின. அவரது உடம்பு மின்சார சக்தியால் ஊக்கப்பட்டது போல கட்டிலடங்காத மகா அமிதமான துடிதுடிப்பும் உற்சாகமும்கொண்டு பறந்தது. சிகை முதல் நகம் வரையில் உரோமம் சிலிர்தது ஆநந்தத் தாண்டவமாட, ஜிலீரென்று ஒருவித ஸுகம் அவரது உடம்பு முழுதும் பரவியது; அவர் தமது உன்னத நிலைமையையும் மறந்தார்; அது நியாயஸ்தல மென்பதையும் மறந்தார்; ஆயிரக் கணக்கான ஜனங்கள் தம்மைக் கவனித்துக்கொண் டிருக்கிறார்க ளென்பதையும் மறந்தார். அவர் முற்றிலும் சன்னதங் கொண்டவர்போல மாறி, "ஆ! அப்படியா! என் காருண்ய வள்ளலா மறுபடி இந்த அடிமைக்குத் தரிசனம் கொடுக்கிறது! ஆ! இது நிஜந்தானா! அடாடா! என்ன பாக்கியம்! என்ன பாக்கியம்!" என்று கூறிக் கீழே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, "என் குல விளக்கை ஏற்றிவைத்த என் உயிர்தெய்வத்தை இந்த ஜென்மத்தில் காணப்போகிறேனா என்று முற்றிலும் நம்பிக்கையற்று ஏங்கிக் கிடந்த என்னை மறுபடி உய்விக்க வந்த என் அன்னதாதாவே! நானும் என் சம்சாரமும் தங்களை நினைக்காத நிமிஷம் உண்டா! "இனி நானும் என் குடும்பததாரும் சாப்பிடப் போகும் சாப்பாடு தங்களால் கொடுக்கப்பட்ட பிச்சை யாதலால் நாங்கள் ஒவ்வொரு வேளையிலும் சாப்பிட முதல் கவளம் எடுக்கும்போது "எங்களுக்கு அன்ன மளித்த வள்ளல் நீடூழி வாழவேண்டு மென்று சொல்லி விட்டே சாப்பிடுவோம்" என்று அன்றைய தினம் இரவில நான் தங்களை விட்டுப் பிரிந்த காலத்தில் சொன்ன சொலலை இன்றைக்கும் நிறைவேற்றிக் கொண்டே வருகிறோம். என் அண்ணலே! என் ஆண்டவனே! கலிகாலத்துப் பேசுந் தெய்வமே! தங்களுக்கும் இப்பேர்ப்பட்ட கோலம் ஏற்பட்டதா? தங்களையும் ஈசன் சோதிக்க நினைத்தானா! ஆ! என்னப்பனே! பெருந்தகைக் குன்றமே! அருங் குணப் பெரியீர்! தங்களை ஈசன் சோதனைக்கு ஆளாக்குகிறா னென்பது பிரததியக்ஷமாகத தெரிகிறது! இதுவரையில் ஈசன் தங்களை வேறு பலவகையில் சோதனைக்கு ஆளாக்கியது போதாதென்று இப்போது என் மூலமாகவும் சோதனை செய்து விட்டானே! நானும், என் சம்சாரமும் தங்கள் விஷயத்தில் எப்பேர்ப்பட்ட மகா கொடிய பாதகம் செய்துவிட்டோம். எங்கள் குலதெய்வமாக மதிததுத்

தங்களை வணங்கக் கடமைப் பட்டவர்களான நாங்கள் நிரபராதி யான தங்கள் பேரில் திருட்டுக் குற்றம் சுமத்தி என்றைக்கும் மீளாத ரௌரவாதி நரகத்திற்குப் போக வழி தேடிக் கொண்டோமே!'' என்று தேம்பித் தேம்பி அழுதவண்ணம் பிரலாபித்துக் கூறி தமது மனைவியை நோக்கி, "ஏ அம்மாக்கண்ணு! நீ எப்பேர்ப்பட்ட பஞ்சமா பாதகம் செய்து விட்டாய் தெரியுமா! நான் தினந் தினம் எந்த மகானைப்பற்றி உன்னிடம் வாய் ஓயாமல் ஸ்தோத்திரம் செய்து பிரஸ்தாபித்துக் கொண்டிருப்பேனோ, அந்தப் புண்ணிய புருஷரல்லவா இவர்கள்! வா இப்படி, வந்து இவர்களுடைய காலில் விழுந்து, நீ அறியாமல் செய்த பெரும் பிழையை மன்னித் தருளும்படி வேண்டிக் கொள்'' என்று நிரம்பவும் தழுதழுத்து உருகிய குரலில் கூற, அதைக் கேட்ட நற்குணவதியான அவரது மனையாள் ஓடோடியும் சென்று பயபக்தி விநயத்தோடு திவான் சாமியாருக் கெதிரில் மண்டி யிட்டுப் பன்முறை வணங்கி யெழுந்து குனிந்து நின்று, "சுவாமிகளே! தெரியாத்தனத்தினால் இந்த ஏழை தங்கள் விஷயத்தில் பெரிய அபசாரம் செய்துவிட்டேன்! பிழை பொறுத்தருள வேண்டும், ஆண்டவனே!'' என்று கூறித் தனது கன்னங்களில் பன்முறை அடித்துக் கொண்டாள்.

அவர்க ளிருவரும் தம்மிடம் நடந்துகொண்ட மாதிரியைக் கண்ட திவானும அபாரமாகப் பொங்கி யெழுந்த தமது மன வெழுச்சியைத் தாங்கமாட்டாதவராய் ஆநந்தக் கண்ணீர் சொரிந்து விம்மி விம்மி யழுகிறார். நீதிபதி முதல் சகலமான ஜனங்களும் திடுக்கிட்டுப் பிரமித்துப் போயினர். எல்லோருக்கும் உரோமம் சிலிர்த்துப் போயிற்று. அந்த மகா உருக்கமான காட்சியைக் கண்டு பெரும்பாலோர் ஆநந்தக் கண்ணீர் விடுத்து, "ஐயோ! என்னப்பா! முதலியாருடைய குணத்தழகே அழகப்பா! அவரைவிட அவ ருடைய சம்சாரம் பன்மடங்கு சிறந்தவளாகவே இருக்கிறாள்! இவர் களுடைய நிலைமை என்ன! யோக்கியதை யென்ன! ஆதியில் இவர் களுக்கு உதவி செய்தவரைக் கண்டவுடன், இவர்கள் வீண் கௌரவத்தை பாராட்டாமல், தங்கள் பணிவையும், நன்றியறிதலையும் எப்படிக் காட்டுகிறார்களப்பா! இவர்களல்லவா உத்தமமான மனி தர்கள்! இவர்களுக்கு ஈசுவரன் ஒரு நாளும் ஒரு குறைவையும் வைக்கமாட்டான். இந்தச் சாமியார் இதற்கு முன் உன்னதமான நிலைமையி லிருந்து அமோகமாக வாழ்ந்தவர்போ லிருக்கிறது. ஆதியிலிருந்து இவர் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் இவர் கேவல

மான பிச்சைக்காரப் பரதேசியல்லவென்பதை நன்றாகக் காட்டியது. கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்று சொல்வது பொய் யாகுமா'' என்று ஒருவர்க்கொருவர் கூறிக்கொண்டனர்.

புருஷரும் மனையாளும் மாறிமாறித் தாக்கு நமஸ்காரம் செய்து, தம்மை அபாரமாக ஸ்தோத்திரம் செய்து கொண்டே இருந்ததைக் கண்ட திவான் சாமியார் மேலப்பண்ணை முதலியாரின் மனையாளை நோக்கி, "அம்மா! உங்களை நான் மகாலக்ஷ்மியென்றும், பாக்கியவதி யென்றும் சொன்னதை எல்லோரும் குற்றமாகக் கருதி ஞர்கள். நான் சொன்னது மெய்யென்பதை ருஜுப்படுத்தவே நான் உங்கள் புருஷருடைய பழய வரலாற்றைச் சொல்ல நேர்ந் தது. உங்களை நான் வேண்டுமென்று அவமானப்படுத்தியதாக எண்ண வேண்டாம். நீங்கள் இத்தனை ஜனங்களுக்கும் முன்னால் வந்து நிற்பதைக் காண எனக்கு சகிக்கவில்லை; நீங்கள் முதலில் உங்களுடைய வீட்டுக்குப் போங்கள். என்மேல் நீங்கள் திருட்டுக் குற்றம் சுமத்தியதாக நான் நினைக்கவே இல்லை. என்னுடைய கால பலன் இப்படிப்பட்ட பொய்த் தோற்றங்களையெல்லாம் உண்டாக் கிக் கொண்டே போகின்றது. ஆகையால் நான் யாரையும் நோவதற் கில்லை. அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். அம்மா! தாயே! நீங்கள் உங்களுடைய குழந்தையை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போங்கள்'' என்று கூற, அதைக் கேட்ட பெண்மணி தமது புருஷரது முகத்தை நோக்கினாள். அவரும் அதை அநு மதித்ததுபோலக் காட்டிக்கொள்ள, உடனே அந்த ஸ்திரீ மறுபடி பயபக்தியோடு குனிந்து திவானை நமஸ்கரித்த பின் அவ்விடத்தை விட்டு வெளியில் போய் விட்டாள்.

உடனே திவான் சாமியார் மேலப்பண்ணை முதலியாரை நோக்கி, "முதலியார் ஐயா! இது நீதிஸ்தலம் என்பதை நாம் மறந்து நம்மு டைய குடும்ப விஷயங்களையெல்லாம் இங்கே பேசிக்கொண்டிருப் பது உசிதமல்ல நீதிபதியவர்கள் நிரம்பவும் பெருந்தன்மை வாய்ந் தவர்களாயிருப்பதுபற்றி, நாம் இவ்வளவு தூரம் சம்பாஷிக்க அவர்கள் அவகாசம் கொடுத்தார்கள் அவர்களெல்லோரும் காத் திருப்பதால், நாம் மேன்மேலும் இந்த வழக்கிற்கு சம்பந்தப்படாத விஷயங்களைப் பேசிகொண்டே போவது ஒழுங்கல்ல. அவர்கள் என்னிடம் கேட்ட கேள்விகளில் இன்னம் ஒன்று பாக்கி இருக் கிறது. அதாவது இவ்வளவு பெருத்த தொகை என்னிடம் எப்படி

வந்த தென்பதற்கு இவர்களுக்குத் திருப்திகரமான சமாதானம் வேண்டு மென்றார்க ளல்லவா. அதையும் சொல்லுவதே இப்போது பாக்கியிருக்கிறது. நான் எல்லாவற்றையும் உண்மையில் துறந்து விட்டேன். ஆனாலும், என்னிடம் மிச்சமிருந்த இந்தப் பெருத்த தொகையை தக்க சற்பாத்திரமாகப் பார்த்துக் கொடுத்து விட வேண்டுமென்ற கருத்துடனேயே நான் இதை எடுத்துக்கொண்டு வந்ததன்றி, இதை என் சொந்த உபயோகத்திற்குச் செலவு செய்வதற்கன்று'' என்றார்.

உடனே மேலப்பண்ணை முதலியார் நீதிபதியை நோக்கிப் பணிவாக மொழியத் தொடங்கி, "நியாயாதிபதி யவர்களே! இந்தப் புண்ணியவான் மகா பெரிய அந்தஸ்திலும் செல்வத்திலும் இருந்தவர்கள். நளன், தருமராஜன், அரிச்சந்திரன் முதலியோர் நாடு நகரங்களையும் பெண்டு பிள்ளைகளையும் இழந்து வந்ததுபோல வந்திருக்கிறார்கள். காக்கை உட்காரப் பனம்பழம் வீழ்ந்ததுபோல, இவர்களிடம் சங்கிலித் துண்டு இருந்ததைக் கண்டு, எல்லோரும் இவர்களைத் திருடரென்று பிடித்துக் கொண்டார்களே யன்றி வேறல்ல. இவர்கள் இனி ஒரு க்ஷணநேரம் கைதிக் கூண்டில் நின்றால், தர்மதேவதை நம்மெல்லோருடைய கண்களையும் அவித்து விடும். ஆகையால் தயவு செய்து உடனே இவர்களை விட்டுவிடுங்கள். எங்களுடைய நகை போனால் போகிறது. இவர்களிடம் இப்போது இருப்பதைப்போல எத்தனையோ பங்கு அதிகமான செல்வத்தை வைத்து ஆண்டவர்கள்! நான் வைத்து ஆளும் மேலப்பண்ணை இவர்கள் கொடுத்த பிச்சையேயன்றி வேறல்ல. என் சம்சாரத்தின் மேலும் என் குழந்தையின் மேலும் இருக்கும் நகைகளெல்லாம் இவர்கள் கொடுத்த பணத்தினால் ஆனவைகளே. நிரபராதியான இந்தப் பரம புருஷரை இனியும் அவமானத்துக்கு ஆளாக்காமல் நீதிபதி யவர்கள் உடனே அனுப்பிவிட வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.'' என்று நிரம்பவும் நயமாகவும் உருக்கமாகவும் கேட்டுக் கொண்டார்.

உடனே நீதிபதி சிறிதுநேரம் தமது சிரத்தைத்தடவி ஆழ்ந்து யோசனை செய்தபின் பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரது முகத்தை நோக்கினார். அவர் தமது அபிப்பிராயத்தை அறிய விரும்புகிறாரென்று உணர்ந்து கொண்ட பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் எழுந்து நின்று, "நமக்குக் கிடைத்திருக்கிற சாட்சியங்களின்மேல் நாம்

இதற்கு முடிவு சொல்ல வேண்டுமன்றி, கைதிக்கும் முதல் சாட்சிக்குமுள்ள ரகஸியமான சம்பந்தங்களையெல்லாம் ஓர் ஆதாரமாக எடுத்துக்கொள்ள சட்டம் இடங்கொடுக்காதென்று நினைக்கிறேன். கைதி ரகஸியமாய் ஏதோ விஷயத்தை சாட்சியின் காதில் தெரிவித்தாரென்பது உண்மைதான். அது எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். "நீர் இந்த மாதிரி ஒரு கட்டுக் கதையைச் சொல்லி என்னைத் தப்பவைத்துவிடும், என்னிடமுள்ள பணத்தில் ஏதாவது உமக்குச் சன்மானம் செய்கிறேன்" என்று இந்தக் கைதி இவருடைய காதில் சொன்னாலும் சொல்லி இருக்கலாமென்று இங்கிருக்கும் ஜனங்களில் யாராவது ஒருவர் சொல்லுகிறதாக வைத்துக் கொள்ளுவோம். அப்படி வியாக்கியானம் செய்வதற்கும் இடம் இருக்கிறதல்லவா. ஆகையால், இதையெல்லாம் கோர்ட்டாரவர்கள் யோசனை செய்து, சட்டப்படி நீதி செலுத்த வேண்டுமாய் நான் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று கூறிவிட்டு உட்கார்ந்து கொண்டார். உடனே நீதிபதி மேலப்பண்ணை முதலியாரைப் பார்த்து, ஐயா! முதலியாரே! நீங்கள் இப்போது இவ்விடத்தில் நடந்துகொண்ட மாதிரியிலிருந்து, இந்தப் பரதேசி இதற்கு முன் தக்க பெரிய நிலைமையிலிருந்தவரென்பதும், இவர் உங்களுக்குப் பொருளுதவி செய்தாரென்பதும், இப்போது இவர் ஏதோ விரக்தியின் பேரில் உலகைத் துறந்து இப்படி வந்திருக்கிறாரென்பதும், இவர் குழந்தையின் நகைகளை களவாடவில்லையென்பதும் உண்மையாக இருக்கலாமென என் மனசில் படுகிறது. பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் செப்த விபரீதமான வியாக்கியானத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. கைதி இரண்டொரு நிமிஷம் ஏதோ சில வார்த்தைகளை சாட்சியின் காதில் தெரிவித்தவுடனே, அவர் தம்முடைய மேம்பாட்டையும் கவனிக்காமல், இத்தனை ஜனங்களுக்கும் எதிரில் வேண்டுமென்று இப்படிப் பொய் நாடகம் நடிப்பது அசம்பாவிதமான காரியம். இந்தக் கைதி மகா புத்திசாலியாகவும், ஆழ்ந்த விவகார ஞானமுடையவராகவும் இருக்கிறார். இந்தக் குற்றத்திற்கு இவருக்கு தண்டனை கிடைத்தால், சுமார் ஆறுமாத காலத்திற்கு தண்டனை கிடைக்குமென்பது இவருக்குத் தெரிந்திருக்கும். அதற்காக இவர் சாட்சிக்கு லஞ்சம் கொடுப்பதென்றால், அதிகமாய்க் கொடுத்தால், சுமார் நூறு ரூபாய் கொடுப்பார்; அல்லது, ஆயிரம் ரூபாயே கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். மேலப்பண்ணை முதலியார் சுமார் ஒரு லக்ஷம் ரூபாய்க்கு ஐவேஜியுள்ள

பெருத்த தனிகர்; மிகுந்த கண்ணியம் வாய்ந்தவர். அவர் அந்த லஞ்சத் தொகைக்கு ஆசைப்பட்டுத் தம்மையும் தம் சம்சாரத்தையும் இப்பேர்ப்பட்ட இழிவுக்கு ஆளாக்க உடன்பட்டிருக்க மாட்டாரென்பது நிச்சயம். ஆகவே, பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் கூறிய வியாக்கியானத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. ஆனாலும் இன்னொரு முக்கியமான விஷயமும் இருக்கிறது திருடப்பட்ட சொத்து ஒருவரிட மிருக்குமானால், அது தம்மிடம் நியாயமான வழியில் வந்ததென்பதற்கு தக்க ருஜூ கொடுக்காவிட்டால், அவர் அதைத் திருடியதாகவோ, அல்லது, திருட்டு சொத்தை வாங்கியதாகவோ கருதப்படுவதோடு, அதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் தண்டனையை யடைய வேண்டியவராகிறார் அந்த நிலைமையில்தான் இப்போது நம்முடைய சாமியார் இருக்கிறார். எழுத்து மூலமாக என்னிடம் இருக்கும் சாட்சியத்தைப் பார்த்தால் இவர், குற்றவாளி யென்று நான் தீர்ப்புச் சொல்லவேண்டும். என் மனசாட்சிப்படி பார்த்தால், இவர் திருடரல்ல வென்று விடுவிக்க வேண்டும் நான் என் மனச்சாட்சி ஒன்றை மாத்திரம் பிரதானமாகக் கொண்டு, எழுத்து மூலமாக சாட்சியங்களை அடியோடு நிராகரிப்பதும் சட்ட விரோதம். ஆகையால், இரண்டையும் கருதி நான் இவருக்கு ஏதாவது சொற்ப தண்டனை கொடுப்பதே நியாயமென்று கருதுகிறேன் இவரிடத்தில் இருந்து எடுக்கப்பட்ட பெருத்த தொகை இவருக்குச் சொந்தமானதென்றே நான் எண்ணுகிறேன் அது சம்பந்தமாக இவருக்கு விரோதமான சாட்சியம் எதுவுமில்லை யாகையால் என் வேலை சுலபமாகி விட்டது. அந்தத் தொகையை இவரிடம் கொடுத்துவிட வேண்டுமென்று நான் தீர்மானிக்கிறேன் எல்லோரும் கொஞ்சநேரம் இருங்கள் என் தீர்ப்பை இப்பொழுதே எழுதிப் படித்து விடுகிறேன்" என்று கூறிவிட்டுக் காகிதத்தை எடுத்து எழுதத் தொடங்கினார்.

நியாயாதிபதி கூறியது முற்றிலும் நீதியான தீர்மானமாகவே எல்லோருக்கும் பட்டதானாலும், முற்றிலும் நிரபராதியும், தமது பேருபகாரியுமான சுவாமியாருக்கு தண்டனை கிடைக்கப் போகிறதே என்று மேலப்பண்ணை முதலியார் நினைத்து மிகுந்த விசனமும், ஏக்கமும் கொண்டு சஞ்சல மடையலானார். நீதிபதி சாமியாருக்கு அபராத தண்டனை விதிப்பாரோ, அல்லது, இரண்டொரு வாரம் வரையில் சிறைச்சாலை தண்டனை விதிப்பாரோ வென்று எல்லோரும் பல மாதிரியாக எண்ணியபடி ஆவலே வடிவாக இருந்தனர்.

திவான் சாமியார் தமது களங்கம் நீங்கியதையே பிரதானமாகக் கருதி மகிழ்ச்சி யடைந்தாரன்றி, தமக்கு சொற்ப தண்டனை கிடைக்கப் போகிறதே என்பதைப்பற்றி சிறிதும் வருந்தவில்லை.

அந்த நிலைமையில் இரண்டு போலீஸ் ஜெவான்கள் கைவிலங்கிட்ட ஒரு குறவனைக் கச்சேரிக்குள் நடத்திவந்து நியாயாதிபதிக்கு முன்னால் நிறுத்திவிட்டு சலாம் செய்தனர். தீர்ப்பு எழுதுவதில் தமது முழு கவனத்தையும் செலுத்தி இருந்த நீதிபதி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்து ஆத்திரமடைந்து, "என்ன ஐயா இது! ஒருவழக்கில் தீர்ப்பு எழுதிக்கொண்டிருக்கையில் இன்னொன்றைக் கொண்டு வந்து நடுவில் நுழைய விடுகிறீர்களே! என்ன அவசரம் உங்களுக்கு? கொஞ்சம் பொறுத்திருந்து, அழைத்து வாருங்கள். வெளியில் போயிருங்கள்" என்று கண்டித்துக்கூறி விட்டுத் தமது தீர்ப்பை மேலும் எழுதத் தொடங்கினார்.

உடனே ஜெவான்கள் இருவரில் ஒருவன் நீதிபதியை நோக்கி "இல்லை எஜமானே! இந்த வழக்கு சம்பந்தப்பட்ட உண்மையான குற்றவாளி இந்தக் குறவன் தான்; இந்தச் சாமியாரல்ல. ஆகையால் தாங்கள் தீர்ப்பு எழுதுவதை நிறுத்துங்கள்" என்றான்.

அவனது சொற்களைக் கேட்டு, அங்கிருந்தோ ரனைவரும் மிகுந்த வியப்பும் களிப்பும் அடைந்து ஜெவான்களையும், குறவனையும் உற்று நோக்கினர். அவ்வாறே, திடுக்கிட்டுப் போய் அளவற்ற வியப்பும் கோபமும் கொண்ட நியாயாதிபதி பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரை நோக்கி, "என்ன இன்ஸ்பெக்டரவர்களே! ஒவ்வொரு வழக்கிலும் உண்மையான குற்றவாளி யொருவன், கற்பனையான குற்றவாளி யொருவன் என்று போலீசார் இவர்களைத் தயாரிக்கிறார்கள்போ லிருக்கிறதே! என்ன வெட்கக்கேடையா இது!" என்று கூறினார். அதைக் கேட்ட பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர் அங்கே வந்த ஜெவான்களை நோக்கி, "என்ன அப்பா இது இவனை எங்கே பிடித்தீர்கள்?" என்றார்.

உடனே முன் பேசிய ஜெவான், "எஜமானே! இந்தக் குறவன் கொஞ்ச நாழிகைக்கு முன்பு அம்மன்பேட்டைக் கள்ளுக் கடைக்குப் போய் அந்தக் கடையின் சொந்தக்காரரான சாணாரமுத்துக் கருப்பனிடம் ஒரு வைர மோதிரத்தையும், தங்கச் சங்கிலித் துண்டையும் ரகஸியமாகக் கொடுத்து, அவைகளை வைத்துக்

கொண்டு பத்து ரூபாய் பணம் கொடுக்கும்படி கேட்டானும். மோதிரம் வைர மோதிரமாயிருப்பதையும், சங்கிலி துண்டாக வெட்டப் பட்டிருந்ததைக் கண்டு, அவன் உடனே சந்தேகங் கொண்டு, தான் பணத்துக்கு ஆளை அனுப்புவதாகச் சொல்லி குறவனை அங்கே இருக்கும்படி செய்துவிட்டு, எங்களிடம் அவசரமாக ஓர் ஆளை அனுப்பி வைத்தான். நாங்கள் உடனே ஓடி அவனைப் பிடித்துக் கொண்டு நகைகளையும் கைப்பற்றி, அவனிடமிருந்த வெற்றிலை பாக்குப் பையைச் சோதித்துப் பார்த்தோம். அதற்குள் இரும்பை வெட்டும் கத்தரிக்கோல் ஒன்று இருந்து அகப்பட்டது. இந்த நகைகள் எங்கிருந்து அவனுக்குக் கிடைத்தன வென்று நாங்கள் கேட்டதற்கு, முதலில், இவன் இவைகள் ரஸ்தாவில் கிடந்து அகப்பட்டன வென்றான். பிற்பாடு அங்கிருந்த ஜனங்களில் சிலர் இவனை பயமுறுத்தவே, இவன் பயந்து கொண்டு, உடனே உண்மையை ஒப்புக் கொண்டான். நேற்று கண்டியூர் ரஸ்தாவில் சுவாமி வந்த சமயத்தில், தான் ஒரு குழந்தையின் கையிலிருந்த மோதிரத்தைக் கழற்றி, கழுத்துச் சங்கிலியை வெட்டி எடுத்ததாகவும், அப்போது குழந்தையின் தாயார் அதைக் கண்டு கொண்டதாகவும், தான் உடனே சங்கிலியின் கொக்கியைக் கழற்றி சின்னபாகத்தை எடுத்து அந்த அம்மாளுக்குப் பக்கத்திலிருந்த யாரோ ஒரு பரதேசியினுடைய சட்டைப் பைக்குள் போட்டு விட்டுக் கீழே குனிந்து கும்பலுக்குள் புகுந்து தந்திரமாய்த் தப்பி ஓடிப் போய் விட்டதாகவும் இவன் ஒப்புக் கொண்டான். நாங்கள் உடனே சாமான்களுடன் இவனை அழைத்துக் கொண்டு வந்தோம். இந்த வழக்கின் விசாரணை இன்று இங்கே நடக்கிறதென்பது தெரியுமாகையால், அநியாயமாய் சாமியாருக்கு தண்டனை கிடைத்துவிடப் போகிறதே யென்று நினைத்து நாங்கள் இவனைப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகாமல், நேராக இங்கேயே அழைத்து வந்தோம்" என்றான்.

அந்த வரலாற்றைக் கேட்கவே, அங்கிருந்தோர் அனைவரும் மிகுந்த சந்தோஷமும் குதூகலமு மடைந்து ஆரவாரம் செய்தனர். மேலப்பண்ணை முதலியாருக்கு அப்பொழுதே ஒழுங்காக மூச்சு வரத்தொடங்கியது. அவரது முகம் சந்தோஷத்தினால் அப்பொழுதே மலரத்தொடங்கியது. "ஆகா! இந்தக் குறவன் செய்த காரியம் எப்பேர்ப்பட்ட அநர்த்தத்தை விளைவித்து விட்டது! எப்பேர்ப்பட்ட பரம ஸாதுவான மகானை எல்லோரும் கேவலமாக மதிக்

கும்படி யாகிவிட்டது. அக்கிரமத்தைக் கண்டு தெய்வம் சும்மா இருக்குமா! நல்ல சமயத்தில் உண்மை வெளியாகும்படி செய்து விட்டதல்லவா! எம்பெருமானுடைய சக்தியை யாரே அறியவல்லார்" என்று கூறி முதலியார் நியாயாதிபதியை நோக்கினர்.

அப்பொழுது மேஜையின்மேல் வைக்கப்பட்ட நகைகளை நீதிபதி எடுத்துப் பார்த்து, சங்கிலித் துண்டுகளிரண்டையும் ஒன்றாகச் சேர்த்துப் பொருத்திப் பார்த்துத் திருப்தி செய்துகொண்டு மேலப் பண்ணை முதலியாரையும், சாட்சி கிருஷ்ண பத்தரையும் அருகிலழைத்துக் காட்ட, அவர்கள் அவைகள் தான் களவாடப்பட்ட நகைகள் என்று உறுதியாகக் கூறினர்.

உடனே நீதிபதி குறவனை நோக்கி, "ஏனடா? சேவகர் இப்போது சொன்னாரே, அது நிஜந்தானா?" என்றார்

குறவன், "இல்லே எஜமானே! இந்த ஐயாமாரும் கள்ளுக் கடைக்கார ஐயாவும் சேர்ந்து என்னை அடித்துக்கொன்று விட்டார்கள் எஜமானே! சேவகர் ஐயாவின் இடுப்பில் தொங்குகிற குட்டைத் தடியை எடுத்து என் கைவிரல்களில் அடித்ததில் ஒரு விரல் முறிந்து போய்விட்டது எஜமானே! விரலே இதோ பாருங்கள்" என்று கூறி நிரம்பவும் வீங்கிப் போயிருந்த தனது விரல்களை நீதிபதிக்குக் காட்டினான்.

நீதிபதி அவனது விரல்களைப் பார்த்தும் பார்க்காதவர் போல நடித்து, "ஓ! உன்னை அடித்தார்களா! அது பிசகுதான். அதைப் பற்றி நான் தனியாக விசாரணை செய்கிறேன். அதிருக்கட்டும். அதோ நிற்கிற சாமியாரைப் பார்; அவருடைய சட்டைப் பையில் தானே சங்கிலித்துண்டை நீ போட்டாய்?" என்றார்.

குறவன், ஆமா எஜமானே!" என்றான்;

நீதிபதி, "இந்தச் சாமியார் இதற்கு முன் உனக்குப் பழக்கமானவரா?" என்றார்.

குறவன், "இல்லே சாமி! அந்தக் கும்பலிலே இவரை நேற்று தான் பார்த்தேன்." என்றான்.

உடனே நீதிபதி பிராசிகூடிங் இன்ஸ்பெக்டரை நோக்கி "என்ன ஐயா! சாமியாரை இனி விட்டுவிடலா மல்லவா? அதற்கு ஏதாவது ஆட்சேபனை உண்டா?" என்றார்.

பிராசிகூடிங் இன்ஸ்பெக்டர், "தடையில்லாமல் உடனே விட்டு விடலாம் எங்களுக்கு அவர்மேல் ஏதாவது பகையுண்டா? ஒன்று மில்லை. வேறு தக்க புலன் இல்லாதிருந்ததாகையால், சட்டப்படி நாங்கள் என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்தோம். சாமி யார் நிரபராதி என்பதைத் தெரிந்து கொண்டும் நாங்கள் வேண்டு மென்றே இவரை இங்கே இழுக்கவில்லை. ஆனால், இவர் இதற்கு முன் தக்க பெரிய மனிதராயிருந்தவராகத் தெரியவருகிறது. ஆகவே, போலீசார் சார்பாக, நான் சாமியாருக்கு எங்களுடைய மனமார்ந்த வருத்தத்தையும் அநுதாபத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இவருடைய நோட்டுகளைக் கொடுத்து அனுப்பி விடலாம்" என்றார்.

உடனே நீதிபதி, "ஐயா பரதேசியாரே! இப்படி வாருங்கள். இதோ உங்களுடைய நோட்டுகளெல்லாம் இருக்கின்றன. எண்ணி எடுத்துக் கொள்ளுங்கள். உங்களை நான் விடுதலை செய்திருக்கி றேன். நீங்கள் சுயேச்சையாய்ப் போகலாம். நமஸ்காரம்" என்று கூறி, நோட்டுகளையும் எடுத்துக் கொடுத்து வணக்கமாக ஒரு கும் பிடும் போட்டார் அந்த நீதிபதியின் ஒழுங்கையும் நற்குணத்தை யும் கண்ட திவான் சாமியார் தமது இரு கரங்களையும் நிரம்பவும் பணிவாகக் குவித்து, "ஐயா! நீதிபதியவர்களே! இந்த ஏழைப் பர தேசிக்குத் தாங்கள் இவ்வளவு மரியாதை கொடுப்பதைக் காண என் உள்ளம் பூரிக்கிறது. தாங்கள் சர்வேசனுடைய செங்கோலைத் தாங்கி, அவனுடைய பிரதிநிதி போல இருக்கிறபடியால், அதற்குத் தகுந்த உத்தம லக்ஷணங்கள் தங்களிடம் சம்பூர்ணமாக இருக் கின்றன. பரமதயாபரனுன கடவுளின் நீதி எப்போதும் எல்லா இடங்களிலும் இதே போல் திராசு முனையில் நிற்க அவனுடைய பேரருள் உண்டாகட்டும் ஐயா! நீதிவானே! சற்று முன் பிராசி கூடிங் இன்ஸ்பெக்டரவர்கள் என்னைக் குறித்து அநுதாப மொழி சொன்ன சம்பந்தமாய் நான் ஒரே ஒரு விஷயம் விக்ஞாபனம் செய்துகொண்டு இவ்விடத்தை விட்டுப் போய் விடுகிறேன். வேறே புலன் கிடைக்க வில்லையாகையால், சட்டப்படி போலீசார் என்னைக் கைதி யாக்கியது நியாயமான செய்கையே. அதைப்பற்றி யாரும்,

அவர்கள்பேரில் குறை கூறுவது சரியல்ல. ஆனால் நான் இதற்கு முன் தக்க பெரிய மனிதராக இருந்ததாகத் தெரிவதால், தாம் வருந்தி அநுதாபம் காட்டுவதாக அவர் தெரிவித்தார். அப்படி அவர் சொன்னதுதான் அவ்வளவு சிலாக்கியமாகத் தோன்றவில்லை. என்னுடைய பூர்வீக சரித்திரம் தெரியாமலே இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம் என்னுடைய இப்போதைய நிலைமையை மாத் திரம் வைத்துக்கொண்டு பார்த்தால், நான் தக்க பெரிய மனிதன் அல்லவென்று அவர் கருதுவதாகவும், இந்த நிலைமையிலுள்ள மற்றவருக்கு அவர் அநுதாபமொழி சொல்லியே இருக்க மாட்டா ரென்றும் நாம் அர்த்தம் செய்ய வேண்டியிருக்கிறது. அக்கிரம மாக ஒருவனுக்கு ஒரு துன்பம் ஏற்படும் பக்ஷத்தில், அவன் தக்கவனாக இருந்தாலும், தகாதவனாக இருந்தாலும், பெரிய மனிதனாக இருந்தாலும், சிறிய மனிதனாக இருந்தாலும் அவனுக்கு மற்றவர் அநுதாபம் காட்டவேண்டும். அதுதான் உண்மையான அநுதாபம். தக்க பெரிய மனிதருக்கு மாத்திரம் அதைக் காட்டி னால், அது அவனுடைய பணத்துக்கும், செல்வாக்குக்கும் காட்டப் படும் அநுதாபமேயன்றி, அது ஜீவகாருண்யத்தில் சேர்ந்ததாகாது. இன்ஸ்பெக்டரவர்கள் படித்த மேதாவி தகாத ஏழைப் பரதேசி யான நான் அவர்களுக்கு நல்லொழுக்கம் சொல்லிக்கொடுக்க அருகதையற்றவன். நீதிவானே! நான் உத்தரவு வாங்கிக் கொள்ளு கிறேன்." என்று கூறி நீதிபதியை மறுபடி நமஸ்கரித்தபின் அவ் விடத்தை விட்டு வெளிப்பட்டார்.

உடனே நீதிபதி தாம் அந்த வழக்கின் விசாரணையை மறு நாள் வரையில் ஒத்தி வைத்திருப்பதாகவும், குறவன்மீது பிராது தயாரித்துக் கொண்டு, சாட்சிகளுடன் அவனை மறுநாள் அழைத்து வரவும் உத்தரவு செய்தார் போலீசார் குறவனை வெளியில் அழைத் துச் சென்றனர். ஜனங்கள் அந்தக் குறவனைத் தாறுமாறாக தூஷித்த தன்றி, நிரம்பவும் சாந்தமான முகத்தோடு வெளிப்பட்ட திவான் சாமியாரைக் கண்டு எல்லோரும் மிக மிகப் பணிவாகவும் பயபக்தி விநயத்தோடும் அவரை நமஸ்கரித்து, அவருக்கு வழி விடுத்தனர். அவருக்குப் பின்னால் ஓடோடியும் வந்த மேலப்பண்ணை முதலியார், "எஜமானே! என்னுடைய ஸாரட்டுவண்டி வந்து தயாராகக் காத் திருக்கிறது. அடியேன்மேல் கிருபை கூர்ந்து தாங்கள் வந்து வண்டியில் அமர்ந்து, தாங்கள் எனக்கு ஏற்படுத்திக் கொடுத்திருக் கும் குடிசைக்கு விஜயம் செய்து, ஏழையேங்களுடைய மங்களா

சாசனத்தை ஏற்று எங்களை உய்வித்தருள வேண்டும்'' என்று நிரம்பவும் வணக்கமாகக் கூறிப் பிரார்த்தித்துக் கொண்டார்.

உடனே திவான் சாமியார், "முதலியார் ஐயா'' என்று ஏதோ மறுமொழி கூற ஆரம்பிக்க, உடனே மேலப்பண்ணை முதலியார் "எஜமானே! தாங்கள் என்னை அப்படி மரியாதைப்படுத்தி அழைப்பது என்னைக் குத்திக்கொல்வதுபோல இருக்கிறது. பழைய மாதிரி தாங்கள் என்னை 'அடே கந்தசாமி' என்று கூப்பிடும் பட்சத்தில் என் மனசில் உண்டாகும் ஆநந்தம் அளவிட முடியாததாக இருக்கும். மகாப் பிரபுவே! தங்களுக்குத் தெரியாத நியாயம் ஒன்றுமில்லை. நான் தங்களிடம் இருந்த காலத்தில், தாய், தகப்பன், குரு, தெய்வம் எல்லோரும் தாங்களாகவே பாவித்து நான் தங்களிடம் நடந்துகொண்டேனென்பது தங்களுக்குத் தெரியாததல்ல. இன்னமும் நான் அதே நிலைமையில் தான் இருக்கிறேன். ஆனால், இப்போது என்னிடம் இரண்டு காசு சேர்ந்திருக்கிறது. அதனால், தங்களுக்கும் எனக்கும் ஆதியிலிருந்த முறைமை மாறிப்போகுமா! ஒரு நாளும் மாறாது. இந்தக் காசும் தங்களுடைய பிரியத்தினாலும், நன் கொடையினாலும், ஆசீர்வாதத்தினாலும் ஏற்பட்டதேயன்றி வேறல்ல. ஆகையால் தாங்கள் இனி என்னை, "அடே கந்தசாமி'' என்று கூப்பிடவேண்டும். இரண்டாவது, தாங்கள் என் குடிசைக்கு எழுந்தருள வேண்டும். மூன்றாவது, நானும் என் சம்சாரமும் தங்கள் விஷயத்தில் செய்த பெருத்த அபசாரத்திற்கு நாங்கள் ஏதேனும் பிராயச்சித்தம் செய்து கொண்டாலன்றி, எங்கள் மனம் ஒரு நாளும் அமைதியடையாதாகையால், அதற்கும் தாங்கள் தான் ஏதாவது ஒரு பரிகாரம் செய்யவேண்டும்'' என்று நிரம்பவும் பணிவாகக் கூறி வேண்டிக் கொண்டார்.

உடனே திவான் சாமியார், "அப்பா கந்தசாமி! உலகத்தில் ஒருவனுக்கு திடீரென்று அபரிமிதமான செல்வம் வந்து விடும் பக்ஷத்தில் அவன் செருக்கும் இறுமாப்பும் அடைந்து, பழைய நிலைமையை மறந்து, தான் ஆகாயத்திலிருந்து நேரில் குதித்தது அப்போதே வந்தவன்போல நடந்து கொள்வதே பெரும்பாலும் காணப்படுகிறது. உனக்கு இவ்வளவு பெரிய செல்வம் ஏற்பட்டும், நீ பழைய நிலைமையை மறவாமலும் செருக்கென்பதையே கொள்ளாமலும் இருப்பதைக் காண, என் உள்ளம் பூரிக்கிறது. என் மனசில் பொங்கி யெழும் சந்தோஷத்தையும் ஆநந்தத்தையும் நான் எப்படித்

தான் உனக்கு எடுத்துச் சொல்லப்போகிறேன் நீ மேன்மேலும் அபிவிருத்தியடைந்து இன்னமும் அதிக அமோகமான பெரு வாழ்வு வாழப்போகிறாய் என்பதற்கு இதுவே அறிகுறி. அப்பா கந்தசாமி! நான் இப்போது நிரம்பவும் அவசரமான ஒரு காரியத்தை உத்தேசித்து ஓரிடத்துக்குப் போகிறேன். நேற்றைக்கே நான் அங்கே போயிருக்க வேண்டியது. இந்த வழக்கினால், அது இன்றுவரையில் தடைப்பட்டுப் போயிற்று. என்ன உள் கருத்தோடு ஈசன் இந்த ஒரு நாளைய தாமதத்தை ஏற்படுத்தினாரோ அது பின்னால்தான் தெரியவேண்டும் நான் இப்போது உன்னுடைய வீட்டுக்கு வரவில்லையே என்று நீ விசனப்படாதே நான் போய் என்னுடைய அவசர காரியத்தை முடித்துக்கொண்டு மறுபடியும் இன்னொரு முறை நான் உன்னைக் காண்கிறேன். அதுவரையில் பொறுத்துக்கொள். இந்த நகை போன விஷயத்தில் என்னுடைய நிலைமையில், வேறே யார் இருந்தாலும், அவர் பேரில இந்தக் குற்றம் ஏற்பட்டே இருக்கும். இது உங்களுடைய குற்றமேயல்ல இதைப்பற்றி உங்கள் பேரில் நான் அணுப்பிரமாணமும் மன வருத்தம் வைக்கவில்லை. நீயும், உன் சம்சாரமும் நல்ல தங்கமான குணமுடையவர்கள்; அக்கிரமமாக யார் பேரிலும் குற்றம் சுமத்தவே மாட்டீர்கள். அதுவுமன்றி நான் இன்னான் என்பது உங்களுக்குத் தெரிந்திருந்தால், என்னைப் போலீசார் அழைத்துக் கொண்டுபோக நீங்கள் ஒரு நாளும் இடங்கொடுத்திருக்க மாட்டீர்கள். ஆகையால், இதைப்பற்றி நான் இனி நினைக்கவே போகிறதில்லை. இதை நாமிருவரும் பெருத்த நன்மையாகவே கொள்ள வேண்டும் நான் இந்த ரஸ்தாவின் வழியாக எத்தனையோ தடவை போய் வந்து கொண்டிருக்கிறேன். நீ இவ்விடத்தில் இருக்கிறாய். நாமிருவரும் சந்திப்பதற்கு ஒரு சாதனமாகவே இந்தச் சம்பவம் நடந்திருக்கிறது. இல்லாவிட்டால நாம் இன்று சந்தித்திருப்போமா ? மாட்டோமல்லவா. ஆகையால், இதை நாம் கடவுளுடைய கருணா கடாக்ஷமென்று நினைத்து இதைக் குறித்து சந்தோஷப்படுவதே சரியான காரியமன்றி, இதைக் குறித்து மன வருத்தம் பாராட்டுவது விவேகமாகாது. ஆகையால் நீ இதைப்பற்றிக் கவலைப்படாமல உன வீட்டுக்குப் போய்ச் சேர். நான் வெகு சீக்கிரம் மறுபடி உன்னைப் பார்க்கிறேன்" என்று மனப்பூர்வமான வாஞ்சையோடு உருக்கமாகக் கூறினார்.

அதைக் கேட்ட கந்தசாமி முதலியார் அளவற்ற மகிழ்ச்சியும் ஆநந்தமும் அடைந்து, "எஜமானே! தங்களுடைய பிரியப்படியே நடந்து கொள்ளுகிறேன். தாங்கள் ஆதியில் எனக்குப் பெருத்த பணத் தொகையைக் கொடுத்த காலத்தில், இந்தப் பணம் மற்ற வரைத் தீயவழியில் செல்லத் தூண்டுமென்று, அதனால் எனக்குப் பெருத்த இடர்கள் நேருமென்றும் நான் தங்களிடம் விண்ணப்பம் செய்து கொண்டேன். அதுபோலவே, இப்போது காரியம் நடந்து விட்டது. ஆயினும், இதில் தாங்களே வந்து சம்பந்தப் படுவீர்க ளென்பதையாவது, தங்களை நான் இந்தக் கோலத்தில் காணப் போகிறேன் என்றாவது நான் கனவிலும் நினைக்கவில்லை நான் தங்களிடத்திலிருந்து வந்த பிறகு தாங்கள் சொன்னபடியே பணத்தை விநியோகம் செய்து கலியாணம் செய்துகொண்டு மிகுதி யிருந்த இரண்டாயிரம் ரூபாயைப் போட்டு ஒரு சிறிய வெற்றிலைத் தோட்டம் வாங்கினேன். தாங்கள் ஆசீர்வதித்துக் கொடுத்த பணமாகையால் அதனால் வாங்கப்பட்ட தோட்டத்தில், வெற்றி லைக்குப் பதிலாக பவுன்களே பயிராயின வென்று நான் சொல்ல வேண்டும். மற்ற வெற்றிலைத் தோட்டக்காரர்க ளெல்லோரும் என்ன நினைவினாலோ அந்தப் பயிரைப் போடாமல் கரும்பு முதலியவை களைப் பயிர் செய்யத் தலைப்பட்டு விட்டார்கள். என்னுடைய தோட்டமொன்றே வெற்றிலைத் தோட்டமாக இருந்ததாகையால, என் வெற்றிலைக்கு அபரிமிதமான கிராக்கியும் தேவையும் ஏற்பட் டுப் போயின. என்னிடம் ஏராளமான பணம் வந்து குவியத் தொடங்கியது. நான் மேலும் தோட்டம் வாங்கி வாங்கி வெற்றிலைப் பயிர் செய்து வெகு சீக்கிரத்தில் இந்த நிலைமைக்கு வந்து விட் டேன். இவ்வளவு சீக்கிரத்தில, நான் எப்படி இந்த நிலைமைக்கு வந்தேனென்பது எனக்கே சில சமயங்களில் சந்தேகமாய் விடு கிறது. தங்கள் கை பட்டதெல்லாம் பொன்னாக மாறியதை நான் அப்போது கண்டிருக்கிறேனாகையால், அதே காரணத்தினால்தான், நான் இந்த நிலைமைக்கு வந்தேனே தவிர வேறில்லையென்று நான் எப்போதும் எண்ணிக்கொண்டிருக்கிறேன். கலியாணம் செய்து கொண்டபின் என் சம்சாரத்தையும் அழைத்துக் கொண்டு நான் தங்கள் சம்சாரமாகிய என் தாயைக் கண்டு அவர்களுடைய காலில் கும்பிட்டுவிட்டு வரவேண்டுமென்று நினைத்துத் திருவிடை மருதூருக்குப் போயிருந்தேன். அவர்களும், குழந்தையும் காணப் படவில்லை யென்றும், தாங்கள் புலியினால் அடிபட்டு இறந்துபோய்

விட்டீர்களென்றும் கேள்வியுற்றேன். அதுமுதல் இதுவரையில் என் மனம் பட்டபாடும், நான் அநுபவித்த துயரமும் இவ்வளவென்று சொல்ல முடியாது. எனக்கு எவ்வளவோ ஏராளமான செல்வம் பொங்கிக்கொண்டே இருந்தாலும் என் மன வியாகூலத்தில், அது சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை. பஞ்சபக்ஷிய பரமான்னத்தைப் போட்டு அவைகளில் விஷத்தையும் கலந்துவிட்டதுபோல, ஈசுவரன் செய்து விட்டானேயென்று நினைத்து நினைத்து நான் ஏங்கிக் கிடக்கேன். வெளிக்கு மாத்திரம் நான் ஒரு பெரிய மனிதனைகவும், சந்துஷ்டியாயிருப்பவன் போலவும் காணப்பட்டேனேயன்றி, உள்ளுக்குள், நான் மகா கொடிய வேதனையனுபவிப்பவனாயிருந்தேன் என் துயர இருள் வேறு எதனாலும் நீங்குவதாக இல்லை. அதைப்போக்கடிக்கத் தக்க சூரியன் தாங்களேயாகையால், இனிதான் நான் உண்மையில் க்ஷேமப்படப் போகிறேன். எப்படியாவது தாங்களும், என் தாயும் சேர்ந்து பார்வதி பரமேசுவரர் போலவும், மகாலக்ஷ்மி ஸ்ரீமந்நாராயணர் போலவும் எனக்கு வெகு சீக்கிரம காட்சி கொடுக்க வேண்டும். அதையே நான் என் தபசாக இரவு பகல் செய்து கொண்டிருப்பேன். தங்களுடைய அன்பும் ஆசீர்வாதமும் எப்போதும் என்மேல் இருக்கவேண்டும்" என்று நிரம்பவும் உருக்கமாகவும் மனநைந்து கண்ணீர் விடுத்தும் கூறினர்

திவான் சாமியாரும் அதற்குத் தக்கபடி மறுமொழிகூறி, தாம் கூடிய விரைவில் அவரைப் பார்ப்பதாக வாக்குறுதி செய்து கொடுத்தபின் அவரை விட்டுப் புறப்பட்டார். உடனே முதலியார் திவான் சாமியாரை நோக்கி, "எஜமானே! தாங்கள் எந்த இடத்திற்குப் போக வேண்டுமானாலும், இந்த வண்டியில் உட்கார்ந்தே போகலாம். இதோ என் வீடு பக்கத்தில் இருக்கிறது, எனக்கு வண்டி தேவையில்லை. தாங்கள் இதை உபயோகித்துக் கொள்ளலாம்" என்றார். திவான் சாமியார், "இல்லை இல்லை பரவாயில்லை. நான் இதோ பக்கத்திலிருக்கும ஓரிடத்துக்குத்தான் போகவேண்டும். எனக்கு வண்டி அவசியமில்லை. நான் போய்வருகிறேன்" என்று முடிவாகக் கூறியபின் புறப்பட்டார். கந்தசாமி முதலியார் திவான் சாமியாரை நோக்கி நிரம்பவும் மனமுருகி ஆயிரந்தரம் குனிந்து குனிந்து நமஸ்காரம் செய்துகொண்டே பின்தங்க, சாமியார் ரஸ்தாவோடு வடக்குத் திக்கில் நடந்து சென்று சிறிது நேரத்தில் முதலியாரது திருஷ்டிக்கு மறைந்து போனர்.

அவ்வாறு பிரிந்துபோன திவான் சாமியார் கால் மைல் தூரம் சென்று தற்செயலாகத் திரும்பிப் பார்த்தார். பார்க்கவே, அவருக்குப் பின்னால் சுமார் ஐந்நூறு கஜதூரத்தில், ஒரு பரதேசி தம்மைத் தொடர்ந்து வந்து கொண்டே இருந்தது அவருக்குத் தெரிந்தது; அந்தப் பரதேசியின் சிரம் முழுதும் ஒரே ஜடைமயமாக நிரம்பி இருந்தது. தாடி மீசைகள் முகத்தை மறைத்துக் கொண்டிருந்தன. ஒரு சிறிய துணி மூட்டை ஒரு திருவோடு ஒரு மூங்கில் குச்சி முதலிய வஸ்துக்கள் அவரிடம் காணப்பட்டன. திவான் சாமியார் திரும்பிப் பின்புறம் பார்த்தவுடனே, புதிய சாமியார் தமது இரண்டு கைகளையும் எடுத்து நிரம்பவும் பயபக்தி விநயத்தோடு குனிந்து திவான் சாமியாரை நோக்கி, "சுவாமிகளே! நமஸ்காரம்!" என்று கூறிய வண்ணம் வணங்கினர். திவான் சாமியார் அவருக்குப் பிரதி நமஸ்காரம் செய்தவண்ணம் தயங்கி நிற்க புதிய சாமியார் அவரண்டை நெருங்கி வந்து, "சுவாமிகளே! நான் கச்சேரியிலிருந்து தங்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருக்கிறேன்" என்று நிரம்பவும் பணிவாகக் கூறினர்.

திவான் சாமியார் அவரது முகத்தை உற்று நோக்கி, "தாங்கள் யாரென்பது தெரியவில்லையே. தாங்கள் அடியேனைத் தொடர்ந்து வந்த காரணம் என்னவோ?" என்று பணிவாகக் கூறினர்.

புதிய சாமியார், "சுவாமிகளே! யாரோ ஒரு பரதேசி குழந்தையின் நகைகளைக் களவாடி விட்டதாகச் சொல்லிக் கொண்டு சில பரதேசிகள் அந்த வழக்கின் விசாரணையைக் கவனிக்கவேண்டுமென்று கச்சேரிக்கு வந்தார்கள். அதைக் கேட்டு நானும் கச்சேரிக்கு வந்தேன். அங்கே கைதிக் கூண்டில் தாங்கள் நிற்கக் கண்டேன். உடனே எனக்கு ஆச்சரியம் உண்டாகிவிட்டது. ஏனென்றால், மகோபகாரியும் நற்குண புருஷருமான தாங்கள் அங்கே அந்த நிலைமையில் இருப்பீர்களென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. அதுவுமன்றி, தாங்கள் பாபநாசத்திற்குப் போயிருப்பதாகவும் திருவையாற்றிலுள்ள பெரியவர் சொல்லக் கேள்வியுற்றிருந்தமையால், தாங்கள் இங்கே கைதிக் கூண்டில் இருந்தது எனக்கு நிரம்பவும் அதிசயமாக இருந்தது. ஆனாலும், மலை போல வந்த அபாண்டப்பழி தெய்வத் திருவருளால் பனிபோல நீங்கிப் போனதைக் கண்டு நான் நிரம்பவும் ஆநந்தமடைந்து தங்களுடன் பேசவேண்டுமென்று கச்சேரிக்கு வெளியில் காத்திருந்தேன். தாங்கள் மேலப்பண்ணை முதலி

யாருடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தீர்க ளாகையால், அவர் போனபிறகு தங்களைத் தொடர்ந்து வந்தேன். தாங்கள் திரும்பியே பார்க்காமல் நடந்தீர்கள். தங்களைக் கூப்பிடுவது மரியாதையல்ல வென்று நினைத்து நான் விசையாக நடந்து பின்னால் வந்தேன்'' என்றார்.

திவான் சாமியார், ''ஓகோ அப்படியா! சரி; நீங்கள், திருவையாற்றிலுள்ள பெரியவரிடம் எதற்காகப் போனீர்கள்? நான் பாபநாசத்துக்குப் போயிருந்ததை அவர்கள் உங்களுக்குச் சொல்ல வேண்டிய பிரமேய மென்ன?'' என்றார்.

புதிய சாமியார், ''சுவாமிகளே! அடியேனுடைய பூர்விகர்களுக்குச் சொந்தமான ஊர் திருவடமருதூருக் கடுத்த திருநாகேசுவரம். பல வருஷங்களுக்கு முன் என் தாய் தகப்பன்மார் என்னை அநாதரவாக விட்டு இறந்துபோய் விட்டார்கள். அந்த விசனத்தைத் தாங்க மாட்டாமல் நான் உலகத்தின் மேல் விரக்தி யடைந்து காஷாயம் வாங்கிக் கொண்டு பரதேசி யாகி விட்டேன். அதன் பிறகு நான் திருவடமருதூருக்குப் பல சமயங்களில் வந்திருக்கிறேன். இந்தப் பெரியவர் அடிக்கடி ஏழைகளுக்கும் பரதேசிகளுக்கும் அன்னமளிப்பது வழக்கம். நான் பலதடவை பெரியவருடைய வீட்டில் சாப்பிட்டிருக்கிறேன். அதிலிருந்து அவர்களை நான் நன்றாக அறிவேன். கடைசியாக சுமார் ஒன்றரை வருஷத்துக்கு முன் நான் திருவடமருதூருக்குப் போயிருந்த சமயத்தில் இவர்கள் மார்படைப்பினால் இறந்து போய் விட்டதாகக் கேள்வியுற்றேன். அது எனக்கு நிரம்பவும் விசனமாக இருந்தது. பிறகு நான் அந்த ஊரை விட்டுப் பல க்ஷேத்திரங்களுக்குப் போயிருந்தேன். சிறந்த அன்ன தாதாவாகிய இந்தப் பெரியவர் இறந்து போனதைப்பற்றிய விசனம் வெகுகாலம் என் மனதை விட்டு விலகாமலேயே இருந்து வந்தது. நான் இந்த ஒன்றரை வருஷகாலமும் சோழநாடு பாண்டிய நாடுகளிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போவதில் செலவிட்டு இப்போதுதான் திரும்பி வந்தேன். இரண்டு தினங்களுக்கு முன் நான் அகண்ட காவிரி இரண்டாய்ப்பிரியும் மகா அழகுவாய்ந்த ஸ்தலத்திற்குப் பக்கத்தில் இருக்கும் குணசேகரபுரம் என்ற புண்ணிய க்ஷேத்திரத்திற்கு வந்திருந்தேன். அவ்விடத்தில இந்தப் பெரியவரைப் பற்றி துரைத்தனத்தார் வெளியிட்டுள்ள விளம்பரத்தின் பிரதியொன்று எனக்குக்கிடைத்தது. அதைப் பார்க்க, நான் அளவற்ற

ஆச்சரியமும் சந்தோஷமுமடைந்து இவர்களைப் பார்க்க மிகுந்த ஆசையும் ஆவலும் கொண்டு, அதில் கொடுக்கப்பட்டிருந்த விலாசத்தைத் தெரிந்து கொண்டு நேற்று காலையில் திருவையாற்றுக்கு வந்து சேர்ந்து பெரியவரை தரிசித்து எல்லா விஷயங்களையும் அவர்களிடம் கேட்டுத்தெரிந்து கொண்டேன். தாங்கள் இன்னார் என்பதையும், தாங்களே அவர்களுக்குப் புத்துயிர் கொடுத்து மறுபடி பழைய நிலைமைக்குக்கொண்டு வந்தவர்களென்பதையும், அவர்களுடையசம்சாரத்தைக்கண்டு பிடிப்பதற்காகத் தாங்கள் பிரயத்தனப் பட்டுக் கொண்டிருப்பதையும் அவர்கள் விரிவாய்ச் சொல்ல நான் தெரிந்து கொண்டேன். தங்களை தரிசிக்க வேண்டுமென்று நான் நேற்று முதல் ஆவல்கொண்டு தங்களுடையவழியைப் பார்த்தபடி இருந்து, இன்றையதினம் தற்செயலாகக் கச்சேரிக்கு வந்த இடத்தில் தங்களைக் கண்டேன். கண்டவுடன் நான் அடைந்த விசனம்சொல்லமுடியாது. இந்தப் பெரியவருக்குத் தாங்களே முக்கியமான பற்றுக்கோலாயிருப்பதைக் கருதியாவது எம்பெருமான் தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று நான் வேண்டிக் கொண்டபடியே இருந்தேன். முடிவில் தருமமே ஜெயமாய் முடிந்தது நான் தங்களையும் தரிசித்தேன். என் கலியும் இனி நீங்கின மாதிரிதான். தாங்கள் செய்ய ஏற்றுக்கொண்டிருக்கும் காரியமோ மகா கடினமானது. தாங்களோ ஏகாங்கியா யிருக்கிறீர்கள். தங்களுக்கு சிஷனாயிருந்து தங்களுடைய சிரமத்தில் ஒரு பகுதியை நான் ஏற்றுக் கொண்டு இந்தப் புண்ணிய காரியத்தைத் தாங்கள் அதிக விரைவில் நிறைவேற்றுவதற்கு உதவியா யிருக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன். நான் காஷாயம் மாத்திரம் வாங்கிக் கொண்டிருக்கிறேனேயன்றி, அதன் தருமங்களை நான் எந்த சற்குருவையும் அடுத்துத் தெரிந்து கொள்ளாமல் ஒன்றையுமறியாப் பேதையாய் அலைந்து பூமிக்குப் பாரமாயும், சோற்றுக்கு நஷ்டமாயும் கிடந்து உழல்கிறேன். கச்சேரியில் தாங்கள் நடந்துகொண்ட மாதிரியிலிருந்து, இப்பேர்ப்பட்ட சற்குருவை நான் சரணமடைந்தால், என் ஆன்மா நல்ல கதி யடைந்துவிடுமென்ற நிச்சயம் என் மனதில் உண்டாகி விட்டது. நான் என்னுடைய சுயநல மொன்றை மாத்திரம் கருதவில்லை. பெரியவருக்குப் பெண்ணைக் கொடுத்தவரான இராமலிங்க முதலியார் எங்களுடைய பந்து. அவரைச் சேர்ந்த மனிதர்கள் இன்னின்ன ஊர்களிலிருக்கிறார்களென்பதையும் நான் அறிவேன். அந்த உறவினர்களில் சிலருக்கும் எனக்கும் ஆதியில்

சிநேகம் ஏற்பட்டிருந்தது. ஆகையால், தங்களை அவர்களிடமெல்லாம் அழைத்துக் கொண்டுபோய்ப் புலன் விசாரித்து அந்த அம்மாள் முதலியோர் இப்போது எங்கே இருக்கிறார்களென்பதை அதிசீக்கிரத்தில் கண்டு பிடித்துவிடலாமென்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆகையால், என்னைத் தாங்கள் தங்களுடைய நற்சிஷனாக ஏற்றுக்கொண்டு உய்வித்தருளவேண்டும். இது தான் என்னுடைய வேண்டுகோள்" என்று நிரம்பவும் பயபக்தி விநயத்தோடு கூறி திவான் சாமியாரைப் பன்முறை உருக்கமாக நமஸ்கரித்தார்.

அவர் கூறிய வரலாற்றைக் கேட்ட திவான் சாமியார் மிகுந்த களிப்பும் பூரிப்பும் அடைந்தவராய், "ஆகா! அப்படியா! நான் ஒரு பெரிய துறவி. எனக்கு சிஷனில்லாமையால், என் பெருமைக்குக் குறைவு ஏற்பட்டு விடப்போகிறதென்று நினைத்துக் கடவுள் இந்த சந்தர்ப்பத்தில் ஒரு சிஷனைக் கொடுக்கிறார்போலிருக்கிறது. சரி; கொடுக்கட்டும். எந்தெந்த வேளையில் எந்தெந்தப் பெருமைகளை அவர் கொடுக்கிறாரோ அதை நாம் ஏற்றுக் கொண்டே தீரவேண்டும். மாட்டேனென்று சொல்ல, நமக்கு அதிகாரமேது? சுவாமிகளே! நானும், தங்களைப்போலவே, உலகில் விரக்தி யடைந்து தக்க குருவின் உபதேசம் பெறாமல் சுயமாக சந்நியாசம் வகித்துக் கொண்டவன். நானும் திக்கு திசையறியாமல் நடுக்கடலில் அகப்பட்டுத் திண்டாடும் மரக்கலத்தைப்போல இந்த உலகில் கிடந்து உண்மையானது எது, பொய்யானது எது என்பதை அறியமாட்டாமல் மயங்கி நடைப்பிணமாய் உழல்கிறேன். ஆகையால், நீங்கள் எனக்கு சிஷராயிருந்து எவ்வித பலனையும் அடைய முடியாது. உங்களுக்கு குருவாயிருப்பதற்குத் தக்க யோக்கியதையும் என்னிடத்தில் இல்லை ஆகையால், நாம் குரு சிஷன் என்கிற முறைமையை விட்டு ஒருவருக்கொருவர் உதவியாயிருக்கும் நண்பர் என்ற முறைமையை வகிப்போம் பெரியவர் விஷயத்தில் நீங்கள் எனக்கு எவ்வளவு உதவி செய்தாலும் அதை நான் முழுமனதோடும் மிகுந்த நன்றியறிதலோடும் ஏற்றுக் கொள்ளுகிறேன். ஏதடா இவர் இவ்வளவு கருக்காகப் பேசுகிறாரேயென்று நீங்கள் எண்ணக் கூடாது. எதிலும், எதிர் பார்க்கவைத்து ஏமாற்றாமல், உண்மையை முன்னாகவே சொல்லித் திருப்திப் படுத்துவதே சிலாக்கியமானதென்பது என் கோட்பாடு" என்றார்.

புதிய சாமியார் மிகுந்த சந்தோஷமும் பணிவும் காட்டி, "சுவாமிகளின் சித்தம் அடியேன் பாக்கியம்! எந்த நிலைமையில் சுவாமிகள் என்னை வைக்கக் கருதினாலும் அதற்கு நான் சித்தமாகக் காத்திருக்கிறேன். எப்படியாவது என் வாழ்நாளைத் தங்களுடைய வாழ்நாளோடு சம்பந்தப்படுத்தி பரோபகாரமான காரியத்தில் ஈடுபட வேண்டுமென்பது என்னுடைய அவா; இந்த வகையிலாவது என்னுடைய சேவையைத் தாங்கள் ஏற்றுக் கொண்டீர்களே அது ஒன்றே போதுமானது. பூவைச் சேர்ந்த நாறும் மணம் பெறுவது போல இனி நானும் கடைத்தேறி விடுவேன். நல்ல நினைவுகளையே கொண்டு நல்ல காரியங்களையே செய்வோருடன் நான் எப்போதும் இருந்து பழகினால், எனக்கும் அதே மனப்போக்கும் நடத்தையும் சுலபமாகவே பழகிவிடு மென்பது நிச்சயம். சுவாமிகளுக்குத் தெரியாததற்கு நான் சொல்லிக் கொடுக்கப் போகிறேனா" என்று கூறிய வண்ணம் திவான் சாமியாரைத் தொடர்ந்து சென்றார். அப்பொழுது காவிரி யாற்றுப் பாலம் வந்துவிட்ட தாகையால், அதன் வடபுறத்திலிருந்து ஊர் ஆரம்பமாகிற தாகையாலும், அவர்களிருவரும் தங்களது சம்பாஷணையை அவ்வளவோடு நிறுத்திக்கொண்டனர். ஆயினும் ஊருக்குள் நுழையும்பொழுது திவான் சாமியார் புதிய சாமியாரை நோக்கி, "ஐயா! தாங்கள் எனக்கு ஓர் உதவி செய்யவேண்டும். நேற்று காலையில் நடுவழியில் என்மேல் திருட்டுக் குற்றம் ஏற்பட்டது, நான் நேற்று முழுதும் சிறைச்சாலையிலிருந்தது, இன்று விசாரணை நடந்தது முதலிய வரலாறு பெரியவருக்குத் தெரிந்தால் அவர்களுடைய மனம் நிரம்பவும் புண்பட்டுப்போகும். அதுவுமன்றி, இனி நாம் தங்களுடைய இளைய சம்சாரத்தைத் தேடுவதற்காக எங்கும் போய் அலைய வேண்டாமென்று அவர்கள் கண்டிததுக் கூறிவிடுவார்கள். ஆகையால் இந்த வரலாற்றை அவர்களிடம் சொல்லாமல் மறைதது வைப்பதே உசிதமென்று நான் நினைக்கிறேன். இதை நாம் சொல்லுவதனால், பெரியவருக்கு நன்மை எதுவும் உண்டாகா விட்டாலும், கெடுதல்கள் பல உண்டாகுமாதலால், இதை நாம் அவர்களிடம் தெரிவிக்காமல் இருப்பதே உசிதமெனப் படுகிறது. இது விஷயத்தில் நீங்களும் எனக்கு அநுசரணையாக நடந்து கொள்ள வேண்டும். இந்த உதவியைத்தான் நான் உங்களிடம் கோருகிறேன்" என்றார்.

உடனே புதிய சாமியார் (இவரை இனி நாம் உதவிச் சாமியார் என்று குறிப்போம்) திவான் சாமியாரை நோக்கி, "ஆம்; நானும்

அப்படியே தான் நினைத்தேன். நாம் அப்படித்தான் செய்ய வேண்டும். தங்கள் இஷ்டம் போலவே, நான் நடந்து கொள்ளுகிறேன்.'' என்றார்.

சிறிது நேரத்தில் இருவரும் குஞ்சிதபாத முதலியார் இருந்த ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தனர். திவான் சாமியார் தாம் பாபநாசத்திற் கருகிலுள்ள ஊருக்குப் போய் அவ்விடத்தில் தெரிந்துகொண்டு வந்த தகவல்களைக் கூறியதன்றி, தாம் அன்றைய இரவு ரயிலிலேயே ஏறி மதுரைக்குப்போய் இராமலிங்க முதலியார், கமலவல்லியம்மாள் முதலியோரைப்பற்றி விசாரித்துத் தேடிப்பார்த்து விட்டு வரத் தீர்மானித்திருப்பதாகவும் கூறினார். தமது இளைய மனைவியைக் கண்டு பிடிக்கும்பொருட்டு திவான்சாமியார் அவ்வாறு வீண்பாடுகள் படுவது தமக்கு சம்மதியில்லை யென்றும், அந்த முயற்சியை அவ்வளவோடு விட்டு விடவும் குஞ்சிதபாத முதலியார் கூறினாராலும், தாம் அதை மாத்திரம் கடைசி முயற்சியாகச் செய்து பார்த்து விடுவதாய்க் கூறி திவான் சாமியார் கிழவரது அநுமதியைப் பெற்றுக் கொண்டார். அவ்வாறு திவான் சாமியார் தனிமையில் போய் அலைவது பிரயாசையாக இருக்கு மாதலால், உதவிச் சாமியாரையும் துணைக்கு அழைத்துச் செல்லும்படி கிழவர் கூற, புதல்வர் அதை ஏற்றுக் கொண்டார்.

அன்றைய பகற் பொழுது கழிந்தது; மாலையிலேயே திவான் சாமியாரும், உதவிச் சாமியாரும் திருவையாற்றை விட்டுப் புறப்பட்டுத் தஞ்சைக்கு வந்து இரவில் அவ்விடத்திலிருந்து மதுரைக்குச் சென்ற ரயில வண்டியில் ஏறி மறுநாள் பகலில மதுரைக்குப் போய்ச் சேர்ந்தனர். சேர்ந்தவர் தமது ஸ்நானம் அநுஷ்டானம் போஜனம் முதலியவைகளை முடித்துக்கொண்டு இரண்டொரு நாழிகை காலம் வரையில் ஓரிடத்தில் படுத்திருந்து இளைப்பாறிய பின், எழுந்து தமது விசாரணையைச் செய்யத் துவக்கினர். மதுரைப் பட்டணத்தில செட்டிமார் பல இடங்களில் அரிசி மில்கள் ஸ்தாபித்து நடத்தி வந்தனராதலால், அவர்கள் இருவரும் அன்றைய தினம் மாலைக்குள் சில இடங்களுக்கே போய் விசாரிக்க இயன்றது அவ்வாறு விசாரித்த இடங்களில் இராமலிங்கமுதலியார் என்ற எவரும் தமக்குத் தெரிந்த வரையில் அந்த ஊரில அதற்கு முன் அரிசிமில் வைத்திருந்ததுமில்லை, அப்போதும் வைத்திருக்க வில்லை யென்று அவ்விடங்களி லிருந்தோர் கூறி விட்டனர். அவர்

கள் கூறிய மாதிரியைக் கண்ட திவான் சாமியாருக்கு தாம் அந்த ஊரில் கமலவல்லியைக் கண்டுபிடிக்க இயலாது என்ற அவநம்பிக்கையும் மனத்தளர்வும் ஏற்பட்டுவிட்டன. ஆயினும்! தாம், அவ்வளவோடு விட்டுவிடாமல், மறுநாளும் புறப்பட்டு, மிகுதி யிருந்த இடங்களுக்கும் போய்க் கடைசிவரையில் தீர விசாரித்து விடுவதே நன்றென்று அவர்களிருவரும் தீர்மானித்துக் கொண்டு ஓரிடத்தில் படுத்து அந்த இரவைக் கழித்தனர். மறுநாள் அதிகாலையிலேயே அவர்க ளிருவரும் எழுந்து வைகை யாற்றங் கரைக்குப் போய் ஸ்நான நியம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு அவ்வூரிலுள்ள கோவில்களுக் கெல்லாம் சென்று அர்ச்சனை முதலியவைகளைச்செய்வித்து சுவாமி தரிசனம் முடித்துக்கொண்டு முதல் நாள் போஜனம் செய்த இடத்தில் தமது போஜன காரியத்தைத் தீர்த்துக்கொண்டு தமது விசாரணையைத் துவக்கிக் கொண்டனர். அவர்கள் ஒவ்வோர் அரிசிமண்டியாய் அன்றைய மாலைக்குள் எல்லா இடங்களுக்கும் போய் விசாரித்துப் பார்த்து விட்டனர். முதல்நாளில் கிடைத்த தகவலே மறுநாளும் கிடைத்ததன்றி புதிய செய்தி எதுவும் கிடைக்கவில்லை. ஆகவே, தாம் அதுவரையில் அரிசிமண்டி ஸ்தாபித்து வர்த்தகம் செய்யப் போனதாக இராமலிங்க முதலியார் தமது சொந்த ஊரில் கூறிவிட்டு வந்தது, வேண்டுமென்றே பொய் சொல்லி அந்த ஊராரை ஏமாற்றி விட்டுப் போகவேண்டு மென்னும் கருத்துடன் கூறியதென்று திவான் சாமியாரும் உதவிச் சாமியாரும் தமக்குள் தீர்மானித்துக் கொண்டு, தாம் அதற்குமேல் திருவையாற்றுக்குத் திரும்பி வருவதைத்தவிர வேறு காரியம் எதுவுமில்லை யென்று முடிவுகட்டினர். ஆயினும் அவர்கள் அன்றைய பகல் முழுதும் அலைந்து அலுத்துப் போயிருந்தமையால், இரவை இந்த ஊரிலேயே போக்கிவிட்டு மறுநாளை ரயில் வண்டியில் புறப்பட்டுத் தஞ்சைக்குப்போவதென்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டு ஒரு சத்திரத்தில் தங்கி இருந்தனர். அந்த இரவும் கழிந்தது. மறுநாள் காலையில் திவான் சாமியார் விழித்துக்கொண்டு பார்க்கிறார். தமக்குப் பக்கத்திலிருந்த உதவிச் சாமியார் காணப்படவில்லை: அவர் ஒருகால் முன்னால் எழுந்து ஆற்றங்கரைக்குப் போயிருக்கலா மென்று திவான் சாமியார் நினைத்து அரை நாழிகை காலம் பொறுத்திருந்தார். உதவிச் சாமியார் புன்னகை தவழ்ந்த முகத்தோடு அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்ட திவான் சாமியார், "ஆற்றங்கரைக்குப் போய் வருகிறீர்களா ? என்னையும் எழுப்பியிருந்தால், நானும் வந்

திருப்பேனே இருவரும் போய் நம்முடைய ஸ்நானம் முதலிய காரியங்களையெல்லாம் முடித்துக் கொண்டு வந்திருக்கலாமே" என்றார்.

உதவிச் சாமியார், "ஆம் சுவாமிகளே! நான் ஆற்றங்கரைக்குத் தான் போய்விட்டு வருகிறேன். நான் எழுந்து பார்த்தபோது, தாங்கள் அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்தீர்கள்; அப்போது நன்றாகப் பொழுது விடியவுமில்லை. நான் தங்களை ஏன் எழுப்புகிறதென்று நினைத்து அவசரமாக ஆற்றங்கரைக்குப் போனேன் போன இடத்தில் ஒரு சந்தோஷச் செய்தியும் கிடைத்தது. தெய்வந்தான் என்னை தட்டி எழுப்பி அவ்வளவு சீக்கிரமாக அங்கே அனுப்பியிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்." என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் வியப்பும் ஆவலுங் கொண்டு, "என்ன சந்தோஷச் செய்தி கிடைத்தது?" என்று வினவினார்.

உதவிச் சாமியார், "நான் ஆற்றங்கரைக்குப் போன இடத்தில் இந்த ஊர் மனிதர் ஒருவரைக் கண்டேன். அவரும் நானும் லோகாபிராமமாய்ப் பேசிக்கொண்டிருந்தோம அவர் இந்த ஊரில் உள்ள ஒரு நெல் மண்டியின் சொந்தக்காரர் என்றார். இநத விஷயம் அவருக்கு ஒரு வேளை தெரிந்திருக்கலாமென்று நினைதது நான் அவரிடம் கேட்டேன். அவர் கொஞ்ச நேரம் யோசனை செய்து ஞாபகப் படுததிக் கொண்டு சில தகவல்களைத தெரிவிததார். அவருடைய சொந்த ஊர் திருச்செந்தூராம். அந்த ஊரைவிட்டு அவர் இங்கே வந்து நெல் மண்டி வைதது ஆறுமாத காலந்தான் ஆகிறதாம், அந்தத திருச்செந்தூரில் இராமலிங்க முதலியார் என்ற ஒருவர் வந்து அரிசிமில் வைததிருப்பதாகவும், அவர் தம்முடைய சொந்த ஊர் தஞ்சை ஜில்லாவில இருக்கிறதென்று சொல்லிக் கொண்டதாகவும், அவர் நல்ல பணககாரரா யிருந்தாரென்றும், அவருடன் ஒரு பெண்ணும் பிள்ளையும் அவருடைய சம்சாரமும் இருந்தனரென்றும், நாம் உடனே புறப்பட்டு அந்த ஊருககுப் போனால், அவரைக் கண்டு பிடிக்கலாமென்றும, நெலலு மண்டி வர்ததகர் சொன்னார். அந்தத தகவலைக் கேட்டவுடன் எனக்கு உண்டான சந்தோஷததுக்கு அளவு சொல்லவே முடியாது. இரண்டு தினங்களாய் நம்மைச் சோதிதத கடவுள் முடிவில கிருபா நோக்கம் வைததமென்று நினைததுக்கொண்டு, அதை உங்களிடம் சொல்லலாமென்று ஓடோடியும் வந்தேன்." என்று கூறினார்.

அதைக் கேட்ட திவான் சாமியாரும் அபாரமான சந்தோஷமும் உற்சாகமும் அடைந்தார்; தாம் இனி இராமலிங்க முதலியாரின் இருப்பிடத்தைக் கண்டு பிடிக்க இயலாது என்று நினைத்து நம்பிக்கை யற்றுத் தளர்வுற்றிருந்த அவரது மனம் தாம் அவர்களைத் திருச்செந்தூரில் அவசியம் கண்டு பிடித்து விடலாம் என்ற உறுதியையும் நம்பிக்கையையும் கொண்டது. அதுவுமன்றி, தாம் ஏழு வருஷ காலத்திற்கு முன் சநிதொடர் மங்கலத்தி லிருந்து புறப்பட்டுத் தென்னாட்டிலுள்ள திவ்விய க்ஷேத்திரங்களுக் கெல்லாம் சென்று திருவடமருதூருக்குப் போனகாலத்தில் திருச்செந்தூருக்கு மாத்திரம் போகவில்லை யாதலால், அந்தக் குறையையும் கடவுள் இதன் மூலமாய்ப் பூர்த்திசெய்து வைக்கிறார் என்றும் திவான் சாமியார் தமக்குள் எண்ணிக் கொண்டார். உடனே திவான் சாமியார் எழுந்து உதவிச் சாமியாரையும் அழைத்துக் கொண்டு சென்று அந்த ஊரிலேயே தங்களது ஸ்நானம் போஜனம் முதலிய வைகளை விரைவாக முடித்துக்கொண்டு பிரயாணம் புறப்பட்டு அன்றைய தினம் முழுதும் சென்று மறுநாட் காலையில் திருச்செந்தூரை யடைந்தார். திருச்செந்தில் அல்லது, திருச்செந்தூர் என்பது சிறந்த சுப்பிரமணிய ஸ்தலங்களுள் ஒன்று. அது இராமேசுவரத்திற் கருகில் உள்ளது. சுப்பிரமணிய ஆலயம், கடலின் அலைகளால் மோதப்பட்டவண்ண மிருக்கும் ஒரு குன்றின் மீது அமைந்துள்ளதாதலால், அதன் இயற்கை வனப்பு எவ்வாறிருக்குமென்பது எளிதில் விளங்கும். நமது திவான் சாமியார் முருகக் கடவுளிடத்தில் அபாரமான பக்தியுடையவ ராதலால், அந்த ஸ்தலத்தை யடைந்தவுடன், ஓயாத் தொல்லைகளும், ஒழியாத் துயரமும், தொலையா மனப்பிணிகளும் நிறைந்த மண்ணுலகைத் துறந்து மோக்ஷ லோகத்தை அடைந்து விட்டவர் போல உணர்ந்து பக்திப் பெருக்கும், மனவுருக்கமும், ஆநந்த பரவசமும் கொண்டவராய் மாறிப் புத்துயிர் பெற்றவர் போலானார். அந்த ஸ்தலத்தில் செறிந்திருந்த கண்கொள்ளா இயற்கை வனப்பைக் காணக்காண, அவரது மனம் பக்திப் பெருக்கினால் பரவசமடைந்து பொங்கியது. முருகன் என்பதற்கு கட்டழகன் வாய்ந்தவன் என்று அர்த்தமல்லவா, அத்தகைய கடவுளை ஈன்ற பரமசிவன் அவருக்குத் தக்க மகா வசீகரமான ஸ்தலத்தையே அமைத்து வைத்திருக்கிறார் என்று திவான் சாமியார் தமக்குள் தீர்மானித்துக் கொண்டவராய்த் தமது சொந்தக் கவலைகளையும், சொந்த மனிதர்களையும் அறவே

தமது மனததை விட்டு விலக்கி, அந்த மனோரம்மியமான ஸ்தலத்தின் அற்புதக் கவர்ச்சியில் ஈடுபட்டவராய், அவ்விடத்திலுள்ள புண்ணிய தீர்த்தத்தில் நீராடுவதும், சுவாமிக்குப் பூஜை அர்ச்சனை நிவேதனம் முதலியவைகளை நடத்துவதற்கான காரியங்களைச் செய்வதுமாய் இருந்தார். உதவிச் சாமியாரும் அவரது நோக்கப்படியே நடந்து கொண்டதன்றி அங்கு காணப்பட்ட மனிதர்களிடத்தில் அவ்வூரில் அரிசிமில் வைத்திருக்கும் இராமலிங்க முதலியாரின் வீடு எங்கே இருக்கிறதென்று விசாரித்தார் அதைக்கேட்ட அவ்வூர் வாசிகள் அவர்களைப் பார்த்துப் பரிஹாசமாக நகைத்து, "இந்தப் பரதேசிகளுக்குப் பைத்தியம் போலிருக்கிறது" என்று கூறிய வண்ணம் அவர்களுக்கு மறுமொழி கொடாமல் போயினர் வேறு சிலர் அவர்களை நோக்கி, ' அரிசியாவது மில்லாவது? அப்படியென்றால் என்ன அர்த்தம்?" என்றனர். மற்றும் சிலர் "இந்த ஊரில் புளியங்கட்டையாலான உரலும் செம்மரததாலான உலக்கையும் தான் அரிசிமில். இவ்வளவு சிறிய ஊருக்கு அரிசிமில்தான் ஒரு குறையா! இனி யாராவது அரிசிமில் வைத்தால்தான் உண்டு. இப்போது யாரும் அரிசிமில் வைக்கவில்லை. இராமலிங்கத்தின் அரிசிமில் இதோ பக்கத்திலிருக்கும் இராமேசுவரத்திலுள்ள கோவில் மடப்பள்ளியில்தான் இருக்கிறது" என்று மறுமொழி கூறினர் அவர்கள் கூறிய சொற்களை நமது திவான் சாமியாரும் கேட்டுக்கொண்டே இருந்தாராதலால், மதுரையில் நெல் மண்டிக்காரர் உதவிச் சாமியாரிடம் சொன்ன தகவல் பெருத்த அண்டப்புளுகு என்பதை திவான் கண்டு கொள்ளவே, அவரது ஆச்சரியம் அளவிட இயலாததாக மாறியது அவர் உதவிச்சாமியாரை நோக்கி, "ஐயா! என்ன விநோதம் இது! மதுரை ஆற்றங்கரையில் உங்களைச் சந்திததுத தகவல் சொன்னவர் வேறே எந்த ஊரின் பெயரையாவது சொல்லி இருப்பாரா? அந்த சப்தம் உங்கள் காதில் சரியாய்ப்படாமலிருக்குமா? ஒரு வேளை அது திருச்செந்துறையாக இருக்குமா?" என்றார். உதவிச் சாமியாரும் வியப்பும் பிரமிப்பும் அடைந்தவராய்க் காணப்பட்டு, "இது எனக்கும் அதிசயமாய்த்தான் தோன்றுகிறது. திருச்செந்தூர் என்று அவர் நன்றாகச் சொன்னாரே! அவர் வேண்டுமென்றே பொய் சொல்லி இருப்பாரென்று தான் நினைக்க வேண்டியிருக்கிறது. பைத்தியக்காரனைப்போல இருக்கிற இந்தப் பரதேசிக்கு ஊரில் ஒரு கவளம் சோறு பிச்சை வாங்கித் தின்பதை விட்டு அரிசி மில்லைப்பற்றி ஏன் கேட்க வேண்டுமென்ற

எண்ணத்தினால், அவர் புரளிசெய்திருந்தாலும் இருக்கலாம். சரி, இப்போது காரியம் ஒன்றும் முழுகிப் போகவில்லை. நல்ல புண்ணிய ஸ்தலத்திற்குத்தானே வந்தோம். இந்த ஸ்வாமி தரிசனம் நாம் நினைத்தபோது கிடைக்குமா! இதுவும் ஓர் அதிர்ஷ்டமென்றுதான் நாம் எண்ணிக்கொள்ள வேண்டும்" என்றார்.

மதுரை, திருச்செந்தூர் ஆகிய இரண்டிடங்களிலும் தமது ஆராய்ச்சி பலிதமடையாமல் அபஜெயத்தில் முடிந்துபோனதே என்ற நினைவு திவானினது மனத்தில் சகிக்க வொண்ணாத விசனத்தையும், ஏக்கத்தையும், வேதனையையும் உண்டாக்கி விட்டது. தாம் இனி தமது சிற்றன்னையை இந்த உலகில் காண இயலாது என்ற அவநம்பிக்கையும் மனத்தளர்ச்சியும் ஏற்பட்டுப் போகவே "என்ன உலகம் இது! எந்தக் காரியத்தைத் தொட்டாலும், அது அபஜெயமாக அல்லவா முடிகிறது. சே! நான் என்ன மனிதன்" என்ற விரக்தியும் வெறுப்பும் பெருகிப் போயின, அவரது சுப்பிரமணிய பக்தி அபாரமாகப் பொங்கி நெஞ்சை யடைக்கத் தொடங்கியது. துயரமும் அழுகையும் கரைபுரண்டு எழுகின்றன. அந்த நிலைமையில் இருந்த திவான் சாமியாரும், உதவிச் சாமியாரும் தமது ஸ்நானம், நியம நிஷ்டைகள் முதலியவைகளை முடித்துக் கொண்டு, தேங்காய் பழம் முதலிய பூஜை சாமான்களை எடுத்துக் கொண்டு முருகன் சந்நிதியை அடைந்து சுவாமி தரிசனம் செய்யத் தொடங்கினர். குருக்கள் அர்ச்சனை செய்ய வாரம்பித்தார். சுப்பிரமணியரது திருநாமங்களை ஒவ்வொன்றாகக் கூறி அவர் வில்வங்களை எடுத்து அர்ச்சிக்கத் தொடங்கவே, திவானினது பக்திப் பெருக்கு உச்ச நிலையை யடைந்து விட்டது. அவர் பைத்தியம் கொண்டவர்போல மாறித் தம்மை முற்றிலும் மறந்து பரவச மடைந்து கீழே விழுந்து விழுந்து கும்பிட்டெழுந்து கன்னத்தில் அடித்துக் கொள்ளுகிறார்; கடவுளைத் தொழுகிறார்; கண்ணீர் விடுத்துக் கதறி யழுகிறார் குருக்கள் தேங்காய் பழம் முதலியவைகளை நிவேதனம் செய்தபின் கற்பூர ஹாரத்தியைக் கொளுத்தி உயர்த்தவே, திவான் சாமியார் சன்னதங் கொண்டவர்போல மாறிப் போனார். அவரது கை கால்களும் அங்கங்களும் வெடவெடவென்று ஆடுகின்றன. சிரம் முதல் நகம் வரையில் உரோமம் சிலிர்த்துத் தாண்டவமாடுகிறது. தழுதழுத்து முற்றிலும் நைந்த குரலில் அவர் முருகக் கடவுளை ஸ்தோத்திரம் செய்யத்

தொடங்கி அடியில் வரும் திருப்புகழைப் பாட ஆரம்பித்து விட்டார்:—

திருப்புகழ்

*தனத்தந்தானன தானன தானன*
*தனத்தந்தானன தானன தானன*
*தனத்தந்தானன தானன தானன—தனதானா.*

*அணிச்சங்கார் முகம் வீசிட மாசறு*
*துவள்பஞ்சான தடாகம் விடாமட*
*வனத்தின் தூவி குலாவி சீரடி—மடமாதர்*
*அருக்கன் போலொளி வீசிய மாமர*
*கதப்பைம் பூணணி வார்முலை மேன்முக*
*மழுத்தும் பாவியென் ஆவியீடேறிட—நெறிதாராய்*
*வினைச் சண்டாளனை வீணனை நீள்நிதி*
*தனைக் கண்டாணவ மானநிர் மூடனை*
*விடக்கன் பாய்நுகர் பாழனையோர் மொழி—பகராதே*
*விகற்பங் கூறிடு மோக விகாரனை*
*அறத்தின் பாலொழுகாத மூதேவியை*
*விபத்தன் பாதகை நீதராநானருள்—பெருவேனோ*
*முனைச் செங்கோலிடு நீல மகோததி*
*அடைத்தஞ்சாத விராவண நீள்பல*
*முடிக்கண் ரோர்கணை ஏவுமிராகவன்—மருகோனே*
*முளைக்குஞ் சீத நிலாவொடு பாய்விரி*
*திரைக் கங்காநதி தாதகிகூவிள*
*முடிக்குஞ் சேகரர் பேரருளால்வரு—முருகோனே*
*தினைச் செங்கானக வேடுவராவனர்*
*திகைத்தந் தோவென வேகணியாகிய*
*திறற்கந் தாவளிநாயகி காமுறும்—எழில்வேலா*
*சிறக்கும் தாமரை யோடையின் மேடையில்*
*நிறக்குஞ் சூல்வளை பால் மணிவீசிய*
*திருச்செந்தூர் வரு சேவகனே சுரர்—பெருமானே!*

ஆ! என்னப்பனே! வடிவேலா! கார்த்திகேயா! வள்ளி மணாளா! சுப்பிரமண்ய மூர்த்தி! பார்வதி பாலா! வேலாயுதா! சூரசம்மாரா! முருகன் முருகன் என்றால் பழவினைகள் அறுகும் அறுகும் என்பார்களே! என் மனதைக் கொள்ளைகொண்ட மாபெருந் தேவே! என்னப்பனே! மயில்வாகனனே! ஆறுமுகனே! குற்ற

மற்ற தங்கம்போன்ற குணங்களும் செயல்களும் பெற்றிருப்பதால் சுப்பிரமணியனெனப் புகழப்படும் என் ஒப்பிலா அண்ணலே! நிகரிலா வீரம், மாறாத வெற்றி, மங்களகரம் முதலியவற்றிற்கு உறைவிடமான உன்னையே சதாகாலமும் நினைந்துருகும் இந்த அடிமையின் இடர்களைக் களைவது உனக்கு ஒரு பெரிய காரியமா! தெய்வயானை யென்னும் ஞானசக்தியும், வள்ளியம்மையார் என்னும் கிரியா சக்தியும் உத்தம பதிவிரதைகளைப்போல் உனது இருபுறங்களிலும் எப்போதும் ஆயத்தமா யிருந்து உன் இச்சைப்படி நடக்க, பிரணவம், இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, ஆதிசக்தி, பராசக்தி, முதலியவை உனது ஆறு முகங்களாய் ஜ்வலிக்க சர்வக்ஞம், திருப்தி, அநாதிபோதம், அலுப்த சக்தி, அநந்த சக்தி, சுதந்திரத்துவம் முதலிய மகா உத்தமமான குணங்கள் ஒப்புயர்வற்று உன்னிடம் தழைத்தோங்க, எழிலுக்கும் சாயலுக்கும் சட்டகமான மயில்போன்ற மேனியாகிய வாகனத்தி லமர்ந்து, சகலமான சுக போகங்கள் ராஜரீகம் முதலியவற்றை எல்லோர்க்கும் வழங்கும் மகாவிஷ்ணுவின் செல்வத் திருமருகனாய் அமோக மங்கள மூர்த்தியாய்த் தனக்குத்தானே நிகரென விளங்கும் என் வெற்றி வேல் முருகா! என்னப்பனே! என் தெய்வ சிகாமணியே! அபயம் அபயம் அடியேன் அபயம்” என்று திவான் சாமியார் வாய்விட்டுக் கூவிப் பெருங் கூச்சலிட்டுக் கதறி முறையிட, அப்பொழுது குருக்கள் கற்பூர ஹாரத்தியை ஏந்தி அழகாய்ச் சுழற்றினர்.

அதைக் கண்ட திவான் சாமியார் களிவெறியும் கட்டிலடங்கா ஆவேசமும் கொண்டு கன்னங்களில் அடித்துக்கொண்டு கரங் குவித்து, “முருகா! முருகா! செந்திலாண்டவனே! எம்பெருமானே! தீராத என் கலியைத் தீர்த்தருளப்பனே” என்று பிரார்த்தித்து அடியில் வரும் பாடலை மிகமிகக் கனிவாகப் பாடத் தொடங்கி,

“அரசரெலாம் மதித்திடப் பேராசையினாலே அரசோ
டாலெனவே மிகக்கிளைத்தேன், அருளறியாக் கடையேன்
புரசமரம் போற்பருத்தேன்; எட்டியெனத் தழைத்தேன்:
புங்கெனவும் புளியெனவும் மங்கி யுதிர்க்கின்றேன்;
பரசும் வகைதெரிந்து கொளேன்; தெரிந்தாரைப் பணியேன்;
பசை அறியாக் கருங்கல் மனப்பாறை சுமந்துழல்வேன்;
விரசநிலத்து என் பிறந்தேன்? கருத்தை யறியேன்;
வியக்குமணிக் குன்றில் ஓங்கி விளங்கும் பரம்பொருளே!”

என்று பாடிப் பரவச மடைந்து மயங்கி ஒய்ந்து பக்கத்தி லிருந்த சுவரில் சாய்ந்தார். அப்பொழுது முருகக்கடவுளுக் கருகிலிருந்த குத்துவிளக்கின் திரியிலிருந்து கலகலவென்று பொறிகள் உதிர்ந்தது. சுப்பிரமண்ணியக் கடவுளே அவரது ஆழ்ந்த பக்தியைக் கண்டு வியந்து தமது அருளொளிச்சுடரைப் புஷ்பமாரிபோல உதிர்த்து விட்டு, அவருக்கு அபயஸ்தம் கொடுப்பதுபோல இருந்தது. அதே சமயத்தில், "ஐயோ பாவம்! அதிக உயரத்திலிருந்து விழுந்து விட்டானடா! அதனால் காயம் பலமாய்ப் பட்டுவிட்டதுபோ லிருக்கிறது. இரண்டொரு படிகளி லிருந்து வழுக்கி விழுந்திருந்தால், இவ்வளவு கஷ்டம் இராது. இருந்தாலும் பரவாயில்லை. கொஞ்சம் முன்னைப்பின்னை எல்லாம் சரிபட்டுப் போகும்" என்று யாரோ சிலர் தமக்குள் ஓங்கிப் பேசிக்கொண்ட அசரீரி வாக்கு உண்டாயிற்று அந்த வார்த்தைகள் மாத்திரம் திவானினது செவிகளில் நிரம்பவும் தெளிவாகப் பட்டனவே யன்றி, அவர்கள் பேசிய மற்ற விஷயங்கள் கேட்கவில்லை. தெய்வம், தனக்கு அவ்விதமாக வாக்குக் கொடுப்பதாய் திவான் சாமியாரது மனத்தில் ஓர் எண்ண முதித்தது. அதை ஆமோதிப்பது போல அந்த சமயத்தில், குருக்கள் அவரிடம் வந்து கற்பூர ஹாரத்தியைக் காட்டினார். திவான் சாமியார் தமது இருகரங்களாலும், அதைத் தொட்டுத் தமது கண்களில் ஒற்றிக்கொண்டு, விபூதி, தேங்காய், பழம் பத்திரம், புஷ்பம் முதலிய பிரசாதங்கள் பெற்றுக்கொண்டு, செந்திலாண்டவனை இன்னமொரு முறை நமஸ்கரித்துவிட்டு உதவிச் சாமியாருடன் வெளியில் வந்து சேர்ந்தார். கற்பூர ஹாரத்தி நடந்த பொழுது உண்டான அசரீரிச் சொற்கள் அவரது செவிகளை விட்டு அகலாமல் ஒலித்துக் கொண்டே இருந்ததுபோல அவர் உணர்ந்தார் "கொஞ்சம் முன்னைப்பின்னை எல்லாம் சரிப்பட்டுப்போகும்" என்றசொல் தமக்காக உபதேசிக்கப் பட்டதாய் இருக்குமா? அப்படியானால், தமக்கு விமோசன காலம் ஏற்படுமா, அப்படி ஏற்படுவதானால், பழைய மனிதர்கள் எல்லோரும் ஒன்று கூடிப் பழைய நிலைமையிலும் பழைய பதவியிலுமல்லவா இருக்கவேண்டும். அவ்வளவு தூரம், எல்லாம் ஒழுங்குக்கு வரப் போகிறதா என்று திவான் சாமியார் தனக்குள் எண்ண மிட்டபடி கோவிலை விட்டு வெளியேறினார். ஆனாலும் அவ்வாறு அன்றையதினம் சுவாமி தரிசனம் செய்துவிட்டு வந்த பிறகு அவரது மனம் தலையெடாமல் அதை அழுத்திக் கொண்டிருந்த மலைபோன்ற துயரச்

சுமையின் பெரும்பாகமும் குறைந்து போனதாய்த் தோன்றியது. ஒருவித நம்பிக்கையும், குதூகலமும் மனத்தில் தாமாக ஊற்றெடுத்துப் பொங்கியபடி இருந்தன. அவரது தேகம் அடிக்கடி மயிர்ச் சிலிர்ப்பை யடைந்து கொண்டிருந்தது. அவரது வலது கண், வலது புஜம் முதலிய அங்கங்கள் துடித்தபடி இருந்தன. அத்தகைய இன்பகரமான நிலைமையில் சாமியார்களிருவரும் வெளியே வந்து சிறிது தூரத்திற்கப்பால் காணப்பட்ட உன்னதமான பெரிய சத்திரத்தை யடைந்து அதன் திண்ணையில் உட்கார்ந்து கொண்டனர். அந்தச் சத்திரம் சிறிது காலத்திற்கு முன்பே புதிதாய்க் கட்டப்பட்டதாகத் தோன்றியது. திண்ணைக் கடுத்த சுவரில் வாசற்படிக்குமேல் பக்கத்தில், "முதலியார் சத்திரம்" என்ற எழுத்துக்கள் வெள்ளைச் சலவைக்கல்லில் செதுக்கப்பட்டு தக்க ரேக்குகள் பதிக்கப் பெற்றிருந்தன. குளிர்ச்சிக்காகவும் நிழலுக்காகவும் திண்ணையோரமெல்லாம் தென்னம் பிள்ளைகளும், வாதா மரங்களும், பூச்செடிகளும் ஏராளமாக வைத்துப் பயிராக்கப்பட்டிருந்தன. திண்ணை சன்னகாரையால் கண்ணாடிபோல மெருகு கொடுக்கப்பட்டிருந்த தாகையால், குளிர்ச்சியான நிழலில் அந்தத் திண்ணையின் மேல் உட்கார்ந்தது பரதேசிகள் இருவருக்கும் பிரம்மானந்தமாக இருந்தது. அவர்களிருவருக்கும் தாகத்தினால நாவறண்டு போயிருந்ததானாலும் அந்த இடத்தின் இனிமையினால் தாக வறட்சி குறைந்து தோன்றியது. அவர்கள் போய் அந்தத் திண்ணையின் மேல் உட்கார்ந்ததுதான் தாமதம். அதற்குள்ளிருந்த சத்திரத்தையர் புன்னகை பூத்த இனிய முகத்தோடு வந்து அதிதிகளுக்குச் சிறிது தூரத்தில் நின்றார். அவரைக் கண்ட திவான் சாமியார், "சுவாமிகளே! தாகத்திற்குக் கொஞ்சம் சுத்த ஜலம் கொடுக்க சௌகரியப்படுமா?" என்று கேட்டார். அதைக் கேட்ட சத்திரத்தையர் உவப்போடும் மரியாதையாகவும் விநயமாகவும் பேசத் தொடங்கி, "சுத்த ஜலமும் இருக்கிறது. இன்னம், நீர்மோர், தயிர், ஸத்துமா, இளநீர், கற்கண்டுப் பானகம், நெல்லிக்காய், வெள்ளரிப்பிஞ்சு, பால் முதலியவைகளும் சித்தமாயிருக்கின்றன, உங்களுக்கு எதேது தேவையோ, அவைகளைக் கொணர்ந்து தருகிறேன்" என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் அந்தச் சத்திரத்தின் புதுமையான ஏற்பாட்டைக்கண்டு ஒருவாறு வியப்பும் சந்தோஷமும் கொண்டவராய் ஐயரை நோக்கி, "வேறு எதுவும் எங்களுக்கு வேண்

டாம். சுவாமிகள் எங்களுக்குக் கொஞ்சம் சுத்த ஜலம் கொடுப்பதே போதுமானது" என்று கூறினார்.

உடனே சத்திரத்தையர் உள்ளே போய், பளிச்சென்று தேய்க்கப் பட்டிருந்த தாமிரச் செம்பு நிறைய தண்ணீரையும், எடுத்துப் பருக இன்னொரு பாத்திரத்தையும் கொணர்ந்து, சாமியார்களுக் கெதிரில் வைத்தார். அந்த ஜலத்திலிருந்து விளாமிச்சம் வேர், ஏலக்காய், பாதிரிப்பூ முதலியவற்றின் இனிய மணம் குபீ ரென்று வீசியது. திவான் சாமியார் செம்பைக் கையால் தொடவே, அது பனிக்கட்டி போடப்பெற்றது போல ஜிலீரென்று குளிர்ந் திருந்தது. திவான் சாமியார் அந்தச் செம்பிலிருந்த ஜலத்தில் அரை பாகத்திற்குமேல் பருகி விட்டார். அதைப் பருகியது அவருக்கு அந்த வெயிலிலும், தாக விடாயிலும், அமிர்தத்தையே பருகுவதுபோல இருந்தது. செம்பில் மிகுதி இருந்த ஜலத்தை உதவிச் சாமியார் அவர்களது வழக்கப்படி இரண்டாவதாக எடுத் துப் பருகினார்.

சத்திரத்தையரது லலிதமான இனிய தன்மையைக் கண்ட திவான் சாமியார் மிகுந்த களிப்பும் திருப்தியும் அடைந்து அவரை நோக்கி, "சுவாமிகளே! இந்தச் சத்திரத்தில் சாப்பாடு கிடைக்குமா?" என்று வினவினார். ஐயர் சந்தோஷமாக நகைத்து, " நீங்கள் இந் தப் பக்கத்திற்கே இதற்கு முன் வந்திராத புதிய மனிதர்கள்போ லிருக்கிறதே! பதினாயிரக் கணக்கில் பணத்தை இறைத்துக் கலியா ணம் நடக்கு மிடத்தில் மாப்பிள்ளை தமக்கு ஒரு தாம்பூலம் கிடைக் குமா வென்று கேட்பதுபோ லல்லவா இருக்கிறது உங்களுடைய கேள்வி. இதோ சுவரில் மாட்டியிருக்கும் விளம்பரத்தை நீங்கள் படித்துப் பார்த்திருந்தால், என்னிடம் நீங்கள் இப்படிப்பட்ட கேள்விகளையே கேட்டிருக்க மாட்டீர்கள். இந்தச் சத்திரத்தில் பகலிலும் சரி, இரவிலும் சரி, எத்தனை பேர் வந்தாலும், நெய்யில் செய்த பக்ஷண பரமான்னங்களுடன் திவ்வியமான போஜனம் கிடைக்கும் எத்தனை நாளைக்கு வேண்டுமானாலும் இருந்து சுக மாகச் சாப்பிடலாம் " என்றார்.

திவான் சாமியார், "ஒருவேளைச் சாப்பாட்டுக்கு எவ்வளவு கிரயம் ஏற்படுத்தி யிருக்கிறீர்கள் ?" என்றார்.

அதைக் கேட்ட ஐயருக்கு அவரை மீறி சிரிப்பு உண்டாகி விட்டது. அவர் கலகலவென்று சிரித்துக்கொண்டே திவான் சாமி யாரை நோக்கி, "ஐயா! தர்ம சத்திரத்தில் வந்திருந்து இப்படிப் பட்ட கேள்வியை நீங்கள் கேட்கிறீர்களே! உங்களுக்கு என்ன பதில் சொல்வதென்பது தெரியவில்லை. தயவுசெய்து அப்பேர்ப் பட்ட கேள்வியை மறுபடி கேட்கவேண்டாம். இது தர்ம சத்திரம்; சோற்றுக்கடை யல்ல. அவ்வளவேதான் நான் சொல்ல முடியும்" என்றார்.

உடனே திவான் சாமியார், "சுவாமிகளே! நான் எங்கே போய் போஜனம் செய்தாலும், அதற்கு உடனே கிரயம் கொடுத்து விடு கிறது வழக்கம். அதுபோல, இங்கேயும் நான் கிரயம் கொடுத்து விடுகிறேன். அதை நீங்களாவது எடுத்துக் கொள்ளுங்கள். எங்கள் இருவருக்கும் சாப்பாடு போடுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட சத்திரத்தையர் தமது கைகளால் காதுகளைப் பொற்றிக் கொண்டு, "சிவ சிவா! அந்தப் பேச்சை இன்னொருதரம் சொல்ல வேண்டாம், இது சிலாக்கியமான புண்ணிய க்ஷேத்திரம். இந்த இடத்தில் யாரோ தர்மவான் ரூபாயை ஏராளமாக அள்ளி இறைத்து ஏழைகளுக்கும், பரதேசிகளுக்கும் இலவசமாய்ச் சாப் பாடு போடும்படி வெகு நேர்மையான ஏற்பாடுகளை யெல்லாம் செய்திருக்கிறார். அதில் நான் காசு வாங்குவதென்றால் என்னைப் போன்ற பரம துரோகி யாரும் இருக்க மாட்டான். முன் ஜென்மத் தில் என்ன பாவம் செய்தோ நான் இப்படிப்பட்ட சமயல் உத்தி யோகத்தை அடைந்திருக்கிறேன். புண்ணிய க்ஷேத்திரத்தில் இருந்து கொண்டு தர்ம சொத்தை விற்றுப் பணம் சம்பாதித்தால், நான் ரௌரவாதி நரகத்துக்குத்தான் போய்ச் சேருவேன். ஐயா சாமியாரே! எனக்கு உங்கள் காசு வேண்டாமையா! சத்திரத்தின் சொந்தக்காரர் இன்னம் கொஞ்ச நேரத்தில் வருவார்கள். இந்தச் சொல் அவர்களுடைய காதில் விழுந்தால், நான் உடனே ஊரை விட்டு ஓடிப்போக வேண்டியதுதான்." என்றார்.

உடனே திவான் சாமியார் ஒருவாறு திருப்தியும் சந்தோஷமு மடைந்து, "ஓகோ அப்படியா சங்கதி! இந்தச் சத்திரத்து முதலி யார் இப்போது இங்கே வருவாரா?" என்றார்.

சத்திரத்தையர், "இந்தச் சத்திரத்தின் சொந்தக்காரர் முதலியார் அல்ல. இவர்கள் வாண்டையார் ஜாதியைச் சேர்ந்தவர்கள். என்ன காரணத்தினாலோ, இவர்கள் இதற்கு முதலியார் சத்திரமென்று பெயர் வைத்திருக்கிறார்கள். தினம் இதில் ஒரு பரதேசிக்காவது சாப்பாடு நடக்க வேண்டும்; பகல் ஒரு மணிக்கு அவர்கள் தம்பதி சமேதராய் வந்து போஜனம் செய்த அதிதிக்கு நமஸ்காரம் செய்து, அவர் சாப்பிட்ட பிறகு மிஞ்சி இருக்கும் உச்சிஷ்டத்தில் கொஞ்சம் பிரசாதமாக வாங்கி எடுத்துக்கொண்டு அவர்களுடைய வீட்டுக்குப் போய், அதைத் தங்களுடைய சாப்பாட்டில் கலந்து கொண்டு சாப்பிடுவார்கள். இப்போது மணி 12 ஆய்விட்டது. யாரும் பரதேசிகள் வரவில்லையே யென்று நான் கவலை கொண்டு ஆவலோடு வழியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். செந்திலாண்டவர் உங்கள் இருவரையும் அனுப்பி வைத்தார். போஜனம் தயாராய் இருக்கிறது. இலைகள் போடப்பட்டிருக்கின்றன. தாங்கள் இருவரும் எழுந்து வாருங்கள்." என்று வருந்தி உபசரித்து அழைத்தார். திவான் சாமியார் உதவிப் பரதேசியின் முகத்தைப் பார்த்தார். அவர் திவான் சாமியாரைப் பார்த்து, "சரி; போகலாம் வாருங்கள். நாம் பரதேசிகள் தானே. பரதேசிகள் பணம் கொடுத்துச் சாப்பிடுவதென்பதும் அசம்பாவித மல்லவா" என்றார்.

உடனே சாமியார் இருவரும் எழுந்து உள்ளே சென்றனர். சத்திரத்தையர் முதல் கட்டிலிருந்த கிணற்றண்டை அவர்களிருவரையும் அழைத்துக் கொண்டுபோய், கைகால்களைச் சுத்திசெய்து கொள்வதற்கு செம்புகளில் தண்ணீர் கொடுத்து, அவர்கள் அந்தக் காரியத்தை முடித்துக்கொண்ட பிறகு, அவர்களை அழைத்துக் கொண்டு இரண்டாவது கட்டிற்குப்போய் அவ்விடத்தில் போடப்பட்டிருந்த தலைவாழை இலைகளுக்குப் பக்கத்தில் இருந்த மணைப் பலகைகளில் அவர்களை உட்காரவைத்து போஜனம் பரிமாரத் தொடங்கினர். அவரைக் காட்டிலும் பன்மடங்கு அதிக நற்குணவதியாகத் தோன்றிய அவரது சம்சாரமும், அவரும் உள்ளே இருந்து கட்டுகளிலும் கோணங்களிலும் ஏராளமான பதார்த்தங்களைக் கொணர்ந்து கொணர்ந்து தாராளமாகக் கவிழ்த்து, அவர்கள் போதும் போதுமென்று கதறும்படி செய்து விட்டனர். வடை பாயசம் சித்திரான்னம் முதலிய யாவும் சேர்த்துப் பார்த்தால், ஒவ்வோர் இலைச்சாப்பாட்டின் கிரயமும் குறைந்தது ஐந்து ரூபாய்க்கு மேல் மதிக்கத் தக்கதாயிருந்த ராஜ போஜனத்தைக் காணவே

திவான் சாமியார் முற்றிலும் பிரமித்துப்போய் உதவிச் சாமியாரை நோக்கி சந்தோஷமாகப் புன்னகைசெய்து, "ஐயா! சாப்பாடு எப்படி இருக்கிறது பார்த்தீரா! ஏராளமான பணத்தை சம்பாதிக்கும் வழியை எல்லோரும் தெரிந்து கொண்டிருந்தாலும், அதை சரியான வழியில் உபயோகிப்பதற்கு சிலருக்குத்தான் தெரிகிறது. இதை ஏற்படுத்தி இருக்கும் தர்மிஷ்டருக்கு அளவற்ற சொத்து இருக்கும் போலிருக்கிறது ஏன் சுவாமிகளே! இந்தப் புண்ணியவான் ஏதாவது வர்த்தகம் செய்கிறாரா, அல்லது, மிராசுதாரா? இவருக்கு எவ்வளவு சொத்திருக்கும்" என்றார்

சத்திரத்தையர், "அப்படி இவருக்குப் பணம் மலைபோலப் புரண்டு கிடக்கவில்லை, இவருக்கு ஜீவகாருண்யச் செல்வந்தான் அளவிலடங்காததாய் மகா பிரமாதமாக இருக்கிறது. ஐயாவுக்கு ஒன்றும் தெரியாது. அம்மாளுடைய சாமர்த்தியத்தினாலும், திறமையினாலும், அதிர்ஷ்டத்தினாலும், மகா தயாளமான மனசினாலுந்தான், வரும்படி சம்பாதிப்பதும் சரி, செலவு செய்வதும் சரி, எல்லாக்காரியங்களும் நடைபெறுகின்றன. யௌவனப் பிராயமா யிருந்தாலும், அம்மாள்தான் எல்லாவற்றிற்கும் சூத்திரதாரி. இங்கே வட்டாணம், தீததாண்டதனம் என்று பெரிய உப்பளங்கள் இருக்கின்றன. அவ்விடங்களில் அம்பாரம் அம்பாரமாக உப்பு தயாரிக்கப்பட்டு கப்பலில் ஏற்றுமதியாகிறது. அதன் சொந்தக்காரர் சில வருஷங்களுக்கு முன் வார்சில்லாமல் இறந்து போய் விட்டார். அவருடைய அநந்தர வார்சு தாரர்களான இவர்களுக்கு அந்த உப்பளம் வந்து சேர்ந்தது இதற்கு முன்னிருந்தவர் இரண்டாயிரம் ரூபாய் செலவுசெய்ய மாட்டாமல் எல்லாவற்றையும் வெறும் திடலாகப் போட்டிருந்தார். அவருக்கு அதில் ஒரு பைசா கூட வரும்படி வரவில்லை. அவர் ஏழையாகவே இறந்தார். இவர்கள் வந்தவுடன் தங்களிடமிருந்த இரண்டாயிரம் மூவாயிரம் ரூபாயைப் போட்டு மெஷின்களை வரவழைத்து வேலை செய்து அபிவிருத்தி செய்தார்கள். அதே சொத்து இப்போது பத்து லக்ஷம் ரூபாய் பெறும். இவர்களுக்கு வருஷம் ஒன்றுக்கு ஒரு லக்ஷம் ரூபாய் வரும். இவர்கள் சாப்பிட்டு மிஞ்சுவதை யெல்லாம், இவர்கள் தான தருமங்களிலேயே செலவிடுகிறார்கள். இவர்களுடைய சத்திரம் இது ஒன்று மட்டுமல்ல. இதைப்போல இன்னம் 10 க்ஷேத்திரங்களில், இவர்கள் இப்படி சத்திரங்கள் கட்டி எல்லா இடங்களிலும் இப்படியே சாப்பாடு போட்டு அதிதிகளை உபசரிக்க ஏற்

பாடு செய்திருக்கிறார்கள். எல்லா சத்திரங்களுக்கும் முதலியார் சத்திரமென்றே பெயர் வைத்திருக்கிறார்கள்" என்றார்.

அதைக்கேட்ட திவான் சாமியார் பெருத்த வியப்பும் களிப்பும் அடைந்து, "ஆ! அப்படியா! அதுவும் எம்பெருமானுடைய திருவருள்தான். எல்லோருக்கும் இப்பேர்ப்பட்ட பாக்கியம் வாய்க்குமா! மகா சிலாக்கியமான புண்ணியம் செய்த சிலருக்கே இப்படிப்பட்ட புத்தியைக் கொடுத்து அதற்குத் தகுந்த வசதிகளையும் கடவுள் செய்து கொடுக்கிறார். இவர்கள் எல்லாச் சத்திரங்களுக்கும் முதலியார் சத்திரமென்று ஏன் பெயர் வைத்தார்களென்பதுதான் விளங்கவில்லை" என்றார்

சத்திரத்தையர், "அது அவர்களைக் கேட்டால்தான் தெரிய வரும். அவர்கள் இருவரும் தங்கமான குணமும், எந்த மனிதரோடும் லலிதமாகவும் குழந்தைகள் போலவும் அத்யந்த பிரியத்தோடும் பேசுவார்கள். அவர்கள் அதிதி பூஜைக்காக வந்து இதோ வாசல் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்கள் அதிதி பூஜை செய்த பிறகுதான் வீட்டுக்குப் போய் போஜனம் செய்வார்கள். இன்னமும் கொஞ்ச நேரத்தில் நீங்கள் அவர்களோடு பேசுவீர்கள். அப்போது கேட்டுப் பாருங்களேன்" என்றார்.

அப்பொழுது அவர்களது போஜனமும் முடிவுற்றது. இருவரும் எழுந்து கையலம்பிக் கொண்டார்கள். உடனே சத்திரத்தையர் அவர்களிருவரையும் அழைத்துக்கொண்டு வெளியில் சென்று சத்திரத்திற்கு எதிர்த்தாற்போல இருந்த ஒரு மண்டபத்திற்குப் போய் அவ்விடத்தில போடப்பட்டிருந்த விசிப்பலகையின் மீது உட்கார வைத்தார். அவர்கள் வெளியில் வந்ததைக் கண்டவுடனே, திண்ணைக்கோடியில் உட்கார்ந்து கொண்டிருந்த அதன் சொந்தக்காரரும், சுமார் ஒன்றரை வயதடைந்த ஓர் ஆண் குழந்தையைக் கையில் வைத்திருந்த அவரது பத்தினியும் குபீரென்று திண்ணையை விட்டுக் கீழே இறங்கினர். அந்தப் பெண் சுமார் இருநூறு ரூபாய் பெறத்தக்கதும், தகதகாயமாக மின்னியதுமான ஜரிகைச் சேலையையும், பதாதிகேசம்வரையில் வைர ஆபரணங்களையும் அணிந்து கந்தருவ ஸ்திரீ போலக் காணப்பட்டாள். அவளது குழந்தையின் மேலும் சிறந்த ஆபரணங்கள் நிறைந்திருந்தன. அந்த அம்மாளினது புருஷனுக்கு சுமார் முப்பதைந்து வயதிருக்

கலாம். அவர் மகா மெல்லியதாகவும், தும்பைப்பூவிலும் அதிக வெண்மையாக சலவை செய்யப்பட்டும், ஜிலுஜிலென்று மின்னிய தங்க ஜரிகைகள் நிறையப்பெற்றுமிருந்த மலையாளதது ஜரிகை வஸ்திரங்களை யணிந்துகொண்டு, காதில் கடுக்கன், கையில் பத்து விரல்களிலும் மோதிரங்கள், இடுப்பில் தங்க அரைஞாண், கழுத்தில், நவரதனங்கள் இழைத்த ஒற்றை உருத்திராக்ஷம் முதலிய ஆபரணங்களைத தரிததிருந்தார். சிறிது தூரத்தில் இருந்த ஒரு தவசிப் பிள்ளை தனது கையில் ஒரு சிறிய வெள்ளித் தாம்பாளத்தில் அதிதி பூஜைக்குத் தேவையான சுமார் 10 ரோஜாப் புஷ்பங்கள், ஒரு தங்க ஸ்தாலியில் சுத்த ஜலம், வாசனைத் திரவியங்களுடன் கூடிய தாம்பூல வஸ்துக்கள், திவ்ய பரிமளகந்தம் நிறைந்த சந்தனம், பன்னீர்ச்செம்பு, தங்கப் பாளங்கள் போலிருந்த வெற்றிலை, அவற்றின் மேல் இரண்டு ரூபாய் தக்ஷிணை முதலியவைகளை வைதது க்கொண்டு ஆயததமாக நின்று கொண்டிருந்தான் தம்பதிகளிருவரும் குழந்தை சமேதராய் மண்டபததிற்குப் போக தவசிப் பிள்ளை அருகில் வந்து வெள்ளித் தாம்பாளத்தை நிரம்பவும் வணக்கமாக அவர்களுக்குப் பக்கத்தில் ஏந்தியபடி நின்றான். அவ்வளவு அபாரமான செல்வத்திற்கு உரியவர்களாயிருந்த அந்த தம்பதிகளின் குண வொழுக்கங்களைக் கண்ட திவான் சாமியார் முற்றிலும் பிரமிப்படைந்து ஆநந்த பரவசமெய்தி சொக்கிப்போய் மௌனமாக உட்கார்ந்து விட்டார். அந்த சதிபதிகளிருவரும் மனமொதது ஒரேவிதமாக ஒழுகியதை திவான் காணவே, அவரது மனத்தில், தமது பழைய காலதது வாழ்க்கை நினைவிற்கு வந்தது. தமது மனையாட்டியான காந்திமதியம்மாள் தம்மிடம் அப்படித்தான் நடந்துகொண்டாள் என்ற நினைவு தோன்றவே, அவரது மனம் அவ்விடத்தில் நடந்தவைகளை விட்டு திருவநந்தபுரத்தில் தாமும் தமது மனையாளும் இருந்து வாழ்ந்த நாட்களில் நிகழ்ந்த இன்பகரமான பல காட்சிகளை நினைந்து அவற்றில் ஈடுபட்டுப் போய்விட்டது. ஆகவே, அவரது உடம்பு மாத்திரம் கற்சிலைபோல அவ்விடத்தில் இருந்ததேயன்றி, அவரது கவனம் முழுதும் வேறிடத்தில் இருந்தது. அப்பொழுது சதிபதிகள் இருவரும் பயபக்தி விநயத்தோடு தமது கைகளைக் குவித்து, பரதேசிகள் இருந்த விசிப்பலகையைச் சுற்றி மூன்று தரம் வலம் வந்து பிரதக்ஷணம் செய்து, ரோஜாப் புஷ்பங்களை எடுத்து அவர்களது பாதங்களில் சேர்த்து, சந்தனம் வழங்கி, பன்னீர் தெளித்து,

தக்ஷிணையோடு வெற்றிலை பாக்கு முதலிய வஸ்துக்களை அவர்களிடம் வைத்துவிட்டு அவர்களை நோக்கி நிரம்பவும் உருக்கமாக நமஸ்கரித்தனர். திவான் சாமியார் வேறிடத்தில் தமது கவனத்தைச் செலுத்தி யிருந்தா ராதலால், அவ்விடத்தில் வழக்கப்பட்டது இன்னதென்பதை யறியாமலேயே அவரது கைகள் ஏற்றுகொண்டன. உதவிச் சாமியார் எல்லாவற்றையும் கவனித்தாராளுலும் வாயைத் திறவாமல் மௌனியா யிருந்தே அந்தப் பூஜையை ஏற்றுக் கொண்டார்.

கடைசியாய்த் தாங்கள் பரதேசிகளுக்கு நமஸ்காரம் செய்த வரையில் அந்த அம்மாள் தனது முகத்தை நிமிர்த்தாமலேயேதனது கணவனுக்குப் பின்னுலிருந்து எல்லாக் காரியங்களையும் செய்தாள். முடிவில் அவர்களது முகத்தைப் பார்த்து நமஸ்கரித்த காலத்தில் அந்த அம்மாள் உதவிச் சாமியாரது முகத்தைக் கவனித்துப் பார்த்து, ஒருவித உற்சாகமும், சந்தோஷமு மடைந்து, "சுவாமிகளே இதற்கு முன் ஒரு தடவை நாங்கள் தரிசித்திருக்கிறோம்போலிருக்கிறதே! தாங்கள் இந்தப் பக்கத்திற்கு வந்து வெகுகாலமாய் விட்டதே! இப்படித்தானு பராமுகமா யிருக்கிறது?" என்றுள்.

அந்தப் பெண் கூறிய வார்த்தைகள் திவான் சாமியாருடைய கவனத்தையும் உடனே அவ்விடத்திற்குத் திருப்பியது. அவர் அந்த உத்தம சதிபதிக ளிருவரையும் ஆநந்தமாகக் கடாக்ஷித்தார். உதவிச் சாமியாரிடம் அந்த அம்மாள் கூறிய சொற்களுக்கு அவர் வேறு எவ்வித மறுமொழியும் கூறுமல், "திருவருளின் கிருபா நோக்கம் இதுவரையில் ஏற்படவில்லை, இப்போதுதான் ஏற்பட்டது. இன்று மகா மங்களகரமான சுபதினம். ஏனென்றால், நான் என் பரம குருவாக மதித்து வரும் இந்த மகாபுருஷருடன் இந்த இடத்துக்கு வரும்படியான பாக்கியத்தை நான் அடைந்தேன்" என்றுர்.

அதைக் கேட்ட பெண்மணி உடனே நமது திவான் சாமியாரது முகத்தை இரண்டொரு நிமிஷநேரம உற்று நோக்கினுள். நோக்கினவள் திடீரென்று சன்னதங் கொண்டவள் போல மாறித் தனது கையிலிருந்த குழந்தையைத் தவசிப் பிள்ளையிடம் கொடுத்து விட்டுத் தனது கணவனைப் பார்த்து, "எஜமானே! இதோ வந்திருப்பது இன்னுர் என்ற அடையாளம் தங்களுக்குத் தெரியவில்லையா? நமது குலதெய்வ மல்லவா இன்று வந்து தரிசனம்

கொடுக்கிறது! ஆ! செந்திலாண்டவனே! வெற்றிவேல் முருகா! இந்த ஏழைகளுக்கு இன்று எப்பேர்ப்பட்ட மகா பெரும் பாக்கியத்தை அளிக்கிறாயப்பனே! எஜமானே! இன்று சத்திரத்திற்குப் புறப்பட்ட போதே, கோவிலில் எம்பெருமானுடைய உச்சிக் கால மணி யடித்ததைக் கண்டு இன்று நல்ல சகுனமாகிற தென்று நான் சொன்னே னல்லவா; பாருங்கள் பலனை'' என்று கூறித் தமது புருஷனையும் இழுத்துக்கொண்டு ஓடி திவான் சாமியாருடைய பாததடியில் மறுபடியும் விழுந்து விழுந்து பன்முறை நமஸ்கரிக்கிறாள்; அவளது தேகம் சகிக்க இயலாத பெருத்த மனவுணர்ச்சியினாலும், ஆனந்தக் களிப்பினாலும் ஆவேசம் கொண்டு துடிக்கிறது. அந்தக் காட்சியை மிகுந்த பிரமிப்போடு பார்த்துக்கொண்டு நின்ற சத்திரத்தையரை அந்த ஸ்திரீ அழைத்து; ''ஐயரே! நம்முடைய ஆள்களைக் கூப்பிடுங்கள். ஒருவனை நம்முடைய வளவுக்குத் துரத்தி, உள்ளே வைத்திருக்கும் பன்னீர் சீசாக்களில் இருபது இருபதைதங்கை ஒரு கூடையில் வைத்து எடுத்துக்கொண்டு வரச் செய்து, அவைகளை உடைத்து இந்த மண்டபத்திற்குள்ளும் இதைச் சுற்றிலும் தெளியுங்கள். வேறு சிலரை விட்டு மாவிலை, தோரணம், இளநீர்குலைகள், தேர்ச்சீலைகள் முதலியவற்றைக் கொண்டுவந்து இவ்விடத்தில் கட்டச் செய்யுங்கள். ஒருவனை அனுப்பி உடனே வாத்தியக்காரர்களை வரவழைத்து இங்கே வாசிக்கச் செய்யுங்கள். கோவில் குருக்கள் ஐயர், முதலியவர்களிடம் ஆள்களை அனுப்பி எடுபிடி சாமரை முதலியவைகளுடன் பூர்ண கும்பம் எடுத்துக் கொண்டு வரச் செய்யுங்கள். நம்முடைய வளவில் பெங்களூரிலிருந்து வரவழைதது வைத்திருக்கும் சீமை இலந்தை, கமலா, மல்கோவா மாம்பழம் முதலிய கனிவகைகள் இருக்கின்றன அவைகளை ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் வைத்து, நம்முடைய குமாஸ்தாவை யழைத்து, நாம் போன மாசத்தில் வாங்கிவந்து அலமாரியில் வைததிருக்கும் நூறு பவுன்களையும் அப்படியே அந்தத் தட்டில் கொட்டி எடுத்துவரச் செய்யுங்கள் முதலில் சத்திரத்திற்கு ஓடி எனக்கும் என் புருஷனுக்கும் பன்னீர் தெளித்த விளாமிச்சம் வேர் விசிறிகள் இரண்டு கொண்டு வாருங்கள் வெல்வெட் சோபாக்களையும் மற்ற வெள்ளி சாமான்களையும் வரவழையுங்கள். இவர்கள் யார் தெரியுமா? இவர்கள்தான் இந்தச் சத்திரத்துக்கும் இன்னும் பல ஸ்தலங்களிலும் கட்டப்பட்டிருக்கும் தர்ம சத்திரங்களுக்கும் சொந்தக்காரர்களான முதலியார் ஐயா! நிற்கவேண்டாம். சீக்கிரம் போய்

எல்லாவற்றையும் வரவழையுங்கள்'' என்று ஒரு க்ஷணநேரத்தில் நூற்றுக் கணக்கில் உத்தரவுகளைப் பிறப்பித்து விட்டாள். சத்திரத்தையர் மின்சார சக்தியால் தாக்கப்பட்டவர் போல கட்டிலடங்கா வேகமும் ஆவேசமும் கொண்டு ஒரே ஓட்டமாய் சத்திரத்திற்கு ஓடி அண்டை வீடுகளிலிருந்த ஆட்களைக் கூவி யழைத்து விஷயத்தை அவர்களிடம் தெரிவிக்கவே, எஜமானி யம்மாளுடைய வாயிலிருந்து பிறந்த உத்தரவுகள் யாவும் ஐந்து நிமிஷ நேரத்தில் அப்படியே நிறைவேற்றப் பட்டுப் போயின. அது பெருத்த திரு விழா நடைபெறும் இடம்போல மாறிவிட்டது அந்த மண்டபம் பன்னீர் தெளிக்கப்பட்டுத் தோரணங்களாலும் தேர்ச்சீலைகளாலும் அலங்கரிக்கப் பட்டுப் போயிற்று. மங்களகீதம் ஜாம் ஜாம் மென்று முழங்க, கோவில் குருக்கள் முதலிய வைதிகப் பிராமணர்கள் பூர்ணகும்பம், பரிவட்டம், சுவாமி பிரசாதங்கள் முதலியவற்றுடன் வந்து சேர்ந்து விட்டனர். ஸேவகர்கள் வெள்ளித் தட்டுகளில் கனிவர்க்கங்கள் பவுன் முதலியவைகளும் வந்து சேர்ந்தன. விளாமிச்சம் வேர் விசிறிகளை வாங்கிய அந்த ஸ்திரீ தனது புருஷரிடம் ஒன்றைக் கொடுத்துத் தானொன்றை வைத்துக் கொண்டாள். அப்பொழுதும் அந்த அம்மாளின் புருஷர் திவான் சாமியாரது அடையாளத்தைக் கண்டு கொள்ள மாட்டாமல் தயங்கித் தயங்கி நிற்க, அதை யுணர்ந்த அந்த ஸ்திரீ, ''என்ன! எஜமானே! இன்னமும், உங்களுக்கு அடையாளம் தெரியவில்லை? இவர்கள் சத்திரத்தின் சொந்தக்காரர் என்று நான் தான் சொன்னேனே! அதிலிருந்து கூடவா, உங்களுக்கு விஷயம் விளங்கவில்லை! நாம் மறுஜென்மம் எடுக்கும்படி அநுக்கிரகித்த நம்முடைய காருண்ய வள்ளலல்லவா இந்தக் கோலத்தில் வந்திருக்கிறார்கள்!'' என்று கூறித் தனது கையிலிருந்த விசிறியால் திவான் சாமியாருக்கு விசிறினாள்; அவளது புருஷரும், அவ்வாறே செய்யத் தொடங்கினார். அத்தனை வைபவங்களையும் பார்த்தபடி முற்றிலும் பிரமித்து ஸ்தம்பித்து உயிரற்ற பதுமை போல உட்கார்ந்திருந்த திவான் சாமியார் அது கனவோ நினைவோ வென்று சந்தேகித்தவராய் ''என்ன ஆச்சரியம் இது! யார் இவர்கள் என்பது தெரியவில்லை. இந்த சத்திரத்திற்கும் இன்னம் பல இடங்களிலுமுள்ள சத்திரங்களுக்கும் நான் சொந்தக்காரனாமே! நான் எந்தச் சத்திரத்தையும் கட்டி வைத்ததாக நினைவே இல்லையே! நான் இன்னான் என்பதை உண்மையிலேயே இவர்கள் தெரிந்து கொண்டார்களா! இவர்களுக்கு நான் என்ன செய்தேன் என்பது

தெரியவில்லையே! இவர்களை நான் பார்த்ததாகக்கூட நினைவுண்டாக வில்லையே! இவர்கள் என்னை வேறே யாரோ ஒருவராக மதித்து ஆள் மாறாட்டமாக இந்த மரியாதைகளை நடத்துகிறார்கள். சேச்சே! நாம் இனி சும்மா இருப்பது பிசகு. இவர்களுடைய தவறை நான் திருத்த வேண்டும்'' என்று தமக்குள் தீர்மானித்துக் கொண்டார். அப்பொழுதும் தமது புருஷர் விஷயத்தை யறிந்து கொள்ளாமல் விழித்துக்கொண்டே விசிறியதைக் கண்ட அந்த ஸ்திரீ, "என்ன இது! இன்னமும் நீங்கள் அடையாளங் கண்டுகொள்ளா விட்டால், நான் இதை என்னவென்று சொல்லுகிறது? சிந்தா நாஸ்தி என்ற ஊரில் போலீசாரால் நமக்கு ஏற்பட்ட இடர்களை யெல்லாம் போக்கி, முடிவில் தீவாந்திர சிக்ஷையும் இல்லாமல் செய்துவைத்த நம் தெய்வத்தின் அடையாளத்தை இப்படியும் மறக்கலாமா!'' என்றாள்.

அப்பொழுதே அவளது புருஷருக்கு உண்மை விளங்கியது. "ஆ! அப்படியா! அவர்களா இந்தக் கோலத்திற்கு ஆளாயிருக்கிறார்கள்! அவர்கள் இறந்து போய்விட்டதாக வல்லவா சொல்லிக் கொண்டார்கள். அதனாலல்லவா என் மனசில் அவர்களைப் பற்றிய சந்தேகமே உண்டாகவில்லை! ஹா! அப்படியா!'' என்று கூறித் தமது மனையாள் அடைந்ததை விடப் பன்மடங்கு அதிகரித்த ஆவேசமும், ஆநந்த வெறியும் கொண்டு, திவானினது பாதத்தடியில் சென்று அவைகளைத் தொட்டுத் தொட்டுத் தமது கண்களில் ஒற்றிக் கொண்டு, "என்னப்பனே! மகாப் பிரபுவே! பரம புருஷரே! நாங்கள் இனி அழிந்தே போய்விட்டோம் என்ற மகா விபரீதமான நிலைமையில் இருந்த எங்களுக்குப் புது உயிர் கொடுத்து எங்களுடைய இடர்களை யெல்லாம் களைந்து, நாங்கள் இந்த நிலைமைக்கு வந்திருக்கும்படியாகச் செய்த எங்கள் குலதெய்வமே! இந்த அடிமைகளின் அடையாளம் தங்களுக்குத் தெரியவில்லையா?'' என்று கூறி ஆநந்தக் கண்ணீர் [illegible]கிறார்; ஆநந்தக் கூத்தாடுகிறார்! வெள்ளித்தட்டு [illegible] வ[illegible] கனி[illegible]க்கங்களையும், பவுன்களையும் எடுத்து அவருக்கு மு[illegible] வைத்து, "முற்றிலும் அணைந்துபோன எங்கள் குடும்பவிள[illegible] ஏற்றிவைத்த கருணைக்கடலே! இந்த அடிமைகளின் பார்காணிக்கையை ஏற்றுக்கொண்டருள வேண்டும்'' என்று [illegible] தம[illegible] இரு கைகளையும் கூப்பி இறைஞ்சி மன்றாடினார். அப்பொழு[illegible]வரது மனை[illegible]டியும் திவான் சாமியாரை நோக்கி "ம[illegible]புவே! [illegible]வருட் செல்வச் சீமானே! ஆதியில் நாங்கள்

பரம ஏழையா யிருந்தவர்களென்ற நினைவினால் தாங்கள் எங்களுடைய பாதகாணிக்கையை உல்லங்கனம் செய்யக்கூடாது. எப்படியாவது பெரிய மனசுசெய்து இதை ஏற்றுக் கொண்டுதான் தீர வேண்டும். தங்களையும், தங்களுடைய தேவியாரையும், குழந்தையையும் இனி மறுபடி நாங்கள் காணப்போகிறோமா என்று இரவு பகல் எண்ணி ஏங்கிக் கிடந்ததற்கு, செந்திலெம்பெருமான் இன்று தங்களுடைய தரிசனத்தைச் செய்துவைத்தார். தங்கள் தேவியாரும், குழந்தைகளும் இப்போது எங்கே இருக்கிறார்கள்? அவர்கள் இவ்விடத்திலிருந்து வந்தபிறகு அவர்களுக்கும், தங்களுக்கும் எவ்விடத்திலாவது சந்திப்பு ஏற்பட்டதா? இப்போது அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? இவைகளையெல்லாம் தெரிவிக்கருள வேண்டும்; எங்கள் குலதெய்வமே" என்று கூறி இறைஞ்சினாள். அவ்வளவு தூரம் அவர்கள் இருவரும் பேசியதைக் கேட்ட பிறகே திவான் சாமியாருக்கு அவர்கள் இன்னார் என்ற நினைவு உண்டாயிற்று. அந்தப் பெண் சிங்காரஸ்திதியில் இருந்த வீரம்மாள் என்ற கள்ள ஜாதிப் பெண் என்பதையும், அவளது புருஷன் போலீசாரால் மூன்று தடவை அக்கிரமமாகத் தண்டனையடைந்து முடிவில் தம்மால் தப்புவிக்கப் பட்ட கண்ணுச்சாமி என்பதையும், அவர் நன்றாக உணர்ந்து கொண்டதன்றி, அவர்கள் தமது விஷயத்தில் கொண்டிருந்த அபாரமான நன்றி விசுவாசத்தையும், அவர்களது செல்வப் பெருக்கையும், அப்போதைய மாறுபட்ட அமோகமான வாழ்க்கையையும் கண்டு அளவுகடந்த ஆநந்தமும், பூரிப்புமடைந்து ஆநந்த பாஷ்பம் சொரிந்து அபாரமான அன்பும் உருக்கமும் தோற்றுவித்த குரலில் அந்தப் புருஷனை நோக்கி, "ஐயா! கனவானே! நானோ உலகைத் துறந்த ஏழைப் பரதேசி; எனக்கு இவ்வித மரியாதைகளும், வரிசைகளும் எதற்காக? நீங்கள் இருவரும் என்னிடத்தில் வைத்துள்ள அளவற்ற அன்பைக் கண்டும், உங்களை எம்பெருமான் மேலான நிலைமைக்குக் கொண்டுவந்திருப்பதை உணர்ந்தும், நான் அடையும் ஆநந்தம் என்மனசில் அடங்காமல் பொங்குகிறது. உங்களிருவருடைய உத்தமமான குணங்களுக்கும், நீங்கள் ஆதியில் அடைந்த மகா கொடுமையான தீமைகளுக்கும் தகுந்தபடி பகவான் உங்களுக்கு இப்போது சன்மானமளித்து விட்டாரென்றே நான் நினைக்கிறேன். இன்னமும் அவனுடைய பேரருளால் உங்களுக்கு மேன்மேலும் செல்வமும் புகழும் அதிகரிக்குமென்றே நான் உறுதியாக நம்புகிறேன். நீங்கள் இப்போது குறித்த சில விஷயங்களைப்

பற்றி நான் தனியாக உங்களுடன் பேச விரும்புகிறேன். அதற்கு நீங்கள் எனக்கு அவகாசம் கொடுக்கவேண்டும்'' என்றார்.

அதைக் கேட்ட வீரம்மாளும் அவளது புருஷரும் உடனே தமது ஸாரட்டு வண்டியை வருவித்து, அதில் சாமியார் இருவரையும் உட்காரவைத்து மேள வாத்தியம் எடுபிடி சாமான்களுடன் அழைத்துக்கொண்டு, ஓர் அரசனது அரண்மனையைப்போலிருந்த அவர்களது மாளிகைக்குச்சென்று, மற்றவர் அனைவரையும் அனுப்பி விட்டு, தனியான ஓரிடத்திற்கு சாமியார்கள் இருவரையும் அழைத்துப்போய் உன்னதமான இரண்டு பீடங்களில் அமரச்செய்து அவர்களுக்கு இருபுறங்களிலும் பயபக்தி விநயத்தோடு நின்று விசிறி தாங்கி வீசலாயினர்.

உடனே திவான் சாமியார் பேசத் தொடங்கி, "ஐயா! கனவானே! நான் சில காரணங்களை முன்னிட்டு என் பழைய ஸ்தானத்தைத் துறந்து சந்நியாசியாய் மாறி, நான் இன்னானென்பது எவருக்கும் தெரியாமல் இருந்து வருகிறேன் நான் இறந்து போய் விட்டதாகவே எல்லோரும் நினைத்திருக்கிறார்கள். இந்த இடமோ திருவனந்தபுரம் சமஸ்தானத்திற்கு நிரம்பவும் சமீபத்தில் இருக்கிறது நான் இன்னான் என்பதும் நான் உயிருடனிருக்கிறேன் என்பதும் ஜனங்களுக்குத் தெரிந்தால், அது வெகு சீக்கிரம் திருவனந்தபுரம் சமஸ்தானத்துக்குள் பரவிவிடும். அங்குள்ளோர் என்னைத் தேடப் புறப்பட்டாலும் புறப்பட்டு விடுவார்கள். பிறகு என்னுடைய நிலைமை நிரம்பவும் விகாரமானதாகி விடும். ஆகையால்! நான் இன்னான் என்பதையும், என்னுடைய பழைய வரலாற்றையும் நீங்கள் எவரிடத்திலும் வெளியிடாமலிருக்கக் கோருகிறேன். நான் போன பிற்பாடு இனி என்றைக்கும் நீங்கள் யாரிடத்திலும், நான் உயிரோடிருக்கிறேனென்ற சங்கதியைச் சொல்லாமலிருக்கும்படியும் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த உதவியை எனக்கு நீங்கள் அவசியம் செய்தே தீரவேண்டும். அதுவுமன்றி, நான் இன்னொரு விஷயத்தைப் பற்றியும் உங்களிடம் கேட்க விரும்புகிறேன். கொஞ்ச நேரத்திற்கு முன் நாம் சத்திரத்திற்கெதிரிலுள்ள மண்டபத்திலிருந்த சமயத்தில், இந்த அம்மாள், என்னுடைய சம்சாரம் இங்கிருந்து புறப்பட்டு வந்த பிறகு என்னைச் சந்தித்ததுண்டா வென்று கேட்டார்கள். என் சம்சாரம் இந்த ஊருக்கு எப்போது வந்திருந்தாள், என்ன காரியமாக வந்திருந்தாள் என்பதையும் எனக்கு நீங்கள் சொல்ல வேண்டும்'' என்றார்.

உடனே வீரம்மாள் மிகுந்த வியப்பும், கலக்கமு மடைந்து "அப்படியானால், தாங்கள் அந்த அம்மாளைத் திருவடமருதூருக்கு அனுப்பிய பிற்பாடு அவர்களை இது வரையில் தாங்கள் சந்திக்கவே இல்லையா" என்றாள்.

திவான் சாமியார், "இல்லை" என்றார்.

வீரம்மாள், ஐயோ பாவம்! அதற்குப் பிறகு இப்போது சுமார் ஆறு, ஏழு வருஷகாலம் கழிந்திருக்கும்போ லிருக்கிறதே தங்களை அவர்கள் எங்கெங்கும் தேடியலைந்தார்களோ, முடிவில், அவர்கள் தற்கொலைதான் செய்துகொண் டிருப்பார்களோ என்னவோ தெரிய வில்லையே!" என்று நிரம்பவும் கலங்கிய மனத்துடன் கூறினாள்.

அதைக் கேட்ட திவான் சாமியாரது மனதும் பெருத்த கலவரங்கொள்ளத் தொடங்கிவிட்டது. தமதுமனையாள் துன்மார்க்கமான எண்ணத்துடன் எவருடனோ ஓடிப் போயிருக்கலாம் என்று தாம் தீர்மானித்து அவள்மீது வெறுப்பும் கோபமும் அடைந்திருக்க, அவள் திருவடமருதூரிலிருந்து காணாமல் போன பிறகும் தம்மைத் தேடியலைந்தா ளென்பது தமது ஹேஷியம் முழுதும் தப்பான தென்று மறுப்பதாக இருந்தது. ஆகவே, திவான் சாமியார் காந்திமதி யம்மாளின்மீது வைத்திருந்த பழைய பிரேமையும் பாசமும் காட்டாற்று வெள்ளம்போல மறுபடி பொங்கி யெழுந்து அவரை வதைக்கத் தொடங்கின. அன்று மாலையில் தாம் சுவாமி தரிசனம் செய்த காலத்தில் கடவுள் அசரீரி வாக்குக் கொடுத்த தாய்த் தாம் நினைத்ததற்குத தகுந்தபடி, பல வருஷ காலமாகத் தமக்குக் கிடைக்காத சந்தோஷகரமான புதிய செய்தி அப்பொழுது கிடைத்திருப்பதை உணரவே, அந்த அசரீரி வாக்கு, "கொஞ்ச காலத்தில் எல்லாம் சரிப்பட்டுப் போகும்" என்று சொன்னது போல, ஒருகால் தமது கலியெல்லாம் நீங்கும் காலமும் வருமோ வென்ற நம்பிக்கையையும் அவர் கொள்ளத் தொடங்கி வீரம்மாளை நோக்கி, 'அம்மா! எனக்கு எல்லா சங்கதியையும் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள்." என்று நிரம்பவும் உருக்கமாகக் கேட்டுக் கொண்டார்.

உடனே வீரம்மாள் அவரை நோக்கி, "சுவாமிகளே! கடைசியாகத் தாங்கள் என் புருஷரைப் போலீசாருடைய அக்கிரமத்திலிருந்து விடுவித்த போது நஷ்ட ஈடாக ஆயிரம் ரூபாய் வாங்கிக் கொடுத்ததன்றி தாங்களும் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்

தீர்களல்லவா. அதை வாங்கிக்கொண்டு நாங்கள் அதற்கு முன் னிருந்த எங்களுடைய சொந்த ஊருக்குப்போய் அந்த சந் தோஷ சங்கதியை ஊராரெல்லோருக்கும் தெரிவித்தோம். அதைக் கேட்டு எல்லோரும் அபாரமான சந்தோஷமடைந்து தங்களையும், தங்கள் தேவியாரையும் வாயார ஸ்தோத்திரம் செய்து மனதார வாழ்த்தியதன்றி எங்களையும் ஆசீர்வதித்து எங்களுக்கு ஒரு வீட்டைக் கொடுதது; அதில் எங்களுடைய குடித்தனத்தை ஏற்படுத்திக் கொடுத்தார்கள். அதன் பிறகு தாங்கள் கொடுத்த தொகையை ஒரு முதலாக வைத்து ஏதாவது ஒரு துறையில் எங்க ளுடைய ஜீவனத்துக்கு வழிசெய்து கொள்ளவேண்டு மென்று நினைத்துப் பலவிதமாக யோசித்துக்கொண் டிருந்தோம். அப் போது திடீரென்று எங்களுக்கு ஒரு சந்தோஷச் செய்தி கிடைத் தது. இந்த ஊரில் என் புருஷருடைய தாயாதி ஒருவர் பெரிய உப்பளததின் சொந்தக்காரரா யிருந்தார். அவர் வார்சில்லாமல் இறந்துபோய் விட்டதாகக் கேள்வியுற்றோம். அவர்களுக்கு நாங் களே அநந்தர வார்சென்றும், நாங்கள் அதைப்பற்றி கலெக்டருக்கு மனு எழுதிக் கொண்டால், அந்த சொத்து எங்களுக்குக் கிடைத்து விடுமென்றும் எங்கள் சொந்த ஜனங்கள் சொன்னார்கள். அதைக் குறித்து நாங்கள் உடனே ஜில்லா கலெக்டருக்கு மனு எழுதிப் போட்டோம். அதன்மேல் விசாரணை நடந்தது. முடிவில் எங்க ளுக்கு அது ஜெயமாக முடிந்தது. நாங்கள் இந்த உப்பளத்தை ஒப்புக்கொண்டோம். உப்பளத்து மேலதிகாரியான ஒரு துரையின் யோசனையின்மேல், நாங்கள் எங்களிட மிருந்த மூவாயிரம் ரூபாயில் பெரும் பாகததையும் செலவு செய்து சென்னப் பட்டணத்தி லிருந்து சில யந்திரங்களை வரவழைதது உபயோகிதது, அதை விர்த்தி செய்யத் தொடங்கினோம். உப்பளத்தில் நாங்கள் எதிர் பார்த்ததைவிட அபாரமான வருமானம் கிடைக்க வாரம்பித்தது. எங்களுக்கு உண்டான சந்தோஷம் இவ்வளவு அவ்வள வென்று சொல்ல முடியாது. மகாப் பிரபுவாகிய தாங்கள் கொடுத்த பணம் உப்பாக விளையாமல் அததனையும் தங்கமாகவே விளைந்த தென்று சொல்ல வேண்டும் ; இன்னமும் விளைந்து கொண்டிருக்கிற தென் றும் சொல்ல வேண்டும். எல்லாம் தங்களுடைய கைராசி யென் றும் தங்களுடைய ஆசீர்வாத பலனென்றும் நாங்கள் நினைத்த தன்றி, உடனே புறப்பட்டு ஒரு நடை திருவனந்த புரத்திற்கு வந்து தங்களையும் தங்கள் தேவியாரையும் தரிசித்து எங்களுடைய

அதிர்ஷ்டத்தைத் தெரிவித்துக் கால் கும்பிட்டுவிட்டு வரவேண்டு மென்று நானும் என் புருஷரும் தீர்மானித்துக் கொண்டு, இவ் விடத்தை விட்டுப் புறப்பட்டுத் திருவனந்த புரத்திற்குப் போய்ச் சேர்ந்து, தாங்கள் முன்பு இருந்த ஜாகையை யடைந்து விசாரித் தால், பெருத்த இடி விழுந்ததுபோல அங்கே மகா துக்ககரமான சங்கதி கிடைத்தது சுமார் ஆறுமாச காலத்திற்கு முன்பே தாங்கள் புலியினால் அடிபட்டு இறந்து போனதாகவும், திருவடமருதூருக் குப் போன தங்கள் குழந்தையும் சம்சாரமும் எங்கேயோ காணாமல் போய் விட்டதாகவும், தங்கள் தகப்பனார் வந்து சொத்துக்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு போனதாகவும் அங்கே இருந்தவர் கள் சொன்னார்கள். அதைக் கேட்கவே, எங்களுடைய உயிரே போன மாதிரி ஆய்விட்டது. ஐயோ! எங்கள் குலதெய்வங்கள் இரண்டையும் கடவுள் இப்படிப்பட்ட அநியாயக் கொடுமைக்கு ஆளாக்கி விட்டாரே யென்று நாங்கள் இருவரும் நினைத்து நினைத்து அழுதழுது, அதன் பிறகு சரியாய் ஒரு மாச காலம் பட்டினி கிடந்தோம். அதன் பிறகு எங்களுக்கு இந்த ஊரிலேயே இருக்கை கொள்ளவில்லை எங்களுக்கு ஏற்பட்ட அமிதமான சந்தோஷத்தை அதைவிடப் பன்மடங்கு அமிதமான துக்கம் அடி யோடு அடக்கிச் சீர்குலைத்து விட்டது. எங்களுடைய செல்வமும், செல்வாக்கும் வெறும் வெளிப்பகட்டாக இருந்தனவே யன்றி நாங்கள் உள்ளுக்குள் நரகவேதனை யடைந்தவர்களாய், எங்க ளுடைய பொழுதைப் போக்கினோம். கடைசியில் ஒரு நடை திரு வடமருதூருக்குப் போய் விசாரித்துப் பார்த்துவிட்டு வரலாமென்று நாங்கள் நினைத்துப் பிரயாணம் புறப்பட்டு அந்த ஊருக்கு வந்து கொண்டிருந்தோம். அப்பொழுது வழியில் மதுரையில் ஒரு சத்தி ரத்தில் வந்து தங்கினோம். சத்திரத்துத் திண்ணையில் தங்களுடைய தேவியார் மகா அலங்கோலமான தோற்றத்தோடு விசனமே வடி வெடுத்ததுபோல உட்கார்ந்திருந்தார்கள் தங்கள் குழந்தையும் அம்மாளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தது. அதுவும் விசனகர மாகவே இருந்தது. அதுவும் சுகக் குறைவினாலும், அலைச்சலி னாலும் கருத்து மெலிந்து பார்ப்பதற்கு அகோரமாக மாறிப் போயிருந்தது. இருவரும் இடுப்பில் அழுக்கடைந்து கிழிந்து போன ஆடைகளுடன் காணப்பட்டனர். முதலில் கொஞ்சநேரம் வரையில் அவர்களுடைய அடையாளமே கண்டு பிடிக்க முடிய வில்லை. கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்து அவர்கள் தானென்று

நான் நிச்சயப் படுத்திக் கொண்டேன். அப்போது என் மனதில் பொங்கி யெழுந்த ஆநந்தத்தையும் பூரிப்பையும் நான் என்ன வென்று சொல்லப் போகிறேன்! நான் உடனே என்னை மறந்து, "அம்மா! என் தாயே! நீங்கள் கடைசியில் இங்கேயா இருக்கி றீர்கள்! உங்களை இந்தக் கோலத்தில் பார்க்கவும் கடவுள் திரு வுள்ளம் பற்றினரா" என்று கேட்டுக் கொண்டே ஓடி, அவர்களுக்கு முன்னால் போய் விழுந்தேன். என் புருஷரும் கூடவே வந்தார். அப்படிப்பட்ட சந்திப்பு ஏற்படுமென்று நம் அம்மாள் எதிர்பார்த்த வர்களே யன்றாகையால் அவர்கள் எங்களைக் கண்டு திடுக்கிட்டுப் போய், அடையாளம் காணமாட்டாமல் கொஞ்சநேரம் விழித்து விட்டு கடைசியில், "ஓகோ! வீரம்மாளா! வா அம்மா! எங்கே இருந்து வருகிறாய்! க்ஷேமமா யிருக்கிறாயா!" என்று மிகுந்த வாஞ் சையோடு விசாரிக்கத் தொடங்கினார்கள். அப்போது அவர்கள் தங்க ளுடைய செய்தியைச் சொல்லவில்லை. அது எனக்குத் தெரியா தென்று நினைத்து, அதை ஏன் சொல்லி எங்கள் மனதைப் புண் படுத்த வேண்டுமென்ற நினைவினால் அதைச் சொல்லவில்லை. நான் அந்த சமயத்தில் என்னுடைய அதிர்ஷ்டப் பெருமையை யெல்லாம் அவர்களிடம் சொல்வது அழகல்லவென்று நினைத்து நாங்கள் க்ஷேமமா யிருக்கிறோமென்பதைமாத்திரம் சொல்லிவிட்டு அவர்க ளுடைய சங்கதியைப்பற்றி பிரஸ்தாபிக்கத் தொடங்கி, நாங்கள் திருவநந்த புரத்திற்குப் போய் விசாரித்துத் தெரிந்துகொண்ட தகவல்களையும், அதன்மேல் அந்த விசனத்தை தாங்கமாட்டாமல், திருவடமருதூருக்கு அப்போது போய்க்கொண் டிருப்பதாகவும், நாங்கள் போன காரியம் நடுவழியிலேயே கைகூடி விட்டதாகவும் நான் சொன்னேன். அதைக் கேட்கவே, அம்மாளுக்கு விசனம் பொங்கிப் போய்விட்டது. அவர்கள் என்னைக் கட்டிக்கொண்டு கோவென்று கதறி அழத்தொடங்கி விட்டார்கள். நான் அவர்களை வெகு நேரம் வரையில் சமாதானப் படுத்தி ஜனக்கும்பலில்லாத தனியான ஓர் இடத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் வைத்துக் கொண்டு அவர்களும் குழந்தையும் திருவடமருதூரி லிருந்து காணா மல் போய்விட்டதாக எல்லோரும் சொல்லிக்கொண்ட வதந்தியைப் பற்றிய உண்மையான தகவலைச் சொல்லும்படி நான் அவர்களிடம் கேட்டுக் கொண்டேன். அவர்கள் அந்த வரலாற்றை என்னிடம் சொல்லக் கூடாதென்று வெகுநேரம் வரையில் தயங்கினார்கள். நான் அதைச் சொல்லும்படி வற்புறுத்திக் கேட்டதன் மேல் அவர்

கள் எல்லா விவரங்களையும் சொன்னார்கள்" என்று கூறிவிட்டு சிறிது நிறுத்தினாள்.

அந்த வரலாற்றைக் கேட்ட திவான் சாமியார் முற்றிலும் பிரமித்துப் போய்க் கற்சிலைபோல மாறி வீரம்மாளின் வாயைப் பார்த்த படி இருந்தார். தமது ஆருயிர் மனையாட்டியும், செல்வத் திருமகனும் கந்தைத் துணிகளுடன் அலைந்து திரிந்து சத்திரத்தில் காணப் பட்டார்கள் என்ற செய்தி அவரது ஹிருதயத்தை இரண்டாய் பிளப்பது போலவே இருந்தமையால் சகிக்கவொண்ணாத அபாரமான துயரமும் அழுகையும் பொங்கி அழத் தொடங்கினர். ஆயினும், அவளது வரலாற்றை முற்றிலும் கேட்க வேண்டுமென்ற ஆவலினால் அவர் தம்மை அடக்கிக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

வீரம்மாள் மேலும் பேசத் தொடங்கி, "சுவாமிகளே! அந்த வரலாற்றை நான் என் வாயில் வைத்து எப்படி வெளியிடப்போகிறேன், அதைச் சொன்னால் தங்கள் மனம் இப்போதிருப்பதை விட இன்னம் கேவலமான நிலைமையை யடைந்து புண்பட்டுவிடும். ஆயினும், தங்களுக்கு அது அவசியம் தெரிய வேண்டிய விஷயமாகையால், நான் அதைச் சொல்லுகிறேன். தாங்கள் அம்மாளையும் குழந்தையையும் இராமலிங்கம் என்ற தவசிப்பிள்ளையுடன் திருவடமருதூருக்கு அனுப்பினீர்க ளல்லவா. மூன்றும் நாள் காலையில் அவர்கள் அந்த ஊரை யடைந்து வீட்டுக்குப்போய்ச் சேர்ந்தார்களாம். தங்கள் தகப்பனர் நிரம்பவும் அபாரமான பிரியத்தோடு அவர்களை வரவேற்றார்களாம்; குழந்தையைத் தூக்கி எடுத்துப் பன்முறை ஆசையோடு கட்டித்தழுவி முத்தமிட்டாராம்; அம்மாளிடம் மிகுந்த வாஞ்சையாகவும் உருக்கமாகவும் பேசிப் பேசி ஊர் விசேஷங்களையெல்லாம் விசாரித்தார்களாம். அவர்கள் இவர்களிடம் காட்டிய ஆசைக்கு அளவே சொல்ல முடியாதாம்; அன்றையதினம் இவர்களுக்கு பெருத்த விருந்து நடந்ததாம். பெரியவர் இவர்களுக்கு ராஜோபசாரமே செய்தாராம். அன்றைய பகல் கழிந்ததாம். சாயுங்காலம் பெரியவர் வெளியில் போய்விட்டார்களாம். அப்போது, இராமலிங்கம் என்பவரின் சம்சாரம் அம்மாளிடம் வந்து நிரம்பவும் பணிவாகவும் விசுவாசமாகவும் பேசி அடிக்கடி அம்மாளுடைய முகத்தை நிரம்பவும் பரிதாபகரமாகவும் கபடமாகவும் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டாளாம்.

அதைக் கண்ட நம்முடைய அம்மாள் "ஏனம்மா ஒரு மாதிரி யாகப் பேசுகிறீர்கள்? ஏதாவது விசேஷம் உண்டா? என்று கேட்டார்களாம். உடனே தவசிப் பிள்ளையின் சம்சாரம் "அம்மா! உங்களைப் பார்த்தால் வைகுண்டத்திலிருந்து மகா லக்ஷ்மியே நேரில் வந்ததுபோ லிருக்கிறது. உங்கள் முகத்தைப் பார்க்கப் பார்க்க என்னை யறியாமல் விசனம் பொங்குகிறது" என்று சொல்லி விட்டு அதற்கு மேல் பேசவில்லையாம். நம்முடைய அம்மாள், "என் முகம் மகா லக்ஷ்மியின் முகம்போல இருந்தால், உங்களுக்கு சந்தோஷ மல்லவா உண்டாக வேண்டும். நீங்கள் விசனப் படுகிறீர்களே! ஆகையால் என் முகம் மகா லக்ஷ்மியின் முகம்போல இல்லை யென்பது நிச்சயம்" என்றார்களாம் அதைக் கேட்ட அந்த அம்மாள் நான் உண்மையாகப் பேசுகிறேன்; நீங்கள் தமாஷாகப் பேசுகிறீர்கள். என் மனசில் இருந்து வதைக்கும் சங்கதிகளைக் கேட்டால், நீங்கள் இப்படிப் பரிகாசமாய்ப் பேசமாட்டீர் கள். அது போகட்டும். நீங்கள் இன்று ராத்திரி ஜாக்கிரதையாகப் படுத்துக் கொண்டிருங்கள். மற்ற சங்கதிகளை நான் பின்னால் சொல்லுகிறேன்" என்றாளாம். அதைக் கேட்ட நம் அம்மாள் திடுக்கிட்டு பெருத்த திகில் கொண்டு, "ஏன் அப்படிச் சொல்லுகி றீர்கள்? நான் ஏன் ஜாக்கிரதையாகப் படுத்துக் கொள்ள வேண்டும்? இங்கே எனக்கு என்ன அபாயம் நேரப் போகிறது? விஷயத்தை நன்றாகத் திறந்து சொல்லுங்கள்" என்றார்களாம். உடனே அவள், "அம்மா! விஷயம் மகா விபரீதமானது. அது என்னால் வெளியாயிற்று என்றால், அந்த நிமிஷமே என் புருஷருடைய உத்தி யோகம் போய் விடும்; என்னையும் கடுமையாக தண்டிப்பார்கள் நான் சொல்லும் சங்கதியை நீங்கள் இங்குள்ளோரிடம் சொல்லுகிற தில்லை யென்று பிரமாணம் செய்து கொடுத்தால் நான் சொல்லு வேன்" என்றாளாம். உடனே நம் அம்மாள் நிரம்பவும் பயந்து நடுங்கி அப்படியே பிரமாணம் செய்து கொடுத்தார்களாம். உடனே அந்த அம்மாள், "கிழவர் உங்களை வர வழைத்தது சாதாரணமாகத் திருவிழாவுக்காக வல்ல. நெடுநாளாக இவர்களுக்கு உங்கள் பேரில் ஆசையாம். அதை அடக்க மாட்டாமல் இப்போது உங்களை வரவழைத்திருக்கிறார். இன்று ராத்திரி நீங்கள் படுத்துக் கொள்ள, இப்போது பிரத்தியேகமான கட்டில் மெத்தைகளெல் லாம் போட்டிருக்கிறதைப் பாருங்கள். நீங்கள் அதில் படுத்துத் தூங்கும்போது, நடு இரவில் கதவுகளை யெல்லாம் சாத்தி விட்டு

அவர் உங்களிடம் வரப் போகிறாராம். வந்து, உங்களுடைய இஷ்டத்தை அவர் மேல திருப்பிக் கொள்ளப் போகிறாராம். அதற்காகத்தான் நீங்கள் ஜாக்கிரதையாகப் படுத்திருங்கள் என்றேன்'' என்றாளாம். நம் அம்மாள் உடனே திடுக்கிட்டு நடுநடுங்கிக் காதில் கையை வைத்து, "சிவசிவா! நாராயணா! என்ன தலைவிதி இது! இப்படியும் உலகத்தில் நடப்பதுண்டா! இது எவர் செய்கிற வேலை! என் பிராணபதியின் சிரேஷ்டமான குணமென்ன! ஒழுக்கமென்ன! அவர்களைப்பெற்ற வயசு முதிர்ந்த தந்தை அவர்களைக் காட்டிலும் பன்மடங்கு அதிக சிரேஷ்ட குணமுடையவர்களாக வல்லவா இருப்பார்கள்! இவர்கள் எழுதிய கடிதங்களைப் பார்த்தால், இவர்களை தெய்வமென்று மதிக்கவேண்டுமென்ற அபிப்பிராயமல்லவா உண்டாகிறது! நீங்கள் சொல்வது எனக்கு நம்பிக்கைப்படவில்லை '' என்றார்களாம் உடனே அந்த அம்மாள், "நான் சொல்வது உண்மையா பொய்யா என்பது இன்றிரவு தெரிந்து போகிறது இது மாத்திரமா! இதைவிட இன்னம் மகா விபரீதமான காரியங்களை யெல்லாம் செய்ய ஏற்பாடாயிருக்கிறது. இன்று ராத்திரி என் சொல் நிச்சயமாகும் பிறகு மற்ற சங்கதிகளை நீங்களே கேட்பீர்கள். இன்னம் கொஞ்ச நேரத்தில் கிழவர் உங்களுக்காக ரோஜாப் புஷ்பம் ஜாதி மல்லிகைப் புஷ்பம் முதலிய படுக்கை யறை சாமான்களோடு 'வரப் போகிறார் பாருங்கள்'' என்று சொல்லிய பின் அவ்வளவோடு நிறுத்திவிட்டு ஏதோ அலுவலாய்ப் போய் விட்டாளாம். உடனே நம் அம்மாள் பைத்தியம் பிடித்தவர்களைப் போலாகி விட்டார்களாம். இன்னதென்று விவரிக்க முடியாதபடி அவர்களுடையமனம் ஒரே குழப்பமும் திகிலுமே மயமாக ஆய்விட்டதாம். அப்படிப்பட்ட படுமோசமான அநீதமும் இந்த உலகில் நடக்குமோ வென்று நினைத்து நினைத்து, தாம் என்ன செய்வதென்பதை யறியாமல் திகைத்து நம் அம்மாள் உட்கார்ந்திருந்த சமயத்தில் பெரியவர் ஒரு குடலையில் நல்ல உயர்ந்த ஜாதிப் புஷ்ப வகைகள், இன்னொரு கூடையில் கனிவர்க்கங்கள் முதலியவற்றை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்தார்களாம்; வந்தவுடன் ஏராளமான பழங்களை எடுத்துக் குழந்தையிடம் கொடுத்து அம்மாளுக்கும் கொடுத்து தானும் சாப்பிடும்படி சொல்லி நிரம்பவும் பட்சமாக உபசரித்தார்களாம். அம்மாள் அவர்களுடைய நடத்தையை உற்றுக் கவனித்தார்களாம். தவசிப் பிள்ளையின் சம்சாரம் சொன்னது நிஜமென்று நம்புவதற்கும் இடமிருந்ததாம். பிறகு தங்கள் தகப்பனார் ஈசுவரன்

கோவிலுக்குப் போய் விட்டார்களாம். தவசிப்பிள்ளையின் சம் சாரம் மறுபடி அம்மாளிடம் வந்து, "பார்த்தீர்களா ஐயா இருக்கும் மாதிரியை? ஆனால் இதுவும் உங்களுக்கு சாதாரணமான பிரியத்தினாலேயே செய்யத தக்க காரியமாய்ப் படலாம். இருக் கட்டும். இன்று இரவு 12-மணிக்குள் உங்களுடைய சந்தேக மெல்லாம் நிச்சயமாய் மாறிப் போகிறது பாருங்கள். இப்போது நான் சொன்னது ஒரு பெரிய சங்கதியல்ல; சொல்லாமல் பாக்கி இருக்கும் விஷயத்தைக் கேட்டால், நீங்கள் என்ன சொல்லுவீர் களோ தெரியவில்லை" என்றாளாம். அதைக்கேட்ட அம்மாள் பிரமாத மான கிலியும் நடுக்கமும் கொண்டு அவளை நோக்கி, "மற்ற சங்கதி களையும் சொல்லுங்களம்மா! பரவாயில்லை. நான் யாரிடத்திலும்வெளி யிடமாட்டேன். நீங்கள் பயப்படாமல் சொல்லலாம். இன்னம் ஏதோ விபரீதமான செய்தி இருக்கிறதென்று நீங்கள் சொன்னது முதல் அதைக் கேட்டுத் தெரிந்துக்கொள்ள வேண்டுமென்ற ஆவல் எழுந்து என் மனதை வதைக்கிறது. எல்லாவற்றையும் சொல்லுங்கள். நான் தான் இங்கேயுள்ள எவரிடத்திலும் இந்த விஷயத்தை வெளியிடுவ தில்லை யென்று பிரமாணம் செய்து கொடுத்திருக்கிறேனே" என்று சொன்னார்களாம். உடனே அந்த அம்மாள், "அந்த அக்கிரமத்தை வாயில் வைத்து எப்படிச் சொல்லுகிறதென்று நான் தயங்குகிறேன். சொல்லாமல் இருக்கவும் கூடவில்லை. இவர்கள் உங்களை இனி ஊருக்கே அனுப்பப் போகிற தில்லையாம்; இங்கேயே எப்போதும் வைத்துக்கொள்ளத தீர்மானிதது விட்டார்களாம். திருவனந்த புரத் தில் உங்கள் வீட்டில் முத்துச்சாமி என்று ஒரு சமயல்காரன் இருக் கிறானும். அவனுக்கு ஐயாயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்து அவனை சரிப்படுத்தி அவனைக்கொண்டு உங்கள் புருஷருக்கு விஷம் வைத்துக் கொன்று விடும்படி ஏற்பாடாயிருக்கிறதாம். அது அநேகமாய் இன் றைக்கே தீர்ந்துபோ யிருக்குமாம்; அந்தக் காரியம் முடிந்துபோனால் நீங்கள் அங்கே போகவேண்டிய அவசியமே இல்லாமல் போய்விடு மல்லவா. அது மாத்திரமல்ல நீங்கள் இங்கே இன்னம் கொஞ்சகால மிருந்த பிறகு, உங்களுடைய குழந்தையையும் கொன்று போட்டுவிட ஏற்பாடு நடந்துகொண்டிருக்கிறது. பெரியவா உங்கள் பேரில்கொண் டிருக்கும் மோகம் சொல்லிலடங்காது. உங்கள் புருஷருடையவும் பிள்ளை யுடையவும் இடைஞ்சல் இல்லாமல் உங்களை ஏதேச்சையாக வைத்துக்கொண்டு சந்தோஷமாக இருக்கவேண்டு மென்பது இவர் களுடைய தீர்மானம். அதற்காகவே இந்த ஏற்பாடெல்லாம் நடந்து

கொண்டிருக்கிறது. இவர்கள் சில தினங்களுக்கு முன் நீளமான கடிதம் எழுதியதெல்லாம் உங்கள் புருஷரை நம்பவைத்து கொஞ்சமும் சந்தேகத்துக்கு இடமின்றி காரியத்தை முடிக்கவேண்டு, மென்னும் உத்தேசத்துடனே தான் இவ்வளவுதான் சங்கதி, என்றாளாம். அந்த மகா பயங்கரமான செய்தியைக் கேட்டவுடன் நம் அம்மாளுடைய மனசு எப்படி இருந்திருக்கு மென்பதை நீங்களே யோசித்துக் கொள்ளுங்கள். அத்தனை விஷயங்களையும் அவள் கட்டுப்பாடாகவும் அபாண்டமாகவும் உற்பத்தி பண்ணிச் சொல்ல வேண்டிய முகாந்தரமே இல்லையாகையால், அவள் சொன்னதை யெல்லாம், நம் அம்மாள் உண்மையென்றே நம்பி விட்டார்கள் அப்போது அவர்களுடைய உயிர் போய்விட்ட மாதிரியே இருந்ததாம். பெரியவர் அன்றையதினம் இரவில் செய்ய உத்தேசித்திருந்ததாகச் சொன்ன காரியங்கூட அவ்வளவாக அவர்களது மனத்தை வதைக்க வில்லையாம் தங்களையும், குழந்தையையும் கொல்ல ஏற்பாடா யிருக்கிறதென்கிற செய்தியைக் கேட்கவே, அவர்களுடைய தேகம் துடிதுடித்துப் பறந்ததாம். அவர்களுடைய மனசில் அபாரமான துக்கமும், கலக்கமும் திகிலும் எழுந்து சகிக்கமுடியாத வேதனையையும் சஞ்சலத்தையும் உண்டாக்கி விட்டனவாம். திடீரென்று தலையில் ஒரு பெருத்த செம்மட்டியால் அடித்துவிட்டால், எவ்வாறு பொறி கலங்கிப்போகுமோ அதுபோல ஆய்விட்டதாம். அந்த சமயத்தில் தாம் என்ன செய்வது, யாரிடம் போவது என்பது தெரியவில்லையாம். அந்த வீட்டில் இருப்பதும், பெரியவரைப் பார்ப்பதும், அப்பேர்ப்பட்ட விபரீதமான எண்ணங்களைக் கொண்டிருந்த பெரியவர் குழந்தை யிடத்திலும் அவர்களிடத்திலும் நிரம்பவும் வாஞ்சையாகப் பேசியதைக் கேட்பதும் அவர்களுக்குப் பெருத்த நரக வேதனையாக இருந்தனவாம். அதுவும் தவிர அவர்களுக்கு திருவனந்தபுரம் நினைவே நினைவாக இருந்ததாம். அந்நேரம் முத்துசாமி தங்களுக்கு விஷம் போட்டிருப்பானோ, தாங்கள் உயிருட னிருக்கிறீர்களோ இல்லையோ என்ற சந்தேகம் அவர்களுடைய உயிரையே வாட்டி வருத்தி விட்டதாம். அவர்கள் உடனே பறந்து திருவனந்த புரத்துக்கு வந்து விடலாமோ என்று நினைத்தார்களாம். அத்தகைய மகா விபரீத நிலைமையிலிருந்த நம் அம்மாள் தவசிப் பிள்ளையின் சம்சாரத்தைப் பார்த்து, "அம்மா! இப்பேர்ப்பட்ட கொடிய சதியாலோசனை நடக்கிறதென்பதைப் பற்றி நாங்கள் கொஞ்சமும் சந்தேகம் கொள்ளவில்லை. நல்ல

வேளையாக நீங்கள் சமயத்தில் இதை எனக்குத் தெரிவித்தீர்களே! இப்பேர்ப்பட்ட மகா பெரிய உதவி செய்த உங்களை நான் ஒருநாளும் மறக்க மாட்டேன். நான் உடனே திருவனந்தபுரம் போகவேண்டும். இவர்களிடம் சொன்னால், இவர்கள் அனுப்பவும் மாட்டார்கள்; அதன் காரணமென்னவென்றும் கேட்பார்கள். ஆகையால், நானும் பையனும் படுத்துத் தூங்குவதுபோலக் கொஞ்சநேரம் இருந்து விட்டு எவருக்கும் தெரியாமல் எழுந்து வெளியில்போய் விடுகிறோம்.'' என்றார்களாம். உடனே அந்த அம்மாள், ''ஆம் அதுதான் நல்ல காரியம்; அப்படியே செய்யுங்கள். ஆனால் நீங்கள் இன்னொரு காரியம் செய்யுங்கள். இங்கிருந்து நேரில் ரயிலில் போனால், இவர்கள் ஆள்களை அனுப்பி, அல்லது ரயில்வே போலீசாருக்குத் தந்திகள் அனுப்பி உங்களை நிறுத்த வழி தேடுவார்கள். ஆகையால் நீங்கள் ரயிலடிக்குப் போய் அங்கே இருக்கும் குதிரை வண்டிகளில் ஒன்றை யமர்த்திக்கொண்டு, ரஸ்தாவோடு கும்பகோணம் போங்கள். அங்கிருந்து வேறொரு வண்டி வைத்துக்கொண்டு தஞ்சாவூருக்குப் போங்கள். இப்படியே இரண்டு மூன்று தினங்கள் வரையில் ரயிலில் ஏறாமல், குதிரை வண்டியிலேயே பாதி வழி தூரம் போய், அதன் பிறகு ரயிலில் ஏறிப்போய்ச் சேருங்கள். அதுவரையில், அங்கேயும் கெடுதல் நடந்திருக்காது; நீங்கள் போய் நேரில் உங்கள் புருஷரை எச்சரிக்கலாம்'' என்றாளாம். அதைக் கேட்ட அம்மாள் அப்படியே செய்வதாய் ஒப்புக்கொண்டு தமது குழந்தையைத் தனியாக அழைத்து அந்தச் செய்தியையும், தாம் செய்ய உத்தேசித்திருந்த காரியத்தையும் சொன்னார்களாம். குழந்தைக்கும் உடனே பெருத்த திகில் உண்டாகி விட்டதாம். அவர்களிருவரும் படுத்துக் கொள்வதாய்க் காட்டி சுமார் ஒன்பது மணிக்குப் புறப்பட்டு எவருக்கும் தெரியாமல் ரகசியமாக நடந்து ரயில்வே ஸ்டேஷனுக்குப்போய் வண்டி யமர்த்திக்கொண்டு கும்பகோணத்துக்கு வந்து, அன்றைய இரவு அவ்விடத்தில் இருந்து, விடியற்காலையில் மறுபடி வண்டி யேறித் தஞ்சாவூரை யடைந்து, அவ்விடத்தி லிருந்து திருச்சினாப் பள்ளிக்கு வந்தார்களாம்.'' என்று நிறுத்தினாள்.

அந்த வரலாற்றைக் கேட்ட திவான் சாமியார் முற்றிலும் பிரமித்து ஸ்தம்பித்துப் போய் அபாரமான மனக்கலக்கமும் மயிர்ச் சிலிர்ப்பும் அடைந்து, ''ஆ! அப்படியா சங்கதி! அந்த மாதிரி சந்தர்ப்பம் ஏற்பட்டதனாலா அவள் புறப்பட்டு போய்விட்டாள். அப்படியானால் அவள் பேரில் யாதொரு குற்றமு மில்லை. அவள்மேல் நான்

விபரீதமான சந்தேகங்களையெல்லாம் கொண்டது பெருத்த தவறு. அவள் விஷயத்தில் நான் தகாத சந்தேகங்களையெல்லாம் கொண்டு பெருத்த பாதகம் செய்து விட்டேன். அதன்பிறகு அவள் திருச்சிறுப்பள்ளியி லிருந்து திருவனந்த புரத்திற்கு வந்தாள்போ லிருக்கிறது. அதற்குள் நான் புலியினால் அடிபட்டு இறந்து போனதாகக் கேள்வியுற்றாள் போலிருக்கிறது. அதன்மேல் என்ன செய்தாள்? இப்போது அவளும் குழந்தையும் உயிருட னிருக்கிறார்களா இல்லையா!" என்று மிகுந்த தவிப்போடும் ஆவலோடும் வினவினார்.

வீரம்மாள் அவர்கள் திருவனந்த புரத்திற்கு வரவில்லை; அதற்குக் கொஞ்ச தூரத்திற்கு இப்பால் வந்தபோதே தங்களைப்பற்றிய சங்கதி எட்டிவிட்டதாம். அதைக் கேட்டவுடனே அவர்களும் குழந்தையும் மோதிக் கொண்டார்களாம் அடித்துக் கொண்டார்களாம். கீழே விழுந்து புரண்டு அழுது புலம்பினார்களாம், முதலில் திருவனந்த புரத்துக்குப் போக எண்ணினார்களாம அங்கே பெரியவர் வந்திருப்பார் என்று நினைத்து பயந்து அங்கே வரவில்லையாம். அவர்கள் தங்களை இன்னார் என்று வெளியிடாமல் சுசீந்திரம் ஆரல்வாய்மொழி, கோட்டாறு, நாகர்கோவில், கோதைநல்லூர் முதலிய இடங்களுக்குப் போனார்களாம்; மோட்டார் விபத்து நடந்த இடத்துக்கும், பக்கத்தி லிருந்த ஊருக்கும் போய், மாயா விபூதிப் பரதேசி யென்பவருடைய அங்க மச்ச அடையாளங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டார்களாம். அதன்மேல் தாங்கள் இறந்துபோனதே அவர்களுக்கு நம்பிக்கைப் படவில்லையாம். மாயாவிபூதிப் பரதேசி என்பவர்தான் தாங்களாக இருக்கவேண்டுமென்று அவர்கள் சந்தேகங்கொண்டு எத்தனை வருஷமானாலும் அவரைக் கண்டு பிடிக்கிறது, முடியாவிட்டால் குழந்தையும் தாமும் கிணற்றில் குளத்தில் விழுந்து இறந்து போகிறதே முடிவென்று தீர்மானித்துக்கொண்டு, பரதேசி பண்டாரங்கள் முதலியோர் எங்கெந்த க்ஷேத்திரங்களில் இருப்பார்களோ அங்கெல்லாம், தாம் போய்த் தேடுவதென்று தீர்மானித்துக்கொண்டு, தமது உடம்பில் இருந்த நகைகளையெல்லாம் விற்றுப் பணமாக்கிக் கொண்டு கந்தைத் துணியை உடுத்திக்கொண்டு நூற்றுக் கணக்கான ஊர்களுக்கெல்லாம் பையனையும் அழைத்துக்கொண்டு நடந்து போய்த் தேடினார்களாம். எங்கேயும் தாங்கள் அகப்படவில்லை. அவர்களுடைய நம்பிக்கையும் ஊக்கமும் குறைய வாரம்பித்தன. தளர்ச்சியும் களைப்பும் மேலாடி இனி தங்களைக் காண முடியாது என்ற எண்ணமே கிளம்பியது. அந்த நிலைமையில் அவர்கள் வந்து அந்தச்

சத்திரத்தில் உட்கார்ந்திருந்தார்களாம். எங்களைக் கண்டதில், அவர்களுக்குக் கொஞ்சம் தைரியம் உண்டானதாலும், தங்களைப் பற்றிய ஏக்கமும், தாங்கள் இறந்துபோகவில்லையென்ற எண்ணமும் மாறவில்லை. எங்கள் ஊரில் அடிக்கடி ஏராளமான பரதேசிகள் வருவார்களென்றும், இங்கே வந்திருந்தால், எப்படியும் தங்களைக் கண்டு பிடித்து விடலாமென்றும் சொல்லி அவர்களைத் தேற்றி நாங்கள் அவர்களைத் திருச்செந்தூருக்கு அழைத்து வந்து ஒரு மாச காலம் வைத்திருந்தோம். அவர்கள் இருவரும் எங்கள் வற்புறுத்தலுக்குக் கட்டுப் பட்டு மூன்று நாளைக் கொருதரம் சாப்பிடுவது கூட அரிது. தங்களைப் பற்றிய ஏக்கமும் நினைவுமே அவர்களுடைய மூச்சுக் காற்றாக இருந்து வந்தனவென்று சொல்லவேண்டும். எங்கள் ஊரிலும், இன்னம் பல ஊர்களிலும் ஆள்களை வைத்துத் தங்களைத் தேடினோம். தாங்கள் அகப்படவில்லை. அம்மாளும் குழந்தையும் தங்களைக் காணாமல் இருக்க மாட்டோமென்று சொல்லி, இன்னும் தூரத்திலுள்ள ஜில்லாக்களிலெல்லாம் தாம் போய்த் தேடிபார்க்க வேண்டுமென்று பிடிவாதம் பிடித்து இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டார்கள்; தாங்கள் அகப்பட்டால் தகவல் தெரிவிப்பதாக மாத்திரம் சொல்லிவிட்டுப் போனார்கள். இதுவரையில் அதைத்தான் நாங்கள் எதிர்பார்த்துப் பார்த்து ஏங்கிக் கிடந்தோம். தங்கள் பெயரை வைத்துப் பல இடங்களில் சத்திரங்களைக் கட்டினோம், வந்த பரதேசிகளை போஷிக்கவும், மாயாவிபூதிப் பரதேசியைக் கண்டுபிடிக்கவும் ஏற்பாடு செய்திருந்தோம். ஆறு ஏழு வருஷம் பாடுபட்டும் பலன் ஏற்படவில்லை. நாங்கள் தளர்வடைந்து ஓய்ந்து போய்விட்டோம். இந்த நிலைமையில் தாங்கள், இன்று வந்து எங்களுக்குத் தரிசனம் கொடுத்தீர்கள். இப்போது அம்மாளும் குழந்தையும் இல்லையே என்ற விசனம் அபாரமாகப் பொங்கி யெழுகிறது தெய்வம் அவர்களை உயிரோடு வைத்திருக்கிறதோ இல்லையோ என்பதும் தெரியவில்லை, இடையில் தங்கள் தகப்பனாரைப் பற்றிய விளம்பரம் ஒன்று இந்த ஊர் கிராம முனிசீப்புக்கு வந்ததாம். அதன் விவரத்தைக் கேள்வியுற்றோம் அவர்களுக்கு எவ்வித தகவலும் கொடுக்க எங்களுக்கு இஷ்டமில்லை. நாம் அம்மாளைப்பற்றிய தகவலை அவருக்குத் தெரிவிக்க வேண்டியதும் அவசியமாகத் தோன்றவில்லை. ஆகையால், நாங்கள் பேசாமல் இருந்து விட்டோம்" என்று கூறி முடித்தாள்.

அந்த மகா விசனகரமான வரலாற்றைக் கேட்ட, திவான் சாமியாரது மனம் சகிக்க இயலாத சஞ்சலமும் வேதனையும் அடைந்து உருகிப்போய்விட்டது விசனமும் அழுகையும் பொங்கியெழுந்தன! அவர் தமக்குத்தாமே, "ஐயோ! காந்திமதி! அப்பா என் செல்வனே. உங்கள் இருவருக்கும் என்ன கஷ்டகாலம் வந்துவிட்டதையோ! இந்த ஏழுவருஷகாலத்தில் நான் அடைந்த விசனத்தையும் துன்பங்களையும் விட, அதிகமாய் நீங்கள் இருவரும் அடைந்திருப்பதைக் கேட்கும்போதே என் மனம் பதைக்கிறதே! ஐயோ! எவ்வளவு அபாரமான செல்வத்திலும் செல்வாக்கிலும இருந்த நீங்கள், யாதொரு குற்றமும் செய்யாமல், என்னென்ன கஷ்டங்களுக்கும், இழிவுக்கும், இல்லாக் கொடுமைக்கும் இலக்காய் உழல நேர்ந்துவிட்டதே! என்னிடத்திலாவது ஏராளமான பணம் இருந்தது. நான் உலகைத் துறந்து சந்நியாசிக் கோலம் பூண்டிருந்தாலும், என்னிடம் அந்தப பணம் இருந்ததும் ஒரு விதத்தில மனசிற்கு தைரியமாக இருந்தது, நீங்கள் சந்நியாசியுமில்லை. கையில் பணமுமில்லை. இல்லாவிட்டாலும யாரிடத்திலும் கேட்கவும் உங்களுக்குத தெரியாது. ஆகா! என்ன கொடுமை! என்ன கொடுமை!" என்று எண்ணமிட்டிருந்தவராய் வீரம்மாளை நோக்கி, "ஏனம்மா! கடைசியாக அவர்கள் உங்களை விட்டுப்போன காலத்தில் அவர்களிடம் எவ்வளவு பணம் இருந்திருக்கலாம்?" என்றார். வீரம்மாள், "அவர்கள் திருவநந்தபுரத்தை விட்டுப புறப்பட்டு வந்த காலத்தில் உயர்வான நகைகளையெல்லாம் கழற்றி வைத்துவிட்டு, காதில சிவப்புக்கம்மல், கையில் சில வளையல்கள் முதலியவைகள் மாத்திரம் போட்டுக் கொண்டு வந்தார்களாம். அவைகளை விற்றதில் ரூபாய் ஐந்நூறு தேறியதாம். தாங்கள் செலவுக்காக இருக்கட்டுமென்று அம்மாளுடைய பெட்டியில் ஆயிரம ரூபாய் வைத்திருந்தீர்களாம். அந்தப் பணத்தில் அவர்கள் சுமார் இருநூறு முன்னூறுக்குமேல் செலவு செய்துவிட்டு பாக்கியை வைத்திருந்தார்கள். அவர்கள் இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போனபொழுது நான் ஐயாயிரம் ரூபாய் நோட்டுகளைக் கொடுத்தேன். தங்களுடைய கையிலிருக்கும் பணத்தை வைத்துக் காப்பாற்றுவதே கடினமாயிருக்கிறதென்றும், அது செலவழிந்துபோன பிறகு எங்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்வதாகவும் சொல்லி விட்டுப் போனார்கள். அதன் பிறகு பணத்துக்குக்கூட அவர்கள் எழுதவில்லை" என்றாள்.

திவான் சாமியார் மிகுந்த ஏக்கமும் துக்கமும் கொண்டு, "ஆயிரத்து இருநூறு ரூபாய் ஆறு வருஷத்திற்கு வரவா போகிறது. அநேகமாய் அவர்கள் இறந்துதான் போயிருக்கவேண்டும். அதனால் தான் நான் பத்திரிகையில் வெளியிட்ட விளம்பரத்திற்கும் பதில் இல்லை. ஈசா! இதுவும் ஒரு விதமான ஜாதக விசேஷமா! எவ்வளவோ அமோகமாக இருந்த எங்கள் வாழ்வு சீர்குலைந்துபோகவும், நான் இப்படித் திண்டாடவும், அவர்கள் அப்படி ஊரூராய் அலைந்து இறக்கவும். என் தகப்பனாருடைய வாழ்வு இன்னொரு மாதிரியாக அலங்கோலப்படவும், அடடா! என்ன கதி நேர்ந்து விட்டது! ஐயோ! அவர்களை நினைக்க நினைக்க என் மனம் பதறுகிறதே! என் உயிர் தள்ளாடுகிறதே! ஆகா! மகா நுட்பமாகவும் செல்வமாகவும் வளர்க்கப்பட்ட அறியாத பச்சைக் குழந்தை இந்த வயசில் இப்பேர்ப்பட்ட சங்கடங்களை யநுபவித்துத் தாயோடுகூட ஊரூராய் அலைந்து பட்டினி கிடந்து கந்தையை உடுத்தி சத்திரத் திண்ணைகளில் படுத்து உழலவா ஈசன் தலையில் எழுதினான்! அடடா! ஆகா! நான் என்ன செய்வேன்! என் தலை சுற்றுகிறதே! அறிவு பிறழ்கிறதே! இனி நான் இந்த உலகத்தில் உயிரோடு திரிந்துதான் என்ன செய்யப் போகிறேன்! என்னால் ஒருவருக்கும் உபயோகமில்லை; என்னை நம்பிய என் சம்சாரம் குழந்தை முதலியோருக்கும் உபயோகமில்லை; மற்ற ஜனங்களுக்கும் உபயோகமில்லை ஆனாலு, என் தந்தை ஒருவர் இருக்கிறார். அவருடைய நிலைமையை நினைத்தால்தான், நான் கொஞ்சம் பொறுமை பாராட்ட வேண்டி இருக்கிறது அந்தத் தவசிப்பிள்ளையின் சம்சாரம் சொன்னதெல்லாம் முழுவஞ்சகமான சங்கதியேயன்றி வேறல்ல. என் தந்தையின் மேன்மையான குணமென்ன, மாசற்ற ஒழுக்கமென்ன, தெய்வபக்தியென்ன! சேச்சே! அவர் இப்பேர்ப்பட்ட பஞ்சமா பாதகத்தை மனசாலும் நினைப்பாரா! ஒரு நாளுமிராது. முத்துசாமி எனக்கு விஷம் வைத்த காலத்தில் சொன்ன வரலாறும் அவள் சொன்ன வரலாறும் வேறாக இருப்பதிலிருந்தே, காந்திமதியும் சரி, கிழவரும் சரி, இருவரும் குற்றமற்றவர்களென்று நிச்சயிக்கலாம். தங்களுடைய பெண்ணைப் பெரியவருக்குக் கட்டிக்கொடுத்து, சொத்துகளை அபகரிக்க வேண்டுமென்று அவர்கள் சதியாலோசனை செய்து இத்தனை காரியங்களையும் நடத்தி இருக்கிறார்களென்பது நன்றாகத் தெரிகிறது. என்னை மாத்திரம் கொன்றுவிடவேண்டுமென்பது அவர்களுடைய கருத்து. என் சம்சாரத்தையும், குழந்

தையையும் கொன்றால் இந்த மூன்று சாவையும் தாங்கமாட்டாமல் பெரியவர் இறந்துபோய் விடுவார் என்று நினைத்தோ, அல்லது, ஊராரும், என் தகப்பனாரும் அவர்கள் பேரில் சந்தேகங் கொள்வார்கள் என்று பயந்தோ, அவர்கள் இருவரையும் வீட்டை விட்டு இப்படித் தந்திரமாகக் கிளப்பி விட்டிருக்கிறார்கள் என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது என் சம்சாரம் எவருக்குந் தெரியாதபடி வீட்டை விட்டு ஓடிப்போனபடியால், மறுபடியும் திரும்பிவர முகமிராதென்றும் அவர்கள் நினைத்திருக்கலாம் எப்படியோ, நாலைந்து மனிதர்கள் சேர்ந்து சதியாலோசனை செய்து, எங்கள் குடும்பத்தை அடியோடு கவிழ்த்து சீர்குலைத்து அது அழிந்துபோகும்படி செய்து விட்டார்கள். அவர்களுடைய எண்ணத்திற்கு அநுகூலமாக எங்கள் எல்லோருடைய கெட்டதசையும் வந்து நேர்ந்து கொண்டிருக்கிறது. இறந்துபோய்க் காஷ்டத்தில வைத்துக் கொளுத்தப்பட்ட என் தந்தை பிழைத்துக்கொண்டு என் திருஷ்டியில் பட்டது போல, செந்திலெம்பெருமான் செயலாலும் எங்களெல்லோருடைய கெட்ட காலமுடிவின் பயனாகவும் அவர்களாக இனி என் கண்ணில பட்டால்தான் உண்டு. இல்லையானால், நான் அவர்களை எங்கே போய்த் தேடுகிறது. இப்போது யோசித்துப் பார்க்க, இத்தனை பெரிய அக்கிரமச் செய்கைகளையும் துணிந்து செய்ய எத்தனித்தவர்கள், பெரியவர் மார்படைப்பினால் மயங்கி இருக்கிறார் என்பதைத் தெரிந்துகொண்டே அவரை வைத்துக் கொளுத்திவிட்டுவந்தாலும் வந்திருக்கலாமென்று எண்ணவேண்டியிருக்கிறது. அதனால்தான் அவர்கள் விளம்பரங்களைப் பார்த்தும் பார்க்காதவர்கள் போல எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். இப்போர்ப்பட்ட கொடிய சர்ப்பங்களைத் தேடிப்பிடித்துக் கிழவரை அவர்களுடைய சவரக்ஷணையில் வைப்பது முற்றிலும் அபாயகரமானதென்றே படுகிறது. ஆனால் ஒரு வேளை அந்தக் கமலவல்லிக்கு மாத்திரம் தன் புருஷரிடம் அந்தரங்கமான பிரியம் இருக்குமோ என்னவோ இருந்தால், அவள் மாத்திரமாவது தன் புருஷரிடம் மறுபடி வந்து சேர்ந்திருப்பாளல்லவா! அவளும் மற்றவர்களுடைய வஞ்சக வலைக்கும், போதனைக்கும் உட்பட்டவளாகத்தான் இருந்திருக்க வேண்டும் இப்போது நான் திருவையாற்றுக்குப் போய் இதையெல்லாம் பெரியவரிடம் தெரிவித்தால், தம்மாலேயே இவ்வளவு அலங்கோலமும் நடந்து விட்டதாவென்ற துக்கத்தினாலும்

மன அதிர்ச்சியினாலும் உயிரை விட்டு விடுவார். இதை யெல்லாம் அவர்களிடம் சொல்வதில் கெடுதல் உண்டாகுமே யன்றி நன்மை உண்டாகப் போவதில்லை. ஆகையால் அவரிடம் எந்தச் சங்கதியை யும் சொல்லாமல் இருந்துவிடுவதே நல்ல காரியம்'' என்று தமக் குள் எண்ண மிட்டவராய்ச் சிறிது நேரம் ஓய்ந்திருந்த பின் வீரம மாளை நோக்கி'' அம்மா! தாயே! நீங்கள் இருவரும் நல்ல உத்தம மான சதிபதிகள். உப்பிட்டவரை உள்ளமட்டும் நினை என்ற பழ மொழிக் கிணங்க, நீங்கள் எங்கள் விஷயத்தில் நிரம்பவும் நன்றி விசுவாசம் பாராட்டி எங்களுடைய கஷ்ட காலத்தில் உங்களாலான உதவிகளைச் செய்ய முயற்சித்தீர்கள். எங்களுடைய கிரகசாரம் எங்களிடத்திலிருந்த அபாரமான செல்வம், செல்வாக்கு உயர்ந்த பதவி, க்ஷேமமான குடும்ப வாழ்க்கை முதலியவைகளை யெல்லாம் அழித்து இல்லாமல் செய்திருக்கிறது. அதன் கொடுங்கோலுக்கு முன், உங்களைப் போன்றவர்களுடைய ஜீவகாருண்ய மெல்லாம் எம் மாத்திரம். உங்களுடைய பொருளுதவி, அநுதாபம், துயரம், தேக உதவி முதலிய எதுவும் எங்களுக்கு இந்த சமயத்தில் ஒட் டாது. சேருகிற காலத்தில் எல்லாம் சேரும்; போகிற காலத்தில் எதுவும் ஒட்டாது. ஆகையால் நீங்கள் காந்திமதி உங்கள் சொற் படி எதையும் ஏற்றுக் கொள்ளவில்லை யென்றாவது, இப்போது நான் உங்களுடைய சம்பாவனையை ஒப்புக் கொள்ளவில்லை என்று வது மனவருத்தம் பாராட்ட வேண்டாம். நான் முதலில் உங்களி டம் வேண்டிக்கொண்ட அந்த உதவியை மாத்திரம் நீங்கள் செய்ய வேண்டுமாய் நான் இன்னொரு தடவை கேட்டுக் கொள்ளுகிறேன். நான் இந்த ஊருக்கு வந்ததற்கு, முதலாவது செந்திலெம்பெரு மான் தரிசனம் பெற்று ஜென்மசாபல்ய மடைந்தேன். இரண்டா வது, உத்தமகுண சதிபதிகளான உங்களைக் கண்டு உங்களுடைய க்ஷேமத்தையும் அபிவிருத்தியையும் பார்த்து பரம சந்தோஷமடை கிறேன். மூன்றாவது, என் சம்சாரத்தைப் பற்றி நான் தவறாக நினைத்திருந்த களங்கம் விலகியது. இத்தனை பெரிய நன்மைகளை நான் அடைந்தேன். எனக்கு நீங்கள் உத்தரவு கொடுங்கள். நான் போய் வருகிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட வீரம்மாள் கண்ணீர் விடுத்தவளாய் ''சுவாமி களே! தாங்கள் இந்தக் குடிசையில் இன்னம் சில தினங்கள் இருந்து போகக் கூடாதா. அடியேங்கள் அவ்வளவு பாக்கியம்

பண்ண வில்லையா?" என்று நிரம்பவும் தழுதழுத்த குரலில் கூறினாள்.

அதைக் கேட்ட திவான் சாமியாரது மனம் இளகி உருகியது. அவர் சிறிது நேரம் யோசனை செய்து "அம்மா! நற்குணவதி! பெரியவரைத் தனிமையில் திருவையாற்றில் விட்டு வந்திருக்கிறேன். நான் அதிக நாட்கள் எங்கும் தங்குகிறதில்லை இன்றைக்கே திரும்பி விட வேண்டுமென்று நினைத்துக் கொண்டு இங்கே வந்தோம். ஆனாலும், உங்கள் மனசைப் புண்படுத்த நான் விரும்பவில்லை ஆகையால் இன்று முழுதும் இங்கிருந்து நாளைய தினம் காலையில் நாங்கள் எழுந்து போகிறோம். இப்போது நீங்கள் அவ்வளவோடு திருப்தியடையுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட வீரம்மாள் அவ்வளவாவது அவர் தனது வேண்டுகோளுக் கிணங்கினாரே என்று நினைத்துப் பெருவகை கொண்டவளாய் "சுவாமிகளின் சித்தம். அதற்கு மேல் நான் கட்டாயப் படுத்த எனக்கு என்ன உரிமை இருக்கிறது. ஆனால் தெய்வச் செயலாய் அம்மாளும் குழந்தையும் அகப்படாமல், முதலில் எங்களுக்குத தாங்கள் உடனே ஒரு தந்தியனுப்பிவிட்டு மற்ற வேலைகளைக் கவனிக்க வேண்டும். நாங்கள் உடனே வந்து குதித்து விடுகிறோம். அம்மாளையும் குழந்தையையும் காணுகிறவரையில் எங்களுடைய துயரமும் ஏக்கமும் நீங்கவே போகிறதில்லை. நாங்கள் நல்ல தூக்கமாகத தூங்கவு மாட்டோம். தங்கள் உத்தரவுப்படி இந்த விஷயங்களையெல்லாம் ரகசியமாகவே வைத்துக் கொள்ளுகிறோம்." என்று கூறி முடித்தாள்.

---

## 17-வது அதிகாரம்

## கலியாணப் பைத்தியம்

கோகிலாம்பாள் வீழ்ந்தது பெரிய துறவு கிணறு. தோட்டக்காரர்கள் பகல் வேளை முழுதும் ஏற்றங்களின் மூலமாய் அந்த பங்களாவிலிருந்த பல கிணறுகளிலிருந்தும் தண்ணீர் இறைப்பது வழக்கம்; சாயுங்கால வேளையில் தண்ணீர் வற்றிப்போய் இரவிற்குள் மறுபடி பெருகி நிறைந்திருப்பது வழக்கம். ஆனால், அவள் எந்தக் கிணற்றிற் குதித்தாளோ, அந்தக் கிணற்றில் ஊற்றுக் கண்கள்

அவ்வளவு நன்றாக இருக்கவில்லையாதலால், அதில் அவ்வளவு விரை வாகத் தண்ணீர் ஊறுவதில்லை. ஆகவே, தோட்டக்காரர்கள் அதி லிருந்து தண்ணீர் இறைப்பதே இல்லை. அந்தக் கிணற்றில் ஓர் ஆளின் கழுத்தளவு வரக்கூடிய தண்ணீர் எப்போதும் தேங்கி இருக் கும். தோட்டக்காரர்கள் அந்தக் கிணற்றை ஒருவிதமாய் உப யோகித்து வந்தனர். அந்தப் பூஞ்சோலையைச் சுற்றிலும் பெரிய காடுபோல வளர்ந்திருந்த ரயில் கற்றாழை மடல்களை ஏராளமாக வெட்டி அவைகளிலிருக்கும் முட்களைப் போக்கி, கல்லினால் நன்றாக நசுக்கிக் கட்டுகளாய்க் கட்டி அந்தக் கிணற்றில் போட்டு வைப்பது வழக்கம். அவற்றிலிருந்து எடுக்கப்படும் நார் நிரம்பவும் அழுத்த மாகவும் பட்டுபோல வழுவழுப்பாகவும் இருக்குமாகையால், அந்த நார் பலவகையான காரியங்களுக்கு உபயோகப் படுத்தப்பட்டது. ஷை நாரை எளிதில் உரிக்கும் பொருட்டு, ஷை தாழைகளை அவர் கள் அந்தக் கிணற்றில் அழுகப்போட்டு வைத்திருந்தனர், கட்டுகள் மேலே மிதக்காமலிருக்கும் பொருட்டு, தண்ணீருக்குள் ஒரு முழ ஆழத்தில் நாற்புறங்களிலுமிருந்த சுவர்களில் ஆணிகளை அடித்து, அவைகளில் கெட்டியான கயிறுகளைப் போட்டு வலைபோலக் கட்டி யிருந்தனர் நசுக்கப்பட்ட தாழைக் கட்டுகள் மேலே கிளம்பாமல் ஷை கயிற்றுச் சிக்கத்தின் அடியில் அழுத்தப்பட்டிருந்தன. ஆகவே, கிணற்றின்மேலே இருந்து பார்த்தால் தண்ணீர் நிறைந்திருப்பது போலக் காணப்பட்டது தண்ணீர்க்குள் முக்கால் முழ ஆழத்தில் கயிற்றுப் பின்னலும் அதன் கீழ் தாழைமடல் கட்டுகளும் இருந்தன.

ஆகவே, அந்தக் கிணற்றிற்குள் கோகிலாம்பாள் குதிக்கவே, அவளது கால்கள் தண்ணீருக்குள் போய்த் தாழைமடல் கட்டுகளின் மேல் சுலபமாய் நின்று விட்டன கட்டுகள் தரையிலிருந்து இடை வெளி இன்றி மேல் வரையில் அடுக்கப்பட்டிருந்த தாகையால், அவள் குதித்த அதிர்ச்சியினால்கூட கட்டுகள் நகராமல் இறுகலாய்க் கிடந்தன. விழுந்த உடனே தான் தண்ணீருக்குள் ஆழ்ந்து மூச்சுத் திணறல் கொண்டு மரணாவஸ்தையடைய நேருமென்று கோகிலாம் பாள் எதிர்பார்த்தாளே யன்றி, அவ்வாறு தண்ணீருக்குள் போய் எவ்வித அடியும், உபத்திரவமு மின்றி சுகமாக நின்று விடுவோ மென்று அவள் சிறிதும் பார்க்கவில்லையாதலால், அவள் பெரிதும் திகைப்படைந்து உடனே உண்மையை உணர்ந்து கொண்டாள். தோட்டக்காரர்கள் ஏதோ ஒரு கிணற்றில் தாழை மடல்களை ஊறப்

போடுகிறார்களென்பதை அவள் அதற்கு முன் அறிந்திருந்தவளாக லால், அவ்வாறு அது போடப் பட்டிருந்த கிணற்றில் தான் குதிக்க நேர்ந்ததே என்றும், தான் உயிரை விடப் போக அதுவும் பலியாமல் ஏமாற்றமாயும் அபஜெயமாயும் முடிகிறதே என்றும் நினைத்து, அவ்வளவோடு மனத்தளர் வடையாமல், தான் அதை விட்டு வெளிப்பட்டு வேறு கிணற்றுக்காவது போய் விழுந்து தனது தீர்மானத்தை நிறைவேற்றியே தீரவேண்டுமென்று எண்ணிக் கொண்டவளாய்த் தாழைமடல் கட்டுகளின்மேல் நடந்து சுவரோரமாகப் போய் அங்கே நீண்டு கொண்டிருந்த கருங்கல் படிகளில் காலை வைத்து சுலபமாக ஏறி மேலே சென்று, நாற்புறங்களிலும் திரும்பிப் பார்த்தாள் தென்னமரங்களுக்கு இப்பால் கமுகு மரங்கள் நிறைந்திருந்த பாகத்தில் பெரிய கிணறு ஒன்று காணப்பட்டதை அந்த மடந்தை கண்டு அந்த இடத்தை விட்டுத் திரும்பி நடந்து மேற்படி கிணறு இருந்த இடத்தை நோக்கிச் சென்றாள்; சென்று கிணற்றண்டை போய்ச் சேரவே, அதற்கு அப்புறத்தில் பெருத்த புதர்கள் போல சம்பங்கி, முல்லை, ஜாதிமல்லி முதலியவற்றின் கொடிகள் வளைவு பந்தல்களின் மேல் ஏற்றி விடப்பட்டிருந்த இடத்திற்கு அப்பால், யாரோ இரண்டு மனிதர்கள் நின்று தணிவான குரலில் சம்பாஷித்துக் கொண்டிருந்ததாக அவள் உணர்ந்தாள். உணரவே, அவள் திடுக்கிட்டு அஞ்சி நடுங்கி, அந்த அகாலத்தில் தோட்டத்திற்குள் வந்து யார் சம்பாஷித்துக் கொண்டிருப்பார்களென்று நினைத்து ஆச்சரியமடைந்தவளாய், தான் அப்பொழுது குதித்தால், அதனால் உண்டாகும் ஓசையைக் கேட்டு அங்கிருந்த மனிதர்கள் ஓடிவந்து தன்னைத் தூக்கி விடுவார்களென்றும், தனது தீர்மானம் அந்தக்கிணற்றண்டை கூட நிறைவேறாதென்றும் நினைத்தாள். அதுவுமன்றி அங்கே வந்திருப்பது ஒருகால் திருடராயிருப்பாரோ என்ற சந்தேகமும் அவளது மனத்தில் தோன்றிய தாகையால், தான் மறைந்து சென்று அங்கு சம்பாஷித்தவர்கள் இன்னார் என்பதை அறிய வேண்டுமென்ற எண்ணத்தினால தூண்டப் பட்டவளாய் அந்தப் பெண்மணி கமுகுமரங்களின் இடையிலிருந்த உயரமான பூச்செடிகளின் மறைவில்ஒளிந்தொளிந்து ஓசையில்லாது நடந்து, மனிதரது பேச்சுக்குரல் உண்டான இடத்திற்கருகில் போய் கொத்துக்களின் இடுக்கால் உற்று நோக்கினாள். நோக்கவே, அவள் திடுக்கிட்டு அப்படியே பிரமித்து நின்று விட்டாள். தான் அங்கே கண்டகாட்சி உண்மையானதா, அல்லது

மனப்பிராந்தியினால் ஏற்படும் பொய்த்தோற்றமா என்ற சந்தேகம் அவளது மனத்தில் உண்டாகி விட்டது. ஏனெனில், அவ்விடத்தில் சுந்தரமூர்த்தி முதலியாரும், தனது தங்கை சௌந்தரவல்லியம்மாளும் நின்றுஒருவரோடொருவர்சம்பாஷித்துக்கொண்டிருந்தமையால், அதற்கு முன் ஒருவரோடொருவர் சிறிதும் பழகாதவர்களான அவர்கள் இருவரும் அந்த அகால வேளையில் தனிமையில் பூஞ்சோலைக்குள் வந்து பேசியது, அவளுக்கு முற்றிலும் ஆச்சரியகரமாக இருந்தது. அதுவுமன்றி, அன்றைய பகல் முழுதும், தமது பங்களாவிலிருந்து இரவில் தனக்குப் பின்னால் பங்களாவிற்கு வந்து ஜனங்களோடு வெளியில் போய் விட்டவரான சுந்தர மூர்த்தி முதலியாரும், சௌந்தரவல்லியும், தாம் அப்பொழுது அந்த இடத்தில் சந்திப்பதென்று ஏற்பாடு செய்து கொள்ள எப்பொழுது சந்தர்ப்பம் ஏற்பட்டது என்பதை அறியமாட்டாதவளாய் நமது மடவன்னம் சிறிதும் ஓசை செய்யாமல் அப்படியே நின்று விட்டாள். அவர்கள் பேசுவதைத் தான் கவனித்துக் கேட்பது ஒழுங்கல்லவென்ற எண்ணம் உண்டான தாலும், தன்னிலும் சிறியவளான சௌந்தரவல்லி தவறு செய்தால், அதைப் பற்றி அவளைக் கண்டிப்பதற்கும், அல்லது, அதைத் தடுப்பதற்கும் அவள் கடமைப்பட்டிருந்தா ளாதலால், தான் அப்படியே சிறிது நேரம் நின்று, அவர்கள் பேசியதைக் கவனிக்க வேண்டுமென்று நினைத்து ஓசை செய்யாமல் அப்படியே ஒளிந்து கொண்டு நின்றாள்.

சௌந்தர வல்லியும் சுந்தரமூர்த்தி முதலியாரும் அப்பொழுது அவ்விடத்தில் வந்து சந்திக்க எப்படி சாத்தியப் பட்டதென்பதை நாம் கவனிப்போம். சௌந்தரவல்லி, மிகுந்த படாடோபமும், குதூகலமும் நிறைந்த சதாகாலமும் உல்லாஸ புருஷராய்த் தோன்றிய சுந்தரமூர்த்தி முதலியாரைக் கண்டதுமுதல் அவரே தனது மனப்போக்கிற்குத் தகுந்த புருஷரென்று மதித்து அவரிடத்தில் அளவற்ற மோகமும், பாசமும் வைத்து, எப்பாடு பட்டாயினும் தான் அவரையே மணக்க வேண்டுமென்ற தீர்மானத்தைச் செய்து கொண்டிருந்தாள். கோகிலாம்பாளும் கண்ணபிரானும் பூஞ்சோலையில் தனிமையிலிருந்ததைக் கண்டதுமுதல், தானும் அதுபோலத் தனது மணாளனுடன் தனிமையில் சம்பாஷித்து ஆநந்தமடைய வேண்டு மென்று மிகுந்த ஆவல்கொண்டு துடிததிருந்தா ளென்பது முன்னரே கூறப்பட்ட விஷயம். ஆகவே, அந்த மடந்தை புஷ்பாவதி யிடத்தில் தனிமையில பேசி, அவளது கமபனுடன் தான்

ரகசியமாய்ப் பேசும்படி ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கெஞ்சி வேண்டிக்கொள்ள, அவள் அன்றைய தினம் இரவு பத்துமணிக்குள் அவர் எப்படியும் அவளை சந்திக்கும்படி தான் செய்வதாய் வாக்குறுதி செய்து கொடுத்திருந்தாளென்பதும், அதை அவள் டெலிபோன் வாயிலாக சுந்தரமூர்த்தி முதலியாருக்குத் தெரிவித்தாளென்பதும் முன்னரே கூறப்பட்ட விஷயங்கள். சௌந்தரவல்லியும் புஷ்பாவதியும அன்றைய மாலையில் தீர்மானித்தபடியே சௌந்தரவல்லி நிரம்பவும் திறமையாக நடந்துகொண்டு, தனது தாயையும், அக்காளையும் சொந்த ஜனங்களுக்கு முன்னும், வேலைக்காரர்களுக்கு முன்னும் மானபங்கப் படுத்திவிட்டு ஒன்றையு மறியாத பேதைபோல முடிவில் அவள் அந்த மகாலை விட்டுச் சென்றாளல்லவா. சென்றவள் நேராக சமயலறையை யடைந்து, தனது இராப் போஜனத்தை அவசரமாக முடித்துக்கொண்டு தனது படுக்கை யறைக்குப் போய்ச் சேர்ந்தாள். தான் வேண்டுமென்றே அத்தனை காரியங்களையும் நடத்தி யிருக்கிறதாக மற்றவர் சிறிதும் சந்தேகமுறாதபடி தான் நிரம்பவும் சாமர்த்தியமாய் நடந்து கொண்டதைப் பற்றிய தற்பெருமையினாலும், தனது தாய் அக்காள் முதலியோர் செய்த தவறுக்கு அவர்களைத் தான் நன்றாக தண்டித்துவிட்டதாக எண்ண, அதனால் ஏற்பட்ட அபாரமான மகிழ்ச்சியினாலும் உற்சாகத்தினாலும் மெய்ம்மறந்து ஆநந்த மயமான ஒரு வித ஆவேசங்கொண்டு நேராகத் தனது சயனத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். அன்றையதினம் இரவு பத்துமணிக்குள் தமது தமயனார் அவளை சந்திக்கும்படி தான் அவசியம் செய்வதாய்ப் புஷ்பாவதி கூறியிருந்தாளாதலால் அந்த வாக்குறுதியை அவள் எப்படியும் நிறைவேற்றி வைப்பாளென்ற நம்பிக்கை அவளது மனதில் தோன்றியதானாலும், தமது பங்களாவிற்கு வந்து சுந்தரமூர்த்தி முதலியார் மற்ற ஜனங்களோடு திடீரென்று வெளியில் போய்விட்டாராதலால் அவர் தன்னை சந்திக்கமாட்டாரோ என்ற சந்தேகம் எழத் தொடங்கியது. அதுவுமன்றி, தனது அக்காள் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் ஏதோ துன்மார்க்கமான நோக்கத்துடன் போய் வந்திருக்கிறாளென்ற நினைவை மற்றவர்கள் கொண்டது போலவே சௌந்தரவல்லியும் கொண்டிருந்தாளாதலால், சுந்தரமூர்த்தி முதலியாரும் அவ்வாறு கோகிலாம்பாள் நடந்துகொண்டதைக் கண்டு தன்மீது அருவருப்படைந்து, தன்னை மணக்க மனமில்லாதவராய்ப் புறப்பட்டுப் போயிருப்பாரோ என்ற சந்தேகமும் எழுந்து

உலப்பத் தொடங்கியது. ஆகவே சௌந்தரவல்லி மாறி மாறி சந்தோஷமும், கவலையும் கொண்டவளாய்த் தனது சயன அறையை அடைந்தாள். அடைந்தவள் நேராகத் தனது பஞ்சணைக்குப் போய்ச் சேர்ந்து அதன்மேல் உட்கார முயல மெத்தையின்மேல் வைக்கப் பட்டிருந்த ஒரு கடிதம் அவளது திருஷ்டியில்பட்டது. அவள் மிகுந்த வியப்பும் ஆவலும் கொண்டு அதை எடுத்து, அதன் மேலிருந்த உறையைப் பார்த்தாள். உறையில் எழுத்துகளே காணப் படவில்லை. அந்த மடந்தை அவசரமாக அதன் உறையைக் கிழித் தெறிந்து விட்டு உள்ளே இருந்த சிறிய துண்டுக் காகிதத்தை வெளியில் எடுத்து விளக்கின் வெளிச்சத்தில் பார்த்தாள். அடியில் யாருடைய பெயர் இருந்ததென்று கவனித்தாள். பெயர் காணப் படவில்லை.

அதில் அடியில் காணப்படும் வாக்கியங்கள் எழுதப்பட் டிருந்தன :—

இன்றிரவு பத்து மணிக்கு நான் உன்னைச் சந்திக்க வேண்டு மென்று நீ ஆவல் கொண்டிருப்பதாக உணர்ந்தேன். சிறிது நேரத் திற்கு முன் நடந்த வெட்கக் கேடான சம்பவங்களைக் கண்டபின் இந்த சந்திப்புக்கு என் மனம் இடம் தரவில்லையானாலும், உன்னி டம் நான் வைத்துள்ள அளவிட முடியாத பிரியத்திற்கு முன் எது வும் நிற்கவில்லை. உங்கள் பங்களாவில் சந்தித்தால் தாராளமாக நாம் சம்பாஷிக்க முடியாது. ஆகையால், இப்போது நாம் வேறொரு காரி யத்தைக் கவனிக்க வேண்டுமாதலால், அங்கே போய்விட்டு மறுபடி வந்து, உங்கள் பூஞ்சோலையில் கமுகந்த தோப்புக்குப் பக்கத்தி லிருக்கும் கிணற்றண்டையுள்ள கொடிப்பந்தலிற்கப்பால் உட்கார்ந் திருக்கிறேன். நீ சரியாகப் பத்து மணிக்குப் புறப்பட்டு எவருக் கும் தெரியாமல் அங்கே வந்துசேர். மற்றவை நேரில் நான் இன் னான் என்பதை நீ யூகித்துக் கொள்வாயாகையால், நான் கையெழுத் துச்செய்யவில்லை. இந்தச் சீட்டு வேறு எவர் கண்ணிலாகிலும் பட் டால், இது இன்னரால் இன்னருக்கு எழுதப்பட்ட தென்பதே தெரியாமலிருக்க வேண்டு மென்று நான் பெயர்களைக் குறிக்க வில்லை. அதைப்பற்றி நீ வித்தியாசமாக எண்ணவேண்டாம்.

என்று எழுதப்பட்டிருந்த துண்டுக் கடிதத்தை அவள் படித்து முடித்தாள். சுந்தரமூர்த்தி முதலியார்தான் அதை எழுதி

யிருக்கிறாரென்று அவள் உடனே யூகித்துக் கொண்டாள். அதை அவர் வேலைக்காரர் மூலம் அனுப்பி இருக்கமாட்டா ரென்றும், மற்ற ஜனங்களோடு வெளியில் வந்தவர் தனது விடுதிக்குள் நுழைந்து அந்தக் கடிதத்தை வைத்துவிட்டுப் போயிருக்கிறா ரென்றும் அவள் நிச்சயப்படுத்திக் கொண்டதன்றி, அவர் தன் மீது ஆழ்ந்த பிரியம் வைத்திருக்கிறாரென்று நினைத்துப் பூரித்து அளவளாவி அவருக்கும் தனக்கும் ஏற்படப்போகும் சந்திப்பை சகிக்கவொண்ணாத ஆவலோடும், அபாரமாகப் பொங்கி யெழுந்த மனவெழுச்சியோடும் எதிர்பார்த்து அந்த விடுதியில் இருந்த உன்னதமான ஆடைகளையும், வைர ஆபரணங்களையும் எடுத்துத் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டாள். அவளது அழகிய அளக பாரம் நன்றாக வாரி வசீகரமாய்ப் பின்னி விடப்பட்டிருந்தமையால், அவள் ரோஜாமலர் ஜாதி மல்லிகை மலர் ஆகிய இரண்டையும் சேர்த்துக் கதம்பமாய்க் கட்டப்பட்டிருந்த அதிமனோக்கியமான பரிமள கந்தத்தை வீசிய புஷ்ப ஸரத்தை எடுத்துத் தனது கட்டின் மேல் சூட்டிக் கொண்டாள். மைசூர் சந்தன சோப்பினால் தனது முகத்தை சுத்தம் செய்துகொண்டு நெற்றிக்கு ஜவ்வாதுப் பொட்டிட்டு புருவத்திற்கும் ஜவ்வாதினால் கருமை யூட்டிக்கொண்டு கண்களுக்கு மை தீட்டிக்கொண்டு வாசனை திரவியங்கள் கலந்த தாம்பூலம் தரித்து அதரங்கள் இரத்தம்போலச் சிவந்து போகும்படி செய்துகொண்டு நிலைக்கண்ணாடி யண்டையில் போய்த் தனது அழகைப் பார்த்தாள். அவளது இயற்கைத் தோற்றமும், செயற்கையணிகளும் ஒன்று கூடி ஒரே ஜோதி மயமாகவும், இன்பமே நிறைவாகவும் தோன்றினவாதலால் அந்த மடந்தை தனக்குத் தானே மோகித்ததன்றி, தனக்கு மணாளனாகப் போகிறவர் தன்னைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சியும் சந்தோஷமு மடைந்து தன்மீது மாறாத பிரியமும், நல்ல அபிப்பிராயமும் கொள்வாரென்று நிச்சயித்துக் கொண்டு சிறிதுநேரம் ஒய்யாரமாகத் தனது பஞ்சணை மீது சாய்ந்திருந்தாள். அவ்வாறு தனக்கு கடிதம் வந்திருக்கிற தென்ற செய்தி புஷ்பாவதிக்குத் தெரிந்திராதென்று அவள் எண்ணினளாதலால் உடனே அவ்விடத்தை விட்டு சந்தடி செய்யாமல் நடந்து புஷ்பாவதிக்கு விடப்பட்டிருந்த இடத்திற்குப் போய்ப் பார்த்தாள். அவள் காணப்படவில்லை, அவள் தனது தாயுடனிருப்பாளென்றும், எப்படியும் சிறிது நேரத்தில் வருவாளென்றும் நினைத்து, அந்தக் கடிதத்தைப் புஷ்பாவதியின் சயனத்தின் நடு மத்தியில் வைத்து

அதன்மேல் தலையணை யொன்றை வைத்து மூடிய பின் அவ்விடத்தை விட்டுத் திரும்பித் தனது சயனத்திற்கு வந்து சிறிது நேரம் தனது பஞ்சணையின்மேல் ஒய்யாரமாகச் சாய்ந்திருக்க, மணி பத்துக்கு நெருங்கியது. அவளது மனம் ஆவலே வடிவாய் நிறைந்து துடிதுடித்திருந்தது. அவளது தேகம் ஆசையாகிய தீயினால் தகிக்கப்பட்டு அவ்விடத்தில் இருக்கை கொள்ளாது பறந்து கொண்டிருந்தது. அந்த நிலைமையில், தான் புறப்படவேண்டிய காலம் நெருங்கவே, அவள் சரேலென்று துள்ளி எழுந்து சந்தேகத்திற்கு இன்னொரு முறை தனது வடிவழகை நிலைக்கண்ணாடியில் பார்த்து, எவ்வித க்ஷராவுக்கும் இடமில்லை என்று திருப்தி செய்துகொண்டு, அவ்விடத்தை விட்டுக் கிளம்பிக் கட்டிடத்தைக் கடந்து வெளிப்பட்டு பூஞ்சோலைக்குள் புகுந்து கமுகுத்தோப்பை யடைந்து அவ்விடத்தி லிருந்த கிணற்றண்டை போய்ச் சேர்ந்தாள். அவளது குணவொழுக்கங்களை இதுகாறும் வாசகர்கள் கவனித்து வந்ததில், அவள்மீது அருவருப்பும், ஆத்திரமும் கொண்டிருப்பார்களானாலும், ஆழ்ந்து நோக்குங்கால், மற்ற இருவரைக் காட்டிலும் சௌந்தரவல்லி குண ஒழுக்கங்களில் மேம்பட்டவளென்றே நாம் கருதவேண்டும். தாயும் மூத்த புதல்வியும் மேலான நற்குண நல்லொழுக்க முடையவராயிருந்தாலும், அவர்களிடம் ஓரளவு கபடமும், வியவகார தந்திரமும் இருந்து வந்தனவென்பது பிரத்தியக்ஷம். சௌந்தரவல்லியிடம் கபடமென்பதே கிடையாது. அந்த மடந்தை உள்ளும் புறமும் ஒத்து சுத்த சுயம்புவாய் நடந்து வந்தாள். தன்னை ஈன்ற தாயாயிருந்தாலும், சரி, தன்னைப் படைத்த சர்வேசுவரனானாலும் சரி, அவர்களிடம் அற்ப குற்றம் காண்பாளாயினும், அவள் அதைக் கண்டு சகிக்கமாட்டாள்; அவர்களை அவள் இலேசில் விடமாட்டாள். அவர்கள் மீது அவளுக்குப் பெருத்த அருவருப்பும் கோபமும் உண்டாவது திண்ணம். அவள் அற்ப குற்றமும் மனசால் கூடச் செய்யாமல் ஒழுங்காக நடக்கிறவளாதலால், மற்றவரிடம் தவறு இருக்கக் கண்டால், அவளுக்கு அவரிடம் பெருத்த க்ஷாத்திரம் ஏற்பட்டுப் போவதோடு அவளது மனம் அதைக் குறித்து சங்கடப்பட்டுக் கொண்டே இருக்கும். தாயும், மூத்தவளும் பிறரிடம் குற்றம் இருக்கக் காணினும், யுக்தா யுக்தம், பொருள், இடம், காலம் முதலியவைகளைக் கவனித்து நடப்பதன்றி, தமது மனவுணர்ச்சியை அவ்வளவாக வெளியில் காட்டாமல் ஒழுகுவர். சௌந்தரவல்லி, தனக்குக் கணவனைப் போகும் மாப்

பிள்ளையிடம் கலியாணத்திற்கு முன் தனிமையில் இருந்து, சிறு பிள்ளைத் தனமாக ஏதேனும் விளையாட்டுகள் நடத்துவதை கோகிலாம்பாள் கண்டிருந்தால், அவள் அப்போது பேசாமல் இருந்து, தனிமையில் மிருதுவாகவும் நயமாகவும் அவளுக்கு நற்புத்தி புகட்டி இருப்பாள்; எப்படி இருந்தாலும், அவளை அயலாரிடம் காட்டியே கொடுத்திருக்க மாட்டாள். சௌந்தரவல்லியோ அவ்வாறு யுக்தாயுக்தம் பிறரது மனம் புண்படுமே என்ற தாக்ஷண்யம் முதலியவைகளை கவனிக்காமல் உடனுக்குடன் பிறரது குற்றத்தைக் கண்டிப்பாள். அவளிடம் அத்தகைய மனப்பான்மை பூர்த்தியாக இருந்தது பற்றியே, அவள் கோகிலாம்பாளும் கண்ணபிரானும் பூஞ்சோலையில இருந்ததைக் கண்டு முன்னர் விவரிக்கப்பட்டபடி அவர்களை அவமானப் படுத்தி விட்டாள். பிறகு கோகிலாம்பாள் போலீஸ் இன்ஸ்பெக்டர் வீட்டுக்குப் போனாள் என்பதைக் கண்டு சிறிதும் பொறுமல் அவளையும், தங்களது தாயையும் எல்லா ஜனங்களுக்கும் முன்பாக மகா கேவலமாக மானபங்கப் படுத்தித் தீர்த்து விட்டாள். ஆகவே, இளையவளிடம் நல்ல குணமும் ஒழுங்கான நடத்தையும் இல்லையென்ற காரணத்தினால் அவளிடம் நாம அதிருப்தி கொள்ள இயலாது. அவளிடம் நற்குண நல்லொழுக்கம் அமிதமாக இருந்தனவென்ற காரணத்தினாலும், குற்றவாளிகள் எப்பேர்ப்பட்ட மனிதரா யிருந்தாலும் அவள் சிறிதும் தாக்ஷண்யம் பாராமல் அவர்களை அவமானப் படுத்துவாள் என்ற காரணத்தினாலுமேநாம் அவளிடம் அதிருப்தி கொள்ள வேண்டும். அவள் யௌவன காலத்தின் லக்ஷணப்படி கலியாணத்தின் மேலும், தனக்கு வரிக்கப்பட்டிருந்த புருஷர் மேலும் இன்னதென்று விவரிகக இயலாத ஒருவித வேட்கையும், கவர்ச்சியும் பிரமையும கொண்டிருந்தாள். அந்த நிலைமையில் அவள் தனது அக்காளும் கண்ணபிரானும் பூஞ்சோலையில ஒன்று சேர்ந்து ஒருவரோ டொருவர் கொஞ்சிக்கொண்டிருந்ததைக் காணவே, தனது அக்காள் கலியாணம் ஆவதற்கு முன் அத்தகைய காரியத்தைச் செய்கிறாளே என்ற ஆத்திரமும், அருவருப்பும் தோன்றி அவளை வதைத்தனவானாலும், தானும் அவ்வாறு செய்து, அந்த சுகம் எப்படி இருக்கிறதென்று பார்த்துவிட வேண்டுமென்ற ஆவல் எழுந்து அவளைத் தூண்டிக் கொண்டே இருந்தது. ஆயினும், அவள் அன்றிரவு தங்களது பங்களாவை விட்டு வெளிப்பட்டுகமுகுத் தோப்பிற்குள் இருந்த கொடிப்பந்தலண்டை வந்து அங்கு ஆயத்தமாய் நின்று தனது வருகையை ஆவ

லோடு எதிர்பார்த்திருந்த சுந்தரமூர்த்தி முதலியாரைக் காணவே, ஸ்திரீகளின் உத்தமலக்ஷணங்களான நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற உணர்ச்சிகள் சகிக்க இயலாமல் பெருகி அவளை வதைக்கத்தொடங்கின. தனது அக்காள் அவ்வாறுசெய்ததைத்தான் நிரம்பவும் கடுமையாகக்கண்டித்தது தான் அதுபோலவே செய்வது பெருத்ததவறு என்று அவளது மனச்சாட்சியே அவளை பலமாகக் கண்டிக்கத் தொடங்கியது. உடனே அந்த மங்கை தன்னைத்தானே கண்டித்துக் கொள்ளத் தொடங்கி, "சே! என் செய்கை தாயை யடக்கி மகள் விபசாரம் செய்வதுபோல இருக்கிறதே யன்றி வேறல்ல. அக்காள் தவறு செய்தால் அதற்காக நானும் தவறு செய்கிறதா! அவள் ஒருவேளை இப்போது இங்கே வந்து என்னைப் பார்த்துவிட்டால், என் நிலைமை என்னவாகிறது. அல்லது, இவரே, பின்னால் என்னைப்பற்றி என்ன நினைக்கமாட்டார்! ஆகையால், நான் வரம்பை மீறி எந்தக் காரியமும் செய்வது தகாது. நான் துணிந்து இவ்வளவு தூரம் வந்து விட்டதனால் காரியம் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. நான் இவருடன் கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருந்து, இவருடைய பிரியமும், மனஉறுதியும் மாறுதிருக்கும்படி செய்து விட்டுப் போய் விடுகிறேன்" என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு நாணித் தலைகுனிந்து தயங்கித் தயங்கி அவரண்டை நெருங்கினாள்.

அவ்விடத்தில் ஆயத்தமாய் வந்து நின்று அவளது வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருந்த சுந்தரமூர்த்தி முதலியாரது அப்போதைய மனப்பான்மையும் சௌந்தர வல்லியின் தீர்மானத்திற்கு ஒத்ததாகவே இருந்தது. தாம் முதலில் கோகிலாம்பாளை மணந்து, அவளது மனதை மயக்கி, தாம் சொல்வதுபோல அவள் கேட்கும்படி செய்து சௌந்தரவல்லியையும் அவள் தனக்கே கலியாணம் செய்து கொடுக்கும்படிசெய்து, இரண்டு பெண்களையும் மணப்பதன்றி, அவர்களிடமிருந்த ஏராளமான செல்வம் முழுதையும் அடியோடு தாமே அபகரித்துக் கொள்ளவேண்டுமென்பது சுந்தர மூர்த்தி முதலியாரது பிரதானமான கருத்து. கோகிலாம்பாளையே தமக்குக் கொடுக்க வேண்டுமென்று ஆதியில் புஷ்பாவதி அவர்களிடம் நிரம்பவும் சாமர்த்தியமாகக் கேட்டுத் தன்னாலென்ற வரையில் முயற்சித்துப் பார்த்தாள். பிறகு கண்ணபிரானுக்கும் அவனது தாய்க்கும் அவமானம் ஏற்பட, அவர்கள் அவ்விடத்தை விட்டுப் போன பிறகாவது அவர் கோகிலாம்பாளைத் தமக்குக்

கொடுப்பார்களா என்று அண்ணனும் தங்கையும் பிரயாசைப்பட்டுப் பார்த்தார்கள். அதுவும் பலிக்காமல் போயிற்று. கோகிலாம்பாளைக் கண்ணபிரான் பெரிய அபாயத்திலிருந்து காப்பாற்றியது போல தாம் ஓர் அபாயத்திலிருந்து அவளைக் காப்பாற்றிய காரணத்தை முன்னிட்டு அவர் அவளிடம் நேரிலேயே தமது விருப்பத்தை வெளியிட்டுப் பார்த்தார். அவளது மன உறுதி எதற்கும் தளர்வதாக இல்லை. ஆகவே, கோகிலாம்பாளை அவர்களது சொந்த ஜனங்களுக்கு முன்னால் அவளது தங்கையைக் கொண்டே மானபங்கப்படுத்த வேண்டுமென்று நினைத்து, நிரம்பவும் தந்திரமாக அவளது தங்கையைத் தூண்டிவிட, அவள் அந்தக்காரியத்தைப் பூர்த்தியாகச் செய்து முடித்தாள். அதோடு சுந்தரமூர்த்தி முதலியாரது மனம் அமைதியடையவில்லை. தங்கையைமறுபடி தூண்டிவிட்டு, அக்காளைவீட்டைவிட்டுத் துரத்திவிடச் செய்து, அவளுக்கு எவ்விதமான பொருளும் கொடுக்காமல் ஏமாற்றச் செய்வதோடு, சில தினங்களுக்குள் தமது கலியாணத்தை முடித்துக்கொண்டு எல்லா சொத்துக்களையும் தமது சுவாதீனத்திற்குக் கொணர்ந்து விடவேண்டுமென்பது அவரது முக்கியமான நோக்கம். அவள் தம்மிடம் காதல் கொண்டு, தம்மோடு பேசவேண்டுமென்று தவித்திருக்கிறாள் என்பதை அவர் தமது தங்கையின் மூலமாய்த் தெரிந்துகொண்டிருந்தார். அந்த ஆசையைப் பூர்த்தி செய்வதுபோல நடித்து, தாம் அவளிடம் கிட்ட நெருங்காமல் தூரத்திலேயே இருந்தால், அவள் தனது மோக மயக்கத்தினாலும், அவரிடம் வைத்த பிரேமையினாலும், தாம் இழுத்த இழுப்பிற்கெல்லாம் வருவாள் என்ற தீர்மானத்துடன் அவர் அன்று அவளைத் தோட்டத்தில் சந்திப்பதாகக் கடிதம் எழுதி யிருந்தார். செளந்தரவல்லியிடம் தாம் அப்போது அதிகமாய் நெருங்காது தூரத்திலேயே இருந்தால், அவளது ஆசையும் ஆவலும் அதிகரிக்குமென்ற நினைவைக் கொண்டவராய் அவரும் சிறிது தூரத்திலேயே நின்றவண்ணம் அவளைப் பார்த்துப் புன்னகை பூத்த இனிய முகத் தோற்றத்தோடு "வா, செளந்தரா! நான் உன்னுடைய விடுதிக்கே வரலாமாவென்று உத்தேசித்தேன், உன் சொந்த மனிதர் யாராவது கண்டு கொண்டால் உன் தமக்கைக்கு நேரிட்டதுபோல் உனக்கும் தலை குனிவு ஏற்படப்போகிறதே என்ற அச்சத்தினால் இங்கே வரும்படி உனக்கு எழுதினேன். ஆனாலும், இரவில் இவ்வளவு அகால வேளையில் நீ இங்கே வரும்போது, ஏதாவது விஷ ஜெந்துக்களினால், உனக்குக்

கெடுதல் வந்துவிடப்போகிறதேயென்று நினைத்து நான் துடிதுடித்து நின்றுகொண்டிருந்தேன். நல்ல வேளையாக யாதொரு கெடுதலுமில்லாமல் வந்து சேர்ந்தாய்" என்று வாஞ்சனையினால் முற்றிலும் இளகி உருகிப் போனவர்போல மொழிந்தார்.

அவரது இளகிய குரலொலியைக் கேட்கும்பொழுதே, அவளது தேகம் ஆநந்த பரவசமடைந்து விட்டது அவள் முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த நாணமும், நடுக்கமும் அடைந்து வாய் திறந்து பேசவும் மாட்டாதவளாய் அஞ்சி ஒடுங்கி ஊமை போல நின்று விட்டாள்.

உடனே சுந்தரமூர்த்தி முதலியார் முன்னிலும் அதிக உருக்கமாகவும் இனிமையாகவும் பேசத்தொடங்கி, "என்ன சௌந்தரா! பேசமாட்டேனென்கிறாய்? என்மேல் உனக்குக் கோபமா! நேரில் நானே வராமல், கடிதம் எழுதி உன் படுக்கையில் வைத்துவிட்டு வந்ததைப் பற்றிக் கோபமா? அதை யாராவது பார்த்துவிட்டார்களா?" என்று கொஞ்சலாக மொழிந்தார்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி, "கடிதத்தை யாரும் பார்க்கவில்லை. என் பேரில் அவ்விடத்திற்குத் தான் கோபம் ஏற்பட்டிருக்குமோ என்பதைக் கேட்க வேண்டுமென்பதே நான் இவ்விடத்திற்கு வந்ததற்கு முதலாவது காரணம்." என்று நிரம்பவும் விநயமாகவும் பணிவாகவும் கூறினாள்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—ஓ அப்படியா உன்மேல் நான் ஏன் கோபம் கொள்ளுகிறேன். நீ என் விஷயத்திலாவது பிறரிடத்திலாவது தவறாக நடந்து கொண்டாயா! அப்படி ஒன்றுமில்லையே மாசு மறுவற்ற பத்தரை மாற்றுத் தங்கமென்பது உனக்குத் தானே பொருந்தும். உன் அம்மாளும், அக்காளும் தவறு செய்து விட்டால், அதற்கு நீ எப்படி உத்தரவாதி. அவர்களை அத்தனை ஜனங்களுக்கும் முன்னால், நீ அவமானப்படுத்தினாயே. அதுவே, நீ மகா ஒழுங்கான நடத்தையுடைய புனிதவதி என்பதைக் காட்டவில்லையா.

சௌந்தரவல்லி:—(அவர் கூறிய ஸ்தோத்திர மொழிகளைக் கேட்டு மிகுந்த மனவெழுச்சியும் பூரிப்பும் அடைந்து) என் அக்காளாயிருந்தாலென்ன; அம்மாளாயிருந்தாலென்ன; தகாதகாரியத்தைச் செய்தால், அவர்களை நான் சும்மா விடமாட்டேன். அதுவு

மன்றி, அவர்கள் செய்யும் காரியங்கள் என்னையு மல்லவா பாதிக்கின்றன. என்னிடத்தில் பிரியம் வைத்திருக்கிற மனிதர்கள், நானும் அவர்களைப்போல துன்மார்க்கத்தில் போகக்கூடியவள் என்று நினைத்து என்னை வெறுப்பார்களல்லவா, ஆகையால், அவர்களைத் தண்டித்துத் திருத்துவதற்கு நானும் கடமைப் பட்டவளல்லவா. ஆனால் உலகத்தில், பெரியவர்கள் சிறியவர்களைத் திருத்தி அவர்கள் கெட்ட வழியில் போகாமல் அடக்குகிறது வழக்கம். எங்கள் குடும்பத்தில், அது தலை கீழாக இருக்கிறது.

சுந்தரமூர்த்தி முதலியார்:—வாஸ்தவந்தான். ஆனாலும் இதில் இன்னொரு முக்கியமான விஷய மிருக்கிறது. உண்மையில் நீ எவ்வித தவறும் செய்யாத மகா சிரேஷ்டமான மனப்போக்குடையவள் என்கிறது என் மனசார சந்தேகமில்லாமல் தெரிகிறது. ஆகவே, நான் உன்மேல் ஏற்கெனவே வைத்தபிரியம் கொஞ்சமும் மாறாமல் இருப்பதோடு, உன் நடத்தைகளைப் பார்க்கப் பார்க்க, அது அதிகரித்துக் கொண்டே போகிறது. சிறைச்சாலையிலுள்ள அந்தக் கண்ணபிரான் முதலியார் கடித மெழுதினால், உன் அக்காள் புறப்பட்டுத் தனிமையில் போகலாமா? போனவள், பலகார மூட்டையோடு போலீஸ் இன்ஸ்பெக்டருடைய வீட்டுக்குள் போய் அவரோடு வெகுநேரம் இருந்து வருவதென்றால்; அதை நாம் எப்படி வியாக்கியானம் செய்கிறது? இவைகளுக்கெல்லாம், உன் தாயார் இடங் கொடுக்கலாமா? இவைகள் ரகஸியமாய் நடந்து போயிருந்தாலும், பாதகமில்லை, எல்லா ஜனங்களும் சங்கதிகளைத் தெரிந்து கொண்டார்கள் எதுவும் ஒருவருக்குத்தெரிந்தால் ரகஸியம், இருவருக்குத் தெரிந்தால் அம்பலம் என்று சொல்லுவார்கள் இத்தனை ஜனங்களுக்கும் தெரிந்து போன சங்கதியை இனி மறைக்க முடியுமா? உண்மையில்கோகிலாம்பாள் கொஞ்சமும் குற்றமற்றவளாக இருப்பதாகவே வைத்துக்கொள்வோம். அப்பொழுதும் கூட, கெட்டுப்போன அவளுடைய பெயர் இனி பழைய நிலைமைக்கு வரப்போகிறதா? வந்தாலும், சக்கையும் தண்ணீருமாய் முறிந்துபோன பாலை மறுபடி ஒன்றாய்ச் சேர்த்து வைக்கிற மாதிரியே யன்றி வேறல்ல. இந்த நிலைமையில் இப்போது உனக்குக் கலியாணம் நடந்தால், உங்கள் ஜனங்கள் யாராவது வருவார்களென்று நினைக்கிறாயா? ஒரு நாளும் வரமாட்டார்கள்.

சௌந்தரவல்லி:—ஆம், மெய்தான். யாரும் வரமாட்டார்கள் தான். அப்படியானால், இவர்களுக்காக, இன்னம் எவ்வளவு காலத்துக்கு என் கலியாணத்தை நிறுத்தி வைக்கிறது?

சுந்தரமூர்த்தி முதலியார்:—உன்னுடைய ஆயிசு காலம் முடிய நிறுத்தி வைத்தாலும், இந்தக் கெட்டபெயர் மாறப் போகிறதில்லை. இவ்வளவோடு அவர்கள் சும்மா இருந்து இனியும் கெட்ட பெயருக்கு இடங்கொடாமல் இருப்பார்களா! அதுவுமில்லை. இவர்கள் அந்தக் கண்ணபிரான் முதலியாரை விடுவிக்கவும், அவனுடைய தாயாரைத் தேடிப்பிடித்துக் கொண்டுவந்து வைத்துக் கொள்ளவும் பலவிதத்தில் முயற்சிகள் செய்யத்தான் போகிறார்கள். அவர் தண்டனை யடைந்து வந்தால்கூட கோகிலாம்பாள் அவரைத் தான் கலியாணம் செய்து கொள்ளப் போகிறாளாம். அப்படியெல்லாம் செய்தால், ஏற்கனவே கெட்டுப் போயிருக்கும் இவர்களுடைய பெயர் இன்னம் அடியோடு கெட்டுப்போகுமே யன்றி உள்ளது மறையாது.

சௌந்தரவல்லி:—ஆம். மெய்தான். அப்படியானால், தாமதம் ஆக ஆக, கெடுதலும் கெட்ட பெயரும் அதிகப்படுமேயன்றி வேறல்ல. ஆகையால், காலதாமதமில்லாமல், என்னுடைய கலியாணத்தை முடித்துக்கொண்டு இப்போதே நான் விலக்கிக்கொள்வது தான் உசிதமாகத் தோன்றுகிறது.

சுந்தரமூர்த்தி முதலியார்:—கலியாணத்தை முடித்துக்கொண்டு, பிறகு விலகுவதென்றால், கலியாணத்தின்போது உன் அக்காளும் நீயும் ஒன்றாயிருக்கிறதென்று அர்த்தமாகிறது. கலியாணத்துக்கு யாரும் ஜனங்களை வரப்போகிறதில்லை. நம்முடைய கலியாணம் அநாதைக் கலியாணமாகத்தான் நடக்கும். என்னுடைய செல்வமென்ன! செல்வாக்கென்ன! என் சொந்த ஜனங்கள் எத்தனை பேர் வருவார்கள்! அதுவுமன்றி எங்களுக்குள் இன்னொரு யோசனையும் இருந்து வருகிறது என் தங்கையின் கலியாணத்தைப்பற்றி பேச்சு நடந்து கொண்டிருக்கிறது அதுவும் சீக்கிரம் அநுகூலமாகவேமுடியும்போல இருக்கிறது! அது தக்க பெரிய இடம். அவர்களெல்லோரும் நம்முடைய கலியாணத்திற்கு வருவார்கள். வந்து உன் அக்காளை அவர்கள் கண்டு விசாரணை செய்தால், அதிலிருந்து அவளைப் பற்றிய குப்பை யெல்லாம் வெளிக் கிளம்பும். எங்கள் நிலைமை பரம விகாரமாய்ப் போய்விடும்.

சௌந்தரவல்லி:—(அளவற்ற மகிழ்ச்சியும் குதூகலமு மடைந்து):—ஆகா! அப்படியா! புஷ்பாவதியம்மாளுக்கும கலியாணத்துக்கு ஏற்பாடா யிருக்கிறதா! நிரம்பவும் சந்தோஷமாயிற்று. அது எந்த இடமோ? மாப்பிள்ளை ஏதாவது உத்தியோகத்திலிருக்கிறார்களா?

சுந்தரமூர்த்தி முதலியார்:—அவர்கள் இதே மைலாப்பூரில்இருக்கிறார்கள். அவர்களுக்கு மவுண்டு ரோட்டில் ஒரு பெரியகம்பெனி இருக்கிறது. அந்தக் கம்பெனி சுமார்-10 லக்ஷம் ரூபாய் பெறும். அதைத் தவிர, அவர்களுக்கு இந்த ஊரில் பதினைந்து பங்களாக்கள் இருக்கின்றன. அவைகள் துரைமார்களுக்கு வாடகைக்கு விடப் பட்டிருக்கின்றன. அவைகளிலிருந்து மாசம் ஒன்றுக்கு முப்பதினாயிரம் ரூபாய் வாடகை வரும், அவர்களுக்கு சந்ததி ஒரே பிள்ளைதான் இருக்கிறார். அவர் சீமைக்குப்போய் ஐ. சி. எஸ். பரீட்சையில் தேறி வந்திருக்கிறார். அவருக்கு இந்த ஊரிலேயே மாதம் 600 ரூ. சம்பளத்தில் அஸிஸ்டெண்ட் கலெக்டர் உத்தியோகம் கிடைத்திருக்கிறது. அவருக்கு வயசோ சுமார் இருபத்து நான்குதா னிருக்கும். பார்ப்பதற்கு மன்மதனைப்போல இருப்பார். அவர் எப்போதும தமாஷாகவும் சந்தோஷமாகவும் குதூகலமாகவும் இருப்பார். அவரைப் பார்த்தால் மகாராஜாவின் குழந்தை மாதிரியே இருக்கும். அவருக்குத்தான் புஷ்பாவதியைக் கொடுக்க முடிவாகி இருக்கிறது—என்றார்.

அந்த வரலாற்றைக் கேட்ட சௌந்தரவல்லியின் மனதில்ஒரு புறத்தில் அபாரமான சந்தோஷம் தோன்றியது; இன்னொரு புறத்தில் ஒருவிதமான பொறாமை தோன்றியது. தனக்கு வாய்த்திருக்கும் புருஷரைவிடப் புஷ்பாவதிக்கு ஏற்பட்டிருக்கும் புருஷர் மகா சிலாக்கியமானவர் என்ற எண்ணம அவளது மனதில் எழுந்தது. சுந்தரமூர்த்தி முதலியாரைவிட அவர் தனக்கு அகப்பட்டிருந்தால், தன் மனம் இன்னமும் அதிகமாக சந்தோஷப்படும் என்று அவள் நினைத்தாள். அவளது முகம் உடனே மாறுபட்டது. மனதின் உற்சாகமும் சடக்கென்று குறைந்துபோய் விட்டது. ஆயினும் அவள் தனது மனநிலைமையை வெளிப்படுத்தாமல் தன்னை ஒருவாறு அடக்கிக் கொண்டு முன்போலவே அவரிடம் சம்பாஷிக்கத் தொடங்கி, "ஆ! அப்படியா! நிரம்பவும் சந்தோஷ மாயிற்று. புஷ்பாவதி யம்மாளுடைய மேலான மனப்போக்கிற்கும், குணத்

தழுக்கும், அது சரியான இடந்தான். அந்தக் குடும்பத்துக்கு மாப்பிள்ளை ஒருவரைத் தவிர வேறு யாரும் வார்சுதாரர் இல்லை யாகையால், அவ்வளவு பிரமாதமாக இருக்கும் சம்பத்து முழுதும் புஷ்பாவதி யம்மாளுக்குத்தான் வந்து சேரும். பேஷ்! அவர்கள் நல்ல ராஜபோகத்தில் இருப்பார்கள்" என்றாள்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—ஆம்; அந்த இடம் எப்பேர்ப்பட்டவருக்கும் வாய்க்கக் கூடியதல்ல. எங்களுக்குக்கூட அது இவ்வளவு சுலபத்தில் கிடைத்திருக்காது எங்களுடைய பங்களாவும் மைலாப்பூரில் இருக்கிறது. அவர்களுடைய பங்களாவும் அங்கே இருக்கிறது. அவர்களுடைய பெருமைப்பாடு எங்களுக்கும் வெகு காலமாய்த் தெரியும். எங்களுக்கும் அவர்களுக்கும் சாதாரணமான பழக்கம் உண்டு. மாப்பிள்ளைக்கும் எனக்கும் சிநேக மொன்றே சொல்லவேண்டும். என் தங்கையின் புகைப்படமொன்றை நான் ஒரு நாள் என் சட்டைப் பையில் வைத்திருந்தேன். அதை அவர் எடுத்துப் பார்த்து அது யாருடைய படமென்று கேட்டார் அது கலியாணமாகாத என் தங்கையின் படமென்று நான் சொன்னேன். அது முதல் அவருக்கு என் தங்கையின் மேல் ஆசை உண்டாகிவிட்டது. கட்டினால், என் தங்கையையே கட்டுவது; இல்லாவிட்டால், தமக்குக் கலியாணமே வேண்டாமென்று அவர் ஒரே பிடிவாதம் பிடிக்கிறார். அவர்கள் அந்தக் கலியாணத்தை இன்னம் ஒரு வாரத்திற்குள் வரும் ஒரு முகூர்த்த தினத்தில் முடித்துவிட வேண்டுமென்று எங்களை வற்புறுத்துகிறார்கள் என்னுடைய கலியாணத்தையும் அதையும் ஒன்றாய்ச் சேர்த்துச் செய்துவிட வேண்டுமென்பது என்னுடைய அவா. அதற்குத்தான் நான் இவ்வளவு தூரம் பாடு படுகிறேன். இவ்விடத்திலோ ஒரு பொத்தலை அடைத்தால் ஒன்பது பொத்தல்கள் திறந்து கொள்ளுகின்றன இந்தக் கலியாணம் சரிப்பட்டால் பார்க்கிறது. இல்லாவிட்டால் அதை மாத்திரம் முன்னால் முடித்து விடுவதென்றே நாங்கள் தீர்மானித்திருக்கிறோம் உன்னுடைய அபிப்பிராயம் எப்படி இருக்கிறது?

சௌந்தரவல்லி:—புஷ்பாவதி யம்மாளுடைய புருஷர் வீட்டின் மேம்பாட்டுக்குத் தக்கபடி நாமும் ஆவதற்குப் பதிலாய், எங்கள் வீட்டார் இன்னம் கீழே போய்க் கொண்டே யிருக்கிறார்கள். எனக்கு இப்போது உண்டாகும் ஆத்திரத்தில் என் அக்காளுக்கு விஷத்தைக் கொடுத்துக் கொன்றுவிடலாமா என்றுகூட என்

மனசு எண்ணுகிறது. நாலும் நாலுபேருக்கு சமதையாய் இருப்பதை விட்டு அவள் எவனோ ஓர் அன்னக்காவடியைக் கட்டிக்கொள்ள நினைத்து அதற்காக என்னென்ன இழிவான காரியங்களையெல்லாம் செய்கிறாள். சே! அவளுடைய முகத்தில் விழிக்கக்கூட இனி என் மனம் ஒருப்படாது.

சுந்தரமூர்த்தி முதலியார்:—சேச்சே! அந்தக் காரியத்தை மாத்திரம் செய்யாதே. அக்காளைக் கொன்று விட்டால், இன்னம் ஒரு வாரத்திற்குள் நாம் செய்ய உத்தேசித்திருக்கும் கலியாணம் தடைப்பட்டுவிடும். உனக்கும் உன் தாயாருக்கும் தீட்டு வந்துவிடும். அதுவுமன்றி, எங்களுடன் இவ்வளவு தூரம் சிநேகமாயிருக்கும் இந்தக் குடும்பத்தார் இப்படி அசௌகரியமான நிலைமையி லிருக்கையில் நாங்கள் சந்தோஷமாய்க் கலியாணத்தை நடத்துவதும் சரியல்ல.

சௌந்தரவல்லி:—மெய்தான்; இனி நான் எந்த விஷயத்திலும் அவ்விடத்து புத்திமதிப்படியும் யோசனைப்படியும் நடக்கத் தடையில்லை. என் அக்காளுடைய கலியாணம் வரையில் நான் காத்திருப்பது உசிதமல்லவென்று நினைக்கிறேன். காத்திருந்தால், நிலைமை ஒருகால் இன்னம் அதிக கேவலத்திற்கு வந்தாலும் வந்துவிடுமென்று நினைக்கிறேன். ஆகையால், புஷ்பாவதி யம்மாளுடைய கலியாணத்தோடு சேர்த்து இந்தக் கலியாணத்தையும் நடத்தி விடுவோம்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—உன் அக்காளும் கூட இருப்பாளல்லவா?

சௌந்தரவல்லி:—நாளைய தினம் காலையில் அவளை நான் இந்த பங்களாவை விட்டுத் துரத்திவிட்டு மறுவேலை பார்க்கிறேன். எங்களுக்கு வண்ணாரப் பேட்டையில் இன்னொரு பங்களா இருக்கிறது. அதில் குடித்தன மிருந்தவர்கள் போனமாசத்தில் தான் காலிசெய்து விட்டு எங்கேயோ போனார்கள். வேறே யாரும் வரவில்லை. அக்காள் அங்கே போகட்டும்; அம்மாள் இங்கும் அங்குமாக இருக்கட்டும்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—உங்களுடைய சொத்துக்களெல்லாம், அவர்களிடம் தானே இருக்கின்றன. அவர்கள் கண்ணபிரான் முதலியாருக்கும் வக்கீலுக்கும் கொடுத்து வீண் விரயம் செய்து கொண்டு போனால், அது உனக்கும் நஷ்டந்தானே!

சௌந்தரவல்லி:—எங்களுடைய சொத்துகள் பெரும்பாகமும் நகைகளாகவும், புரோ நோட்டு லேவா தேவிக ளாகவும், பங்களாக்களாகவும் இருக்கின்றன. நகைகளும், தஸ்தாவேஜிகளும் அம்மாளுடைய இரும்புப் பெட்டியில் இருக்கின்றன. இப்போதே போய் கொத்துச் சாவியை எடுத்து நான் பத்திரப்படுத்தி விடுகிறேன். அவர்கள் கேட்டால், கொடுக்க முடியாதென்று சொல்லி விடுகிறேன்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—கோகிலாம்பாள் தன்னுடைய பாதி பாகத்தைக் கொடுக்கும்படி கேட்டால், என்ன செய்வாய்?

சௌந்தரவல்லி:—அதெல்லாம் இப்போது முடியாதென்று சொல்லி விடுகிறேன். அவளுடைய சாப்பாட்டுச் செலவுக்கு மாசம் ஏதாவது ஐம்பது நூறு கொடுப்பதாகச் சொல்லிவிடுகிறேன்.

சுந்தரமூர்த்தி முதலியார்—ஆம்; அதுதான் சரியான காரியம்! அவர்கள் வேண்டுமானால் பாக வியாஜ்ஜியம் தொடரட்டும். பிறகு பார்த்துக் கொள்ளலாம். நாளைய தினம் காலையில் நீ இந்தக் காரியங்களை யெல்லாம் இப்போது சொன்னதுபோல முடித்து விடு. நான் என் தங்கையை அழைத்துப் போவதற்காகக் காலையில் வருவேன். அதற்குமுன் எல்லாவற்றையும் நீ முடித்து விட்டாயென்று என் தங்கை சொல்லும் பட்சத்தில், உன் தாயாருடன் பேசி, உன் கலியாணத்தையும், புஷ்பாவதியின் கலியாணத்தோடு சேர்த்து முடித்துவிட நான் பிரயத்தனம் செய்கிறேன். இதுதான் முடிவான தீர்மானம்.

சௌந்தரவல்லி:—(மிகுந்த மகிழ்ச்சியும் ஆநந்தமும் அடைந்து) சரி; அப்படியே செய்து முடிக்கிறேன். காலையில் தாங்கள் அவசியம் வந்து நம்முடைய கலியாண விஷயத்தை முடிவு கட்டியே தீரவேண்டும்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—சரி; அப்படியே ஆகட்டும். நீ மாத்திரம் சொத்துகளை அவர்களிடம் கொடுத்துவிட்டு ஏமாறிப் போய்விடாதே. அவர்களுடைய குடுமி உன் கையில் இருக்கும் படியாக நடந்து கொள்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி இதோ நான் போய் அம்மாளுடைய கொத்துச்சாவியை எடுத்து பத்திரப் படுத்திவிட்டுப் பிறகு படுத்துக்கொள்ளுகிறேன்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—இப்போது நீ இங்கே வந்தது புஷ்பாவதிக்குத் தெரியுமா தெரியாதா?

சௌந்தரவல்லி:—நான் இங்கே வருவதற்குமுன் அவர்களுடைய படுக்கைக்குப் போய்ப் பார்த்தேன். அவர்கள் இல்லை தங்களுடைய கடிதத்தைப் படுக்கையின் நடுவில் வைத்துத் தலையணையை மேலே வைத்துவிட்டு வந்திருக்கிறேன்—என்றாள்.

உடனே சுந்தரமூர்த்தி முதலியார், "சரி; நேரமாகிறது யாராவது விழித்துக்கொண்டு பார்க்கப் போகிறார்கள். நான் மதிலைத் தாண்டி இப்படியே போய்விடுகிறேன் நீயும் மறைவாக உன் விடுதிக்குப் போ" என்று கூற, இருவரும் ஒருவரை யொருவர் பிரேமையோடு பார்த்துவிட்டு விடை பெற்றுக்கொண்டு பிரிந்து அவ்விடத்தை விட்டு இரண்டு திக்குகளில் விரைவாக நடந்து சென்றனர்.

அது வரையில் பூச்செடிகளின் மறைவில் ஒளிந்திருந்து அவ்விடத்தில் நிகழ்ந்த சம்பாஷணை முழுதையும் தொடக்கத்திலிருந்து கேட்டுக்கொண்டே இருந்த நமது கோகிலாம்பாளின் மன நிலைமை எப்படி இருந்திருக்கு மென்பதை மனதால் பாவித்துக்கொள்வதே சுலபமானது. அவர்கள் இருவரும் வெகு தூரம் போய் மறைந்து போகிறவரையில், கோகிலாம்பாள் தான் என்ன செய்வதென்பதை அறியாதவளாய் அப்படியே பிரமித்து நின்று விட்டாள் தான் செய்த அற்ப தவறு பெரிய மலைபோல் வளர்ந்து, தனது தங்கை தன்னை முற்றிலும் வெறுக்கவும், அன்னிய மனிதரிடம் தன்னையும் தனது தாயையும் தூற்றவும், விஷமிட்டுத் தன்னைக் கொன்றுவிட வேண்டுமென்ற மனப்பான்மையைக் கொள்ளவும், தன்னை விலக்கி விட்டு அவளது கலியாணத்தை முடித்துக் கொள்ளவும், தங்களது சொத்து முழுதையும் தனது கைவசப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று எண்ணவும் இடங் கொடுத்துவிட்டதே என்று கோகிலாம்பாள் நினைத்து நினைத்து விவரிக்க இயலாத பெருத்த திகைப்பும் பிரமிப்பும் அடைந்து, "சே! என் மதிப்பு இவ்வளவு கேவல நிலைமைக்கு வந்த பிற்பாடு, நான் இந்த உயிரைச் சுமந்து கூட வாழ வேண்டுமா! என்னால் ஏற்பட்ட அவமானங்கள் தன்னுடைய கண்ணியத்தை பாதிப்பதாக சௌந்தரவல்லி நினைப்பது நியாயமான விஷயமே. என்னுடைய நிலைமைதான் இப்படி அலங்கோலத்துக்கு

வந்துவிட்டது. அவளாவது நல்ல நிலைமையில் இருந்து நல்ல
இடத்தில் வாழ்க்கைப்பட்டு க்ஷேமமாகவும் கண்ணியமாகவும் இருக்
கட்டும். நான் எப்போது தற்கொலை செய்துகொள்ளத் தீர்மா
னித்துக் கொண்டேனோ, அப்போதே என் பாகம் உள்பட எல்லா
சொத்தும் அவளைச் சேர்ந்த மாதிரிதான். நான் அந்தக்கிணற்றில்
விழுந்தபோதே இறந்திருந்தால், இந்நேரம் எல்லாவற்றிற்கும்
அவளே எஜமானி ஆகி யிருப்பாள். ஆகையால சொத்தைப்பற்றி
எனக்குக் கொஞ்சமும் கவலையில்லை. எல்லாவற்றையும் அவளே எடுத்
துக்கொள்ளட்டும். அவளை ஒன்றையுமறியாத குழந்தை என்று
நாம் இது வரையில் நினைத்தது தவறு. அவள் நிரம்பவும் சூக்ஷ்ம
மான புத்தியும் சிறந்த பகுத்தறிவும் உடையவளா யிருக்கிறாளென்
பது இப்போதுதான் தெரிகிறது. இத்தனை சொந்த ஜனங்களையும்
வரவழைத்து எங்களை அவமானப்படுத்தியவள் அவளே யென்ப
தும் இப்போது தெரிகிறது. இவ்வளவு அபாரமான சாமர்த்தியம்
அவளுக்கிருக்கையில், இனி அவள் தன் காரியங்களையும்
குடும்ப காரியங்களையும் தானே கவனித்து நிர்வகிப்பாளென்ப
தைப்பற்றி சந்தேகமே இல்லை. ஆகையால், எல்லாவற்றையும்
அவளே எடுத்துக்கொண்டு க்ஷேமமாயிருக்கட்டும். நான் இனி உயிர்
வாழ்வதைவிட இறப்பதே சர்வ சிலாக்கியமான விஷயமாகையால்,
என் தீர்மானத்தை நான் மாற்றாமல் எப்படியும் நிறைவேற்றியே
தீரவேண்டும். ஆனால் நான் இப்போது கிணற்றில் விழுவதில் ஓர்
இடைஞ்சல் இருக்கிறது இன்னம் ஒரு வாரத்திற்குள் ஒரு
முகூர்த்த நாள் இருக்கிறதாம். அதில் இவர்கள் தங்களுடைய கலி
யாணத்தை முடித்துக்கொள்ள வேண்டுமென்ற ஆவலோடிருக்கிறார்
கள். நாளையதினம் என்னுடைய பிணம் கிணற்றிலிருந்து அகப்பட்
டால், அது கலியாணத்துக்கு ஓர் அபசகுனமாக இருக்கும்! சாவு
வீட்டில் கலியாணம் செய்வதும் உசிதமாக இராது. சாவு விழுந்த
வீட்டில் கலியாணம் செய்கிறார்களே என்று ஜனங்கள் ஏசுவார்கள்.
இதையெல்லாம் கருதி, இவர்கள் கலியாணத்தை நிறுத்தும்படி
நேரிடும். சௌந்தரவல்லிக்கு என்மேலுள்ள ஆத்திரம் இன்னும்
அதிகரிக்கும். நான் இறந்துபோன பிறகும் அவள் என்னை சபித்துக்
கொண்டே இருப்பாள். ஆகையால், நான் இப்போது கிணற்றில்
விழுந்து இறப்பதை நிறுத்தி, அவளுடைய கலியாணத்திற்கு
மூன்று நான்கு நாள்கள் கழிந்த பிறகு இந்தத் தீர்மானத்தை நிறை
வேற்றிவிடுகிறேன். அதுவரையில் நான் என் அம்மாளிடம் சாதா

ரணமாகவே இருக்கிறேன். நான் தற்கொலை செய்து கொள்ள வேண்டுமென்று எண்ணியிருப்பதைப் பற்றியாவது, இன்று கிணற்றில் விழுந்தது முதலிய விவரங்களைப் பற்றியாவது, அம்மாள் சிறிதும் சந்தேகியாதபடி நான் நடந்து கொள்ளுகிறேன். அதுவுமன்றி, நான் திரும்பிப்போய் அம்மாளுக்கு எழுதிவைத்திருக்கும் கடிதத்தைக் கிழித்துப் போட்டுவிட்டு வேறொரு கடிதம் எழுதி வைத்து விட்டு, விடியற் காலையில் எழுந்து ஒரு வண்டியில் உட்கார்ந்து கொண்டு வண்ணாரப் பேட்டைக்குப் போய்விடுகிறேன். இவர்கள் சுயேச்சையாய்க் கலியாணத்தை நடத்திக் கொள்ளட்டும் என்று பலவாறு எண்ணமிட்ட வண்ணம் பங்களாவை நோக்கி நடந்து செல்லத் தொடங்கவே நடுவழியில், "யார் அது? சௌந்தரா! சௌந்தரா!" என்று சிறிது தூரத்திற் கப்பால் வந்த ஒருவர் கேட்ட குரல் உண்டாயிற்று. கோகிலாம்பாள் திடுக்கிட்டு நடுங்கிப் போய் அப்படியே நின்று உற்றுப் பார்த்து, "யார் அது?" என்று வினவினாள். உடனே "நான் தான் புஷ்பாவதி. உன்னுடைய அம்மாளை விட்டுவர இந்நேரம் பிடித்தது. படுக்கையிலிருந்த காகிதத்தைப் பார்த்தேன். நீ தான் வைத்து விட்டு இங்கே வந்திருக்க வேண்டுமென்று யூகித்துக்கொண்டு, உடனே புறப்பட்டு வந்தேன். இருளில் வழி தெரியவில்லை. தட்டித்தடுமாறிக் கொண்டு வந்து சேர்ந்தேன்" என்றாள். உடனே கோகிலாம்பாளுக்கு உண்மை விளங்கியது. புஷ்பாவதி தன்னை ஆள்மாறாட்டமாய்த் தனது தங்கையென்று நினைத்து அவ்வாறு பேசுகிறாளென்பதை நமது கோகிலாம்பாள் உடனே உணர்ந்து கொண்டாள். கொள்ளவே, அவளது நிலைமை நிரம்பவும் துன்பகரமாக முடிந்துவிட்டது. தான் இன்னாள் என்பதை வெளியிட்டால், அந்த காலத்தில் தான் பூஞ்சோலைக்கு வந்த காரணத்தை அவளிடம் வெளியிட வேண்டியிருக்கும். அதுவுமன்றி, அது போலவே புஷ்பாவதியின் நிலைமையும் துன்பகரமானதாகி விடும். அந்த அகாலவேளையில் அவள் அங்கே வந்ததற்கும், சௌந்தரவல்லியை அவ்விடத்தில் எதிர் பார்த்ததற்கும், அவள் கடிதத்தைப் பார்த்து விட்டு வந்ததாகச் சொன்னதற்கும் புஷ்பாவதி தனக்கு சமாதானம் கூறவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும். புஷ்பாவதிக்கு அத்தகைய துன்பத்தை உண்டாக்க, கோகிலாம்பாள் விரும்பவில்லை; ஆகையால், தான் சௌந்தரவல்லி போலவே நடித்துவிட்டுப் போய் விடவேண்டுமென்ற எண்ணம் கோகிலாம்பாளுக்கு உண்டாயிற்று.

ஆனால், தானும் தனது அன்னையும் தனது சௌந்தக்காரர்களின் பெயரைக் குறித்துச் சொல்லிவிட்டு, அதன் பயனாக அடைந்த அவமானம் அவளது மனத்தில் உறுத்திக்கொண்டிருந்த தாகையால், தான் மறுபடி பொய் சொல்வது கூடாதென்றும் அவள் நினைத்தாள். தான் அந்த சந்தர்ப்பத்தில் அதிகமாய் யோசித்து நிற்பதற்கு அவகாசமில்லை யாதலால், எப்படியாவது ஒரு முடிவைச் செய்ய வேண்டியிருந்ததுபற்றி இரண்டு கெடுதல்களையும் சீர்தூக்கி, தான் சௌந்தரவல்லியென்று நடித்துவிட்டுப் போய்விடுவதே நலமெனத் தீர்மானித்துக் கொண்டாள். அதற்குள் புஷ்பாவதி கோகிலாம்பாளண்டை நெருங்கி வந்துவிட்டதன்றி, தணிவான குரலில், "என்ன சௌந்தரா! வந்த காரியம் முடிந்ததா? அவர் வந்தாரா? அல்லது அவருக்காகக் காத்திருக்கிறாயா?" என்று கூறிய வண்ணம், கோகிலாம்பாளது தோளின்மேல் தனது இடக்கரத்தை எடுத்து வாஞ்சையோடு போட்டுக் கொண்டாள்.

பகற்காலத்திலேயே எவரும், அந்த சகோதரிகள் இருவருடைய வேறுபாட்டையும் கண்டுபிடிப்பது துர்லபமாயிருக்குமென்பது முன்னரே கூறப்பட்ட விஷயமாதலால், இரவில் அது முற்றிலும் சாத்திய மில்லாத காரியமாயிருந்தது. ஆகவே, புஷ்பாவதி அவளது பக்கத்தில் வந்து அவளைப் பார்த்தும், அவள் கோகிலாம்பாள் என்று சந்தேகிக்க இயலாமல் போய்விட்டது. அதுவுமன்றி, அவள் தங்கை அவ்விடத்தில் இருப்பாளென்று எதிர் பார்த்தாளேயன்றி, அக்காளும் வந்திருப்பாளென்று சிறிதும் சந்தேகிக்கவில்லை. ஆகலால் புஷ்பாவதியும் அவளை சௌந்தரவல்லி யென்றே நினைத்து அவளிடம் நிரம்பவும் தாராளமாகவும், அன்னியோன்னிய பாவமாகவும் நடந்துகொள்ள வாரம்பித்தாள். புஷ்பாவதி தன்னிடம் அதற்கு முன் அவ்வாறு நடந்து கொண்டதில்லையானாலும், சந்தர்ப்பத்தைக் கருதிக் கோகிலாம்பாள் தனது கிலேசத்தை வெளியிடாமல் ஜாக்கிரதையாகவே இருந்ததன்றி, சற்று நேரத்திற்குமுன் நேர்ந்த சந்திப்பு, சம்பாஷணை, தீர்மானம் முதலிய வரலாறு முழுதையும் அப்படியே எடுத்துக் கூறி விட்டு, புஷ்பாவதிக்குத் தக்க பெரிய இடத்தில் கலியாணமாகப் போவதைப் பற்றித் தான் பரம சந்தோஷமடைவதாகவும் கூறி, அவளை அழைத்துக்கொண்டு பங்களாக் கட்டிடம் வரையில் வந்தாள். புஷ்பாவதி. "அம்மா! சௌந்தரா! நான் உன்னை உன்னுடைய படுக்கை யறையில் கொண்டுவந்து விட்டுப் பிறகு என் படுக்கைக்குப் போகிறேன்" என்றாள்.

அப்பொழுது சௌந்தரவல்லி அநேகமாய்த் தனது படுக்கையறையை அடைந்து சயனித்துக் கொண்டிருக்கலாமென்று கோகிலாம்பாள் நினைத்து, "அம்மா! புஷ்பாவதி! நாம் இருவரும் இந்த அகால வேளையில் எங்கேயோ போய்விட்டு வருகிறோமென்பதை யாராவது தெரிந்து கொள்ளுவார்கள். ஆகையால், இனி நாம் பிரிந்து தனித்தனியாய்ப் போவதே நல்லது" என்று கூற, புஷ்பாவதியும் அதை ஆமோதித்தாள். அதுபோலவே அவர்களிருவரும் தனித்தனியாய்ப் பிரிந்து பங்களாவிற்குள் போய்ச் சேர்ந்து தன் தன் படிக்கையை யடைந்தனர். கோகிலாம்பாளுக்கு முக்கியமான ஒரு விஷயம் மாத்திரம் நிரம்பவும் திருப்திகரமாக இருந்தது இரவில் தனிமையில தனது தங்கை சுந்தரமூர்த்தி முதலியாரைச் சந்தித்த சமயத்தில் அவள் வரம்பு மீறித் தனது பிரியத்தைக் காட்டாமல் மரியாதையாகவே தூரத்தில நின்று வியவகாரத்தை மாத்திரம் கவனித்துக் கொண்டு வந்ததைக் காண, கோகிலாம்பாள், தன்னைக் காட்டிலும், தனது தங்கை அந்த விஷயத்தில் மெச்சத்தக்கவள் என்று நினைத்தாள். அவ்வாறு நினைத்த வண்ணம், அவள் அதற்கு முன் தனது தாய்க்கு எழுதி வைத்திருந்த கடிதத்தை எடுத்துக் கிழித்தெறிந்துவிட்டு வேறு காகிதத்தில் அடியில் வருமாறு எழுதலானாள் :—

தேவரீர் அம்மாள் அவர்களுடைய பொற்பாத கமலங்களில் புதல்வி கோகிலாம்பாள் அநந்தகோடி சாஷ்டாங்க தெண்டனிட்டு எழுதுவது. கால வித்தியாசத்தினாலும், புத்திக் குறைவினாலும் செய்யப்பட்ட ஓர் அற்ப குற்றம் மலைபோல வளர்ந்து பெருத்த மானபங்கத்தையும், தூஷணையையும் உண்டாக்கி விட்டது. இப்போது ஏற்பட்டுள்ள நிலைமையை சீர்படுத்த வேண்டுமென்று நினைத்து, நாம் ஏதாவது பரிகாரத்தைத் தேடினால், அதுவும் ஒன்று கிடக்க ஒன்றாய் முடிந்து, உள்ளத்தைக் காட்டிலும் அதிகமான துன்பத்தையே உண்டாக்கினாலும் உண்டாக்கலாமென்று நான் நிரம்பவும் அஞ்சுகிறேன். ஆகவே, என்னைப்பற்றிய யோசனையை நாம் இப்போது கொள்வதை விட்டு, நம்முடைய சௌந்தராவின் எதிர்கால க்ஷேமத்தையும் வாழ்க்கையையும் இப்போது முக்கியமாயும் அவசரமாயும் கவனிப்பது அத்யாவசியமான காரியமென்று நினைக்கிறேன். என் சம்பந்தமாக ஏற்பட்ட தலைகுனிவு நீங்க, இன்னம் வெகுகாலம் பிடிக்குமென்பது என் அபிப்பிராயம். சௌந்தராவுக்கு இப்போது கிடைத்துள்ள வரனைவிட்டு, நாம் வேறொரு

வரைத் தேடினாலும், இந்த நிலைமையில் அது எளிதில் கைகூடு மென்று நான் நினைக்கவில்லை. ஆகவே, ஏற்கெனவே கிடைத்துள்ள இடம் தவறிப் போகாமல், நாம் அந்தக் காரியத்தை அதிசீக்கிரத்தில் முடித்துவிடுவதே உசிதமென நினைக்கிறேன். சௌந்தராவுக்கும் அந்த இடமே பிடித்திருப்பதோடு, அதை விட்டு இனி வேறு எந்த இடத்தையும் அவள் விரும்பமாட்டாளென்பதும் நிச்சயமாகத் தெரிகிறது. அவர்களும் சௌந்தராவின் கலியாணத்தை முன்னால் முடித்துக் கொள்ள ஆவலுள்ளவர்களாக இருக்கிறார்களென்பதும் பரிஷ்காரமாகத் தெரிகிறது. அதுவுமன்றி, புஷ்பாவதியம்மாளுக்கும் கலியாணத்திற்கு ஏற்பாடு ஆகியிருப்பதாகத் தெரிகிறது. இன்னம் ஒரு வாரத்திற்குள் ஒரு முகூர்த்த நாள் இருக்கிறதாம். அதில் இரண்டு கலியாணங்களையும் சேர்த்து நடத்திவிட வேண்டுமென்பது அவர்களுடைய கருத்தென்பதும் தெரிகிறது. இது விஷயமாய் நாளையதினம் காலையில் புஷ்பாவதியம்மாள் உங்களிடம் பிரஸ்தாபிப்பார்களென்று நான் நம்புகிறேன், தாங்கள் எவ்வித ஆட்சேபனையும் சொல்லாமல் முழு மனதோடு அதை ஏற்றுக்கொண்டு, கலியாணத்திற்கு ஆகவேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் ஆயத்தம் செய்யுங்கள். இந்த சமயத்தில் நான் நம்முடைய பங்களாவில் இருப்பது உசிதமல்லவென்று நான் நினைக்கிறேன். ஆகவே, விடியற்காலையில் நான் புறப்பட்டு நம்முடைய வண்ணாரப் பேட்டை பங்களாவுக்குப் போய் அங்கே இருந்து வருகிறேன். கலியாணத்துக்கு நான் இல்லையே என்று நினைக்காமல், காரியத்தை முடியுங்கள். சௌந்தராவின் க்ஷேமமே பிரதானமன்றி, நான் கலியாணத்திற்கு வாராமல் இருப்பது, ஒரு பொருட்டல்ல. அதனால் கெடுதல் ஒன்றும் இல்லை. நன்மை அதிகமாய் ஏற்படும். நான் எல்லாவற்றையும் தீர யோசித்துப் பார்த்தே இந்தக் காரியத்தைச் செய்கிறேன். என்னைப் பற்றித் தாங்கள் வருந்தாமல் பிரதானமான காரியத்தை நிறைவேற்றி வையுங்கள். நம்முடைய சௌந்தரா மகா சூக்ஷ்மமான புத்தியும் விவேகமும் உடையவள்; நம்முடைய குடும்ப விவகாரங்களை நடத்தும் திறமையும் அவளிடம் பூர்த்தியாக அமைந்திருக்கிறது. ஆகவே, இதுவரையில் நாம் ஏற்றுவந்த பொறுப்பையெல்லாம் அவளிடமே விட்டுவிடுங்கள்.

இன்னொரு முக்கியமான விஷயம் சிறைச்சாலையில் இருப்பவர் விஷயமாய்த் தாங்கள் இனி எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ள வேண்டாம்; இனி நீங்கள் சௌந்தராவின் கலியாண சம்

பந்தமான ஏற்பாடுகளிலேயே தாங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டுமன்றி, மேலே குறித்த விஷயத்தில் தாங்கள் கொஞ்சமும் கவனம் செலுத்த வேண்டியதே இல்லை. நாளையதினம் காலையில், நம்முடைய வக்கீல் ஐயா வருவார்கள். அவர்களைத் தாங்கள் வண்ணாரப் பேட்டை பங்களாவுக்கு அனுப்பி வையுங்கள். என்னிடம் இப்போது கையில் ரொக்கமாக ஆயிரம் ரூபாய் இருக்கிறது. அதை நான் என் தற்காலச் செலவுக்கு உபயோகித்துக் கொள்ளுகிறேன். நான் நேரில் தங்களிடம் பேசித் தங்களுடைய அநுமதியைப் பெற்றுக்கொண்டு போக வேண்டியதே ஒழுங்கான காரியமானாலும், பொழுது விடிந்த பிறகு இங்கே இருந்து நம்முடைய வேலைக்காரர்களுடைய முகத்தில் விழிக்க எனக்கு இஷ்டமில்லையாகையால், நான் இம்மாதிரி விடியற்காலையிலேயே போகிறேன். இந்தப் பிழையைத் தாங்கள் பொறுத்தருள வேண்டும்.

மற்றவை பின்னுல்,

இங்ஙனம், தங்களிடம்

அத்யந்த பயபக்தியையுடைய தங்கள் குமாரி,

கோகிலா.

—என்று எழுதப்பட்ட கடிதத்தை அவள் படித்து உரைக்குள் போட்டு ஒட்டி, மேல் விலாசமெழுதி, அதை எடுத்துக்கொண்டு சந்தடி செய்யாமல் தனது தாயின் சயன அறைக்குப் போய், அந்த அம்மாள் காலையில் எழுந்தவுடன் பார்க்கத்தக்க இடத்தில் வைத்து விட்டுத் திரும்பி வந்து தனக்குத் தேவையான ஆடையாபரணங்களையும், மற்ற சில்லறை சாமான்களையும் எடுத்து மூட்டையாகக் கட்டி வைத்துவிட்டு, அவளிடம் நிரம்பவும் பிரியம் உடையவளான ஒரு தாதியை எழுப்பி, விடியற்காலம் ஐந்து மணிக்கு முன்பே, வண்டி தயாரிக்கப் படுவதற்குத் தக்க ஏற்பாட்டைச் செய்துவிட்டு தனது சயனத்தில் படுத்துக்கொண்டே இருக்க, அந்த இரவு வெகு சீக்கிரத்தில் கழிந்து போனதாகத் தெரிந்தது. விடியற்கால வேளை வந்தது. வேலைக்காரிவந்து வண்டி ஆயத்தமாயிருப்பதாய்க் கூற, கோகிலாம்பாள் தனது மூட்டையை அந்த வேலைக்காரி எடுத்துக் கொண்டு வரச்செய்து, அவளுடன் வண்டிக்குப் போய்ச் சேர்ந்தாள். சேர்ந்தவள் அந்த வேலைக்காரியையும் தன்னோடு கூட வண்டியில்

உட்கார வைத்துக்கொள்ள, வண்டி புறப்பட்டு ஒரு நாழிகைகாலத்தில் வண்ணாரப் பேட்டை பங்களாவிற்குள் போய்ச் சேர்ந்து விட்டது.

கோகிலாம்பாளை நாம் அவ்வளவோடு விட்டு, புரசைப் பாக்கம் பங்களாவில் நடந்த சம்பவங்களைக் கவனிப்போம். பொழுது விடிய, பூஞ்சோலையம்மாள் தனது படுக்கையை விட்டெழுந்த சமயத்தில், எதிரே இருந்த கடிதம் அவளது திருஷ்டியில் பட்டது. அந்த அம்மாள் மிகுந்த வியப்பும், ஆவலும் கொண்டு அதை எடுத்துப் பிரித்துப் படித்துப் பார்க்க, விஷயம் தெரியவந்தது. திடீரென்று கோகிலாம்பாள் அவ்விதமான தீர்மானங்களைச் செய்தது பூஞ்சோலையம்மாளது மனத்திற்கு மிகுந்த சஞ்சலத்தையும், வருத்தத்தையும் கொடுத்தது வியப்பை உண்டாக்கிய தாலும், சிறிது நேரம் ஆழ்ந்து யோசனை செய்தபின், கோகிலாம்பாளின் யோசனைகள் யாவும் யுக்தமானவையாகவே பட்டன. ஆகவே, தான் அவளது விருப்பத்தின்படியே சகலமான காரியங்களையும் நடத்துவதென்று தீர்மானித்துக் கொண்டவளாய் வெளியிற் சென்று தனது காலைக் கடமைகளை முடித்துக் கொள்வதில் தனது கவனத்தைச் செலுத்தி யிருந்தாள்.

முதல் நாளிரவில் பூங்காவில்சுந்தரமூர்த்தி முதலியாரைவிட்டுப் பிரிந்த சௌந்தரவல்லி யம்மாள் மிகுந்த குதூகலமும், மனவெழுச்சியும் கொண்டவளாய் நிரம்பவும் விசையாக நடந்து பங்களாக் கட்டடத்தை யடைந்து தனக்கும் சுந்தரமூர்த்தி முதலியாருக்கும் நடந்த சம்பாஷணையின் விவரத்தை யெல்லாம் தான் உடனே புஷ்பாவதியிடம் கூறவேண்டுமென்ற ஆவல் கொண்டவளாய் அவளது சயன அறைக்குப் போய் பார்த்தாள். அவள் அதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்பு தான் வேறு வழியாகப் பூஞ்சோலைக்குள் போய் விட்டமையால், அந்த அறை காலியாக இருந்தது. ஆனால், தன்னால் வைக்கப்பட்ட காகிதம் மாத்திரம் காணப்படவில்லை. அதன்மேல் வைக்கப்பட்டிருந்த தலையணை வெகு தூரத்திற்கப்பால் நகர்த்தி வைக்கப்பட் டிருந்தது. புஷ்பாவதி வந்து கடிதத்தைப் பார்த்து விட்டுத் தன்னைத் தேடிக்கொண்டு பூஞ்சோலைக்காவது போயிருக்க வேண்டும், அல்லது, மறுபடி தனது தாயினிடமாவது போயிருக்க வேண்டுமென்று அவள் எண்ணிக் கொண்டாள்: இரண்டிடங்களில் எதற்குப் போயிருந்தாலும், புஷ்பாவதி சயனித்துக் கொள்வதற்குள்

எப்படியும் தனது சயன அறைக்கு வந்தே பிறகு தூங்கப்போவா ளென்று சௌந்தரவல்லி நினைத்து, அவ்விடத்தை விட்டுப் போய்த் தனது தாய் வழக்கமாகக் கொத்துச் சாவியை வைக்குமிடத்தை யடைந்து, ஓசை செய்யாமல் அதை எடுத்துக்கொண்டு நேராகத் தனது சயன அறைக்குச் சென்று அதைத் தனது மேஜைக்குள் வைத்துப் பூட்டிய திறவுகோலைத் தனது கழுத்துச சரட்டில் பத்திர மாக முடிந்துகொண்டு பஞ்சணையில் படுத்தாள் படுத்தவள் அபார மாகப் பொங்கி யெழுந்த பலவகைப்பட்ட உணர்ச்சிகளால் உலப்பப் பட்டவளாய் வெகு நேரம் வரையில் விழித்துக்கொண்டே படுத்தி ருந்து முடிவில் நித்திரையில் ஆழ்ந்து விட்டாள். ஆழ்ந்தவள் பொழுது விடிந்தவுடன் விழித்துக்கொண்டு எழுந்தாள். எழுந்த வுடன் அவளுக்குப் புஷ்பாவதியைப் பற்றிய நினைவே முதலில் உண் டாயிற்று. அவள் முதல் நாளிரவில் தன்னிடம் வாரமலே இருந்து விட்டது சௌந்தரவல்லிக்கு நிரம்பவும், ஆச்சரியகரமாகவும் சந்தே காஸ்பதமாகவும் இருந்ததாகையால், அதன் காரணமென்னவென்ப தைத் தெரிந்து கொள்ளவும், முதல் நாளைய சந்திப்பின் விவரங்களை அவளிடம் சொல்லவும் ஆவல் கொண்டவளாய் அவள் உடனே தனது சயனத்தை விட்டெழுந்து நேராகப் புஷ்பாவதி சயனித் திருந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். புஷ்பாவதி அதற்கு முன்னரே தனது காலைக் கடமைகளை முடித்துக் கொண்டு தனது தமயனாரது வருகையை ஆவலோடு எதிர் பார்த்தவளாய் உட்கார்ந் திருந்தாள். அவள் தனது கலியாணத்தைப் பற்றியும் தனக்கு ஏற் படப்போகும் மணமகனது ஒப்பற்ற சிறப்புகளைப் பற்றியும் இன்ப கரமாக எண்ணமிட்டுக் கொண்டிருக்க, அப்பொழுது அவ்விடத்தை அடைந்த சௌந்தரவல்லி ஒரே பாய்ச்சலாகப்பாய்ந்து ஆசையோடு புஷ்பாவதியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, "புஷ்பாவதி! என்ன இவ்வளவு பாராமுகம்? புது சம்பந்தம் ஏற்பட ஏற்பட, பழையதெல் லாம் புளித்துப் போனதா என்ன?" என்று வேடிக்கையாக வினவி ளுள். அதைக் கேட்ட புஷ்பாவதி திடுக்கிட்டு நிரம்பவும் நயமாகவும் வாஞ்சையாகவும் பேசத தொடங்கி, "ஏன் சௌந்தரா அப்படிச் சொல்லுகிறாய்? நான் என்ன தவறு செய்தேன்? ஒன்றுமில்லையே?" என்றாள்.

சௌந்தரவல்லி புன்னகை செய்த வண்ணம் "தவறு ஒன்றும் செய்ய வில்லை. நான் உன் படுக்கையின் மேல் வைத்திருந்த கடி தத்தை நீ பார்த்திருப்பாயே. அதற்கு மேல் என்ன நடந்த தென்று

கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டாமா? நான் பூஞ்சோலையில் உன் தமயனுருடன் பேசி அவரை அனுப்பிவிட்டுத் திரும்பியபின் நேராக இங்கே வந்து பார்த்தேன். நீ இங்கே இல்லை நீ எப்படியும் என்னிடம் வந்துவிட்டே படுத்துத் தூங்குவா யென்று நினைத்து நான் நேற்றிரவு எவ்வளவு நேரம் விழித்துக் கொண்டிருந்தேன் தெரியுமா!'' என்றாள்.

அதைக் கேட்ட புஷ்பாவதி திடுக்கிட்டு பிரமித்துப் போய், ''என்ன! என்ன! நான் உன்னைப் பார்க்க வில்லையா! நீ சொல்வது நிரம்பவும் ஆச்சரியமாக இருக்கிறதே! வேண்டுமென்றே தமாஷ் பண்ணுகிறாயா யென்ன!'' என்றாள்.

சௌந்தரவல்லியும் பிரமிப்பும் குழப்பமும் அடைந்து, ''என்ன புஷ்பாவதி அப்படிச் சொல்லுகிறாய்? நான் நிஜத்தைத் தானே சொல்லுகிறேன்'' என்றாள்.

புஷ்பாவதி முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த வியப்பும் கலக்கமும் அடைந்து, ''என்ன சௌந்தரா! நீ நிஜத்தைச் சொல்லுகிறே னென்கிறாய்! நேற்று ராத்திரி நான் உன்னைப் பார்க்க வில்லை யென்கிறாயே!'' என்றாள்.

சௌந்தரவல்லி:—ஆம், பார்க்கத்தான் இல்லை. நீ என்னைப் பார்த்ததாகவா சொல்லுகிறாய்! இதென்ன பெரிய அதிசயமாயிருக்கிறதே! எப்போது எந்த இடத்தில் நீ என்னைப் பார்த்தாய்?

புஷ்பாவதி:—(அத்யந்த ஆச்சரியத்தோடு) என்ன சௌந்தரா! உன் அம்மாளை நான் அவர்களுடைய படுக்கைக்கு அனுப்பி விட்டு, இங்கே வந்தேன்; வந்து, நீ வைத்திருந்த கடிதத்தைப் பார்த்தேன். உடனே நானும் புறப்பட்டு, அந்தக் கிணறு இருந்த இடத்தைத் தேடிக் கொண்டு வந்தேன். நீங்கள் இருவரும் ஒருவரை யொருவர் புது மோகத்தில் பார்க்கிறபடியால், நான் உடனே வந்து உங்களுடைய சந்தோஷத்தைக் கெடுக்கக் கூடாதென்றும், கடைசியில்வந்து சேர்ந்துகொள்ளலாமென்றும் நினைத்துத் தயங்கித்தயங்கி மெதுவாக வந்தேன். எனக்கு வழியும் தெரியவில்லை. எதிரில நீ மாத்திரம் வந்தாய். என் தமயனார் உன்னுடன் பேசிவிட்டுப்போய் விட்டதாக நீ சொன்னாய். நாமிருவரும் திரும்பி பங்களாவுக்கு

வந்து சேர்ந்தோமே! அப்படி இருக்க, நீ ஒன்றையு மறியாதவள் போல, என்னிடம் தமாஷ் பண்ணுகிறாயே!

சௌந்தரவல்லி:—(முற்றிலும் பிரமித்து ஸ்தம்பித்துப் போய்) என்ன புஷ்பாவதி! நீ சொல்வது பிரமாணமான சங்கதிதானா, அல்லது, நீ தான் என்னிடம் தமாஷ் செய்கிறாயா?''

புஷ்பாவதி:—நான் சொல்வது பிரமாணமான சங்கதி. நான் உன்னிடத்தில் விளையாடுவேனா!

சௌந்தரவல்லி:—அப்படியானால், நீ வேறே யாரையோ கண்டு, நானென்று தப்பாக எண்ணிக் கொண்டிருக்க வேண்டும். நான் உன் தமையனாரை அனுப்பிவிட்டு நேராய் என் அறைக்குப் போய்விட்டேன். யாரையும் நான் சந்திக்கவில்லையே!

புஷ்பாவதி:—என்ன ஆச்சரியம் இது! வேறே மனிதராயிருந்தால்' ரூபம், உயரம், பருமன், குரல் எல்லாம் எப்படி ஒத்துக் கொள்ளும்.

சௌந்தரவல்லி:—அப்படியானால், அது என் அக்காளாகத் தான் இருக்கவேண்டும். அவள் எதையாவது உத்தேசித்துக் கொண்டு பூஞ்சோலைக்கு வந்திருப்பாள். அவளை நீ கண்டு நானென்று ஆள்மாறாட்டமாக எண்ணிக் கொண்டிருப்பாய்.

புஷ்பாவதி:—நான் "சௌந்தரா" என்று கூப்பிட்டேன். அவள் உன்னைப்போலவே நடந்துகொண்டு, உனக்கும், என் தமையனுருக்கும் நடந்த சங்கதிகளையெல்லாம் சொன்னாளே!

சௌந்தரவல்லி:—ஆ! அப்படியா! அவள் சொன்ன சங்கதிகளை யெல்லாம் சொல் பார்க்கலாம்—என்றாள். உடனே புஷ்பாவதி கோகிலாம்பாளால் கூறப்பட்ட விவரங்கள் முழுதையும் அப்படியே தெரிவித்தாள். அதைக்கேட்ட சௌந்தரவல்லி சகிக்கவொண்ணாத வியப்பும் ஆத்திரமு மடைந்து, "என்ன வேடிக்கை இது! நாங்கள் பேசியதை யெல்லாம் அவள் அப்படியே சொல்லி இருக்கிறாளே! அவள் வந்து பக்கத்தில் ஒளிந்து கொண்டிருந்து எங்கள் சம்பாஷணையை முதலிலிருந்து கடைசிவரையில் கேட்டிருக்கிறாள் போலிருக்கிறதே! அங்கே வேறே யாருமில்லை யென்றும், இது இந்த உலகத்தில் யாருக்கும் தெரிந்திருக்காதென்றுமல்லவா நான் நினைத்திருந்

தேன். அவள் பெருத்த திருட்டுத் தனமல்லவா செய்திருக்கிறாள். யோசித்துப் பார்க்குமிடத்தில், உன் தமையனாருடைய கடிதத்தை அவள் எப்படியோ பார்த்துவிட்டு, நாங்கள் பேசுவதைக் கேட்க வேண்டுமென்று வந்து ஒளிந்து கொண்டிருக்கிறாள்போ லிருக்கிறதே. அப்படியானால் அவள் உன்னுடைய படுக்கைக்கு ஏதோ கருத்தோடு வந்திருக்கிறாள். அங்கே கடிதம் இருந்ததைப் பார்த்திருக்கிறாள்; உடனே பூஞ்சோலைக்கு வந்து ஒளிந்து கொண்டிருந்து சங்கதியைத் தெரிந்துகொண்டிருக்கிறாள். அவள் வந்த வழியில் நீ போனாய் போலிருக்கிறது. அவளைக் கண்டு நீ உடனே நானென்று நினைத்து என் பெயரைச் சொல்லி அழைத்திருக்கிறாய். நாங்கள் இருவரும் ஒரே மாதிரியாய் இருக்கிறதை வைத்துக் கொண்டு அவள் உன்னிடம் சாமர்த்தியமாக நடந்து உன்னை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டாள்.

புஷ்பாவதி:—அப்போது ஏமாற்றினதால் என்ன வந்துவிட்டது. எப்படியும் நாம் ஒருவரையொருவர் பார்க்கமாட்டோமா! இதைப்பற்றிப் பேசமாட்டோமா! அப்போது உண்மை தெரியாமல் போய்விடுமா! இதெல்லாம் என்ன தந்திரத்தில் சேர்ந்தது!

சௌந்தரவல்லி:—இது நல்ல தந்திரந்தான். இல்லாவிட்டால், அவள் எதற்காக அங்கே வந்தாளென்பதைச் சொல்லவேண்டியிருக்குமல்லவா. நீயும் அங்கேபோன காரணத்தையும், "சௌந்தரா" வென்று என்னைக் கூப்பிட்ட காரணத்தையும் சொல்ல வேண்டி யிருக்கும். தான் இன்னாள் என்று அவள் சொல்லிக் கொள்ளாதது உங்கள் இருவருக்குமே நல்லதாக முடிந்தது. பார்த்தாயா, அவர்களுடைய திருட்டுத் தனத்தை! தாயும் மகளும் நேற்றுக் காலையில் திருட்டுத்தனமாய் நடந்ததற்குப்பட்ட பங்கம் போதாதா! மறுபடி அவளுடைய கோணல்புத்தி போகவில்லையே!

புஷ்பாவதி:—அப்படியானால் கோகிலாம்பாள் சங்கதியையெல்லாம் அம்மாளிடம் சொல்லிக் கோள்நெருப்பு மூட்டி இருப்பாள். என்பேரில்கூட அம்மாள் இனி சம்சயம் கொள்வது நிச்சயம்

சௌந்தரவல்லி:—அம்மாள்தான் உன்னை என்ன செய்யமுடியும்; கோகிலாதான் என்ன செய்யமுடியும் ஒன்றும் செய்யமுடியாது. இவர்களுடைய அண்டை அயலில் நீ குடியிருக்கிறாயா,

அல்லது, சாப்பாட்டுக்குத்தான் நீ இவர்களுடைய கையை எதிர் பார்த்து நிற்கிறாயா ?—என்றாள்.

உடனே புஷ்பாவதி சிறிதுநேரம் ஆழ்ந்து யோசனைசெய்து, "சரி; இருக்கட்டும். நான் ஒன்றையு மறியாதவள்போலவும் சாதாரணமாய்ப் போகிறவள் போலவும் அம்மாளிடம் போய், நான் எங்கள் வீட்டுக்குப்போக அநுமதி கேட்டுப் பார்க்கிறேன். தாயும் பெண்ணும் என்ன நிதானத்தி லிருக்கிறார்களென்பது உடனே தெரிந்துபோகும். அதைத் தெரிந்துகொண்டு வந்து சேருகிறேன்." என்று கூற, சௌந்தரவல்லி அதை ஆமோதித்தாள். உடனே புஷ்பாவதி அவ்விடத்தைவிட்டுப்பூஞ்சோலையம்மாளிருந்தஇடத்தை நோக்கிச் செல்ல, சௌந்தரவல்லி மறுபடி தனது சயன அறையை யடைந்தாள். அடைந்தவள் தனது தாயும், அக்காளும்விஷயங்களைத் தெரிந்துகொண்டு, என்னென்ன ஏற்பாடுகளுடன் இருக்கிறார்களோ வென்பதைப் பற்றியும், தான் தனது அக்காளை எப்படி வீட்டை விட்டு வெளியேற்றுவதென்பதைப் பற்றியும் சிந்தனை செய்து, மிகுந்த கவலையும் கலவரமும் அடைந்தவளாய்ப் புஷ்பாவதியின் வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருந்தாள். அவளிடம் தனது தாய் எவ்விதமான செய்தி சொல்லியனுப்புகிறாளோ என்று கவலையுற்றவளாய் அடிக்கடி கடிகாரத்தைப் பார்ப்பதும் யோசனை செய்வதுமாயிருந்தாள். தனது கலியாண ஏற்பாட்டை உறுதிப்படுத்திக் கொள்ளும்பொருட்டு சுந்தரமூர்த்தி முதலியார் அன்று காலையில் மறுபடி வருவதாகக் கூறிச் சென்றாராதலால், அவரது வருகையையும் அவள் மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துத் தவித்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் புஷ்பாவதி மிகுந்த சந்தோஷமும் குதூகலமும் அடைந்தவளாய்ப் புன்னகை தவழ்ந்த முகத்தோடு விரைவாக அங்கு ஓடிவந்தாள். வந்தவள், "சௌந்தரா! சௌந்தரா! உனக்குக் கொஞ்சமும் பிரயாசை யில்லாதபடி எல்லாக் காரியமும் உன்னிஷ்டப்படியே முடிந்துவிட்டது! கோகிலாம்பாள் நேற்று இரவில் பூஞ்சோலைக்கு வந்து நீங்கள் பேசியதைக் கேட்டது சகல விதததிலும் நல்லதாகவே முடிந்தது" என்றாள்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி திடுக்கிட்டு மிகுந்த ஆவலுடன், "ஆ! அப்படியா! என்ன விசேஷம் புஷ்பாவதி?" என்றாள்.

உடனே புஷ்பாவதி "கோகிலா விடியற் காலமேயே புறப்பட்டு வண்ணாரப்பேட்டை பங்களாவுக்குப் போய் விட்டாளாம். அவள் இனி இந்த பங்களாவுக்கே வரப்போகிறதில்லையாம்; உன்னுடைய கலியாணத்தை நம்முடைய இஷ்டப்படி உடனே முடித்து விடும்படியும், உங்கள் வீட்டு சகலமான சொத்துக்களையும் நிர்வாகத்தையும் உன் வசம் ஒப்புவித்து விடும்படியும் அம்மாளுக்கு ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு அவள் அம்மாளுக்குக் கூட தெரியாதபடி விடியற் காலையிலேயே புறப்பட்டுப் போய் விட்டாளாம்." என்றாள்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி மனங் கொள்ளாக் களிப்பும், பூரிப்பும் அடைந்து, "ஆ! அப்படியா! இதெல்லாம் நிஜந்தானா. அல்லது, வேடிக்கைக்காக நீயே இப்படிச் சொல்லுகிறாயா? இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது? அம்மாள் இப்படிப்பட்ட குடும்ப விஷயங்களை யெல்லாம் இலேசில் வெளியிடக் கூடியவர்களல்லவே!" என்றாள்.

புஷ்பாவதி, "நான் போன போதே அம்மாள் இன்று என்னோடு சரியாய்ப் பேச மாட்டார்களென்று நினைத்துக் கொண்டே போனேன். அதற்கு மாறாகவே எல்லாம் இருந்தது முதலில் அம்மாளுடைய முகம் ஏதோ விசனத்தையும் வியாகுலத்தையும் காட்டியதாக இருந்தது. ஆனால் அம்மாள் என்னைக் கண்டவுடனே, திடீரென்று மாறுபட்டு இதற்குமுன் என்னிடம் எவ்வளவு வாஞ்சையாகவும் மதிப்பாகவும் நடந்து கொள்ளுவார்களோ அதை விடப் பன்மடங்கு அதிக பிரியமாகவும் மரியாதையாகவும் நடந்து என்னை வரவேற்றதன்றி, கோகிலாம்பாள் எழுதி வைத்துப் போயிருக்கும் கடிதத்தையே அவர்கள் என்னிடம் காட்டினார்கள் காட்டியதன்றி, அதில் எழுதப்பட்டிருப்பது போலவே தாம் நடக்க வுத்தமாய் இருப்பதாகச் சொல்லி அந்த விவரம் முழுதையும் உடனே வந்து உனக்குத் தெரிவிக்கும்படியாகவும் கேட்டுக் கொண்டார்கள்." என்று கூறி, கடிதத்தில் எழுதப்பட்டிருந்த சங்கதிகள் அனைத்தையும் அப்படியே ஓரெழுத்து விடாமல் தெரிவித்தாள்.

அதைக் கேட்ட சௌந்தரவல்லி அபாரமான குதூகலமும் பூரிப்பும் ஆநந்தப்பெருக்கு மடைந்து. அப்பொழுதே சகலமான அதிகாரங்களையும் தலைமையையும் வகித்து விட்டவள்போல ஆய் விட்டாள். அவள் உடனே புஷ்பாவதியை நோக்கி "கோகிலா நல்ல

புத்திசாலி யாகையால் முன்னெச்சரிக்கை யடைந்து தப்பினாள். இப்படிச் செய்யாவிட்டால், தான் என்னிடம் அகப்பட்டு மேன்மேலும் மானபங்கப்படவேண்டி யிருக்குமென்பதை அவள் தெரிந்து கொண்டு ஓடியே போய்விட்டாள். போகட்டும். நல்ல காரியம் செய்தாள். என் வேலையை அவள் சுலபமாக்கினதைப்பற்றிதான் நான் இப்போது முக்கியமாய் சந்தோஷப் படுகிறேன்." என்றாள்.

உடனே புஷ்பாவதி, "ஆமம்மா மெய்தான்" என்றாள்.

சௌந்தரவல்லி, "சரி; எனக்கு ஏற்படுத்தப்பட்ட நிபந்தனைகளெல்லாம் நிறைவேறிப் போயின. இனி உங்களால் ஆகவேண்டிய காரியந்தான் பாக்கி. அதை நீ தான் துரிதப்படுத்தி முடிக்க வேண்டும். இப்போது உன் தமயனார் வருவார்களல்லவா. அவர்களிடம் நீயே எல்லா விஷயங்களையும் விவரமாகச் சொல்லி, உன் கலியாணத்தோடு என் கலியாணத்தையும் முடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்யும்படி முயற்சி யெடுத்துக்கொள். எனக்கு அவ்வளவாக அநுபோகம் இல்லை. எதைச் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் நீயும் உன் தமயனாரும் கலந்து யோசித்துச் செய்யுங்கள். உங்கள் வீடு வேறு, இது வேறு என்ற வித்தியாசத்தை இனி நீங்கள் பாராட்டக் கூடாது. செலவுக்கு எவ்வளவு பணத்தொகை தேவையானாலும், அதை நான் உடனே கொடுக்கிறேன். இதற்கு முன் என் அக்காளுடைய நிச்சயதார்த்தக் கலியாணத்திற்கு என்னென்ன ஏற்பாடுகளும், அலங்காரங்களும் நடந்தனவோ அவைகளுக்கு மேல் நூறு மடங்கு அதிக சிறப்பாகவும் விமரிசையாகவும் எல்லாம் நடக்க வேண்டும். எப்படியாவது முயற்சி செய்து எங்களுடைய சொந்த ஜனங்கள் யாவரும் நம்முடைய கலியாணத்திற்கு வரும்படி செய்யவேண்டும். அதையும் நீ உங்கள் தமயனாரிடம் சொல்லவேண்டும். இனி நீயும் உன் தமயனாரும் இப்போது முதல் இங்கேயே இருந்தால் தான், இன்னம் ஏழெட்டு தினங்களுக்குள் எல்லா முஸ்தீபுகளையும் செய்வதற்கு அவகாசம் சரியாயிருக்கும்." என்றாள்.

அவ்வாறு அவள் கூறி வாய் மூடுமுன் வெளியி லிருந்து ஒரு வேலைக்காரன், "அம்மா!" என்று நிரம்பவும் வணக்கமாகக் கூப்பிட்டான். சௌந்தரவல்லி, "யார் அது? என்ன சங்கதி?" என்றாள். வேலைக்காரன் மெதுவாகத் தலையை நீட்டி, "மைலாப்பூரி லிருந்து இந்த அம்மாளுடைய தமயனார் வந்திருக்கிறார்கள்." என்றான்.

அதைக் கேட்டவுடனே சௌந்தரவல்லி கட்டிலடங்காக்களிப்பும் மனவெழுச்சியும் அடைந்து வேலைக்காரனை நோக்கி, "சரி; இந்த அம்மாள் நேற்று ராத்திரி படுத்துக்கொண் டிருந்தார்க ளல்லவா; அந்த அறைக்கு அவர்களை அழைத்துக் கொண்டு போ; அம்மாள் இதோ வருகிறார்கள்" என்றாள். உடனே வேலைக்காரன் அவ்விடத்தை விட்டுப் போய்விட்டான். சௌந்தரவல்லியை விடப் பன் மடங்கு அதிகரித்த மனவெழுச்சியும், ஆவலும் கொண்ட புஷ்பாவதி, "சரி; நானும் போகிறேன்." என்று கூறிய வண்ணம் எழுந்து நடந்தாள். உடனே சௌந்தவல்லி அவளைப் பார்த்துக் கொஞ்சலாகவும் நயமாகவும் பேசத் தொடங்கி, "புஷ்பாவதி உனக்குத் தெரியாததற்கு நான் சொல்ல வேண்டியதில்லை. எல்லா விஷயங்களையும் பேசி ஒழுங்காக முடிவு செய்துகொண்டு சீக்கிரமாக எனக்கு சந்தோஷச் சங்கதி கொண்டுவரவேண்டும்" என்றாள்.

புஷ்பாவதி, "ஆகா! அப்படியே செய்கிறேன் இனி நீ எதைப் பற்றியும் கவலையே கொள்ள வேண்டாம். சகலமான ஏற்பாடுகளையும் நான் உன் இஷ்டப்படியே செய்து முடிக்கிறேன்" என்று கூறிய பின் அவ்விடத்தை விட்டு வெளியில் போய்விட்டாள்.

இரண்டொரு நிமிஷநேரத்தில் தமயனும் தங்கையும் ஒதுப்புரமா யிருந்த ஓர் அறையில் சந்தித்து ஆசனங்களில் அமர்ந்து நிரம்பவும் ரகஸியமாக சம்பாஷிக்கத் தொடங்கினர். புஷ்பாவதி அவ்விடத்து சங்கதிகளில் அவருக்குத் தெரியவேண்டியவிஷயங்கள் யாவற்றையும் உடனே எடுத்துக் கூறினாள். கண்ணபிரான் கடிதம் எழுதிய சந்தர்ப்பம், கோகிலாம்பாள் மோசடியாக இன்ஸ்பெக்டரது மாளிகைக்குக் கொண்டு போகப்பட்டது, அவ்விடத்தி லிருந்து தந்திரமாய்த் தப்பி வந்தது முதலிய வரலாற்றையும், முதல் நாள் இரவில் கோகிலாம்பாள் தோட்டத்திற்கு வந்து மறைந்திருந்து அவர்களது சம்பாஷணையைக் கேட்டது, அவளைத் தான் சந்தித்த காலத்தில், அவள் சௌந்தரவல்லியைப் போலவே நடித்தது, பிறகு அவள் தனது தாய்க்குக் கடிதம் எழுதி வைத்துவிட்டுப் போனது, அந்தக் கடிதத்தின் விரங்கள், அதைப் படித்த தாய் அதற்கு இணங்கி இருப்பது, சௌந்தரவல்லியின் மனநிலைமை முதலிய விஷயங்களை யெல்லாம் புஷ்பாவதி விரைவாகவும் தெளிவாகவும் தனது தமயனிடம் கூறினாள்.

அவற்றை யெல்லாம் கேட்டறிந்து கொண்ட சுந்தரமூர்த்தி முதலியார் மகிழ்ச்சியும், ஆநந்தமும் அடைந்து, "சரி; இரண்டு இடங்களிலும் நம்முடைய எண்ணப்படியே, எல்லா விஷயங்களும் நிறைவேறி விட்டன. இனி காரியம் முடிந்த மாதிரிதான். இனி நாம் கலியாண ஏற்பாடுகளைத்தான் கவனிக்க வேண்டும்" என்றார்.

புஷ்பாவதி:—ஆம். அதெல்லாம் சரிதான். நம்முடைய ஜாதி யாசாரப்படி கலியாணம் புருஷனுடைய வீட்டில் நடக்க வேண்டியதல்லவா. சௌந்தரவல்லியின் கலியாணம் நம்முடைய பங்களாவில் நடக்கவேண்டும். என்னுடைய கலியாணம் மைலாப்பூரார் பங்களாவில் நடக்கவேண்டுமே. இரண்டையும் எப்படி யெப்படிச் செய்ய உத்தேசித்திருக்கிறீர்கள்? மைலாப்பூரார் இந்த விஷயத்தில் என்ன சொல்லுகிறார்கள் ?

சுந்தரமூர்த்தி முதலியார்:—அதைப் பற்றி நான் ஆழ்ந்து யோசனை பண்ணி ஒருவிதமான முடிவுக்கு வந்திருக்கிறேன்.

இந்த அசந்தர்ப்ப சமயத்தில் இந்த பங்களாவில் நாம் இப்போது கலியாணத்தை நடத்துவது விகாரமாக இருக்கும். அதிகமான ஜனங்களும் வரமாட்டார்கள். மைலாப்பூராரையும் நாம் இங்கே அழைப்பது ஒழுங்காயிராது. அவர்களும் இங்கே வரமாட்டார்கள். ஆகையால் இரண்டு கலியாணங்களையும் ஒரே முகூர்த்தத்தில் மைலாப்பூரிலேயே நடத்திவிடத் தீர்மானித்திருக்கிறேன். இவர்களோ இரண்டு பேர்தான் இருக்கிறார்கள். இவர்களுடைய ஜனங்களிடமும் நானே போய் கோகிலாம்பாள் இன்ஸ்பெக்டருடைய வீட்டுக்குப் போனதின் உண்மையான காரணத்தை வெளியிட்டு அவர்களைத் திருப்திசெய்து, வரக் கூடியவர்களை அழைத்துக் கொண்டு வருகிறேன். நாம், நம்முடைய ஆள்கள், இவர்கள், இவர்களுடைய வேலைக்காரர்கள், சொந்த ஜனங்கள் ஆகிய எல்லோரும் மைலாப்பூரார் பங்களாவுக்கே போய் விடுவோம். இவர்கள் நம் இழுப்புக்கெல்லாம் இணங்கி வருவார்கள். இங்கே கலியாணம் நடந்தால் ஜனங்கள் வரமாட்டார்கள் அங்கே நடந்தால் வருவார்கள் என்று சொல்லி சௌந்தரவல்லியைத் தூண்டி விட்டால், அது சுலபத்தில் பலித்துவிடும். ஏனென்றால், அதிக காலம் வளர்த்தாமல் இரண்டையும் ஒன்றாகவே சீக்கிரத்தில் நாம் முடித்துவிட வேண்டும்.

புஷ்பாவதி:—ஆம். அது நல்ல யோசனைதான். அதிருக்கட்டும். நேற்றிரவு நீங்கள் சௌந்தரவல்லியோடு பேசிக் கொண்டிருந்தபோது என்னுடைய புகைப்படத்தை அந்த மாப்பிள்ளைக்குக் காட்டியதாகச் சொன்னீர்களாமே! அதை நீங்கள் இதுவரையில் என்னிடம் சொல்லவே இல்லையே! அவர்கள் அரைமனசோடிருந்ததாக நீங்கள் கடைசியாக என்னிடம் தெரிவித்தீர்கள். இப்போது காரியம் முடிந்துபோ யிருக்கிறதே. அது இவ்வளவு சுலபத்தில் எப்படி முடிந்தது?

சுந்தரமூர்த்தி முதலியார்:—என்ன புஷ்பாவதி! என்னால் எது தான் முடியாதென்று நீ நினைத்துக் கொண்டாய்! அதற்குத் தகுந்தபடி யுக்தியாக நடந்துகொண்டால், சாதிக்க அசாத்திய மானதை யெல்லாம் நாம் சாதித்து விடலாம். நான் மனசு வைத்தால் மகாராஜாவின் வீட்டுப் பிள்ளைக்குக்கூட உன்னைக் கட்டி வைத்து விடுவேன் இப்போது உனக்குப் பார்த்திருக்கும் இடம் எப்பேர்ப்பட்டது தெரியுமா! அதை ஒரு மகாராஜனுடைய சமஸ்தானம் என்றுதான் சொல்ல வேண்டும். பிள்ளை மகா புத்திசாலி, பார்ப்பதற்கு மன்மதனைப் போலவே இருக்கிறான். சீமைக்குப் போய் ஐ. சி. எஸ். பரீட்சையில் தேறி, அஸிஸ்டெண்டு கலெக்டராய் வந்திருக்கிறான். வெகு சீக்கிரம் பெரிய கலெக்டர் உத்தியோகம் ஆய்விடும். மாசம் ஒன்றுக்கு மூவாயிரம் ரூபாய் சம்பளம் கிடைக்கும். அபாரமான செல்வாக்கு, அதுவன்றி, இப்போது அவர்களுக்கு இருக்கும் கம்பெனியும், வீடுகளுமே, ஒரு மகாராஜனுடைய செல்வத்துக்கு அதிகமா யிருக்குமென்று மதிக்கலாம். அந்த ஒரு பையனைத்தவிர வேறே ஆணுமில்லை பெண்ணுமில்லை. அவ்வளவும் உனக்குத்தான் வந்து சேரப் போகிறது. இவர்களுடைய சொத்து முழுவதையும் சேர்த்துப்பார்த்தால் அவர்களுடைய சொத்தில் நூறில் ஒரு பங்குகூடக் காணாது. எனக்குக் கிடைக்கப்போகும் இடம் இதற்குமுன் பிரமாதமாகத் தோன்றியது. இப்போது, இது கேவலம் அற்பமாகத் தோன்றுகிறது. நமக்கு அப்பேர்ப்பட்ட இடம் கிடைக்கவில்லையே என்று நான் கூடப் பொறாமைப் படும்படி இருக்கிறது. அப்படியானால் அந்த இடம் எப்பேர்ப்பட்டதாக இருக்க வேண்டுமென்று நீயே யோசித்துக்கொள். பையனுடைய தாயும் தகப்பனும் இதற்குமுன் உன்னை ஒருதரம் பார்த்திருக்கிறார்களல்லவா. அந்த ஞாபகத்தை வைத்துக்கொண்டு, உன்னுடைய வயசு எவ்வளவு என்று அவர்கள் என்னைக் கேட்டார்

கள். உனக்கு இன்னம் பதினெட்டு வயசுகூட நிறையவில்லை யென்றும், அதிகமாய்ப் படித்தபடியால் கொஞ்சம் வயசு அதிகம் போலத் தெரிகிறதென்றும் நான் சொல்லி வைத்தேன். அவர்களுக்கு அரை மனசுதான் அவர்களைத் திருப்திசெய்ய முயற்சிப்பதைவிட பையனை வேறு வழியில் பிடித்து மடக்கிவிட வேண்டுமென்பது என்னுடைய எண்ணம். நான் என்ன செய்தேன் தெரியுமா? முன்னொருதரம் நான் இங்கே வந்துவிட்டுப் போனேனல்லவா. அப்போது, ஹாலில் மாட்டப்பட்டிருந்த படங்களை யெல்லாம் நான் வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டே இருந்தேன். ஏராளமான புஷ்பங்கள் மலர்ந்திருந்த ஒரு ரோஜாச்செடியில புஷ்பம் பறிப்பதுபோல, ஒரு பெண் நின்று கொண்டிருந்ததாக ஒரு படம் எடுக்கப்பட்டிருந்தது. கிட்டப்போய்ப் பார்த்தேன். கோகிலாம்பாளோ சௌந்தரவல்லியோ இருவரில் ஒருத்தி அப்படி நின்று படம் எடுத்துக் கொண்டிருந்தாள். அந்த அலங்காரமும், அழகும் அப்படியே கண்ணைப் பறிக்கத் தக்கதாகவும் உயிரைக் கொள்ளை கொள்ளத் தக்கதாகவும் இருந்தன. நான் அந்தப் படத்தை மெதுவாக எடுத்து சட்டைப்பையில் வைத்துக் கொண்டேன். பிற்பாடு நானும் அந்தப் பையனும் வேடிக்கையாகக் கடற்கரைக்குப் போயிருந்த சமயத்தில், அந்தப் படத்தை அவன் பார்க்கும்படி தந்திரமாக நடந்து கொண்டேன். அவன் படத்தைப் பார்த்து, “இது யாருடையது?” என்று கேட்டான். உன்னுடையது என்று நான் சொல்லி விட்டேன். அவன் உடனே அதை வாங்கிப் பார்த்து முற்றிலும் பிரமித்துப் போய் வெகுநேரம் வரையில் அப்படியே இருந்து விட்டான். முடிவில நான் படத்தை வாங்கிக்கொண்டு வந்து விட்டேன். அதைப பார்த்தது முதல் பையன் உன்னை நினைத்து நினைத்து உருகிக்கொண்டே இருக்கிறான். அவனுக்கு சாப்பாட்டிலும் சரி, வேறு எதிலும் சரி, கவனம் செல்லவே இல்லை. உன் மோகமே பெரிய பித்தாய்ப்பிடித்துத் தலைக்கு ஏறிவிட்டது. அவன் தன் தாய் தகப்பனாரிடம் போய் தான் உன்னை நேரில் பார்த்ததாகவும், நீ யல்லாமல் வேறு யாரும் தனக்கு வேண்டாமென்றும், உன்னைக் கலியாணம் செய்யத் தீர்மானிக்கவும் சொல்லிப் பிடிவாதம் பிடிக்கத் தொடங்கி விட்டான். அவர்களுக்கு அவன் ஒரே செல்லக் குழந்தை யாகையால், அவனுடைய இஷ்டப்படியே செய்வோமென்று என்னை அழைத்து ஏழெட்டு நாட்களில வரும் முகூர்த்த

தினத்தில் கலியாணத்தை முடிக்க வேண்டுமென்று தீர்மானமாகச் சொல்லி லக்னப்பத்திரிகையும் தயாரித்துக் கொடுத்து விட்டார்கள். நான் என்னுடைய கலியாணத்தைச் சேர்த்து அவர்களுடைய பங்களாவிலேயே அதே முகூர்த்தத்தில் நடத்தவேண்டுமென்பதையும் சொன்னேன். அதற்கும் அவர்கள் இணங்கி விட்டார்கள்.

புஷ்பாவதி:—ஆம், அதெல்லாம் சரிதான். ஆள் மாறாட்டமாக நீங்கள் வேறு படத்தைக் காட்டி இருக்கிறீர்களே, கலியாண சமயத்தில் அதனால் ஏதாவது உபத்திரவம் உண்டாகுமோ?

சுந்தரமூர்த்தி முதலியார்:—அந்தப் படத்தை அவளுடைய தாய் தகப்பன்மார் பார்க்கவில்லை: பையன் மாத்திரந்தான் பார்த்திருக்கிறான். கலியாண சமயத்தில் அவன் தனக்குப் பக்கத்தில் உட்காரும் பெண்ணை உற்றுப் பார்க்கமாட்டான். ஏனென்றால், மற்றவர் ஏதாவது சொல்லப்போகிறார்களே என்ற கிலேசம் இருக்கும். நீயும் நன்றாக அலங்காரம் செய்து கொண்டு நல்ல ஜரிகைப் புட்டாக்கள் நிறைந்த புடவை ரவிக்கைகள், ஏராளமான வைர ஆபரணங்கள் முதலியவைகளுடன் போய் உட்கார்ந்து கொண்டால், அதிக வித்தியாசம் தெரியாது. அந்தப் பெண்தான் வந்திருப்பதாக அவன் நினைத்துக் கொள்வான். பிற்பாடு எல்லாம் சரியாய்ப்போகும். அவன் உன்னிடம் நெருங்கிப் பார்த்து படத்துக்கும் உனக்கும் வேற்றுமை இருப்பதாக சந்தேகப்பட்டாலும், காரியம் முடிந்து போனதைக் கருதி, அவன் என்னிடம் அதைப் பிரஸ்தாபிக்கவும் மாட்டான்; பிரஸ்தாபித்தாலும் நான் உன்னுடைய படத்தையே காட்டியதாக அழுத்திச் சொல்லி விடுகிறேன். அந்தப் படத்தில் இருப்பது போலவே நீயும் அலங்காரம் செய்துகொண்டு ஒருபடம் பிடித்து அதை அவனிடம் கொடுத்து, அதைத்தான் நான் அவனிடம் காட்டியதாகச் சொல்லி விடுகிறேன். சங்கதி அவ்வளவு தூரத்துக்கு ஒரு நாளும் வளரப் போகிறதில்லை. நம்முடைய இஷ்டம் போலவே எல்லாம் ஜெயமாக முடிந்து போகும்.. நீ எதைப்பற்றியும் கவலைகொள்ள வேண்டாம்.

புஷ்பாவதி:—சரி. நீங்கள் இருக்கையில் நான் ஏன் கவலைப்படுகிறேன். எப்படியாவது எவ்வித இடையூறுமில்லாமல் இரண்டு கலியாணங்களும் நிறைவேறிப்போனால், பிறகு நமக்குக் கொஞ்சமும்

கவலையில்லை. அதுவரையில் உள்ளுக்குள் கொஞ்சம் சஞ்சலம் இருப்பது சகஜந்தானே.

சுந்தரமூர்த்தி முதலியார்:—நீ எதைப்பற்றியும் சஞ்சலப்பட வேண்டியதே இல்லை இனி காரியம் முடிந்தமாதிரியே. ஆனால், நீ கலியாண காலம் வரையில் இவ்விடத்திலே இருப்பது நல்லதென்று நினைக்கிறேன். மாப்பிள்ளை ஒரு வேளை உன்னை நேரில் பார்க்க வேண்டுமென்று சொன்னால் அவனை அழைத்து வந்து, உன்னை அவனுக்குக் காட்டாமல், தூரத்திலிருந்தபடி, சௌந்தரவல்லியை அவனுக்குக் காட்டி விடலாமல்லவா. இந்த இரண்டு கலியாணங்களையும் சேர்த்து மைலாப்பூரார் பங்களாவில் நடத்துவதில் சில நன்மைகள் இருக்கின்றன. நாம் கலியாணத்தை இங்கே நடத்தினால் சொந்த ஜனங்கள் ஏராளமாக வராவிட்டால், அது பார்வைக்கு விகாரமாக இருக்கும், மைலாப்பூரார் வீட்டில் அது நடந்தால், நாம் விருந்தாளிகள் போல இருந்து வந்துவிடலாம்; நம்மோடு கூட அதிக ஜனங்கள் வரவேண்டு மென்பதில்லை

புஷ்பாவதி:—சரி; அதுவும் நல்ல யோசனைதான்; நான் இவ்விடத்திலேயே இருக்கிறேன். நான் இங்கே இருந்தால் தான் சௌந்தரவல்லியின் மன நிலைமை மாறாமல் ஒரே மாதிரியாக இருக்கும், கலியாணச் செலவுக்கும் வேண்டிய பணங்களை எல்லாம் நான் கேட்டுக் கேட்டு அவளிடத்திலிருந்து வாங்கலாம். இப்போது கலியாணச் செலவுக்காக எவ்வளவு ரூபாய் தேவையாகும் என்று சொன்னால், அதை அவளிடம் சொல்லி இன்றைக்குள் எடுத்துக் கொடுக்கச் செய்து வாங்கி வைக்கிறேன். நீங்கள் மறுபடி இன்று அந்தியில் வந்து அதை வாங்கிக்கொண்டு போகலாம்; இன்னம் அடிக்கடி என் மூலமாகக் கேட்டுப் பணம் வாங்கிக் கொண்டும் போகலாம்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—ஆம். ஆம். அதையெல்லாம் உத்தேசித்துத் தான், நான் உன்னை இங்கே இருக்கச் சொன்னது. எல்லாவற்றிற்கும் நீ பூஞ்சோலையம்மாளை விட்டு ஒரு லக்னப் பத்திரிகை தயாரிக்கச் செய்து அதையும் கையில் வாங்கி வைத்துக்கொள் நமக்கு ஆதாரம் வேண்டுமல்லவா.

புஷ்பாவதி:—ஆகட்டும்; அப்படியே செய்கிறேன்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—இன்னொரு முக்கியமான சங்கதியை உன்னிடம் சொல்ல வேண்டுமென்று வந்தேன். அதை மறந்து விட்டேன். இவர்களுக்கு ஏதாவது சமாசாரப் பத்திரிகை வருவதுண்டா? அதை யாராவது படிக்கிறதுண்டா?

புஷ்பாவதி:—(வியப்பும் ஆவலும் அடைந்து) இவர்களுக்குத் தமிழில் சுதேசமித்திரன் தினசரி பதிப்பு வருகிறது. இதற்கு முன் அதைக் கோகிலாம்பாள் படிக்கிறது. மற்ற இருவரும் கேட்கிறது. இப்போது வரும் பத்திரிகைகள் பிரித்துப் பார்ப்பதற்கு மனிதர் இல்லாமையால் வந்தபடி கிடக்கின்றன.

சுந்தரமூர்த்தி முதலியார்:—நேற்று மாலையில் வந்த பத்திரிகையை இவர்கள் யாரும் படிக்கவில்லையே?

புஷ்பாவதி:—நேற்று இவர்கள் இருந்த இருப்பில் சமாசாரப் பத்திரிகை தான் குறைவு நேற்று மாலையில் நானும் சௌந்தரவல்லியும் தனியாயிருந்த சமயத்தில், அது வந்தது. சௌந்தரவல்லி அதை வாங்கி எங்கேயோ ஒரு மூலையில் எறிந்தாள்.

சுந்தரமூர்த்தி முதலியார்:—சரி; அதை யாராவது பிரித்துப் பார்ப்பதற்குள் நீ அதை எடுத்துக் கிழித்து நெருப்பில போட்டுவிடு. அதில் ஒரு முக்கியமான சங்கதி வெளியாயிருக்கிறது.

புஷ்பாவதி:—(மிகுந்த ஆவலுடன்) அப்படிப்பட்ட விபரீத சங்கதி என்ன?

சுந்தரமூர்த்தி முதலியார்:—நான் அதை வாயால் சொன்னால், அது எவருடைய காதிலாவது விழும். இதோ அந்தப் பத்திரிகையே ஒன்று இருக்கிறது. நீயே அதை உன் மனசிற்குள்ளாகவே படித்துப் பார்த்துத் தெரிந்துகொள்—என்று கூறித் தமது சட்டைப் பையில் திணிக்கப்பட்டிருந்த சுதேசமித்திரன் பத்திரிகையை எடுத்து அதைப் பிரித்து, அவள் படிக்க வேண்டிய இடத்தைச் சுட்டிக் காட்டினார்.

புஷ்பாவதி அதைத் தனக்குள்ளாகவே படிக்கலானாள். அது அடியில் வருமாறு இருந்தது:—

மஞ்சட் குப்பம் கூடலூரில் இறந்தவர் பிழைத்தார்.

(நமது நிருபர் தந்தி மூலம் தெரிவிக்கிறார்.)

இவ்வூர் டிப்டி கலெக்டருடைய கச்சேரியில் இன்று ஒரு சிகரமான வழக்கு விசாரணைக்கு வந்தது. அது சாதாரண ரய் இவ்வூர் சப் மாஜிஸ்டிரேட்டின் முன்பு வரவேண்டியது. டரென்று ஹிருதய ஓட்டம் நின்று போன காரணத்தினால், வர் ஒரே நிமிஷத்தில் உயிர் துறந்தார். ஆகவே, இன்று அவரிடம் ரவேண்டிய அவசரமான வழக்குகளெல்லாம் டிப்டி கலெக்டம் வந்தன. விடியற்காலம் சென்னையி லிருந்து புறப்பட்டு வ்வூருக்குக் காலை சுமார் பத்து மணிக்கு வரும் ரயில் இவ்வூரில் றுக்கிடும் கெடிலம் என்ற ஆற்றின்மேல் வந்து கொண்டிருக் கயில், ஸ்திரீகளின் வண்டியில் தனியாக உட்கார்ந்திருந்த ஒரு திரீ கதவைத் திறந்து கொண்டு ஆற்று வெள்ளத்தில் குப்புற ழுந்து தண்ணீருக்குள் முழுகிப் போய்விட்டாள். முன் எஞ்சினி ருந்தவரான வண்டியோட்டுகிறவர் அதைக் கண்டு திடுக்கிட்டுப் பாய் உடனே வண்டியை சடக்கென்று நிறுத்திவிட்டுப் பாலத் காடு ஓடிவந்து, அந்த அம்மாள் விழுந்த இடத்தில் தாமும் தண்ணீ ல் குதித்து, அம்மாளின் உடம்பு மேலே கிளம்பினால் பிடித் க்கொள்ளலா மென்று நினைத்து நாற்புறங்களையும் பார்த்துக் காண்டு சிறிது தூரம் வெள்ளப் போக்கில் சென்றார். அதைக் ண்டவுடனே வேறு சில ஆண்பிள்ளைகளும் கதவைத் திறந்து காண்டு பொத் பொத தென்று ஆற்றிற்குள் குதித்துத் தேடத் லைப்பட்டனர். ஆற்றுக்குள் குதித்த அந்த ஸ்திரீயின் உடம்பு மார் இருபதுகஜ தூரத்திற்கு அப்பால் போய் வெளிப்பட்டது. தற்குள் அந்த அம்மாள் மூக்கினாலும், வாயினாலும் ஏராளமான ண்ணீரை உள்ளே இழுத்து விட்டமையால், வயிறு சால்போல் பருத்து விட்டது மூச்சும் நின்று போய் விட்டது தண்ணீரில் ழுந்து தேடிய மனிதர்கள் உடனே விசையாக நீந்தி ஒரே பாய்ச்ச ல் பாய்ந்து போய் அந்த அம்மாளைத் தூக்கித் தண்ணீரின்மேல் பர்த்திப் பிடித்தபடி கரைக்குக் கொண்டு வந்தனர். உடனே எல் லாரும் சேர்ந்து முயற்சித்து அந்த அம்மாளைத் தலையில் வைத்துக் காண்டு வேகமாய்ச் சுற்றிச் சுற்றித் தண்ணீரை வெளிப் படுத்தி ர். அந்த ஸ்திரீயின் கைநாடி இருதய அடிப்பு முதலிய உயிர்ச்சின் ங்கள் யாவும் நின்றுபோய் விட்டன. அவள் இறந்து போனதா வே எல்லோரும் எண்ணிவிட்டன ரானாலும் ரயிலில் இருந்து

இறங்கி ஓடிவந்த ஒரு டாக்டர்கையைப் பிடித்துப் பார்த்துவிட்டு, "பிராணன் நின்று போய் அதிக நேரமாகா திருந்தால், நாம் மூச்சை உண்டாக்க முயற்சித்துப் பார்க்கலாம்." என்று கூறிய வண்ணம் அந்த அம்மாளுடைய வயிற்றையும், அதை யடுத்த இரண்டு விலாப் பக்கங்களையும் பிடித்துத் துருத்தி போடுவது போல பத்து நிமிஷ நேரம் வரையில் அழுத்தி அழுத்திக் கொடுத்தார். அந்த பாகங்கள் மேலே இருந்த சுவாச ஈரல் குலையில்போய் முட்டி முட்டி, அதில் ஏறி இருந்த தண்ணீரில் சிறிதளவை வெளிப் படுத்தி அசை வுண்டாக்கவே, ஈரல்குலை உடனே அசைந்து சுவாசத்தை உண்டாக்கியது. அதற்குள் சிலர் ஊருக்குள் ஓடிப் போலீசாரைக் கூப்பிட, அவர்கள் ஒரு குதிரை வண்டியையும் அழைத்துக் கொண்டு அந்த இடத்திற்கு வந்தனர். அதற்குள் அந்த ஸ்திரீயின் உயிர் நன்றாகத் திரும்பிவிட்டது. ஆனால் அவள் கண்களைத் திறவாமல் மயங்கிப்படுத்திருந்தாள். போலீசாரர் ரயில் ஓட்டுகிறவரிடமும், இன்னம் நாலைந்து மனிதரிடத்திலும் வாக்குமூலம் வாங்கிக் கொண்டு எல்லோரையும் ரயிலுக்கு அனுப்பிவிட்டு அந்த ஸ்திரீயைக் குதிரை வண்டியில் வைத்து ஊருக்குள்ளிருந்த போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோய், மேலும் ஒரு நாழிகை காலம் வைத்திருந்து தக்க சிகிச்சைகள் செய்ய, அந்த அம்மாள் நன்றாகத் தெளிவடைந்து எழுந்து விட்டாள். அவளுக்கு வயசு முப்பதைந்துக்கு மேலும் நாற்பதிற் கதிக்கப்படாமலும் இருக்கலாம். உடம்பில் மூக்குத் திருகுகூட இல்லை யாதலாலும், உடம்பில் நார்மடிப் புடவை யொன்றே இருந்தமையாலும், அந்த அம்மாள் விதவையென்பது யூகிக்கத் தக்கதாயிருந்தது. ஜாதி பெயர் ஊர் முதலிய விவரங்களை யெல்லாம், அந்த அம்மாளிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளப் போலீசார் முயற்சித்தனராலும், அவள், தனது வாயையே திறவாமல், கல்போல இருந்து விட்டாள். போலீசார் எவ்வளவோ தூரம் கேட்டுப் பார்த்தார்கள்; மறுமொழியே இல்லை அவர்கள் அந்த ஸ்திரீ தற்கொலைசெய்து கொள்ள முயற்சித்த தான குற்றத்தைச் செய்திருப்பதாகப் பிராது தயாரித்து அதையும் எடுத்துக்கொண்டு அந்த அம்மாளை ஒரு குதிரை வண்டியில் வைத்து அழைத்துவந்து டிப்டி கலெக்டருக் கெதிரில் நிறுத்தினார்கள். உடனே டிப்டி கலெக்டர் அந்த அம்மாளை ஏற இறங்க இரண்டொருமுறை பார்த்தார்; பிராதைப் படித்தார். அந்த அம்மாள் மஞ்சட்குப்பம் ஆற்றில் பகல் பத்துமணி சுமாருக்கு விழுந்தி

லிருந்து, பொழுது விடிந்த பிறகே ஏதாவது ஒரு ஸ்டேஷனில் ஏறி இருக்கவேண்டு மென்றும், இல்லாவிடில் இருளிலேயே ஏதாவது ஆற்றில் விழுந்து இறந்திருப்பாள், ஆகையால் ரயில் பொழுது விடிகிற சமயத்தில் எந்த ஊருக்கு வந்ததோ. அதிலாவது, அதற்கு இப்பாலுள்ள ஏதேனும் ஸ்டேஷனிலாவது ஏறி இருக்க வேண்டும், அல்லது, வெகு தூரத்திலிருந்து வந்திருந்தால், அது வரையில் ஸ்திரீகளின் வண்டி காலியாகாமல் ஜனங்கள் இருந்தமையால், பகல் பத்து மணிவரையில் பொறுத்திருந்து ஜனங்கள் போனவுடன், அடுத்த ஆறுகிய கெடிலத்தில் விழுந்திருக்க வேண்டும்'' என்று போலீசார் வியாக்கியானம் செய்திருந்ததையும் டிப்டி கலெக்டர் கவனித்தார். அவர் உடனே அந்த அம்மாளை நோக்கி "அம்மா! நீங்கள் எந்த ஊர், உங்கள் பெயர் என்ன?'' என்றார்

அந்த ஸ்திரீ சிறிது நேரம் தயங்கி நின்றபின் "எனக்கு ஊருமில்லை பெயருமில்லை'' என்று நிரம்பவும் விசனகரமாகக் கூறினாள்.

உடனே டிப்டி கலெக்டர்:—உங்களைப் பார்த்தால், தக்க பெரிய மனிதருடைய வீட்டைச் சேர்ந்தவர்கள்போ லிருக்கிறது. நீங்கள் ஏனம்மா ஆற்றில் விழுந்து தற்கொலை செய்து கொள்ளப் பிரயத்தனப் பட்டீர்கள்?

அந்த ஸ்திரீ:—எனக்கு இந்த உலகத்தில் இருக்க இஷ்டமில்லை! அதனால் ஆற்றில் விழுந்தேன். இந்த உலகத்தைப் பற்றிய நினைவெல்லாம் இருளடைந்து போயிருந்தது. இவர்கள் மறுபடி என் உயிரை மீட்டதான பெரிய பாவத்தைச் செய்து விட்டார்கள்

டிப்டி கலெக்டர்:—ஏனம்மா! நீங்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்கள்?

அந்த ஸ்திரீ:—வேளாள முதலியார் ஜாதியைச் சேர்ந்தவள்.

டிப்டி கலெக்டர்:—உங்களைச் சேர்ந்த சொந்த ஜனங்கள் எந்த ஊரில் இருக்கிறார்கள் என்பதைச் சொல்லலாமா?

அந்த ஸ்திரீ:—(கண்ணீரைச் சொரிந்தவண்ணம்) எனக்கு இந்த உலகத்தில் சொந்தமாயிருந்த மனிதர் எல்லோரும் பிரிந்துபோய் விட்டார்கள். நான் இப்போது சுத்த அநாதை. என்னைப்படைத்த கடவுளுக்குத்தான் நான் இப்போது சொந்தம்.

டிப்டி கலெக்டர்:—அம்மா! உங்களைப் பார்க்க, என் மனம் நிரம்பவும் இரங்குகிறது! நீங்கள் யார் என்பதையும் சொல்ல மாட்டேனென்கிறீர்கள்; என்ன காரணத்தினால் தற்கொலை செய்து கொள்ள முயற்சித்தீர்கள் என்பதையும் சொல்லமாட்டேனென்கி றீர்கள். உங்கள் வரலாற்றைச் சொன்னால், உங்கள் மனிதரை வர வழைத்து உங்களை அவர்களிடம் ஒப்படைக்கலாமென்று பார்த் தேன். அதற்கு நீங்கள் இடங்கொடுக்கமாட்டே னென்கிறீர்கள். ஆனால் நீங்கள் தற்கொலை செய்துகொள்ள முயன்றதாக ஒப்புக் கொள்ளுகிறீர்கள். ஒரு மனிதர் மற்றவருடைய உயிரை விலக்கு வது எப்படிக் குற்றமாகிறதோ, அதுபோல, தம் உயிரை விலக்கிக் கொள்வதும் சட்டப்படி குற்றமாகிறது. அதற்குள்ள தண்ட னையை நான் உங்களுக்கு விதிப்பதைத் தவிர வேறு மார்க்கமில்லை ஆனால், உங்களைச் சிறைச்சாலைக்கு அனுப்ப என் மனம் இசைய வில்லை ஆகையால், உங்களுக்கு ஏதாவது சொற்ப அபதாரம் விதிக்கலாமென்று நினைக்கிறேன்.

அந்த ஸ்திரீ:—நான் ஊரைவிட்டுப் புறப்பட்டபோது டிக்கெட் டுக்குக் கொடுத்தபோது பாக்கி இரண்டு ரூபாய் இருந்தது. நான் ஆற்றில் விழப்போவதை உத்தேசித்து, வழியில் இருந்த ஒரு பிச்சைக்காரரிடம் அதைக் கொடுத்துவிட்டேன். என்னிடம் இப் போது இருப்பது என் இடுப்புத் துணிதான்.

டிப்டி கலெக்டர்:—(மிகுந்த இரக்கமும் அநுதாபமும் கொண்டு) உங்கள் தோற்றமும, குரலும், வார்த்தைகளும் நீங்கள் ஏற்கெனவே பெருத்த விசனத்தில் மூழ்கி இருப்பவர்கள் என்ப தைக் காட்டுகின்றன. ஆகையால், உங்களுக்கு சிறைச்சாலை தண் டனை கொடுத்து இன்னமும் உங்களை அதிக விசனத்தி லாழ்த்த எனக்கு இஷ்டமில்லை. ஏதாவது சொற்ப அபராதம் போட்டால், அதைக் கட்டி விடுவீர்கள் என்று பார்த்தேன். அதுவுமில்லை அப ராதம் கொடுக்காவிடில் அதற்கு பதிலாக இவ்வளவு காலம் சிறையி லிருக்க வேண்டுமென்று நான் சட்டப்படி உத்தரவு செய்ய வேண் டும். ஆகையால், நான் சர்க்கார் சட்டப்படி உங்களுக்குப் பத்து ரூபாய் அபராதம், அல்லது, கச்சேரி கலைகிறவரையில் காவல் தண் டனை விதித்திருக்கிறேன். பரோபகாரம் என்கிற தெய்வச் சட்டத் தின்படி நானே என் சொந்தப் பணத்திலிருந்து உங்களுக்காகப் பத்து ரூபாய் கட்டி விடுகிறேன். ஆனால் உங்களைத் தனிமையில்

வெளியில் அனுப்ப எனக்கு இஷ்டமில்லை. என் வீட்டில் தாயார், தகப்பனார், சம்சாரம், குழந்தைகள், தங்கை தமக்கைமார் முதலிய ஜனங்கள் இருக்கிறார்கள். நாங்களும் உங்கள் ஜாதியைச் சேர்ந்தவர்களே! உங்களை வண்டியில் வைத்து எங்கள் வீட்டுக்கு அழைத்துப் போகும்படி சேவகனை அனுப்புகிறேன் என் வீட்டு ஜனங்கள் உங்களையும் எங்கள் சொந்த மனிதராகப் பாவித்து நிரம்பவும் பட்சமாக நடத்துவார்கள். நீங்கள் கொஞ்சகாலம் இருந்து உங்கள் மனப்பிணியை ஆற்றிக் கொள்ளுங்கள். அதற்கு மேலும் எங்கள் வீட்டிலேயே இருக்க வேண்டுமானாலும் இருக்கலாம். உங்களுடைய மனிதரிடம் கொண்டுபோய் விடச் சொன்னாலும் அப்படியே செய்கிறோம் இப்போது உங்களை வெளியில் விட்டால், நீங்கள் மறுபடியும் தற்கொலை செய்துகொள்ள முயற்சிப்பீர்கள். நான் இப்போது செய்யும் பிரஸ்தாபம் சர்க்கார் சட்டத்தின்படி செய்வதல்ல. இது கட்டாயமுமல்ல நீங்களே கட்டாயமாய் என்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கி அப்படிச் செய்ய வேண்டும்— என்று கூறினார்.

அதைக் கேட்ட, அந்த அம்மாள் எவ்விதமான மறுமொழியையும் கூறமாட்டாமல் கீழே குனிந்தபடி நின்றாள். உடனே டிப்டி கலெக்டர் சேவகனை விட்டு வண்டி கொண்டு வரச் செய்தார். சேவகன் அந்த அம்மாளை அழைத்துக் கொண்டுபோய் வண்டியில உட்கார வைத்து டிப்டி கலெக்டருடைய வீட்டில் கொண்டுபோய் விட்டு விஷயங்களையெல்லாம் டிப்டி கலெக்டருடைய தாய் தகப்பன்மார் சம்சாரம் முதலியோரிடம் கூறிவிட்டு வந்துவிட்டான் இந்த வழக்கில் டிப்டி கலெக்டர் காட்டிய தயாள குணத்தையும் பெருந்தன்மையையும் குறித்து ஜனங்கள் அவரை அபாரமாகப் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள். ஊர் முழுதும் இதே பேச்சாக இருக்கிறது. டிப்டி கலெக்டரை விட, அவருடைய வீட்டு ஜனங்கள் அந்த அநாதை ஸ்திரீயை மிகுந்த பிரியத்தோடும், உவப்போடும், அநுதாபத்தோடும் வரவேற்று வருந்தி உபசரித்து அன்னமளித்துத் தங்கள் வீட்டிலேயே இருந்துவிடும்படி செய்திருக்கிறார்களாம். அவ்விடத்திலும் அந்த ஸ்திரீ தான் இன்ன ஊர் இன்னார் என்ற தகவலைச் சொல்லவே இல்லையாம். இதில் இன்னொரு விசேஷம் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது. அந்த அம்மாள் டிப்டி கலெக்டருடைய வீட்டுக்குப் போனவுடன், சேவகனிடம் அவருடைய ஜனங்கள் அந்த அம்மாளின் வரலாற்றைக் கேட்டுத் தெரிந்து

கொண்டவுடனே, அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொருவித மாக அந்த அம்மாளுக்கு உபசார வார்த்தை கூறினார்கள். அவருடைய ஆறு வயதுப் பெண் குழந்தை ஓடி வந்து தன் தாயாரைப் பார்த்து, "அம்மா! இந்த அம்மாளைப் பார்த்தால், நம்முடைய பெரிய அத்தையைப் போல இருக்கிறதம்மா! ஐயோ! பாவம்! கெடிலம் ஆற்றிலா விழுந்து விட்டார்கள்! ஒரு சேலைதானே இவர்களிடமிருக்கிறது. எனக்கு தினம் தினம் அப்பா பட்சணத்துக்காகக் கொடுத்ததை யெல்லாம் நான் உண்டியில் போட்டு வைத்திருக்கிறேனல்லவா. அது இப்போது பதினெட்டு ரூபாய்க்கு மேல் ஆகியிருக்கிறது, அதைப்போட்டு இந்த அம்மாளுக்கு இன்னொரு சேலை வாங்கிக் கொடுங்கள்" என்று சொல்லி உடனே உண்டியை எடுத்துக் கொடுத்ததன்றி, "இந்த அம்மாள் பெயரைச் சொல்ல மாட்டேனென்கிறார்களே. இவர்களைப் பார்த்தால், நல்ல மாதிரியாக இருக்கிறார்கள். நாம் இந்த அம்மாளை குணவதி அம்மாள் என்று கூப்பிடுவோம்" என்றதாம். அதைக் கேட்ட ஊர் ஜனங்கள், "ஆகா விதை யொன்று போட, சுரை யொன்று முளைக்குமா" என்று கூறி அந்தக் குழந்தையின் சிக்கனத்தையும் பெருந்தன்மையும் புத்தி சாலித்தனத்தையும்பற்றி வாய் ஓயாமல் பேசிக் கொண்டே இருக்கிறார்கள்.

—என்று எழுதப்பட்டிருந்த சமாசாரத்தைப் படித்த புஷ்பாவதி, "ஆம்; இதற்கும் இந்த வீட்டாருக்கும் என்ன சம்பந்தம்?" என்றாள்.

சுந்தரமூர்த்தி முதலியார், "இவ்வளவுதானா உன் புத்திசாலித்தனம்! அவள் யாரென்பது தெரியவில்லையா? அவள் தான் நம்முடைய கற்பகவல்லியம்மாள். ராத்திரி புறப்பட்டுப் போனவள் இந்த ஊரில் தற்கொலை செய்து கொண்டால் இன்னார் என்பது தெரிந்து போகுமென்று நினைத்து, ராத்திரி முழுதும் எங்கேயோ இருந்து விடியற்கால வண்டியில் போயிருக்கிறாள்; மறுநாள் காலை பத்து மணி வரையில் கூடவே சகாப் பிரயாணிகள் இருந்திருப்பார்கள். வண்டியில் யாரும் இல்லாத சமயம் பார்த்து ஆற்றில் விழுந்திருக்கிறாள்" என்றார்.

## 18-வது அதிகாரம்

## வெடி குண்டுகள்

மறுநாள் அதிகாலையில் சாமியார் இருவரும் திருச்செந்தூரை விட்டுப் பிரயாணமாய்த் திரும்புங்காலிலும் மதுரையை யடைந்தனர் உதவிச் சாமியார் திவான் சாமியாரை நோக்கி "சுவாமிகளே! பைத்தியக்காரன் கிழித்தது கோவணத்துக்கு உதவியது என்பார்கள். அதுபோல யாரோ ஒரு பைத்தியக்காரன் நம்மைப் புரளி செய்வதற்காக ஏதோ தாறுமாறாக உளறி வைத்ததைக் கேட்டு நாம் திருச்செந்தூர் போனதில் எத்தனை பெருத்த நன்மைகள் ஏற்பட்டன பார்த்தீர்களா!" என்றார்.

திவான் சாமியார், "ஆம். சுவாமிகளே! ஈசனுடைய திருவிளையாட்டுகளே வெளித் தோற்றத்திற்கு அர்த்த மில்லாத பைத்தியக்கார சங்கதிகளாய்த் தோன்றும். ஒவ்வோர் அணுவிலும் ஒரு பெருத்த மலை யவ்வளவு விஷயம் அடங்கி இருக்கும். நாம் இறப்பு பிறப்பாகிய பெருத்த காட்டாற்று வெள்ளத்தில் கிடந்து உருட்டப்படும் கட்டைகளே யன்றி வேறல்ல. இப்போது திருச் செந்தூரில் நடந்த சம்பவ சம்பந்தமாய் நான் உங்களிடம் ஒரு விஷயம் கேட்டுக்கொள்ள எண்ணுகிறேன். நீங்கள் கண்டியூர்ச் சம்பவத்தைப் பெரியவரிடம் வெளியிடாம லிருக்கும் சம்பந்தமாய் எனக்கு ஏற்கெனவே உதவி செய்ததுபோல, இப்போது இந்த விஷயத்திலும் உதவி செய்ய வேண்டும். வீரம்மாளுக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணையி லிருந்து பெரியவர் என் தகப்பனார் என்பது உங்களுக்கு அவசியம் தெரிந்து போயிருக்கும். நான் இறந்து போய்விட்டதாகவே என் தந்தையாரும் மற்ற உலக ஜனங்களும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். என் சம்சாரத்தைப் பற்றி ஏற்பட்ட ஒரு பெரிய சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளும் பொருட்டே நான் இறந்து போனதாக நடிக்க நேர்ந்தது. நான் அவர்களுடைய குமாரன் என்பதை தக்க சமயம் பார்த்து வெளியிட வேண்டும். அது வரையில், நான் அவர்கள் குமாரருடைய சிநேகிதனென்று சொல்லி வைத்திருக்கிறேன். பெரியவர் உங்களிடத்தில் என்னைப் பற்றி அதே தகவல்தான் கொடுத்திருப்பா ரென்று நினைக்கிறேன். ஆகையால், நான் அவர்களுடைய குமாரன் என்ற விஷயத்தை நீங்

கள் தெரிந்து கொண்டதாகவே காட்டிக் கொள்ளாமல், முன் போலவே இருக்கவேண்டும். அதுவுமன்றி, என் சம்சாரம், குழந்தை முதலியோரைப் பற்றி நமக்குக் கிடைத்த செய்தி அவர்களுக்கு எட்டுமானல், அவர்கள் மறுபடி வியாதியில் விழுந்து விடுவார்கள். ஆகையால், அதையும் இப்போது தெரிவிக்க வேண்டாம். இன்னொரு விஷயமும் இருக்கிறது என் தகப்பனரின்மேல் அந்த இராமலிங்கத்தின் சம்சாரம் சொன்ன அவதூறுச் சொல் எவ்வளவு தூரம் உண்மையான தென்பதை அவர்களிடம் கேட்பது மரியாதையல்ல. வேறு யார் மூலமாயாவது அதன் உண்மையைத் தெரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும். அதுவுமன்றி, என் சிறிய தாய் அந்தச் சதியாலோசனையில் எவ்வளவு தூரம் சம்பந்தப்பட் டிருக்கிருள் என்பதைத தெரிந்துகொண்டு, அவள் குற்றமற்றவளாயிருந்தால் மாத்திரம் நாம் அவளைக் கண்டுபிடிக்கவும் பெரியவரிடம் சேர்த்து வைக்கவும் வேண்டும்.'' என்முர்.

உதவிச் சாமியார்:—சுவாமிகளே! அடியேன் தங்களுடைய சித்தம் எப்படியோ அப்படியே நடக்கக் காததிருக்கிறேன். தாங்கள் இப்போது சொன்ன யோசனைகள் எனக்கும் சம்மதமானவைகளே. நாம் இப்போது நேராய்த் திருவையாற்றுக்குப் போகவேண்டாம். திருவடமருதூருக்குப் பக்கத்திலுள்ள சில ஊர்களில், அந்த இராமலிங்கத்தின் சொந்தக்காரர்கள் இருக்கிறார்களென்று நான் ஏற்கெனவேயே சொன்னேனல்லவா. அந்த ஊர்களுள் முக்கியமான இரண்டோரிடங்களுக்கு நாம் போய்த் தந்திரமாக விசாரித்து கிடைக்கக் கூடிய தகவல்களைத் தெரிந்துகொண்டு பிறகு திருவையாற்றுக்குப் போகலாம். தங்கள் தகப்பனர் தத்ரூபம் சிவபெருமானைப் போல இருக்கிறார்கள். அவர்கள் பேரில் ஏற்பட்டது அபாண்டமான புளுகாய்த்தா னிருக்க வேண்டும். யோக்கியமான மனிதர்களுடைய வயிறெரியச் செய்தவர்கள் நன்ரு யிருப்பார்களென்று நினைக்கவேண்டாம். அவர்கள் அழிந்து அதோகதியாய்ப் போயிருப்பார்களென்பது நிச்சயம். அதையும் நாம் விசாரிதது்ப் பார்த்து விடுவோம்'' என்முர்.

திவான் சாமியார் உதவிச் சாமியாருடைய விருப்பத்தின் படியே தாம் மேற்படி ஊர்களுக்கு வருவதாக ஒப்புக்கொள்ள, இருவரும் மதுரையை விட்டுப் புறப்பட்டு ரயில் மார்க்கமாகப் பிரயாணம் செய்து திருவடமருதூருக்கு அருகிலுள்ள குத்தாலம் என்ற

ஊரில் வந்து இறங்கினார்கள். இறங்கியவர்கள் அவ்விடத்திலிருந்து ரஸ்தா மார்க்கமாக நடந்து க்ஷேத்திரபாலபுரம் என்ற சிறிய கிராமத்தை யடைந்து, வேளாளர் தெருவிற்குள் சென்றனர். அந்த வேளாளர் தெருவில் சுமார் இருபது கூரைவீடுகள் இருந்தன. அவ்வீடுகளில் வசித்தோர் அனைவரும் கூலிக்குப் பண்ணைவேலை செய்யும் எளிய மனிதர்களென்பது எளிதில் தெரிந்தது தெருவின் கிழக்குக் கோடியில் பாதி இடிந்து பாழடைந்தும் பாதி கூரைபோர்ததப் பட்டும் இருந்த ஒரு வீட்டு வாசலை அடைந்த உதவிச்சாமியார் ஒரு சாண் உயரம் ஒரு முழ அகலம் ஆறடி நீளததில் மண்ணினால் போடப்பட்டிருந்த அந்த வீட்டின் திண்ணையில் திவான் சாமியாரை உட்காரச் செய்து தாமும் உட்கார்ந்துகொண்டார்; அவ்விடத்திற்கு வருமுன்னமே, அவர் கடைத் தெருவில், ஒரு ரூபாய் செலவு செய்து பழவகைகள், மிட்டாயி தினுசுகள், வெற்றிலைப் பாக்கு முதலிய சாமான்களை வாங்கி ஒரு பெரிய மூட்டையாகக் கட்டிக்கொண்டு வந்திருந்தார். அதுவுமன்றி, திவானிடம் கேட்டு சொற்ப பணத் தொகையையும் வாங்கி மடியில் வைத்துக்கொண் டிருந்தார். இருவரும் எந்த வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டார்களோ அதன் உட்புறத்தில் அப்போது இரண்டு ஸ்திரீகளுக்குள் ஏதோ சச்சரவு நடந்துகொண் டிருந்தது. ஒருத்தி மற்றவளை நோக்கி, "அடி போடி குருட்டு நாயே! இரண்டு கண்களும் அவிந்து, கட்டத் துணியில்லாமல், தின்னச் சோறில்லாமல் நாறிக் கிடக்கிற உனக்கு இவ்வளவு ராங்கி (Rank) யாடி! உன்னுடைய நல்ல ஆம்படையான் இங்கே சம்பாதித்துக் கொட்டி வைததிருக்கிறானடி! எழுந்து வெளியிலே போடி" என்று பலமாக அதட்டிக் கூறினாள்.

மற்றவள், "அடி யென்னடியம்மா இவள் படுத்துகிற பாடு! நீ ஒருவாய்ச் சோறு போட்டு இரண்டு நாளிருக்குமே! பசியினால் கண் இருண்டு வருகிறதே என்று ஒரு வார்த்தை சொன்னால் உனக்கு இப்படி மூக்கின்மேல் கோபம் வருகிறதே! என் கண் கொஞ்சமாவது தெரிந்தால், நான் ஏனம்மா உனக்குத் தொந்தரவு கொடுக்கிறேன்; யாருமற்ற அநாதைக்கு ராங்கி என்னடி வந்திருக்கிறது" என்றாள்.

முதலில் பேசியவள் முன்னிலும் அதிகரித்த கோபங்கொண்டு, "உனக்குக் கண் அவிந்துபோனால், அதற்கு நாங்கள்தானடி பிணை! நீ நன்றாயிருந்தபோது கொள்ளை யடித்ததை யெல்லாம் எங்களிடம் கொடுத்து வைத்திருக்கிறாயா! நாங்கள் ஆண்பாடு பட்டு பெண்

பாடுபட்டுத் தேடினாலும், அது எங்களுடைய வயிற்றுக்கே எட்ட மாட்டே னென்கிறதே! கிழக்கோட்டான் மாதிரி உன்னைக் குந்த வைத்து உனக்கு யாரடி வேளைக்கு ஒரு படி சோறு கொட்டுவார் கள். கண் இல்லாமல் போனால் என்னடி! நகர்ந்துகொண்டே நாலு வீட்டுக்குப்போய் இரந்து தின்றால், உன்னுடைய கௌரவம் குறைந்து போகுமாடி! பொழுது விடிந்தவுடனே உன் முகத்தில் விழித்தால், அன்று முழுவதும் ரத்தக் காயமே படுகிறது. எழுந்து முதலில் வெளியில் போடி!'' என்று முன்னிலும் அதிக பலமாய்க் கூச்சலிட்டாள்.

குருடி, "அடி யென்னடியம்மா நீ துள்ளிக் குதிக்கிறது! என் னுடைய உடன் பிறந்தான் வீட்டில் நான் குந்துவதற்குக் கூட எனக்கு பாத்தியம் இல்லையா அம்மா! எல்லா அதிகாரமும் உனக்கே வந்துவிட்டதா! மலைபோல என் உடன் பிறந்தானும், அவனுடைய வீட்டுக்காரியான நீயும் இருக்கிறீர்களே! நான் பிச்சைக்குப் புறப் பட்டால், அதனால் உங்களுக்குத்தானே பங்கம் ஏற்படும் அம்மா! உனக்குப் புண்ணியம் உண்டு. உன் காலில் விழுந்து நான் லக்ஷம் தரம் கும்பிடுகிறேன்; நீ எனக்குச் சோறு போடா விட்டாலும், பரவாயில்லை, என்னைப் பிச்சை யெடுக்க மாத்திரம் அனுப்ப வேண் டாம். நான் குந்தி இருப்பதற்கு மாத்திரம் கொஞ்சம் உத்தரவு கொடம்மா! நான் பட்டினி கிடந்து இப்படியே மாண்டுபோகிறேன்'' என்று நயமாகக் கெஞ்சி வேண்டினாள்.

முதலில் பேசியவள், "அடிபோடி மாயமாலக்கள்ளி! மலை மலை யாக மகனையும் மகளையும் பெற்று ஊரிலே விட்டு விட்டு இங்கேவந்து யார் கழுத்தை யறுக்கிறாய்! நீ இங்கே கிடந்து மாண்டால், உன் பிணம் சும்மா சுடுகாட்டுக்குப் போய் விடுமா! அதற்குப் பத்து முப் பது அழுதால்தானே உன் பிணம் சுடுகாடு போகும். எங்களுக்கேன் அந்தத் தொல்லை. ஊரில் சத்திரம் சாவடி இல்லையா. அங்கே போய் மாண்டுகிட. பறையர் எடுத்துக்கொண்டுபோய் கோவிந்தாக் கொள்ளி போடட்டும்'' என்று முன்னிலும் அதிக அதட்டலாகக் கூறித் தாண்டிக் குதித்தாள்.

குருடி, "அடேயப்பா! உனக்கு வந்திருக்கிற அதிகாரமே! ஊருக்குப் போயிருக்கும் என் உடன் பிறந்தான் வருவதற்குள் ளேயே, சர்வ அதிகாரத்தையும் செலுத்திப் பார்த்து விடுகிறாயே!

அம்மா! தாயே! இன்னம் ஒருநாள் பொறம்மா! அவன் வந்து விடட்டும். அவனிடத்தில் ஒரு வார்த்தை சொல்லிவிட்டு நான் உடனே ஊர்ச் சாவடிக்குப் போய் விடுகிறேன். பிறகு நீ ஏகபோகமாய் இருந்து வாழுடியம்மா'' என்ருள். அவளது சொற்களைக் கேட்ட மற்றவளுக்கு அடக்க இயலாத பெருத்த கோபம் பொங்கி யெழுந்தது. அவள் ஆவேசம் கொண்டவள் போலத் துள்ளிக் குதித்து, "அடி கிழக்குரங்கே; இத்தனை நாளும் என் கையால் உனக்குக் கொட்டின சோறு கணக்கு வழக்கில்லே. உன் நாறல் புடவையை நான் துவைத்துக் கொடுத்து லக்ஷம் தடவை இருக்கும். துரும்பை எடுத்துத் துரும்போடு போட உனக்குக் கடைப்படவில்லை கெட்ட கேட்டுக்கு, நீ எனக்கு சாபமா கொடுக்கிருய்! எழுந்து போடி வெளியில்'' என்று கூறி, அவ்விடத்தில் இருந்த சாணிச் சட்டியை எடுத்துக் குருடியின் தலையில் கவிழ்த்துத் தனது கையிலிருந்த விளக்கு மாற்ருல் இரண்டு மூன்றடிகள் பட் பட்டென்று கொடுத்து விட்டாள். திடீரென்று தனக்குக் கிடைத்த மரியாதையைக் கண்ட குருடி, "ஐயோ! ஐயோ! அம்மா! அம்மா! அடிக்கிருளே! கொல்லுகிருளே! கேள்வி முறை இல்லையா! ஐயோ! அப்பா!'' என்று கூக் குரலிட்டு அலறத் தொடங்கினுள்.

அவ்வாறு உள்ளே நடந்த அகோர யுத்தத்தைக் கண்ட திவான் சாமியார் திடுக்கிட்டு நடுங்கிப்போய், "என்ன சுவாமிகளே! இது! யார் இவர்கள்! இந்தக் கஷ்டத்தை யெல்லாம் நாமேன் பார்க்க வேண்டும்?'' என்ருர், உடனே உதவிச் சாமியார், "சுவாமிகளே! தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இந்தக் கலிகாலத்தில் தர்மதேவதை அதிககாலம் பொறுக்கிறதில்லை. நல்லவர்களுக்கு சன்மானம் செய்வதற்குக் கொஞ்ச காலதாமசம் ஏற்பட்டாலும் ஏற்படலாம். அக்கிரமிகளுக்கு கைமேல் பலன் கிடைத்து விடுகிறது. அதோ அடிபடுகிற குருடி யார் தெரியுமா? அவள்தான் தங்களுடைய சம்சாரத்தையும் குழந்தையையும் வீட்டை விட்டுத் துரத்திவிட்ட குடிகேடி பாருங்கள் தெய்வத்தின் தண்டனையை! தாங்கள் வரும் சமயத்தில், தங்களுக்குத் தெரியும்படி கடவுள் அவளுக்கு எப்பேர்ப்பட்ட மரியாதை நடத்தி வைக்கிருர் என்று பாருங்கள். அவளுக்கு இரண்டு கண்களும் அவிந்துபோய் விட்ட மாதிரியும் இருக்கிறது. முற்பகல் செய்யின், பிற்பகல் விளையுமென்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது பார்த்தீர்களா!'' என்ருர். அதைக் கேட்ட திவான் சாமியார் மிகுந்த மன இளக்கமும் இரக்

கமு மடைந்து, "ஐயோ பாவம்! இவளுடைய நிலைமை நிரம்பவும் பரிதாபகரமாக இருக்கிறது! நீங்கள் உள்ளே போய் அந்தப் பெண்பிள்ளையை அடக்கி, அடிக்கவேண்டாமென்று சமாதானப் படுத்துங்கள்" என்றார்.

உடனே உதவிச் சாமியார், "அம்மா! தையலம்மை! அடித்தது போதும்; நிறுத்து, நிறுத்து" என்று உரக்கக் கூறியபடி உள்ளே நுழைந்து, "தையலம்மை! தையலம்மை! அடிக்க வேண்டாம்" என்று மறுபடியும் கூறி அவளை அடக்கினர். திடீரென்று உள்ளே நுழைந்து பேசிய உதவிச் சாமியாரை நிமிர்ந்து பார்த்த தையலம்மை என்ற ஸ்திரீ சடக்கென்று பெட்டிப் பாம்பாய் அடங்கிப் போய்த் தான் செய்த காரியத்தைக் குறித்து மிகுந்த லஜ்ஜையும் அவமானமும் அடைந்தவளாய்க் குன்றிப்போய், "ஓகோ சாமியார் ஐயாவா! வாருங்கள் வாருங்கள் இவளுடைய தமையனர் பெண் வீட்டுக்குப் போய் இன்று சரியாய் ஒருவாரமாகிறது. வீட்டில் அரிசியா, உப்பா, புளியா ஒரு சாமானுக்கு வழி இல்லை. நான் எங்கெங்கோ போய்க் கஷ்டப்பட்டுத் தேடி வந்து ஒரு நாளைக்கு ஒரு வேளை சாப்பிடுவது பகீரதப் பிரயத்தனமாக இருக்கிறது. இவள் ஒருத்தி எனக்குப் பெருத்த சநியனய் வந்து இங்கே குந்திக்கொண்டு என் உயிரை உறிஞ்சி விடுகிறாள். ஒரு பெண்பிள்ளை நான் என்ன செய்கிறது! சுவாமிகளே யோசித்துப் பாருங்கள்" என்றாள்.

உடனே உதவிச் சாமியார் நிரம்பவும் நயமாகவும் அன்பாகவும் பேசத் தொடங்கி, "மற்ற சங்கதியை யெல்லாம் நாம் பின்னால் பேசலாம். நீ முதலில் கொஞ்சம் ஜலம் கொண்டு வந்து, இவள் மேல் வழியும் சாணியை அலம்பிவிடு. உன் புருஷன் திரும்பி வருகிறவரையில் உனக்கு வேண்டிய சாப்பாட்டுச் செலவுக்கு நான் பணம் கொடுத்துவிட்டுப் போகிறேன்." என்றார்.

அவரது சொல்லைக் கேட்ட தையலம்மை உடனே ஒரு பானையில் தண்ணீர் எடுத்து வந்து, அதை அந்தக் குருடியின் தலையில் கொட்டி அவளது உடம்பை சுத்தப்படுத்தி விட்டு, வேறொரு துணியையும் கொணர்ந்து அவளுக்கு உடுத்தி விட்டாள். குருடி அதைக் கண்டு நிரம்பவும் சந்தோஷ மடைந்தவளாய், "நல்ல சமயத்தில் யாரோ ஒருவர் வந்து சேர்ந்தார். இல்லா விட்டால், இந்நேரம் இந்

தப் படுபாவி என்னை அடித்து இழுத்துக் கொண்டுபோய் ரஸ்தா வில் தள்ளியிருப்பாள். இன்று நல்ல காலந்தான்'' என்று தனக் குத் தானே எண்ணியபடி ஆந்தைபோல விழித்துக்கொண்டு மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

உடனே உதவிச் சாமியார் தையலம்மையை நோக்கி, "ஏனம்மா! நான் இதற்கு முன் ஒருதடவை இங்கே வந்தது உனக்கு நினைவிருக்கிறதா!'' என்றார்.

தையலம்மை:—இருக்கிறது.

உதவிச்சாமியார்:—உன் புருஷர் என்றைக்குத் திரும்பி வருவ தாகச் சொல்லிவிட்டுப் போனார்?

தையலம்மை:—நேற்றைக்கு வரவேண்டியது; இன்னம் வர வில்லை. என்ன காரணமோ தெரியவில்லை.

உதவிச்சாமியார்:—நான் மாயூரத்துக்குப் போகிறேன். போகும் போது என் சிநேகிதரான உன் புருஷரைப் பார்த்து விட்டுப் போகலாமென்ற நினைவுண்டாயிற்று. அதனால்தான் இப்படி வந் தேன் அவர் ஊரில் இல்லை. சரி, மறுபடி திரும்பி வரும்போது வந்து அவரைப் பார்க்கிறேன். அவருக்குக் கொடுக்க வேண்டுமென்று, கொஞ்சம் பழம் மிட்டாயி யெல்லாம் வாங்கிவந்தேன். அது திண்ணை யில் இருக்கிறது. வெளியில் வந்து அதை நீ வாங்கிக்கொள்.'' என்று கூறினார். அதைக் கேட்ட தையலம்மை மிகுந்த களிப்பும் பூரிப்பும் அடைந்து, "எங்களுக்கு இவ்வளவு அன்போடு பழம் முதலியவைகளை வாங்கிக்கொண்டு வந்து கொடுக்கிறதற்கும் இந்த உலகத்தில் அவ்வளவு பிரியமான மனிதர்கள் இருக்கிறார்களா! சரி; கொடுங்கள்'' என்று கூறியவண்ணம் அவரைத் தொடர்ந்து வாச லிற்கு வந்து சேர்ந்தாள்.

உடனே உதவிச்சாமியார் பெரிய மூட்டையாகக் கட்டிவைத் திருந்த பழங்களையும், மிட்டாயிப் பொட்டலத்தையும், வெற்றிலை பாக்கையும் எடுத்துக் கொடுக்க, அவ்வளவு பெருத்த வெகுமதி தங்களுக்குக் கிடைக்குமென்று கனவிலும் எதிர்பார்க்காத தைய லம்மை மிகுந்த பிரமிப்பும் மட்டிலடங்கா மகிழ்ச்சியும் குதூகல மும் அடைந்தவளாய் அவைகளை வாங்கி மடியில் கட்டிக் கொண்

டாள். உடனே உதவிச்சாமியார் தமது மடியிலிருந்த ஐந்துரூபாய் பணத்தை எடுத்து, "நீ சாப்பாட்டுக்கு இல்லாமல் பட்டினி கிடக்கிறதாகச் சொன்னாயே. இந்தப் பணத்தை வைத்துச் செலவு செய்துகொள். நான் வந்துவிட்டுப் போனதாக உன் புருஷனிடம் சொல்" என்றார். பணத்தையும் வாங்கிக்கொண்ட தையலம்மை திடீரென்று குபேர சம்பத்தில் வைக்கப்பட்ட நித்திய தரித்திரனைப் போலானாள். அவளது மனம் அடைந்த சந்தோஷம் இவ்வளவுதான் என்று கணக்கிட்டுச் சொல்வது சிறிதும் இயலாத காரியம். தனது பரம ஏழ்மை நிலைமையில் கடவுளே நேரில் வந்து அம்மாதிரியான உதவிகளைச் செய்கிறாரென்று அவள் நினைத்து மெய்ம்மறந்துபோய் உதவிச்சாமியாரைப் பலவாறு ஸ்தோத்திரம் செய்யத் தொடங்கினாள்.

உடனே உதவிச்சாமியார் அவளை நோக்கித் தனிவான குரலில் பேசத்தொடங்கி, "ஏனம்மா! உள்ளே இருக்கிற பெண்பிள்ளைக்கு புருஷனும் பிள்ளையும் பெண்ணும் இருந்தார்களே! அவர்களிடம் இந்தப் பெண்பிள்ளை இராமல், ஏன் இங்கே வந்து இருக்க வேண்டும்?" என்றார்.

தையலம்மை, "அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்கள்! திருவடமருதூரில் ஜவுளிக் கடைக்கார முதலியாரை இவர்கள் உயிரோடு வைத்துக் கொளுத்திவிட்டு எல்லா சொத்துகளையும் சுருட்டிக்கொண்டு ஊரை விட்டுப் புதுச்சேரிக்கல்லவா ஓடிப்போய் அங்கே ஒளிந்துகொண்டிருந்தார்கள். போய் ஆறு மாதத்திற்குள் இவர்களுடைய குடும்பமே நசித்து நாசமாய்ப் போய்விட்டது. இவள் மெத்தைப் படியிலிருந்து வழுக்கிக் கீழே விழுந்தாளாம். மூளை கலங்கிப் போய்விட்டது மூன்று நாள் வரையில் உணர்ச்சி யில்லாமல் கிடந்தாளாம் அவர்கள் வைத்தியம் செய்ததில் தெளிவு ஏற்பட்டதாம். ஆனால் அதுமுதல் இவளுடைய கண்பார்வை அடியோடு கெட்டுப் போய் விட்டதாம். இவளுடைய புருஷன் என்ன செய்தாலும் திடீரென்று புதிய பணக்காரன் ஆனானல்லவா! புதுச்சேரிக்குப் போய்க் குடியில் இறங்கியதன்றி யாரோ தேவடியாளையும் வைத்துக்கொண்டானாம். அவள் பெருத்த ரோகியாம். அவளுடன் சேர்க்கை ஏற்பட்டு ஆறு மாசத்திற்குள், அவனுடைய உடம்பு முழுதும் காயும் பழமுமாய் முண்டு முண்டாய்க் கிளம்பியதோடு கைகால்களின் விரல்களெல்லாம் குறையத் தொடங்கி விட்

டனவாம். உடம்பு முழுதும் பொத்துப் போய், சீழை வெளிப் படுத்த வாரம்பித்தது. வைத்தியர்கள் அது தீராத குஷ்டரோக மென்று சொல்லி விட்டார்களாம். அப்பனைவிட டம்பாச்சாரி தனத் தில் பன்மடங்கு அதிகமாயிருந்த அவனுடைய பிள்ளை அந்தத் தொற்று வியாதி தங்களுக்கும் பரவுமென்று பயந்து அவனை சர்க் கார் குஷ்டரோக ஆஸ்பத்தியில் கொண்டுபோய் விட்டு விட்டானும். இப்போதும் அவன் அங்கேதான் புழுத்து நாறிக் கிடக்கிருனென்று கேள்வி. பிள்ளை என்ன செய்தான் தெரியுமா! புதுச்சேரியிலுள்ள ஒரு பெரிய தனவந்தவருடைய பெண்ணை எப்படியோ மயக்கி அவ ளைக் கெடுத்துவிட்டான். அந்தப்பெண் ரதிபோலவே இருப்பாளாம். அவன் ஐந்தாறு மாசத்தில் தன்னிடமிருந்த பணத்தை யெல்லாம் செலவு செய்து விட்டானும். அதற்குமேல், அங்கே இருக்க முடி யாமல் போய்விட்டதாம். அண்ணுமலை யென்பதல்லவா அவனு டைய பெயர் அந்த அண்ணுமலையும், அவனது தங்கையான கமல வல்லியும், ஷை தனிகருடைய பெண்ணைத் திருட்டுத்தனமாக அழைத்துக்கொண்டு யாரிடத்திலும் சொல்லாமல் எவருக்கும் தெரி யாதபடி இரவோடிரவாய் வேறே எந்த ஊருக்கோ ஓடிப்போய் விட் டார்களாம். இரண்டு கண்களும் அவிந்துபோன நிலைமையிலிருந்த இவள் வேறே நாதியில்லாமல், யாரையோ துணைக்கு அழைத்துக் கொண்டு, என் கழுத்தை அறுக்கிறதற்கு இங்கே வந்து சேர்ந்தாள். இப்போது கூட, இந்த ஊர் கிராம முன்சீப்புக்கு ஓர் உத்தரவு வந்ததாம். திருவடமருதூர்க் கிழவர் பிழைத்துக் கொண்டாராம். கமலவல்லி எங்கிருந்தாலும் பிடித்தனுப்ப வேணடுமென்று உத் தரவு வந்ததாம். அவர் இங்கே வந்து பெண் எங்கே இருக் கிருளென்று இவளிடம் கேட்டுப் பார்த்தார். இவள் தனக் கொன்றும் தெரியாதென்று சொல்லிவிட்டாள். அவ்வளவோடு அவர் போய்விட்டார். இவள் எனக்கு நீங்காத கால்கட்டாய் வந்து சேர்ந்திருக்கிருள்" என்ருள்.

உதவிச்சாமியார், "ஓகோ அப்படியா சங்கதி! சரி சரி! புதுச்சேரியில் யாரோ தனவந்தருடைய பெண்ணை அண்ணுமலை அபகரித்துக் கொண்டு போனுனென்று சொன்னுயே! அவர் இன் ஞர் என்ற தகவல் உனக்குத் தெரியுமா?" என்று அலட்சியமாக வினவினர்.

தையலம்மை, "இவள் வந்த ஆரம்பத்தில், அதை யெல்லாம் தன் தமயனரிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். அவர் புதுச்சேரி

யில் ரெட்டியார் பாளையம் என்ற இடத்தில் இருக்கிற ஒரு வியாபாரியாம். அவருடைய பெயர் துரைக்கண்ணு முதலியாராம்'' என்றாள்.

உதவிச்சாமியார், "ஓகோ! சரிதான். அக்கிரமம் எத்தனை நாளைக்குத்தான் நிலைத்து நிற்கப் போகிறது; எல்லாம் இப்படித்தான் நசித்துப்போகும். சரி; எனக்கு நேரமாகிறது. என் குரு காத்திருக்கிறார்கள். நான் போய்வருகிறேன். குருடியை உபத்திரவிக்காதே பாவம். ஏதோ உனக்குக் கிடைப்பது கூழோ கஞ்சியோ, அதில் அவளுக்கும் ஒரு வாய் கொடு. உனக்கு அதனால் குறைவு ஏற்படாது'' என்று கூறியவண்ணம் புறப்பட ஆயத்தமானார்.

உடனே திவான் சாமியார், உதவிச்சாமியாரைத் தனியாக அழைத்து ரகஸியமாக, "புதுச்சேரியிலிருந்த வரையில் கமலவல்லியின் நடத்தை எப்படி இருந்ததென்பதைப் பற்றி விசாரித்துப் பாருங்கள்'' என்றார். உடனே உதவிச்சாமியார் தையலம்மையை நோக்கி, "ஏனம்மா! அதிருக்கட்டும். பையன் டம்பாச்சாரித்தனம் பண்ணியதன்றி, ஒரு தனவந்தருடைய பெண்ணையும் கெடுத்து அழைத்துக்கொண்டு போய்விட்டதாகச் சொன்னாயே. கமலவல்லி எப்படி இருந்தாளென்பது உனக்குத் தெரியுமா?'' என்றார்.

தையலம்மை, "கமலவல்லியா! நான்கூட ஒரு நடை புதுச்சேரிக்குப் போயிருந்தேனல்லவா. அப்போது நான் பார்த்தவரையில், அவள் கெட்ட வழியில் போனவளாகத் தெரியவில்லை. ஆனால் உயர்ந்த நகைகள் போட்டுக் கொள்வது, அழகழகான புடவைகளையும் ரவிக்கைகளையும் உபயோகப்படுத்துவது, சொந்த மோட்டார் வண்டி வைத்துக்கொண்டு உலாவப் போகிறது முதலிய பைத்தியங்கள் அவளையும் பலமாகப் பிடித்திருந்தன. அந்த மாதிரி அண்ணனும், தங்கையும் பணத்தை அலட்சியமாக வாரி விட்டு வெகு சீக்கிரத்தில் ஓட்டாண்டியாய் விட்டார்களாம். அதனால்தான் அவர்களுக்கு அந்த ஊரிலும் கொஞ்சம் கடன் ஏற்பட்டுப் போய்விட்டதாம். அதனால் அங்கிருந்து ரகஸியமாகப் புறப்பட்டு வேறே எங்கேயே போய் விட்டார்களாம்'' என்றாள்.

அதைக் கேட்டுக்கொண்ட சாமியார்களிருவரும் அங்கிருந்து புறப்பட்டு மறுபடி குற்றாலம் ரயில்வே ஸ்டேஷனை அடைந்து அன்

றைய இரவு வண்டியிலேயே புதுச்சேரிக்குப் பிரயாணமாயினர். அவ்வாறு பிரயாணம் செய்த காலத்தில் திவான் சாமியார் தமக்குள் எண்ணமிடலானார். "இராமலிங்கத்துக்குக் குஷ்டரோகம் உண்டானதும், அவனுடைய சம்சாரத்துக்குக் கண்கள் அவிந்து போனதும் எவ்வளவு சீக்கிரத்தில் நிறைவேறி இருக்கின்றன! மையனும் பலவாறாய்க் கெட்டலைகிறவனாக இருக்கிறான் இதில் கமலவல்லியொருததி மாத்திரம் கெடாமல் இருப்பது நிரம்பவும் அரிய சம்பவந்தான். என் தகப்பனார் செய்யும் சிவபூஜை வீணாய்ப் போகுமா! எங்கள் குலதெய்வமாகிய சிவபெருமான் பரம பக்தராகிய என் தந்தையரின் மனைவிக்குக் கெடுமதியை ஒருநாளும் கொடுக்கமாட்டான்! இப்போதும் அவள் பரிசுத்தமாகவேதானிருப்பா ளென்பதற்குத் தடையில்லை. இப்போது எம்பெருமான் நல்ல செய்திகளையே கொடுத்துக் கொண்டிருப்பது போலவே அவளையும் நான் வெகு சீக்கிரம் கண்டுபிடித்து, என் தந்தையாரிடம் சேர்த்துவைக்கும்படி அவனே அருள்புரிய வேண்டும்." என்று தமக்குத் தாமே எண்ணமிட்டு கடவுளைத் தியானம் செய்தபடி பிரயாணம் செய்தார்.

சாமியாரிருவரும் விழுப்புரத்தில் இறங்கி அவ்விடத்திலிருந்து பிரிந்துபோகும் கிளை ரயிலில் ஏறி மறுநாட் காலையில் புதுச்சேரியை அடைந்தார்கள். அடைந்தவர்கள் தமது ஸ்நானம், நியம நிஷ்டைகள், சாப்பாடு முதலியவைகளை முடித்துக் கொண்டபின், தையலம்மை தெரிவித்த இடத்தை அடைந்து துரைக்கண்ணு முதலியார் என்ற வியாபாரியைப் பற்றித் தந்திரமாக விசாரிக்கலாயினர். தாங்கள் பரதேசிக ளாதலால். தங்களை எவரும் மதித்து மறுமொழி கூறமாட்டார்க ளென்பதை அவர்கள் உணர்ந்து பலபேர்களிடம் நிரம்பவும் பணிவாகவும், அவர்கள் சந்தேகங் கொள்ளாத படியும் கேட்டு, துரைக்கண்ணு முதலியாரின் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டனர். அந்த முதலியார் தமது பெண் ஓடிப்போனதனால் ஏற்பட்ட அவமானத்தையும் விசனத்தையும் தாங்க மாட்டாதவராய் மனமுடைந்து, அதுமுதல் வியாதியில் வீழ்ந்து இளைத்து மெலிந்து மகா கேவலமான நிலைமையி லிருந்ததாகவும், அவரது வர்த்தகத்தை அவர் கவனிக்க இயலாது போகவே! அது சீர்குலைந்து நஷ்டமாய் முடிந்து போனதாகவும், அவர் நிரம்பவும் எளிய நிலைமையில் வெகு சீக்கிரம் இறந்துபோகத் தக்கவராய் இருப்பதாகவும் அவர்கள் தெரிந்து கொண்டனர். அந்த மகா துக்க

காமான வரலாற்றைக் கேட்கவே, திவான் சாமியார் மிகுந்த மனக் கலக்கமும் வேதனையும் அடைந்து, "அடாடா! இவர்கள் எத்தனை குடும்பங்களை அழித்து விட்டார்கள்! எங்களுடைய வாழ்வு சீர்குலைந்தது போலல்லவா, இந்த தனிகரின் வாழ்வு சீர் குலைந்து போய்விட்டது! ஆகா! இவ்வளவு கேவலமான நிலைமையி லிருப்பவரிடம் நாம் எப்படிப் போய் நம்முடைய விஷயத்தை விசாரிப்பது" என்றார்.

உதவிச் சாமியார், "நம்மாலான வரையில் முயற்சி செய்து பார்க்கலாம். கடவுள் துணை செய்வா ரென்ற நம்பிக்கை என் மன சில் பூர்த்தியாக இருக்கிறது." என்றார்.

திவான் சாமியார், "சரி; போய் பார்க்கலாம்." என்றார்.

உதவிச் சாமியார், "அதிருக்கட்டும் தாங்கள் எல்லா ஊர்க ளுக்கும் விளம்பரம் அனுப்பினீர்களே. புதுச்சேரி பிரெஞ்சுக்காரர் ஆளுகைக்கு உள்பட்டதாயிற்றே இந்த ஊருக்குத் தாங்கள் விளம் பரம் அனுப்பியதாக நினைவிருக்கிறதா?" என்றார்

திவான் சாமியார் "அனுப்பின மாதிரிதான் இருக்கிறது. இருந்தாலும், இது இவ்வளவு பெரிய பட்டணமா யிருக்கிறதே! அவர்கள் இன்னார் என்பதை அதிகாரிகள் கண்டு பிடிக்க சாத்தியப் பட்டிரா தென்றே நினைக்கிறேன்." என்றார்

உதவிச் சாமியார், "தங்கள் சிற்றன்னையைப் பற்றிய செய்தி யைத் தெரிவிப்போருக்கு ஆயிரம் ரூபாய் சன்மானம் அளிப்ப தாய்த் தாங்கள் வெளியிட்டிருக்கிறீர்களல்லவா, அதை நாம் ஒரு வேளை இந்த மனிதருக்குக் கொடுக்க நேர்ந்தாலும் நேரலாம். ஓர் ஆயிரம் ரூபாயைத் தனியாக எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்" என்றார்.

திவான் சாமியார் ஆயிரம் ரூபாய் நோட்டொன்றை எடுத்து உதவிச் சாமியாரிடத்திலேயே கொடுத்து சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி உபயோகிக்கும்படி கூறினார். பிறகு அவர்களிருவரும் புறப்பட்டு துரைக்கண்ணு முதலியார் இருந்த ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தனர். அது நிரம்பவும் சிறிய வீடாக இருந்தது. துரைக் கண்ணு முதலியார் துரும்புபோல மெலிந்து பாயில் படுத்திருந்தார்.

அவரது மனைவி அவருக்கு ஏதோ உபசரணை புரிந்து கொண்டிருந்தாள். இருவரது முகங்களும் மகா துக்ககரமாகவும், பரம வேதனைக்கு இருப்பிடமானவையாகவும் காணப்பட்டன. அவர்களுக்கு வேறு இரண்டு சிறிய குழந்தைகள் இருந்தனவாறுலும், அதனுல் இவர்கள் சிறிதும் ஆறுதலடையாமல் இரவு பகல் மன வேதனையில் ஆழ்ந்து விமோசனமின்றிக் கிடந்தனர், தாம் அருமையாய் வளர்த்த பெண் முகமுழிப்பில்லாமல் போய் விட்டதே என்ற துயரம் அவர்களை வதைத்ததைக் காட்டிலும், அவள் ஓடியதால், தங்களுடைய குடும்பத்திற்கு என்றைக்கும் மாருத இழிவும், பழிப்பும் ஏற்பட்டு விட்டனவே என்ற வேதனையே, அவர்களுடைய உயிரைப் பருகிக் கொண்டிருந்தது. நமது சாமியார்களிருவரும் வெளியிலிருந்தபடி, முதலியாருடன் தாம் ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்து ஐந்து நிமிஷநேரம் பேச வேண்டுமென்று செய்தி சொல்லி அனுப்பினர். அவர்களது வருகையைச் சிறிதும் எதிர்பார்த்தவரன்ருதலால் முதலியார் இரண்டு பரதேசிகள் தம்மிடம் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசப் போகிருர்களென்று ஐந்து நிமிஷ நேரம் சிந்தனை செய்து பார்த்தார். ஒன்றும் புலப்படவில்லை. அவர்கள் எங்கேயாவது இருக்கும் மடம் முதலிய தர்மங்களுக்குப் பணவுதவி கேட்க வந்திருப்பார்களென்றே அவர் நினைத்து, "அடாடா! நான் நல்ல தசையிலிருக்கும்போது இவர்கள் வராமல், தரித்திர நிலைமையிலிருக்கும்போதா வரவேண்டும். இதுவும் கடவுளின் சோதனைதான்." என்று எண்ணியவராய் அவர்களை உள்ளே வரவழைத்து உட்காரச்செய்து, அவர்களை நோக்கி, "என்னைக் கடவுள் பலவகையில் சோதனை செய்து முடிவில் என் உயிரையும் கொண்டு போக முயற்சிக்கும் நிலைமையில் சுவாமிகள் இந்த ஏழையை நாடி வந்திருக்கிறீர்கள். தங்கள் வருகை வீண் பிரயாசையாகவே முடியுமன்றி, அதிகமான பலனைத் தரப் போகிற தில்லையே என்ற எண்ணம் இப்போதே என்னை உபத்திரவிக்கிறது" என்று கூறினர்.

உதவிச் சாமியார் அவரைப் பார்த்து சந்தோஷமாகப் புன்னகை செய்து, "கனவானே! நாங்கள் தங்களிடம் ஏதோ தர்ம விஷயமாக வந்திருக்கிறதாக எண்ணுகிறீர்களென்பது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. அப்பேர்ப்பட்ட பொருளுதவி யாதொன்றையும் நாடி நாங்கள் இங்கே வரவில்லை. தங்களைப்பற்றி மற்றவரிடம் விசாரித்துக் கொண்டே நாங்கள் இங்கே வந்திருக்கிறோம். தங்களைக் கடவுள் பல வகையில் சோதனைக்கு ஆளாக்கி இருக்கிரு

றென்பதையும் நாங்கள் கேள்வியுற்றோம். நாங்கள் கோரி வந்தது தங்களுடைய வாய் வார்த்தையாகிய உதவியேயன்றி வேறொன்று மில்லை எங்களுக்கு ஒரு முக்கியமான தகவல் தெரியவேண்டி யிருக்கிறது. அதைத தங்கள் மூலமாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமென்று வந்தோம்." என்று நிரம்பவும் விநயமாகக் கூறினர்.

துரைக்கண்ணு முதலியாரின் மன சஞ்சலம் ஒருவாறு குறைந்தது. அவர் துணிபும் தெளிவு மடைந்து, " தங்களுக்கு என்ன தகவல் தெரிய வேண்டும் ?" என்றார்.

உதவிச் சாமியார், "தங்களுடைய குடும்பம் எந்தப் பாவியால் இந்த நிலைமைக்கு வந்ததோ, அவன் இப்போது எங்கே இருக்கிறானென்பது தெரியவேண்டும். அவ்வளவுதான். அதிகமொன்று மில்லை " என்றார்.

துரைக்கண்ணு முதலியார், முக மாறுபாடடைந்து திடுக்கிட்டுப் போய் அவர்களிருவரையும் உற்றுப் பார்த்து, " ஓகோ ! அப்படியா ! எதற்காக அதைத் தாங்கள் கேட்கிறீர்கள் ? தங்கள் இருவருக்கும் அந்த மனிதருக்கும் என்ன சம்பந்தமோ ?" என்றார்.

உடனே உதவிச் சாமியார் தமது சட்டைப் பையில் ஆயத்தமாக வைததிருநத விளம்பரங்களை எடுததுக் கொடுத்தார். அவைகளை வாங்கிப் படித்த துரைக்கண்ணு முதலியார் பிரமித்து ஸ்தம்பித்துத் தமது மூக்கின்மீது விரலை, வைத்து, "என்ன ஆச்சரியம், இது ! அடாடா ! அவர்கள் எப்பேர்ப்பட்ட காரியம் செய்திருக்கிறார்கள் ! உயிருடனிருந்த மனிதரை இறந்து போனதாக வைததுக் கொளுத்த அவர்களுடைய மனம் எப்படித்தான் துணிந்ததோ தெரிய வில்லையே. அவர்கள் பார்வைக்கு மனிதர்களாய்த் தோன்றினாலும், அவர்களை பேய் பூதங்களுடைய வகுப்புகளில்தான் நாம் சேர்க்கவேண்டும். ஆனாலும் ஈசன் கைமேல் கூலி கொடுத்து விட்டான். அவனுடைய தாய் கண்ணவிந்து தடவுகிறாளாம் ; தகப்பன் குஷ்டரோக ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர்ந்தானாம், பிள்ளை இப்போது என்ன நிலைமையில் இருக்கிறானோ ! ஆனால், அவனுடைய தங்கை மாத்திரம் இங்கே இருந்த வரையில் தேக சுத்தம் கெடாமல் இருந்ததாகவே எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் அவளுக்கும் அண்ணனைப் போலக் கொஞ்சம் கூத்தாடி புத்தி. அவ்வளவே யன்றி வேறில்லை " என்றார்.

அதைக் கேட்ட உதவிச் சாமியார், "தாங்கள் இப்போது சொன்ன வார்த்தை எங்களுக்கு மனக் கலக்கத்தை உண்டாக்கி விட்டதே! மகன் இப்போது என்ன நிலைமையிலிருக்கிறானோ என்பதிலிருந்து, அவனுடைய இருப்பிடமும் தங்களுக்குத் தெரியாதோ என்று சந்தேகிக்கும்படியாக இருக்கிறது" என்றார்.

துரைக்கண்ணு முதலியார், "ஆம்; அந்தத் தகவல் எனக்குத் தெரியாதுதான். நாங்கள் பஞ்சவர்ணக் கிளிபோலவும், உயிருக்குயிராகவும் வளர்த்துவந்தபெண் எங்கள் வீட்டைவிட்டுப் போனபின்" "சே! அவளுடைய முகத்தில்கூட இனி நாம் விழிக்கக் கூடாது" என்று நானும், என் சம்சாரமும் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறோம். அவள் எங்கே இருக்கிறாளென்ற விவரத்தைக்கூட நாங்கள் தெரிந்துகொள்ள நினைக்கவில்லை. அவள் வீட்டை விட்டுப் போய் ஒரு மாசத்திற்குப் பிறகு, அவளிடத்தி லிருந்து ஒரு கடிதம் வந்தது. தான் அறியாத்தனத்தினால் மதி கெட்டு வந்து விட்டதாகவும், எங்களைப்பற்றிய நினைவும் விசனமும் பொறுக்க முடியவில்லையென்றும், எங்கள் புகைப்படம் அனுப்பும்படியும், தான் அந்தப் புருஷனிடத்தில்சௌக்கியமாய் இருப்பதாகவும், ஆனால் கொஞ்ச பொருளுதவி செய்ய வேண்டுமென்றும் நிரம்பவும் கெஞ்சி மன்றாடி எழுதி இருந்தாள். அந்த துன்மார்க்கியின் விஷயத்தில் எங்கள் இருவருக்கும் கொஞ்சமும் இரக்க முண்டாகவில்லை. நாங்கள் கடிததைக் கிழித்தெறிந்து விட்டுப் பேசாமல் இருந்துவிட்டோம். அவளுக்கு மறுமொழி எழுதவே இல்லை" என்றார்.

உதவிச் சாமியார், "அந்தக் கடிதத்தில் அவர்கள் என்ன விலாசம் கொடுத்திருந்தார்களென்பது நினைப்பில்லையா?" என்றார்.

துரைக்கண்ணு முதலியார், "தஞ்சாவூர் ஹிடிபோஸ்டு மாஸ்டர் மேல் விலாசம் பார்வையிட்டு சுந்தரமூர்த்தி முதலியாரிடம் கொடுப்பது என்று எழுதியிருந்தாள். சே! அந்த நாயின்பெயரை வைத்து எழுதினால், அவன் செய்த காரியத்தை நாங்கள் ஆமோதிப்பது போலாகுமென்று நினைத்தும் நான் அதற்குப் பதில் எழுதவில்லை" என்றார்.

அதைக் கேட்ட சாமியாரிருவரும் ஏமாற்றமும் ஏக்கமும் அடைந்து மேலே என்ன பேசுவதென்பதை யறியாமல் தவிக்கத் தொடங்கினர். அப்பொழுது ஒருபக்கமாக நின்று கொண்டிருந்த

துரைக்கண்ணு முதலியாருடைய சம்சாரம், "மறுபடி, ஐந்தாறு மாசத்திற்கு முன்பு ஒருகடிதம் வந்தது. இப்போது இரண்டு தினங்களுக்கு முன் ஒரு கடிதம் வந்தது. இரண்டையும் பிரித்துக் கூடப் பார்க்காமல் பெட்டியில் போட்டு வைத்திருக்கிறோம். அந்தக் கடிதங்களை வேண்டுமானால் உடைத்துப் பார்த்து மேல் விலாசத்தைத் தெரிந்து கொள்ளலாம்" என்றாள்.

உடனே உதவிச் சாமியார் மிகுந்த களிப்படைந்து, 'ஆம் அம்மணி! அவைகளை உடைத்துப் பார்த்து இப்போதைய விலாசத்தை மாத்திரம் சொல்லுங்கள். அதுவே எங்களுக்குப் போதுமானது" என்றார்.

உடனே துரைக்கண்ணு முதலியார், "அடி கடிதங்களை நீ உடைக்காதே. அப்படியே எடுத்துவா, சுவாமிகளே! நீங்கள் கூட அந்தக் கடிதங்களை இங்கே பிரிக்கவேண்டாம். கடிதங்களில் பலவித அசங்கியங்கள் இருக்கலாம். அவைகளைப் பார்க்க எங்கள் மனம் இன்னம் அதிகமாய்ப் புண்பட்டுப் போகும் ஆகையால், இரண்டு கடிதங்களையும் வாங்கிக் கொண்டு போய் உங்கள் பிரியப்படி செய்து கொள்ளுங்கள். அவளுடைய நினைவே எங்களுக்கு உண்டாகக்கூடாதென்றிருந்தோம் நீங்கள் வந்து அந்த நினைவை உண்டாக்கி விட்டீர்கள்" என்றார்.

சாமியார் இருவரும் அவரது விருப்பப்படி செய்வதாய் ஒப்புக் கொண்டனர். முதலியாரது மனைவி சிறிது நேரத்தில் இரண்டு கடிதங்களுடன் திரும்பி வந்து அவைகளைக் கீழே வைக்க, துரைக்கண்ணு முதலியார் அவைகளைக் கையாலும் தொடாமல், உதவிச் சாமியாரே எடுத்துக்கொள்ளும்படி செய்தார். உடனே சாமியார் இருவரும் அவருக்கு உபசார வார்த்தைகள் கூறி நமஸ்கரித்த பின் அந்த வீட்டைவிட்டு வெளியில் சென்றனர். அப்பொழுது உதவிச் சாமியார் திவான் சாமியாரை நோக்கி, "சுவாமிகளே! பார்த்தீர்களா இவ்விருவர்களுடைய மேலான குணத்தை! எது போனாலும் போகட்டும், மான மொன்றே பிரதானம் என்ற கொள்கையைக் கடைப் பிடித்து தங்களுடைய உயிரை விட்டுக்கொண் டிருக்கிறதைப் பார்த்தீர்களா! இவர்களுடைய வர்த்தகம் போய் விட்டது! இப்பொழுது இவர்கள் நிரம்பவும் ஏழ்மைத்தன்மையடைந்து கஷ்டப்படுகிறார்கள்! விளம்பரத்தில் கண்ட சன்மானத் தொகையைக்

கொடுக்கலா மென்று கேட்டு வாங்கினே னல்லவா. இவர்களுடைய மனவுறுதியைப் பார்த்த வுடன், அதை எடுத்துக் கொடுக்க எனக்கு பயமாய்ப் போய்விட்டது. நான் கொடுத்தால், அவர்கள் வாங்கிக் கொள்ள மாட்டார்க ளென்ற ஓர் எண்ணம் என் மனசில் தோன்றி விட்டது. அதனால் பேசாமல் வந்து விட்டேன். என்னுடைய உத்தேசம் என்ன தெரியுமா? இந்த ஆயிரம் ரூபாய் நோட்டை ஒரு கடிதத்தில் வைத்து தபால் மூலமாய் அனுப்பி விடுவோம். அதில் நமக்கு நாம் கோரிய விலாசத்தைக் கொடுத்தற்காக சன்மான மென்று எழுதி யனுப்பி விடுவோம். நம்முடைய விலாசத்தை நாம் அதில் கொடுக்காமல் இருந்து விட்டால் அதை அவர் திருப்பி அனுப்பவும் முடியாமல் போய் விடும். பணத்தை அவர் உபயோகித்துக் கொள்வார்'' என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார், "ஆம், அப்படித்தான் நானும் நினைத்தேன். ஆனால், இவருக்கு ஏற்பட்டிருக்கும் அபாரமான கஷ்டத்திற்கு ஆயிரம் ரூபாய் ஒரு பொருட்டாயிராது ஆகையால், ஐயாயிரம் ரூபாயாக வைத்தனுப்பி விடுவோம். கடிதத்தை ரிஜிஸ்டர் செய்தனுப்பி விடலாம்.'' என்றார்.

உதவிச் சாமியார், "கடிதத்தை ரிஜிஸ்டர் செய்தால், அனுப்புவோருடைய மேல் விலாசம் அதில் இருக்க வேண்டுமே.'' என்றார்.

திவான் சாமியார், "அனுப்புதல் திருவடமருதூர் மேகலிங்கப் பண்டாரம் என்று வெளியில் எழுதி விடுவோம். உள்ளே வைக்கும் கடிதத்தில், அந்த விலாசம் பொய் விலாச மென்றும், அது தபால் விதியை அநுசரிப்பதற்காகக் கொடுக்கப்பட்டிருக்கிற தென்றும், அந்த விலாசத்திற்கு அனுப்பும் கடிதம் முதலியவை திரும்பி வந்து விடுமென்றும் எழுதி விடலாம்.'' என்றார்.

உதவிச் சாமியார் அதை ஏற்றுக் கொண்டார். உடனே இருவரும் நேராக அந்த ஊர்த் தபால் கச்சேரிக்குச் சென்று அவர்கள் எண்ணியபடி ஐயாயிரம் ரூபாய் நோட்டுகளை வைத்து ரிஜிஸ்டர் செய்து அனுப்பிய பின் தம்மிட மிருந்த கடிதங்களை எவருக்கும் தெரியாதபடி பிரித்துப் பார்க்க வேண்டுமென்ற கருத்தோடு மறைவான ஓரிடத்தை நோக்கிச் சென்றனர்.

---

## 19-வது அதிகாரம்

## கலியாணக் கோலம்—கிரகப்பிரவேசம்

கோகிலாம்பாள் புரசைப்பாக்கம் பங்களாவை விட்டு வண்ணாரப்பேட்டை பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்த பிறகு காலை சுமார் 10-மணிக்கு வக்கீல் ராமராவ் பூஞ்சோலையம்மாளால் அனுப்பப்பட்டு வண்ணாரப்பேட்டை பங்களாவுக்கு வந்துசேர்ந்து, முதல் நாள் போலீஸ் இன்ஸ்பெக்டரால், தனக்கு நேரிட்ட துன்பத்தையும், அதிலிருந்து தான் தப்பிவந்த விதத்தையும் கோகிலாம்பாள் கூறித் தெரிந்து கொண்டார். அது சம்பந்தமாய் இன்ஸ்பெக்டர் மீது வழக்குத் தொடருவதற்குப் போதிய சாட்சியம் இருந்த தானாலும், அதனால் கோகிலாம்பாள் கச்சேரிக்குப் போய் உபத்திரவத்திற்கு இலக்காக நேருமென்ற காரணததினால், தாம் அவர்மீது எவ்வித நடவடிக்கையையும் எடுத்துக் கொள்வது அநுசிதமான காரியமென்று அவர்களிருவரும் தீர்மானித்தனர். தாம் எவரும் கச்சேரிக்கு வர இயலாத நிலைமையில் இருப்பது பற்றி, வக்கீலே சகலமான காரியங்களையும் நடத்தி, கண்ணபிரானை விடுவித்து அழைதது வருவதற்குத் தேவையான பிரயத்தனங்களையெல்லாம் செய்யுமாறு கோகிலாம்பாள் அவரிடம் கேட்டுக்கொண்டு, அதற்காக அவருக்கு மறுபடியும் இருநூறு ரூபாய் பணங் கொடுத்தாள்; கண்ணபிரானை நீதிபதி ஜாமீனில் விடும் பக்ஷத்தில் அவனை அவ்விடத்திற்குக் கொணர்ந்துவிட்டுப் போகவும், விடாத பக்ஷத்தில், வந்து தகவல் தெரிவிக்கவும் வேண்டிக் கொண்டதன்றி, வக்கீலுக்குத் தெரியவேண்டிய சகலமான தகவல்களையும் தெரிவித்து அவரைக் கச்சேரிக்கு அனுப்பி வைத்துத் தனது மணாளனுக்கு மூன்று வேளையிலும் ஆகாரம் கொண்டுபோய்க் கொடுத்து விட்டு வருவதற்கு ஒரு வேலைக்காரனை அமர்தகி, அன்றைய பகல் போஜனத்தை அவன் மூலமாகக் கொடுத்தனுப்பிவிட்டு, அன்றைய பகல் முழுதும் வக்கீலின் வருகையை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்த வண்ணம் வேதனைக் கடலில் ஆழ்ந்திருந்தாள்.

வக்கீல் வாடிய முகத்துடன் மாலையில் அங்கு வந்து சேர்ந்து "அம்மா! நான் என்னால் ஆனவரையில் எவ்வளவோ திறமையாகப்

பேசிப்பார்த்தேன். பிரயோசனம் இல்லாமல்போய்விட்டது அவரை ஜாமீனின்மேல் விடக்கூடா தென்று போலீசார் பலமாக ஆட்சேபித்து எழுதிவிட்டார்கள். இந்த நீதிபதி சுத்த பயங்கொள்ளி; போலீசாரென்றால், அவருக்குக தடைநடுக்கம். போலீசார் தாம் இன்னம் 10-தினங்களுக்குள் தங்களுடைய விசாரணையை முடித்து, கிடைக்கக்கூடிய சாட்சியங்களை யெல்லாம் சேகரம் செய்துகொண்டு விவரமான குற்ற அறிக்கை அனுப்புவதாகவும், அதுவரையில், அவர் சப்ஜெயிலிலேயே இருக்க அநுமதி கொடுக்க வேண்டுமாகவும் தெரிவித்துக்கொண் டிருக்கிறார்கள். அவருடைய வீட்டிலிருந்து போலீஸ் கமிஷனராலேயே திருட்டு சொத்துகள் எடுக்கப்பட்டிருக்கின்றனவாதலால், நாம் அவரை ஜாமீனில் விடும் விஷயமாய் ஹைகோர்ட்டில் மனுச் செய்துகொண்டால் கூட, அநுகூலமாகுமென்று நான் நினைக்கவில்லை ஆகையால், நாம் இந்த 10-தினங்களும் பல்லைக் கடித்துக்கொண்டு இருப்போம். விசாரணை சமயத்தில் நான் என்னால் எவ்வளவு சாமர்த்தியமாக வேலைசெய்ய முடியுமோ அவ்வாறு செய்து அவரைத் தப்பவைக்கப் பிரயத்தனப்படுகிறேன். அதுவரையில் நீங்கள் தவறாமல் அவருக்கு ஆகாரம் அனுப்பி, தைரிய வார்த்தை சொல்லிக்கொண் டிருங்கள். என் மேல் விலாசத்தை நான் எழுதிக் கொடுத்துவிட்டுப் போகிறேன். என்னால் ஏதாவது காரியம் ஆகவேண்டுமானால், அவ்விடத்திற்கு ஆளை அனுப்புங்கள்.'' என்று கூறி விலாசத்தை எழுதிக் கொடுத்தபின், அவ்விடத்தை விட்டுத் தமது வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். தனது மணாளன் ஜாமீனின் மேல் வரவில்லையே என்றும், பத்து நாள்களுக்குப் பிறகாவது அவன் விடுதலை யடைவானோ மாட்டானோ வென்றும் நினைத்து நினைத்து அளவற்ற சஞ்சலமும் வேதனையும் கொண்டு துக்க சாகரததில் மூழ்கியபடி இருந்து வந்தாள். கற்பகவல்லியம்மாளை எப்படியாவது தான் கண்டுபிடித்து அழைத்து வரவேண்டுமென்ற ஆவலினால் அவளது மனம் துடித்ததானாலும், ஏராளமான வேலைக்காரர்கள் சென்று நாலா பக்கங்களிலும் தேடிப் பயனின்றித்திரும்பி வந்து விட்டனராதலால், தான் மறுபடி எவ்விதமான முயற்சிசெய்வதென்பதை அறியாதவளாய்த் தத்தளித்திருந்தாள். கண்ணபிரான் சிறைச்சாலையில் இருக்கிற வரையில், தனது தாய் கடிதம் எழுதிவிட்டுப் போனது முதலிய எந்த வரலாறையும், தான் அவனுக்குத் தெரிவிக்காமலிருப்பதே உசிதமானதென்று நினைத்து, அதுபோல நடந்து கொண்டாள். ஆயினும், கோகிலாம்பாளுக்குப் போலீஸ் இன்ஸ்

பெட்டால் ஏதேனும் அபாயம் நேரிட்டிருக்குமோவென்று கண்ண பிரான் எண்ணி வதைபட்டிருந்தானாதலால், தான் க்ஷேமமாய் வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டதாக மாத்திரம் அவனுக்குச் செய்தி சொல்லி யனுப்பி வைத்தாள். அவர்களிருவரும் அந்த விசாரணைத் தேதியை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்தபடி நெருப்புத் தணலின் மேல் இருப்பவர்போல் தவித்துக் கொண்டிருந்தனர்.

பூஞ்சோலையம்மாளோ ரகஸியத்தில் வண்ணாரப்பேட்டைக்கு அடிக்கடி ஆளை அனுப்பி அவ்விடத்து நிலைமையைத தெரிந்து கொண்டு உள்ளூற மனமாழ்கி யிருந்தாளானாலும், சௌந்தரவல்லி யின் கலியாணத்திற்கு ஆகவேண்டிய முஸ்தீபுகளைச் செய்வதில் தனது கவனத்தைச் செலுத்தி வந்தாள். புஷ்பாவதி புரசைப்பாக் கத்திலேயே இருந்து, சௌந்தரவல்லியோடு கூடிக்கூடி ஆலோசனை செய்து, சுமார் ஐம்பதினாயிரம் ரூபாய் வரையில் அவளிடமிருந்து பறித்து, அதை சுந்தரமூர்த்தி முதலியாரிடம் கொடுக்க, அவர் அடிக்கடி அங்கே வருவதும், அப்போதே அந்தக் குடும்பத்தாருக்கு மாப்பிள்ளை ஆய்விட்டவர் போலவும் நடந்து சகலமான உரிமைகளை யும் அதிகாரங்களையும் வகித்துக் கலியாணத்துக்குக் தேவையான ஆடையாபரணங்கள் முதலியவைகளைச் சேகரம் செய்வதும், மைலாப்பூர் பங்களாவிற்குப் போய் அவ்விடத்தில் ஆகவேண்டிய காரியங்களை முடிப்பதும், பூஞ்சோலையம்மாளின் பந்து ஜனங்களது வீடுகளுக்குப் போய், அவர்களுக்குத் தக்க சமாதானம் கூறிக் கலி யாணத்திற்கு அழைப்பதுமாய்ப் பொழுதைப் போக்கினார்.

அவர்களெல்லோரும் ஆவலோடு எதிர்பார்த்த கலியாண தினம் நெருங்கியது. அந்த தினத்திற்கு மூன்று தினங்களுக்கு முன்னரே சௌந்தரவல்லியும் புஷ்பாவதியும் நகசிகை பரியந்தம் நக்ஷத்திரச் சுடர்கள்போல இருந்த வைர ஆபரணங்களையும், தகத் தகாயமாக மின்னிய தங்கப் பாளங்கள் போலிருந்த ஜரிகைச் சேலைகளையும் அணிந்து மைதீட்டிப் பொட்டுகளின்மேல் பொட் டிட்டு பலவகைப்பட்ட புதிய நாகரிகப் பின்னல்களால் தமது அளக பாரத்தை அழகுபடுத்தி உயர்ந்த ஜாதிப் புஷ்பங்களைச் சூட்டிக் கொண்டு வெகு சுந்தரமாகவும், வசீகரமாகவும் அற்புத தேஜ ஸோடும் உல்லாஸமாக இருக்கத தொடங்கினர் தாம் பூலோகத்தி லிருப்பதையே அவர்கள் மறந்து சுவர்க்கலோகத்தி லிருப்பதாகவே எண்ணிப் பூரித்து மெய்ம்மறந்து போயிருந்தனர். அதுபோலவே

சுந்தரமூர்த்தி முதலியாரும் ஏராளமான ஆபரணங்களாலும், உயர்ந்த ஆடைகளாலும் தம்மை அலங்கரித்துக் கொண்டு, மூன்று நாட்களுக்கு முன்னரே மணப்பந்தலில் உட்கார ஆயத்தமாய் விட்டார். சுந்தரமூர்த்தி முதலியார் நிரம்பவும் திறமையாக நடந்து கொண்டமையால், பூஞ்சோலையம்மாளைச் சேர்ந்த பந்து ஜனங்களுள் பெரும்பாலோரும் வந்து சேர்ந்தனர். அன்று காலையிலேயே எல்லோரும் மைலாப்பூராரது பங்களாவிற்குப் போய் அன்றைய இரவில் நிச்சயதார்த்தம் முதலிய பூர்வாங்கங்களையெல்லாம் நிறைவேற்றி விடுவதென்ற தீர்மானத்துடனிருந்தனராதலால், அன்றைய தினம் காலையில் சுமார் இருபத்தைந்து மோட்டார் வண்டிகள் வந்து சேர்ந்தன. பூஞ்சோலையம்மாள், அவளது பந்து ஜனங்கள், பணிமக்கள், கலியாணவதூவரர்கள், சுந்தரமூர்த்தி முதலியாரைச் சேர்ந்தவர்கள் முதலியோர் சுமார் அறுபது ஜனங்கள் புறப்பட்டுப் போய் மைலாப்பூரை யடைந்து புதிய சம்மந்தியின் பங்களாவில் தங்களுக்காகப் பிரத்தியேகமாய் ஒழித்து விடப்பட்டிருந்த பாகத்தில் இறங்கினர்.

புஷ்பாவதிக்கு நிச்சயிக்கப்பட்டிருந்த இடம் உண்மையில் அவர் கூறியபடி மகா சிறப்புவாய்ந்த மிகமிக உயர்வான இடம். பூஞ்சோலையம்மாளது பங்களாவை விட அது நான்கு மடங்கு அதிக விசாலமானதாகவும், பன்மடங்கு அதிகரித்த அலங்காரமும் வேடிக்கைப் பொருட்களும் நிறைந்ததாகவு மிருந்தது

அவர்கள் அபாரமான செல்வமும், செல்வாக்கும் வாய்ந்தவர்களாதலால், அந்த பங்களா தத்ரூபம் தேவேந்திர சபைபோல எங்கும் நவமணிகளால் அலங்கரிக்கப்பட் டிருந்த தன்றி, ஜெகஜ்ஜோதியாக மின்னிய அலங்காரங்களுடன் நூற்றுக் கணக்கான சீமான்களும், சீமாட்டிகளும் வந்து நிறையப் பெற்றிருந்தது. பெரிய ஜங்ஷன்களில் ரயில் தொடர்கள் எப்போதும் வந்து போய்க்கொண்டிருப்பது போல மோட்டார் வண்டிகள் நூற்றுக் கணக்கில் வந்து கனவான்களையும் அவரது பத்நிமார்களையும் குழந்தைகளையும் இறக்கி விட்டுத் திரும்பிப் போனபடி இருந்தன. அந்த பங்களா ஒரு தனிப் பட்டணம்போலவே இருந்தது. ஒருவர்போலவே டாலிடவாலிகள் சட்டை, நிஜார், தலைப்பாகை முதலியவை தரித்திருந்த சேவகர்களும், போலீஸ் ஜெவான்களும், சுமார் ஆயிரம் பேர்கள் இருந்திருப்பர். எங்கு பார்த்தாலும் முத்துக் கொட்டகைகளும்,

பவழத் தோரணங்களும், பல வர்ணங்களில் இயற்றப்பட்ட மின்சார விளக்குகளும், ஓட்டு வேலைகளுமே மயமாக நிறைந்திருந்தன. பார்க்கு மிடமெல்லாம் வெல்வெட்டு ஸோபாக்களும், வழுவழுப்பான கருங்காலி சாய்மான நாற்காலிகளும், பூத்தொட்டிகளுமே காணப்பட்டன. பங்களாவின் தரை முழுதும் மகா மிருதுவாக இருந்த இரத்தின கம்பளங்களே மயமாகப் பரப்பப்பட்டிருந்தன. ஒரு பக்கத்தில் மாதுரியமான சிற்றுண்டிகள் எப்போதும் வழங்கப்பட்டன. இன்னொரு புரத்தில் முதல் தரமான விருந்துச் சாப்பாடு நூற்றுக் கணக்கான ஜனங்களுக்கு நடந்துகொண்டே இருந்தது; தஞ்சை ஜில்லாவி லிருந்து மகா பிரக்யாதி பெற்றவர்களான நான்கு ஜதை தங்க நாகசுரக்காரர்களும், நான்கு ஜதை பாண்டு வாத்தியக்காரர்களும், வெகு ஸொகுசாக நடனம் செய்யத்தக்க தாசிமார்களும் வந்து ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு ஜதையாக இருந்து தத்தம் திறமையைக் காட்டி தெய்வ கீதம் முழங்கி, கந்தருவ நாட்டியம் ஆட வாரம்பித்து விட்டனர் வாய்ப்பாட்டு, புல்லாங்குழல், வீணை ஜலதரங்கம், கொனக்கோல் முதலியவைகளில் தேர்ச்சியும் கியாதியும் பெற்ற ஏராளமான வித்வான்கள் வந்து நிச்சயதார்த்தத்தன்று முதலே தமது கச்சேரிகளை ஆரம்பித்துக் கொண்டனர். புஷ்பாவதியை மணக்க ஏற்பாடா யிருந்த மணமகன் அசிஸ்டெண்ட் கலெக்டர் உத்தியோகத்தி லிருப்பவராதலால், அவரைக் கருதி வெள்ளைக்கார துரைமாரும் துரைசானிகளும், போலீஸ் கமிஷனர், ஜில்லா கலெக்டர், கவர்னருடைய காரியதரிசி, பிரசிடென்சி மாஜிஸ்டிரேட்டுகள், போலீஸ் இன்ஸ்பெக்டர்கள், டிப்டி சூபரின்டென்டெண்டுகள் முதலியோரும் வந்து போகத் தொடங்கினர். முதல்நாள் புஷ்பாவதியும், சொந்தரவல்லியும் மங்கள ஸ்நானம் செய்து அற்புதமாக அலங்கரித்துக் கொண்டு முததுப் பந்தல்களின் கீழ் அமர்ந்து கொண்டனர். ஆயிரக் கணக்கில் சீமாட்டிகள் வந்திருந்தனராலும், வைரக் கம்மல்களணிந்து கொண்டிருந்தவர்களான சுமார் நூறு சீமாட்டிகளே அவர்களிடம் நெருங்கி நலங்கு ஊஞ்சல் லாலி முதலிய சுபகாரியங்களை நடத்த அநுமதிக்கப்பட்டனர். பூஞ்சோலை யம்மாளும் அந்தக் கும்பலில் காணப் பட்டாளானாலும், அந்த அம்மாள் தனது மூத்த குமாரியும் ஒன்றாகச் சேர்ந்து அத்தகைய வைபவங்களை யடைய வில்லையே என்ற விசனத்திலாழ்ந்தவளாய் ஒரு மூலையில் மறைவாக உட்கார்ந்திருந்தாள். ஊஞ்சலும், ஸ்திரீகளின் விளையாடல்களும், நாகசுரக் கச்சேரிக

ளும், போட்டி சங்கீதங்களும், கேளிக்கைக் கச்சேரிகளும், பல வகைப்பட்ட சங்கீத கச்சேரிகளும் அன்றைய இரவில் வெகு நேரம் வரையில் மகா வசீகரமாகவும் அமோகமாகவும் நடந்தேறின. எல்லோருக்கும் சந்தனம், நிச்சய தாம்பூலம் முதலியவை வெகு ஆடம்பரமாக வழங்கப்பட்டன. அவ்வளவோடு நிறுத்தி எல்லோ ரும் நித்திரையில் ஆழ்ந்தனர். நிச்சயதார்த்த கலியாணம் இனிது நிறைவேறியது. எல்லோரும் விருந்துண்டு, சங்கீத சாகரத்தில் மிதந்து, மெய் மறந்து இன்பகரமான துயிலில் ஆழ்ந்து போயின ராகுலும், சுந்தரமூர்த்தி முதலியார், சௌந்தரவல்லி, புஷ்பாவதி, அவளுக்கு வரிக்கப் பட்டிருந்த மாப்பிள்ளையான அழகிய மணவாள முதலியார் ஆகிய நால்வர் மாத்திரம் சகிக்க வொண்ணாததும் கட் டுக் கடங்காததுமான இன்பகரமான மனவெழுச்சியும் பூரிப்பு மடைந்து பசி, தாகம், களைப்பு முதலிய உணர்ச்சி யெதையும் பெறாமல், தாம் அதுவரையில் கண்டநுபவிக்காத புதிய சுவர்க்க போகத்தை அடையப் போகிறோம் என்று எதிர்பார்த்து ஆவலே மயமாய் நிறைந்து வெகு பாடுபட்டுத் தமது பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர் புஷ்பாவதி எப்படியாகிலும் தனது மணாளனை ஒரு முறையாகிலும் பார்த்துவிட வேண்டுமென்று நினைத்து மேல்மாடத்தில் அவர் இருந்த விடுதியில் தனது பார்வையைச் செலுத்தி, அவரைத் திருட்டுத் தனமாகப் பார்த்துவிட்டாள். அழகுத் திரளாக இருந்த அவரது வசீகர வடிவம் அவளது மனத் தில் புகைப்படம் போலப் பதிந்துபோகவே, அவள் அதையே மனனம் செய்து, அதனால் உண்டான இன்பத் தேனை அருந்திய படி இரவு முழுதும் தூக்கமின்றி ஆநந்த சாகரத்தில் மிதந்து கிடந்தாள். அது போலவே, அழகிய மணவாள முதலியார் என் னும் யௌவனப் புருஷர் தாம் எந்தக் கட்டழகியின் படத்தைக் கண்டு காதலுற்று உருகித் தத்தளித்தாரோ அந்த அதியற்புத ரூபலாவண்ய மடவன்னத்தின் நிஜவடிவத்தை எப்போது பார்த்து ஆநந்திக்கப் போகிறோம் என்று எண்ணி எண்ணிக் கட்டிலடங் காத விரகவேதனை யடைந்து எவ்விடத்திலும் இருக்கை கொள்ளா மல் அங்குமிங்கும் திரிந்து தமது அடையாளத்தைப் பிறர் காணாத படி ஆடைகளால் மறைத்துக்கொண்டு கும்பலில் புகுந்து, தூரத்தி லிருந்தபடி முத்துப் பந்தலின் கீழிருந்த இரண்டு மணப்பெண்களை யும் பார்த்தார். தாம் படத்தில் கண்ட வடிவம் இன்னம் பதினா யிரம் மடங்கு அதிகரித்த எழிலும், ஜோதியும், அலங்காரமும்

வாய்ந்தவளாய் நாணித் தலைகுனிந்து உட்கார்ந்திருந்ததான கண் கொள்ளாத வசீகரக் காட்சியைக் கண்டு, "ஆகா! என் பாக்கியமே பாக்கியம்! இவ்வளவு அபாரமான அழகோடு கூடியபெண் இந்த உலகத்தில் வேறு எவருக்கும் வாய்த்திருக்க மாட்டாள். என் சிநேகிதனை சுந்தரமூர்த்தியைக் கட்டிக் கொள்ளப்போகிற பெண்ணுக்கு குறைந்தது இருபது வயசாவது இருக்கலாமென்று நினைக்கிறேன். அவளும் அழகாயிருக்கிறாளானாலும், இவளுடைய காலழகுக்குக் கூட அவள் இணையாகமாட்டாள். மற்ற எந்த அம்சத்திலும், சுந்தரமூர்த்தி எனக்கு ஈடல்லவானாலும், இந்தப் பெண்ணின் அதிரூப லாவண்யத்தை உத்தேசித்தே நான் இந்த சம்பந்தத்திற்கு இசைந்தேன். நான் இப்போது நேரில் பெண்ணைப் பார்த்ததில், என் மனம் பூரித்துப் பொங்குகிறதேயன்றி அதிருப்தியடையக் காரணமில்லை. இந்தப் பெண்ணோடு நான் தனியாக இருந்து பூர்த்தியான சந்தோஷமடையுங்காலம் வர, குறைந்தது இன்னும் இரண்டு தினங்களாவது பிடிக்கும் அதுவரையில், நான் எப்படி இந்த வேதனையைப் பொறுத்திருக்கப் போகிறேன்." என்று தமக்குத் தாமே எண்ணமிட்டவராய் சௌந்தரவல்லியின் மீது வைதத விழியை எடுக்காமல் வெகு நேரம் வரையில் இருந்து தம்மை யாராவது கண்டு கொள்ளப் போகிறார்களே யென்ற அச்சத்தினால் தூண்டப்பட்டவராய் அப்பால் சென்று அந்த இரவு முழுதும் இமைகளையே மூடாமல் விரகத் தீயினால் தகிக்கப்பட்டவராய் இருந்து அரும்பாடுபட்டுப் பொழுதைப் போக்கினார்.

பொழுது விடிந்தது. முகூர்த்த லக்னம் காலையிலேயே வந்ததாகையால், ஜனங்களெல்லோரும் விடியற்காலையிலேயே எழுந்து ஸ்நானம் செய்து அழகான உடைகள் தரித்து நன்றாக அலங்கரித்துக்கொண்டு கலியாணத்தை நடத்த ஆயத்தமாயினர். எட்டுஜதை வாத்தியக் காரர்களும் பல திக்குகளிலுமிருந்து மங்கள கீதம் பாடி அண்டம் செவிடுபடும்படி அபாரமானப் பெருமுழக்கம் செய்தனர். முதல்நாள் வந்ததைக் காட்டிலும் அன்றைய தினம் இன்னம் அதிகரித்த ஜனக்கும்பல் வந்து கூடிக்கொண் டிருந்தது பெருத்த மண்டலேசுவராது சிம்மாசனம் போல பெரிய இரண்டு மணிமண்டபங்களின் கீழ் அமைக்கப்பட்ட உயர்ந்த வெள்ளிப் பீடங்களின் மேல் மணப்பிள்ளைகள் அமர்ந்து மாங்கலிய தாரணத்திற்கு முன் நடக்கவேண்டிய சடங்குகளைச் செய்தனர். பிறகு கலியாணப்பெண்கள் வருவிக்கப்பட, அவர்கள் இருவரும் நான்கு நான்கு தோழிப்

பெண்களினிடையில் நாணித் தலைகுனிந்து வந்து அவரவரது மண மகனுக்குப் பக்கத்திலிருந்த ஆசனங்களில் அமர்ந்து கொண்டனர். அழகிய மணவாளருக்குப் பக்கத்தில் புஷ்பாவதியும், சுந்தரமூர்த்தி முதலியாருக்குப் பக்கத்தில் சௌந்தரவல்லியும் அமர்ந்துகொள்ள, ஒவ்வொரு படியண்டையிலும் ஏராளமாகக் கூடியிருந்த புரோகிதர்கள் வேதமந்திரங்களைக் கூறப் பெரு முழக்கஞ்செய்து ஹோமம் முதலிய சடங்குகளைச் செய்யத் துவக்கினர். தங்களது மனோரதம் நிறைவேறப்போவதை எதிர்பார்த்து புதுமணமக்கள் நால்வரும் கட்டிலடங்காதமனவெழுச்சியும், பூரிப்பும், பேராவலும், ஆநந்த நிறைவும்கொண்டு மெய்ம்மறந்து பரமவேதனையும், பரம சுகமும் கலந்த புதுமையான மன நிலைமையில் இருந்தனர். அவர்களது ஹிருதயம் திடுக்திடுக்கென்று அடித்துக் கொண்டிருந்தது. மணப் பிள்ளைகள் இருவரும் ஏராளமான ஜனங்களின் திருஷ்டி தம்மீது வீழ்ந்திருப்பதை உணர்ந்து, தமது பார்வையைத் தம்தம் மணவாட்டிகளிருந்த திக்கில் திருப்பாமல் வேறு பக்கங்களில் திருப்பிக் கொண்டிருந்தனர். பூர்வாங்கச் சடங்குகள் முடிய கூறைச் சேலைகள், திருமாங்கலியம் முதலியவைகளைத் தங்கத் தட்டில் வைத்துப் புரோகிதர் அவைகளை உயர்த்திப் பஞ்சாதி சொல்லத் தொடங்கினர். வாத்தியக்காரர்கள் அதுவே சமயமென்று தமது முழுத் திறமையையும் புலப்படுத்தி மங்கள கீதம்பாடி தேவ துந்திபிபோல முழக்கினர். புரோகிதர்களும் இதர வைதிகர்களும் வேதமந்திரம் ஜெபித்தனர். ஏராளமாகக் கூடியிருந்த சுமங்கலி ஸ்திரீகள் கலியாண வைபோகம் பாடினர். ஆயிரக்கணக்கில் நிறைந்திருந்த ஜனங்கள் யாவரும் சுவர்ண பிம்பங்கள் போல அழகாக வீற்றிருந்த மணமக்களின் மேலும் மணப்பெண்களின் மேலும் வைத்த விழியை வாங்காமல் ஆநந்த மயமாய் நினைந்து வீற்றிருந்தனர்.

அங்ஙனம் நிலைமை அவ்வாறிருக்க, முதல் நாள் வந்துவிட்டுப் போயிருந்த போலீஸ் கமிஷனர் துரை தமது மோட்டார் வண்டியை நிரம்பவும் விசையாக விடுத்துக்கொண்டு வந்து எதிரில் இறங்கினர். இறங்கினவர் சாதாரணமாகப் போய் ஓர் ஆசனத்தில் உட்கார்ந்து கொள்ளாமல், நிரம்பவும் படபடப்பும் ஆவேசமும் காட்டிய தோற்றத்தோடு "நகருங்கள் நகருங்கள்" என்று ஓங்கிக் கூவியவண்ணம் ஜனங்களை விலக்கி வழி செய்துகொண்டு அழகிய மணவாள முதலியார் இருந்த இடத்தை நோக்கி விரைந்து

வந்தார். திருமாங்கலிய தாரணம் நடக்கப்போகும் நல்ல சமயத்தில், அந்த துரை அவ்வாறு அநாகரிகமாகவும் அகௌரவமாகவும் நடந்துகொண்டதைக் கண்ட விருந்தினர் அந்த துரை குடிவெறியினால் அவ்வாறு தாறுமாறாக நடந்து கொள்ளுகிறாரென்று நினைத்து கோபப் பார்வையாக அவரைப் பார்த்தனர். அழகிய மணவாள முதலியார் போலீஸ் கமிஷனர் ஏன் அவ்வாறு நடந்து கொள்ளுகிறாரென்பதை அறியமாட்டாமல் திகைப்பும் ஆத்திரமும் அடைந்து அதிருப்தியாக அவரை நோக்கி, "என்ன சமாசாரம்? ஏன் எங்கள் மனிதர்களை இப்படி அவமரியாதையாய் நடத்துகிறீர்கள்!" என்று வினவினார். உடனே போலீஸ் கமிஷனர் அவரை அமைதியாக நோக்கி நயமாகப் புன்னகை செய்தபடி, "தாலி கட்டவேண்டாம். நிறுத்துங்கள், நிறுத்துங்கள். நான் பக்கத்தில் வந்து விஷயத்தைத் தெரிவிக்கிறேன்" என்றார்.

அவ்வாறு அவர் அபசகுனமான சொற்களைக் கூறியதைக் கேட்டு அங்கிருந்தோரனைவரும் சகிக்கவொண்ணாத பெரும் கோபமும் பதைபதைப்பும் கொண்டு போலீஸ் கமிஷனரை அடித்து வெளியில் துரத்துவதற்கு ஆயத்தமாயினர். அவர் மணமகனிடம் நெருங்குவதற்கு வழிவிட ஜனங்கள் மறுத்துவிட்டனர். போலீஸ் கமிஷனர் ஜனக்கும்பலின் நடுவில் அகப்பட்டுக் கொண்டார். சிறிதும் எதிர்பாராதபடி போலீஸ் கமிஷனர் அவ்வாறு வந்து தாலி கட்டுவதை நிறுத்தும்படி தடுத்ததைக் கேட்கவே, சுந்தரமூர்த்தி முதலியாரது முகம் மாறிப் போய்விட்டது அவரது அடிவயிற்றில் தீ வீழ்ந்தது போலாய்விட்டது ஆயினும், அவர் தமது இயற்கையான மனதிடத்தையும், கம்பீரப் பார்வையையும் கைவிடாமல் நிமிர்ந்து கமிஷனரைப் பார்த்து, "என்ன ஐயா இது! இது உம்முடைய கச்சேரி என்று நினைத்துக்கொண்டீரா! மகா பெருமை வாய்ந்த கனதனவான்களின் முன்னால் வருகிற நீர் இவ்வளவு காலையிலேயே நிதானம் தவறிப் போகும்படியான காரியத்தைச் செய்துவிட்டு வந்திருக்கிறீரே! போய் உட்கார்ந்து கொள்ளும். லக்னம் தவறிப் போகும். திருமாங்கலிய தாரணம் ஆனபிறகு நீர் அசிஸ்டெண்டு கலெக்டரிடம் ஏதாவது சொல்ல வேண்டுமானால், சொல்லலாம். கச்சேரி விஷயங்களையெல்லாம் பேச இதுதானா சமயம்? பெரிய உத்தியோகஸ்தராயிருந்து, உமக்கு இது தெரியவில்லையே" என்று கூறி ஜனங்களை நோக்கி, "இவரை வெளியில் கொண்டுபோய் உட்கார வையுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட ஜனங்கள் அவரை நோக்கி, "ஐயா! போய் ஒரு பக்கமாக உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்று கூறி அவரை அப்பால் அனுப்ப முயன்றனர்.

அவ்வாறு அவ்விடத்தில் ஏதோ கலகம் நடக்கிறதென்று கண்ட வாத்தியக்காரர்கள் வாத்தியங்களை நிறுத்தி விட்டனர். ஸ்திரீகள் தமது பாட்டை நிறுத்தி விட்டனர். வேத முழக்கமும் நின்று விட்டது. எல்லோரும், "என்ன அது! என்ன அது!" என்று ஆவலாகவும் திகிலோடும் கேட்டபடி ஸ்தம்பித்து நின்று விட்டனர். அழகிய மணவாள முதலியார் தமது ஆசனத்தை விட்டுச் சரேலென்று எழுந்து நின்று கமிஷனரை நோக்கி கம்பீரமாக நிமிர்ந்து நின்று, "போய் உட்கார்ந்து கொள்ளுங்கள். ஏதாவது சங்கதி இருந்தால், பிறகு பேசிக் கொள்ளலாம்" என்றார்.

உடனே கமிஷனர் பொறுமையாகவும், சாந்தமாகவும் இருந்தபடி அழகிய மணவாள முதலியாரை நோக்கி, "நிரம்பவும் அவசரமான சங்கதி. அதை உங்களிடம் தனியாகச் சொல்லவேண்டும். ஒரே நிமிஷம் எனக்கு அவகாசம் கொடுக்க வேண்டும்." என்று பணிவாகக் கூறினார்.

அழகிய மணவாளர், "நான் கலியாணச் சடங்கின் மத்தியில் எழுந்து வரமுடியாது. எப்பேர்ப்பட்ட தலை போகிற சங்கதியாக இருந்தாலும், நான் இப்போது இதை விட்டு வரவும் முடியாது; வேறு எந்தக் காரியத்தையும் கவனிக்கவும் முடியாது. கலியாணம் இன்னம் கால்மணி நேரத்தில் முடிந்து போகும் உடனே நான் வருகிறேன். அது வரையில் தயவு செய்து நாற்காலியில் உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்றார்.

போலீஸ் கமிஷனர், "நீங்கள் தாலிகட்டுகிற வரையில் நான் பொறுக்கக் கூடுமானால், நான் ஏன் இப்படி அநாகரிகமாய் இங்கே வந்து தாலி கட்டுவதை நிறுத்தச் சொல்லுகிறேன். நான் நேற்று இங்கே வந்திருந்தபோது, எனக்கு எவ்வித தகவலும் கிடைக்கவில்லை. இப்போதுதான் எனக்கு சில முக்கியமான தகவல்கள் கிடைத்தன. உடனே ஓடிவந்தேன். நான் இந்த விஷயத்தை உங்களிடம் ரகஸியமாய்ச் சொல்லவேண்டுமென்று பார்த்தேன். நீங்கள் இந்தக் காரியத்தை நடுவில் நிறுத்தக் கூடாதென்கிறீர்கள். இதை நிறுத்தச் செய்ய வேண்டு மென்பதே என் கருத்து. நீங்கள்

வேறொன்றையும் செய்ய வேண்டாம்; முதலில் பக்கத்தில் திரும்பி, நீங்கள் புகைப் படத்தில் பார்த்து ஆசைப்பட்ட பெண்ணுக்குத் தான் நீங்கள் தாலிகட்டப் போகிறீர்களா என்பதைத் திருப்தி செய்து கொள்ளுங்கள்'' என்றார்.

அதைக் கேட்ட அழகிய மணவாளரின் தந்தையும் தாயும் புஷ்பாவதியைப் பார்த்து விட்டு, "ஆம், இந்தப் பெண்ணைத்தான் நாங்கள் பார்த்து ஏற்பாடு செய்தது.'' என்றனர்.

போலீஸ் கமிஷனர், "நீங்கள் படத்தைப் பார்க்கவில்லை மாப் பிள்ளையல்லவா பார்த்தது. அவர்கள் பார்க்கட்டும்'' என்றார் அதைக் கேட்ட அழகிய மணவாளர் திடுக்கிட்டுப் பெருத்த கலக்கமும் வியப் பும் அடைந்து தமது பார்வையை மணப் பெண்ணின்மீது திருப்பி அவளை உற்றுப் பார்த்தார். பார்க்கவே, அவரது முகம் சடக்கென்று மாறுபட்டது. அவர் பெருத்த ஏமாற்றமும் சஞ்சலமும் ஆச்சரிய மும் அடைந்து, சுந்தரமூர்த்தி முதலியாரையும், அவருக்குப் பக்கத் தில் இருந்த பெண்ணையும் பார்த்தார். தான் புகைப்படத்தில் கண்ட பெண் தமக்கருகில் இல்லையென்றும், சுந்தரமூர்த்திமுதலியாருக்குப் பக்கத்தில் இருக்கிறாளென்றும் உணர்ந்து கொண்டு, அந்தப் பரம விகாரமான நிலைமையில் தாம் என்ன செய்வதென்பதை யறியாமல் இரண்டொரு நிமிஷ நேரம் அப்படியே பிரமித்து நின்று விட்டார். அதைக்கண்ட ஜனங்க ளெல்லோரும் போலீஸ்கமிஷனர் கூறியதில் ஏதோ உண்மை யிருக்க வேண்டு மென்று யூகித்துக் கொண்டு மிகுந்த வியப்போடு அவர்களை உற்றுப் பார்த்தபடி மௌனமாக இருந்து விட்டனர். அழகிய மணவாளரின் தாய் தந்தையர் கலக்க மும், கவலையும் கொண்டவர்களாய்த் தங்களது புதல்வரை நோக்கி, "என்ன தம்பி இது? உன் மனசில் கூட ஏதோ சந்தேகம் உண்டாகி விட்டதுபோ லிருக்கிறதே! ஏன் தயங்குகின்றாய்?'' என்றனர்.

உடனே அழகிய மணவாளர், "ஆம்; கமிஷனர் சொல் வது நிஜந்தான். சுந்தரமூர்த்தி எனக்குக் காட்டிய படத்தில் இருந்த பெண் இப்போது அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறாள். நான் படத்தில் பார்த்தது இந்தப் பெண்ணல்ல.'' என்றார் அதைக் கேட்ட சுந்தரமூர்த்தி முதலியார், "என்ன அப்பா அது! நீ ஞாபகப் பிசகாய்ச் சொல்லுகிறாயா? என் தங்கையைத்தான் உனக்குக் கட்டிக் கொடுப்பதாக நான் சொன்னது. இவள் தான் என் தங்கை,

இவளை உன்னுடைய தாயாரும் தகப்பனாரும் பார்த்திருக்கிறார்கள்' இவளுடைய படத்தைத்தான் அன்றைய தினம் நான் உனக்குக் காட்டினேன். நீ ஏன் இப்போது சந்தேகப் படுகிறாய்? என்னுடைய தங்கை இப்போது உனக்கு அழகுக் குறைவாகக் காணப்படுகிறாளா? ஒரு வேளை, இந்தப் பெண்ணைப் பார்த்தவுடன் உன் புத்தி சபலிக்கிறதுபோ லிருக்கிறது! அதெல்லாம் வித்தியாசம் ஒன்றுமில்லையப்பா! இந்தக் கமிஷனருக்கு இப்போது புத்தி சுவாதீனத்தில் இல்லைபோ லிருக்கிறது. அவர் உளறுவதைக் கேட்டு நீயும் மலைக்கத் தொடங்கி விட்டாயே" என்றார்.

அதைக் கேட்ட அழகிய மணவாளர் அதற்குமேல் தான் என்ன பேசுவதென்பதை யறியாதவராய்த் தயங்கி நின்றார். தாம் படத்தில் கண்டவளோதான் தமது பக்கத்தில் உட்கார்ந்திருப்பவளோ என்ற சந்தேகத்தை அவர் கொண்டு மௌனமாய் நிற்கலானார். அதற்குள் வேறொரு மோட்டார் வண்டியில் பல ஜனங்கள் இறங்கிப் போலீஸ் கமிஷனர் இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனர். அந்தக் கும்பலில் பல சப் இன்ஸ்பெக்டர்களும் நாலைந்து ஜெவான்களு மிருந்தனர். அவர்கள் போலீஸ் கமிஷனருக்குப் பக்கத்தில் வந்து நின்றனர். தாம் உளறியதாக சுந்தரமூர்த்தி முதலியார் கூறியதைக் கேட்ட போலீஸ் கமிஷனர் சுந்தரமூர்த்தி முதலியாரைப் பார்த்து, "ஐயா முதலியாரே! நான் உளறுகிறேனா நீர் உளறப் போகிறீரா என்பது இன்னம் கொஞ்ச நேரத்தில் தெரியப் போகிறது" என்றார்.

உடனே சுந்தரமூர்த்தி முதலியார், "ஐயா! கமிஷனரே! எங்களுடைய குடும்ப விவகாரங்களில் நீர் இப்படி வந்து தலையிட்டு இப்போது நடக்கும் சுபகாரியத்திற்கு இடையூறு விளைவிக்கிறது சட்டப்படி உமமீது பெருத்த குற்றமாகிறது. நாங்கள் உம்மை இலேசில் விடமாட்டோம். எங்களுக்கு லக்னம் தவறிப் போய்விடும் போலிருக்கிறது. நீர் மரியாதையாக அப்பால் போய்ச் சேரும். நான் அப்படியேதான் தப்பான புகைப்படத்தைக் காட்டி இந்தக் கலியாணத்தை நடத்துகிறேன். நானும் இவரும் சிநேகிதர்கள். எங்களுக்குள் ஆயிரம் விஷயங்கள் இருக்கும் நீர் ஏன் குறுக்கிடுகிறீர்? நான் வேறு புகைப் படத்தைக் காட்டி இருந்தாலும், இவர் இப்போது என் தங்கையையே கட்டிக் கொள்ளப் பிரியப்படுவார் உம்மையார் கேட்டது?" என்றார்.

உடனே அழகிய மணவாளருடைய தந்தையும் தாயும் தமது குமாரனை நோக்கி, "என்ன தம்பி இது! இவ்வளவு தூரம் காரியம் நடந்துபோய் விட்டது. ஆயிரக் கணக்கில் வந்திருக்கும் சொந்த ஜனங்களுக் கெதிரில் இப்படிப்பட்ட தகரார் நடப்பது நமக்கு அவமானமில்லையா. இந்தப் பெண்ணும் அழகாய்த்தா னிருக்கிறது. இதைத்தான் நாங்கள் பார்வையிட்டது. இதையே கட்டிவிடுவோம் நமக்கு ஒரு குறைவும் வந்துவிடப் போகிறதில்லை. அந்தப் பெண்ணை விட இந்தப் பெண் வயசில் சுமார் 4-வருஷ' மூத்ததா யிருக்கும். மற்றபடி அழகில் எவ்விதக் குறைவுமில்லை" என்றார்கள்.

அழகிய மணவாளர், "சரி, உங்களுக்கு இஷ்டமானால், அப்படியே நடக்கட்டும். ஐயா புரோகிதரே, ஆகட்டும் மேல் காரியம்" என்றார்.

உடனே போலீஸ் கமிஷனர் அழகிய மணவாளரைப் பார்த்து, "கொஞ்சம் பொறுங்கள். நான் முக்கியமான சில கேள்விகளை இந்த முதலியாரிடம் கேட்க வேண்டும். அதைக் கேட்ட பிறகு நீங்கள் இந்தக் கலியாணத்தை நடத்தப் பிரியப்பட்டால் நடத்தலாம். அதற்கு மாத்திரம் அநுமதி கொடுக்க வேண்டும் நான் உங்களுடைய நன்மையைக் கருதியே இங்கே வந்திருக்கிறேன்" என்றார்.

உடனே அழகிய மணவாளர் சுந்தரமூர்த்தி முதலியாரை நோக்கி, "அடே சுந்தர மூர்த்தி! போலீஸ் கமிஷனர் ஏதோ கேள்விகள் கேட்க வேண்டுமாம். அவர் கேட்பதற்கு நீ உத்தரம் சொல்" என்றார்.

சுந்தரமூர்த்தி முதலியார், "ஆகா! சொல்லுகிறேன்!" என்று தைரியமாக மறுமொழி கூறினார்.

போலீஸ் கமிஷனர்:—ஐயா! நீங்கள் எந்த ஊர் ஜெமீந்தார்?

சுந்தரமூர்த்தி முதலியார்:—என் தகப்பனார் தஞ்சை ஜில்லாவிலுள்ள கோவிந்தபுரம் என்னும் சமஸ்தானத்தின் ஜெமீந்தார்.

போ. கமிஷனர்:—அவர் இப்போது இங்கே வந்திருக்கிறாரா?

சு. முதலியார்:—அவர் வரவில்லை. இந்தக் கலியாணம் திடீரென்று நேர்ந்தது. சில காரணங்களைக் கொண்டு இதை அவசரமாக முடிக்கவேண்டி யிருந்தது. அவரும் சரி, என்னுடைய மற்ற பந்து

ஜனங்களும் சரி, இந்தக் கலியாணத்துக்கு வர இயலாமல் போய் விட்டது.

போ. கமிஷனர்:—உம்முடைய தாயார் எங்கே?

சு. முதலியார்:—என் தகப்பனருக்கு உதவியாக இருக்கிறார்.

போ. கமிஷனர்:—இப்போது, உம்முடைய தங்கையையும் உம்மையும், உம்முடைய வேலைக்காரர்களையும் தவிர, இந்தக் கலியாணத்துக்கு வேறே உறவினர் யாரும் வரவில்லையா?

சு. முதலியார்:—யார் யாரோ வந்திருக்கிறார்கள். அவர்களுடைய பெயரை யெல்லாம் இப்போது சொல்லிக் கொண்டிருக்க முடியாது.

போ. கமிஷனர்:—நீங்கள் எல்லாருடைய பெயரையும் சொல்ல வேண்டாம். யாராவது ஓர் உறவினரைக் காட்டினல், அதுவே போதுமானது.

சு. முதலியார்:—இதோ கலியாணப் பெண்ணுக்குப் பக்கத்தில் இருக்கிறளே இந்தப் பெண் என்னுடைய இன்னொரு தங்கை.

போ. கமிஷனர்:—பெண்ணினுடைய பெயர் என்ன?

சு. முதலியார்:—ராஜாம்பாள்.

போ. கமிஷனர்:—இந்தப் பெண்ணுக்கு இன்னம் கலியாணம் ஆக வில்லையே?

சு. முதலியார்:—இல்லை.

போ. கமிஷனர்:—உம்முடைய பெயர் என்ன? உம்முடைய பெரிய தங்கையின் பெயரென்ன?

சு. முதலியார்:—என் பெயர் சுந்தரமூர்த்தி முதலியார்; பெரிய தங்கையின் பெயர் புஷ்பாவதி.

போ. கமிஷனர்:—உம்முடைய தகப்பனரின் பெயர் என்ன? அவர் இப்போது கோவிந்தபுரத்தில்தானே இருக்கிறார்?

சு. முதலியார்:—ஆம்? கோவிந்தபுரத்தில்தான் இருக்கிறார். அவருடைய பெயர் ஜெம்புலிங்க முதலியார்—என்றார்.

அவ்வளவு தூரம் கேள்விகள் கேட்ட போலீஸ் கமிஷனர் அழகிய மணவாள முதலியாரை நோக்கி, "சரி; இப்போது இவர் சொன்ன தகவல்களை நீங்கள் கேட்டீர்களல்லவா? இதோ என்னோடு சில மனிதர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் என்ன சொல்லுகிறார்களென்று கேளுங்கள்." என்று கூறித் தமக்குப் பின்னால் நின்ற ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டரை அழைத்து எல்லோருக்கும் எதிரில் நிறுத்தி வைத்து, "ஐயா, நீர் யாரையா?" என்றார். அவர், "நான் புதுச்சேரிப் போலீசைச் சேர்ந்த சப் இன்ஸ்பெக்டர்" என்றார்.

போ. கமிஷனர்:—சரி; இதோ நிற்கிறதே ஒரு பெண். இந்தப் பெண் யார் என்பது உமக்குத் தெரியுமா?

புதுச்சேரி சப் இன்ஸ்பெக்டர்:—ஓ தெரியும், எங்கள் ஊரில் நான் இருக்கும் வீட்டுக்கு பக்கத்தில் உள்ள துரைக்கண்ணு முதலியார் என்ற ஒரு பெரிய வர்த்தகருடைய பெண்.

போ. கமிஷனர்:—இதோ கலியாணக்கோலத்தில் இருக்கிறாரே இவரை உமக்குத் தெரியுமா?

பு. சப். இன்ஸ்பெக்டர்:—தெரியும். இவர் சுமார் ஒன்றரை வருஷ காலத்துக்கு முன் எங்கள் வீட்டுக்கு எதிர்த்த வீட்டில் கொஞ்சகாலம் இருந்தார்.

போ. கமிஷனர்:—இவரோடு இன்னம் யார் யார் இருந்தார்கள்.

பு. சப். இன்ஸ்பெக்டர்:—இவருடைய தகப்பனார், தாயார், இந்தக் கலியாணப் பெண் ஆகிய மூவரும் இருந்தார்கள்.

போ. கமிஷனர்:—இவர்கள் அந்த ஊரில் என்னென்ன பெயர்கள் வைத்துக் கொண்டிருந்தார்கள்?

பு. சப். இன்ஸ்பெக்டர்:—கொஞ்ச நேரத்திற்கு முன் இவர் சொன்னாரே அதே பெயர்களைத்தான் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

போ. கமிஷனர்:—இவருடைய தகப்பனார் இப்போது எங்கே இருக்கிறாரென்பது தெரியுமா?

பு. சப். இன்ஸ்பெக்டர்:—தெரியும்; அவர், கெட்டுப்போய் ரோகியாயிருந்த ஒரு தாசியை வைத்திருந்தார். அவருக்குக் குஷ்ட—

ரோகம் வந்து விட்டது. கை கால்களெல்லாம் குறைந்து போய்விட்டன. உடம்பு முழுதும் அழுகிப் பொத்து வடியத் தொடங்கியது. அவரை இவர் அந்த ஊரிலுள்ள குஷ்டரோக ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விட்டார். இப்போதும் அவர் அங்கே தான் இருக்கிறார்.

போ. கமிஷனர்:—இவருடைய தாயார் எப்படி இருந்தார்கள்?

பு. சப். இன்ஸ்பெக்டர்:—இவருடைய தாயாருக்கு இரண்டு கண்களும் சுத்தமாய் அவிந்து போய் விட்டன. அந்த நிலைமையில், இவர் எப்படியோ தந்திரம் செய்து, எதிர்த்த வீட்டு துரைக்கண்ணு முதலியாருடைய மகளான இதோ நிற்கும் பெண்ணைக் கெடுத்து விட்டார்போலிருக்கிறது. ஒரு நாள் இவர் இவருடைய தங்கையையும், இந்தப் பெண்ணையும் எவருக்கும் தெரியாமல் அழைத்துக் கொண்டு அந்த ஊரை விட்டு ஓடிவந்து விட்டார். இவருடைய அந்தகத் தாயாரை அநாதையாக அவ்விடத்திலேயே இவர் விட்டு விட்டார். அந்த அம்மாள் நிரம்பவும் கஷ்டப்பட்டு யாரையோ துணைக்கு அழைத்துக்கொண்டு தன் உடன் பிறந்தான் வீட்டுக்குப் போய் விட்டாள்.

போ. கமிஷனர்:—இந்தப் பெண்ணுக்கு இதனுடைய தகப்பனார் வீட்டில் என்ன பெயர் ?

பு. சப். இன்ஸ்பெக்டர்:—இந்தப் பெண்ணின் நிஜமான பெயர் துளஸியம்மாள்—என்றார்.

அவ்வாறு அவர்கள் சம்பாஷித்துக் கொண்டிருந்ததைக் கேட்கவே, அழகிய மணவாள முதலியார் உள்பட சகலமான ஜனங்களும் அப்படியே பிரமித்துப்போய் பேச்சு மூச்சின்றி அந்த விசாரணையை நிரம்பவும் சுவாரஸ்யமாக உற்றுக் கவனித்தபடி நின்று விட்டனர். ஆனால் சுந்தர மூர்த்தி முதலியார் தமது மன தைரியத்தையும் துடுக்கையும் விடாமல் போலீஸ் கமிஷனரை நோக்கி, "என்ன தமாஷ் ஐயா இது! இவர் எங்களை வேறே யாராகவோ ஆள் மாறாட்டமாக நினைத்துப் பேசுகிறார். நாங்கள் ஒரு நாளும் புதுச்சேரியில் இருந்ததே இல்லை. இவர்கள் இருவரும் என் தங்கைகள்தான். என் தகப்பனாரும் தாயாரும் கோவிந்த புரத்தில்தான் இப்போதும் இருக்கிறார்கள். நீங்கள் வேண்டுமானால், இந்தப் பெண்ணையே கேட்டுப் பார்க்கலாம்." என்றார்.

அப்பொழுது புஷ்பாவதியின் உயிர் அநேகமாய்ப் போய் விட்டதென்றே கூறவேண்டும். அவள் வெட்கித் தனது முழங் காலின்மேல் தலையை குனியவைத்துக் கண்களை மூடியபடி குன்றிச் சோர்ந்து போய்விட்டாள். தங்களுக்கு எப்பேர்ப்பட்ட மானபங்க மும் தண்டனையும் நேர்ந்துவிடுமோ என்ற கிலியும் குலை நடுக்கமும் உண்டாகி விட்டன. அவளது கைகளும் கால்களும் உதறத் தொடங்கின.

சௌந்தரவல்லியோ சகிக்க வொண்ணாத பிரமிப்பும் ஆச்சரிய மும் அடைந்து, தான் கேட்டது மெய்யோ பொய்யோ வென்று சந் தேகித்தவளாய் அவ்விடத்தில் நடந்த சம்பாஷணையை உற்றுக் கவனிக்கத் தொடங்கினாள். சுந்தரமூர்த்தி முதலியார் துளஸியம் மாள் என்றபெண்ணைப் பெற்றோர்வீட்டிலிருந்து திருட்டுத்தனமாக அபகரித்து வந்து விட்டார் என்பதையும், அவரது தந்தை குஷ்ட ரோகி யென்பதையும், தாய் இரு கண்களு மற்ற குருடி என்பதை யும் கேட்க, அவளது மனத்தில் சுந்தரமூர்த்தி முதலியார்மீது பெருத்த வெறுப்பும் ஆத்திரமும் உண்டாகத் தொடங்கின. அதுவு மன்றி, அவர் தன்னுடைய புகைப்படத்தைக் கொண்டுபோய்ப் புஷ்பாவதியின் படமென்று அழகிய மணவாள முதலியாருக்குக் காட்டி, அவரை ஏமாற்றி விட்டாரென்பதையும், அழகிய மணவா ளர் உண்மையில் காதல் கொண்டது தன்மீதே என்பதையும் உணர்ந்து கொண்டாள். உணரவே, அவள் சுந்தரமூர்த்தி முதலி யாரை விட்டுத் தூர நகரத் தொடங்கிய தன்றி, அடிக்கடி தனது கடைக்கண் பார்வையை அழகிய மணவாளர்மீது செலுத்தி, அவ ரது ஒப்பற்ற வடிவழகைக் கண்டு ஆநந்த பரவசமெய்தத் தொடங்கி னாள். அவளது உரோமம் அடிக்கடி சிலிர்த்து ஆநந்த நிர்த்தனம் செய்ய வாரம்பித்தது.

அவ்வாறு மணப்பெண்களிருவரும் இருக்க, மறுபடி போலீஸ் இன்ஸ்பெக்டர் சுந்தரமூர்த்தி முதலியாரை நோக்கி, "ஓ அப்ப டியா! இவர் சொல்வதெல்லாம் ஆள்மாறாட்டமாகச் சொல்வதா! இந்தப் பெண்ணைக் கேட்டாலே சொல்லுமா! அப்படியே உம் முடைய இஷ்டப்பிரகாரமே செய்கிறேன் அந்த சந்தேகத்தையும் தீர்த்துக் கொள்வோம். அம்மா! துளஸியம்மா!—ஓகோ இல்லை இல்லை—ராஜாம்பாளம்மா! உன்னைத் தானம்மா! நீ ஏன் ஒடி ஒளிகிறாய்! நான் அசங்கியமான கேள்விகளை இத்தனை ஜனங்களுக்

கும் முன்னால் கேட்டுவிடப் போகிறேனோ வென்று பயப்படவேண்டாம். எனக்கு மரியாதை தெரியாதா? அந்த மாதிரி கேள்வி கேட்டால் சிறு பெண்கள் லஜ்ஜைப் படுவார்களென்பது எனக்குத் தெரியாதா! வேறொன்றையும் நான் கேட்கவில்லை. ஒரே ஒரு விஷயம் கேட்கிறேன் அதாவது, உனக்குத் தமிழ் எழுதப் படிக்கத் தெரியுமா என்ற விஷயத்தை மாத்திரம் நீ சொல்லி விட்டால் அதுவே போதும்" என்றார்.

இராஜாம்பாள், "தெரியும்" என்றாள்

போலீஸ் கமிஷனர், "சரி! இதோ நான் காகிதமும் பேனாவும் ஒரு தமிழ்ப் புஸ்தகமும் தருகிறேன். அந்தப் புஸ்தகத்தைப் பார்த்துக் காகிதத்தில் கால்பக்கம் எழுதி என்னிடம் கொடு" என்று கூறியவண்ணம், தமது சட்டைப் பையில் ஆயத்தமாக வைத்திருந்த புஸ்தகம், காகிதம், பென்சில் ஆகிய மூன்றையும் எடுத்து நீட்ட இடையிலிருந்தவர்கள் அவைகளை வாங்கி அந்தப் பெண்ணினிடம் அனுப்பினார்கள்.

போலீஸ் கமிஷனர் ஏன் அவ்வாறு செய்கிறாரென்பதன் உள் மர்மத்தை யறியாமல் சுந்தரமூர்த்தி முதலியாரும் மற்றவர்களும் பிரமித்துப்போய் மௌனமாக உட்கார்ந்திருந்தனர். ஆயினும், போலீஸ் கமிஷனரை எதிர்த்துப் பேச எவருக்கும் துணியாவது விருப்பமாவது ஏற்படவில்லை. அவர் ஏதோ முக்கியமான விஷயங்களை வெளிப்படுத்த முயற்சிக்கிறார் என்பது பிரத்தியக்ஷமாக எல்லோருக்கும் தெரிந்துபோன தாகையால், எல்லோரும் அவருக்கு அநுசரணையாகவே மாறி விட்டனர்.

புஸ்தகம், காகிதம், பென்சில் ஆகிய மூன்றையும் வாங்கிக் கொண்ட இராஜாம்பாள் என்ற பெண் புஸ்தகத்தைப் பார்த்துக் காகிதத்தில் அரைப் பக்கம் வரையில் எழுதி, அதைப் பக்கத்திலிருந்தவரிடம் கொடுத்துப் போலீஸ் கமிஷனருக்கு அனுப்பினாள். அதற்கு முன் அவர் தமது சட்டைப் பையிலிருந்து வேறு மூன்று காகிதங்களை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டிருந்தார். பெண் எழுதி யனுப்பிய காகிதத்தை வாங்கிய போலீஸ் கமிஷனர் தம்மிடத்திலிருந்த மூன்று கடிதங்களின் எழுத்துக்களையும் அந்தக் காகிதத்தின் எழுத்தோடு ஒத்திட்டுப் பார்த்துத் திருப்தி செய்து கொண்ட பின் அந்த நான்கு காகிதங்களையும் அழகிய மணவாள

ரிடம் அனுப்பி "ஐயா! இந்த நான்கு காகிதங்களிலுள்ள எழுத்து களும் ஒருவருடைய எழுத்துதானா இல்லையா என்பதை நீங்களும், மற்றவர்களும் பார்த்துச் சொல்லுங்கள்" என்று கூறினார்.

அவைகளை வாங்கி உற்றுப் பார்த்த அழகிய மணவாளரும், மற்றும் பலரும், நான்கு காகிதங்களின் எழுததுகளும் ஒருவரால் எழுதப்பட்டவைகள்தான்" என்று சந்தேகமறக் கூறினர்.

உடனே போலீஸ் கமிஷனர், "நீங்கள் மாத்திரம் சொல்வது போதாது. சுந்தரமூர்த்தி முதலியாருக்கும் காட்டுங்கள். ஆனால், அவர் எதையும் படிக்காதபடி, தூரத்தில் வைத்துக் கொண்டே காட் டுங்கள், எழுத்துகளின் ரூபத்தை மாததிரம் அவர் பார்த்துச்சொல் லட்டும்" என்றார்.

உடனே சிலர் அவைகளை சுந்தரமூர்த்தி முதலியாருக்குக்காட்ட, அவர் எழுத்துகளை ஆராய்ச்சி செய்து, "நான்கு காகிதங்களும்ஒரு வரால் எழுதப்பட்டவை போலவேதான் இருக்கின்றன ஆனால் அதை நிச்சயமாய்ச் சொல்ல முடியாது" என்றார்.

போலீஸ் கமிஷனர், "அது வாஸ்தவந்தான். எல்லாவற்றை யும் ஒரே மனிதர் எழுதிய காலத்தில் பார்த்திருந்தால்தான் அதை நிச்சயமாய்ச் சொல்லலாம். அதிருக்கட்டும். இனி இவை களில் எழுதி இருக்கும் விஷயங்களை நாம் கவனிப்போம்." என்று கூறி அழகிய மணவாளரை நோக்கி, "நீங்கள் இந்த நான்கு கடிதங் களையும் வாங்கி வைத்துக் கொண்டு, சிவப்பு நிற உரைக்குள் இருக் கும் கடிதத்தை முற்றிலும், வெள்ளை நிற உறைக்குள் இருக்கும் கடி தத்தை இரண்டாவதாகவும், உரை இல்லாமல் வெறுங் காகிதமா யிருப்பதைக் கடைசியிலும் படியுங்கள். படிப்பதற்கு முன் அந்த இரண்டு உரைகளின் மேலுள்ள தபால் முத்திரையில் எந்த ஊரின் பெயர்கள் இருக்கின்றன வென்பதைப் பார்த்துச் சொல்லுங்கள்" என்றார்

உடனே காகிதங்கள் நான்கும் அழகிய மணவாளரிடம் போய்ச் சேர்ந்தன. அவர் முதலில் இரண்டு உரைகளின் மேல் பதிந்திருந்த தபால் முத்திரைகளில் மைலாப்பூர்-சான்தோம், புதுச்சேரி என்ற பெயர்கள் இருப்பதாகக் கூறிவிட்டு, சிவப்பு நிற உரையில் எழுதப் பட்டிருந்த மேல விலாசத்தையும், பிறகு உள்ளே இருந்த கடிதத்தை யும் படித்தார். அவை அடியில் வருமாறு எழுதப் பட்டிருந்தன.

மேல் விலாசம்

புதுச்சேரி ரெட்டியார் பாளையத்திலிருக்கும் வர்த்தகர் மகா-ா-ா-ஸ்ரீ துரைக்கண்ணு முதலியார் அவர்கள் சமூகத்துக்கு.

உள் கடிதம்

தேவரீர் தாய் தகப்பன்மாருக்குத் தங்கள் குமாரி துளஸியம் மாள் வணக்கமாக தெண்டனிட்டு எழுதுவது. நான் சில மாசங்க ளுக்கு முன் தஞ்சாவூரிலிருந்து எழுதிய கடிதம் தங்களிடம் வந்து சேர்ந்திருக்கலாம். அதற்குத் தங்களிட மிருந்து பதில் வரும் வரு மென்று இவ்வளவு காலம் ஆவலோடு எதிர்பார்த்துப் பார்த்து ஏங் கிப் போனேன். நாங்கள் தஞ்சையை விட்டு சென்னை மைலாப்பூர் சான்தோம் என்ற இடத்திலுள்ள ஒரு பங்களாவில் இருக்கிறோம். நிழலின் சுகம் வெயிலுக்குப் போனால் தான் தெரியுமென்றுசொல்லு வதுபோல, நான் வீட்டில் பெரியவர்களுக்கு அடங்கி யிருப்பதை விட்டு, சுயேச்சையாய் இருக்கலாமென்று புறப்பட்டு ஓடிவந்த சுகம் இப்போதுதான் தெரிகிறது. நான் புத்திக் குறைவினால் பெருத்த மூடக்காரியம் செய்து விட்டேன் என்பதையும் இப்போது உணர் கிறேன் நான் வீட்டைவிட்டு வந்த ஆரம்பத்தில் என்னிடம் பிரமாத மான அன்பும் ஆசையும் காட்டிய மனிதர் இப்போது என்னை நிரம் பவும் கொடுமையாக நடத்துவதோடு, அடிக்கடி என்மேல் கோபங் கொண்டு, என்னைத தாறுமாறாகத் திட்டி அடிக்கிறார். இவரிட மிருந்த பண மெல்லாம் செலவாகி விட்டது. இவர் கோவிந்தபுரம் ஜெமீந்தாருடைய பிள்ளை யென்று பொய்யாகிலும் சொல்லிக் கொண்டு பங்களா மோட்டார் வண்டிகள் ஸோபா நாற்காலிகள், கட் டில் மெத்தைகள் முதலியவைகளை மாத வாடகைக்கு வாங்கிவைத்து பல துஷ்டர்களை வேலைக்காரர்களாய் அமர்த்திக் கொண்டு வெளி வேஷம் போட்டுப் படாடோபமாய் இருந்து வருகிறார். இவருக்கு மாதம் மாதம் செலவுக்கு சுமார் இரண்டாயிரம் ரூபாய் வரையில் வேண்டி யிருப்பதால், இவர் புதிது புதிதான தந்திரம் செய்து, பல இடங்களில் போய்ப் பணம் பறித்து எல்லோரையும் ஏமாற்றிக் கொண்டு வருகிறார். அப்படிப்பட்ட துஷ்ட மனிதரோடு இருக்க எனக்கு பயமாக இருக்கிறது இவருடைய தங்கை இதற்குமுன் யாரையோ கலியாணம் செய்து கொண்டிருந்தாளாம். புருஷர் இறந்துபோய் விட்டாராம். அவருடைய சொத்துகளை யெல்லாம் எடுத்துவந்து தகப்பனும், பிள்ளையும் எல்லாவற்றையும் வீணுக்கி

விட்டார்களாம். அந்தப் பெண் கூடியவரையில் நல்ல குணமுடையவள். அவள் வேறு புருஷனைக்கண்ணெடுத்தும்பார்ப்பதில்லை. அவளை தக்க பெரிய மனிதருடைய பிள்ளை எவருக்காவது கலியாணம் செய்து கொடுத்து விடுவதாக இவர் அடிக்கடி சொல்லுகிறார். அவள் இணங்கமாட்டேனென்கிறாள். ஆனாலும் அவளுடைய பணமெல்லாம் போய் விட்டதாகையால், அவள் இவரையே அண்டிப் பிழைக்க வேண்டியிருப்பது பற்றி, வெளிக்கு மாத்திரம் இவருடைய மனப் போக்கின்படி நடப்பவள் போலக் காட்டி வருகிறாள். கெட்ட வழியில் போக வேண்டாமென்று நான் புத்தி சொன்னால், எனக்கு அடியும் உதையும் வசவுகளும் கிடைக்கின்றன. "எனக்கு அடங்கி நடக்க இஷ்டமில்லாவிட்டால், ஓடிப்போ" என்று இவர் அடிக்கடி சொல்லி அதட்டுகிறார். நான் உங்களிடம் வருவதற்குப் பயமாக இருக்கிறது. வேறே இன்னோர் இடத்திற்குப் போனால், இதை விட அதிக கேவலமாக நான் நடததப்படுவேனோ என்னவோ என்ற சந்தேகமுண்டாகிறது. ஆகையால், நான் எந்த வழியிலும் போக மாட்டாமல் அகப்பட்டுக்கொண்டு முழிக்கிறேன். நானும் வெளிப் பார்வைக்கு இவருடைய இஷ்டப்படி நடப்பவள் போலவும், இவரிடம் உயிரையே வைத்திருப்பவள் போலவும் நடித்து வருகிறேன். ஆனாலும், எவ்வளவு காலம் நான் இப்படி வேஷம் போட்டு, மனசுக்குப் பிடிக்காத இடத்தில் இருந்து உழல்கிறது. துஷ்ட வேலைக்காரர்களை ஏவி ஏவி இவர் என்னென்னவோ கெட்ட காரியங்களையும் திருட்டுகளையும் நடததுவதாகத் தெரிகிறது. இவர் வெகு சீக்கிரம் ஜெயிலுக்குப் போய் விடுவாரென்பது நிச்சயம், நானும் இவருடன் இருப்பதனால், எனக்கும அந்தக கதியே வந்து வாய்க்குமோவென்று பயப்படுகிறேன். ஆகையால, தாங்கள் இருவரும் என்மேல் இரங்கி, நான் செய்த தப்பிதத்தை மன்னிதது என்னை வீட்டுக்கு அழைத்துக் கொள்ள வேண்டுமாய்க் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். என்னைப் பெற்ற அம்மாளும், அப்பாவும் என்னை இப்படிப் புறக்கணித்து விட்டால், எனக்கு வேறு புகலிடம் ஏது! பிழையை மன்னிக்க வேண்டுகிறேன். தாங்கள் பதில் எழுதினால், இம்மாதிரி நான் இவர் மேல் வருத்தமாய் எழுதியிருப்பதாகக் காட்டிக்கொள்ள வேண்டாம்.

இங்ஙனம், தங்களிருவரையும் நினைந்துருகும் மகள்,

துளஸியம்மாள்.

என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தை அழகிய மணவாளர் கணீ ரென்று உரத்த குரலில் படித்து முடித்தார். அவருக்கும், மற்ற ஜனங்களுக்கும் சுந்தரமூர்த்தி முதலியார்மீது உண்டான கோபா வேசத்திற்கும், அவர்களடைந்த ஆச்சரியததிற்கும் அளவில்லை. அந்தக் கடிதத்தின் விஷயத்தைக் கேட்ட சௌந்தரவல்லி, சே! இப்போர்ப்பட்ட அயோக்கிய மனிதனா நீ!" என்று வாய் விட்டுக் கூறியபடி மணையை விட்டு சரேலென்று எழுந்து ஸ்திரீகளின் கும்பலுக்குள் நுழைந்து கொண்டாள்.

ஜனங்கள் அப்போதே சுந்தரமூர்த்தி முதலியார் மீது விழுந்து அவரை நார் நாராய்க் கிழித்தெறிந்துவிட நினைப்பவர்போல சொக் காய்களை கையின்மேல் ஏற்றிவிட்டவராய்ப் பதறி அவரை நோக்கி நறநறவென்று பல்லைக் கடித்தனர். அழகிய மணவாளருக்குப் பக்கத்தில் நின்ற துணிகரமான ஒரு பெண்பிள்ளை புஷ்பாவதி யைப் பார்த்து, "போடி எழுந்து அப்பாலே; காலியறுத்த முண் டைச்சி பலமாக வேஷம் போட்டுக்கொண்டு எவ்வளவு தைரியமாய் வந்து மணையில் உட்கார்ந்து கொண்டாய். மகாராஜனுடைய வீட் டுக் குழந்தைக்குக் குறைவான அந்தஸ்துள்ளவர் உனக்குத்தகாது போலிருக்கிறதே! போடி எழுந்து நாயே" என்று ஆத்திரமாகக் கூறி புஷ்பாவதியின் கையைப் பிடித்துப் பரபர வென்று அப்பால் இழுத்து விட்டு, அவளுடைய முதுகில் ஓர் உதை கொடுத்தாள். அந்த மரியாதையைப் பெற்றுக்கொண்ட புஷ்பாவதி குன்றிக் குறுகித் தலையைக் கீழே கவிழ்த்தபடி ஜனக் கும்பலுக்குள் நுழைந்து மறைந்து கொண்டாள்

உடனே போலீஸ் கமிஷனர், "அம்மா! அந்தப் பெண் நல்ல வள் அவள் பேரில் குற்றமில்லை. அவளை உபத்திரவிக்க வேண் டாம் கொஞ்சம் பொறுமையோடிருந்து இன்னொரு கடிததை யும் கேளுங்கள். அதையும் ஐயா படிக்கட்டும்." என்றார்.

உடனே ஜனங்கள் ஒருவாறு அமைதியடைய, அழகிய மண வாளர் இன்னொரு கடிதத்தையும் எடுததுப் படிததார். அதன் மேல்விலாசம் முன்கடிதத்தின் மேல்விலாசம் போலவே இருந்தது. அதன் உள் விஷயம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

தேவரீர் அன்னை தந்தையார் பொற்பாத கமலங்களில் துளஸி யம்மாள் அநேக சாஷ்டாங்க தெண்டனிட்டு எழுதுவது.

தாங்கள் இருவரும் இந்த அநாதையிடத்தில் இவ்வளவு மர்மம் பாராட்டுவதைக் காணக் காண, என் மனம் படும்பாடு சொல்ல முடியவில்லை. நான் வெளிப்பார்வைக்கு ராஜாத்திப்போல வேஷம் போட்டுக் கொண்டு சந்தோஷமாயிருப்பவள் போல நடித்து ஆடம்பரமாக உலாவி வருகிறேனானாலும், நான் உள்ளூற, என்கதியை நினைத்து நினைத்து உருகித் தவித்துக் கொண்டிருக்கிறேன். பெற்றோருக்கு அடங்கி இருந்து, அவர்கள் பார்த்து வாழ்க்கைப்படுத்தும் இடத்துக்குப் போயிருந்தால் நான் ஏன் இப்படியெல்லாம் திண்டாடித் தவித்துக் கலங்குகிறேன், ஒரு குடம் பாலில், ஓர் அணுப் பிரமாணம் புளிப்பைக் கலந்தால், அது முறிந்துபோய், மறுபடி பழைய நிலைமைக்கு வர இயலாமல் கெட்டுப் போவதுபோல, என்னைப் போன்ற யௌவனப் பெண்களின் நிலைமையும் இருக்கிறது. கற்பாகிய பாலில், துர்நடத்தையாகிய புளிப்பு அணுவளவும் அண்டவிடாமல் காப்பாற்றுகிற வரையில்தான் எங்களுக்குப் பூஜிதையென்பதை, நான் எல்லாம் கெட்ட பிறகு உணர்ந்துகொண்டு தவிக்கலாயிற்றே! அமிர்தம் போன்ற குணமுடைய என் அரிய அப்பா! அருங்குணத் தாயே! இந்தக் கடிதத்திற்காவது நீங்கள் இரங்கி என்னை இந்த நரகத்திலிருந்து மீட்காவிட்டால், இதுவே நான் உங்களுக்கு எழுதும் கடைசிக் கடிதம். இனி நான் தற்கொலை செய்து கொள்வதே முடிவான விடுதலை. இந்த மனிதருடைய மோசங்களும் புரட்டுகளும் அதிகரித்து விட்டன. துஷ்டர்களான வேலைக்காரர்களை ஏவி, இவர் செய்யாத மோசம் பாக்கி இல்லை. புஷ்பாவதிக்கும் இவரிடம் இருக்கப் பிடிக்கவில்லை. எனக்கும் அப்படியே எங்கள் இருவருக்கும் வேறு போக்கிடமில்லையாகையால், இவரிடம் பிரியமாயிருப்பவர்கள் போலவும், இவருடைய மனசு போலவும் நடிக்கிறோம். இவருக்குப் பணச்செலவு அதிகமாக ஆக, இவருடைய மோசங்களும் திருட்டுகளும் அதிகரித்து விட்டன. இப்போது சமீபத்தில் இவரும் இவருடைய ஆள்களும் சேர்ந்து ஒரு பெரிய திருட்டை நடத்தியிருக்கிறார்கள். மைலாப்பூரில் நடுத்தெருவிலுள்ள ஒருவர் சைனாபஜாரிலுள்ள இன்னொருவருக்கு 10-ரூபாய் மணியார்டர் அனுப்பியதுபோலப் பணத்தை இவரே அனுப்பிவிட்டு, சைனாபஜாரிலுள்ள அந்த வீட்டையும் இவரே வாடகைக்கு எடுத்து அதற்குள் ஆள்களை வைத்து தபாற்காரன் இரண்டாங் கட்டிற்கு வந்த உடனே அவனைப் பிடித்துக் கட்டிப் போட்டுவிட்டு, அவனிடமிருந்த ஏராளமான மணியார்டர் பணத்

தையும், ரிஜிஸ்டர்டு இன்ஷியூர்டு கடிதங்களையும் அபகரித்துக் கொண்டு வந்து விட்டார். அது மாத்திரமல்ல. புரசைப்பாக்கத்தில் துபாஷ் ராஜரத்ன முதலியார் என்று ஒரு தனிகர் இருந்தாராம். அவர் போன வருஷம் இறந்துபோய் விட்டாராம். அவருக்கு லக்ஷக் கணக்கில் சொத்துகளும் இரண்டு மூன்று பங்களாக்களும் இருக் கின்றனவாம். அவருக்கு ஆண் குழந்தை இல்லையாம்; வயசு வந்த இரண்டு பெண்கள் இருக்கிறார்களாம். இரண்டு பேரும் நல்ல ரூபவதிகள். அவர்களுடைய தாயாரும் இருக்கிறார்கள். ஆனாலும் மூத்த பெண் நல்ல விவேகி. அவள் தான் வீட்டுக் காரியங்களை யெல்லாம் பார்க்கிறது. அந்தப் பெண் கடற்கரைக்கு வந்தி ருந்த சமயத்தில், இவர் தம்முடைய மோட்டார் வண்டியை வேண்டுமென்றே கொண்டுபோய் அவர்களுடைய பீடன் வண்டி யில் முட்டி, அதையும், பெண்களையும் கீழே கவிழ்த்து விட்டாராம் பிறகு அவர்களுடைய வரலாற்றைத் தெரிந்துகொண்டு அந்த இரண்டு பெண்களையும் தாமே கலியாணம் செய்துகொண்டு எல்லா சொத்துகளையும் அபகரித்துவிட வேண்டுமென்று பகீரதப் பிர யத்தன மெல்லாம் செய்தார். மூத்த பெண்ணை அவர்கள் வேறொரு ஏழைக் குடும்பத்தில் கட்டிக் கொடுக்க ஏற்கெனவே ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த மாப்பிள்ளைப் பையனுடைய பெயர் கண்ணபிரானுர். இவர் புஷ்பாவதியை அனுப்பித் தமக்கே மூத்த பெண்ணைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டு இல்லாத தந்திர மெல்லாம் செய்து பார்த்தார். அவர்கள் சம்மதிக்கவில்லை. இரண்டாவது பெண்ணை இவர்களுக்குக் கொடுப்பதாகச் சொன் னார்கள். இவர் தங்களுக்கு ஏதோ அசௌகரிய மென்றும், ஒரு மாசகாலம் பொறுத்து கலியாணத்தை நடத்திக் கொள்வதாகவும் சொல்லி விட்டார். பிறகு அவர்கள் மூத்த பெண்ணுக்கு நிச்சய தார்த்தம் நடத்தினார்கள். அதற்குள் இவர் என்ன செய்தா ரென் றால், போஸ்டாபீஸ் திருட்டில் அகப்பட்ட ரிஜிஸ்டர்டு, இன்ஷியூர்டு கடிதங்களை யெல்லாம் நிரம்பவும் சாமர்த்தியமாகப் பிரித்து உள்ளே இருந்த ஏராளமான நோட்டுகள் நகைகள் முதலியவைகளை எடுத் துக்கொண்டு, மறுபடி அவைகளை முன்போலவே ஒட்டி ஒருபெட்டி யில் வைத்து, அந்தக் கண்ணபிரானும், அவருடைய தாயாரும் கலி யாணப் பெண்ணின் பங்களாவிற்குப் போயிருந்த சமயத்தில் இரவில் போய், ஓட்டின் வழியாக வீட்டிற்குள் இறங்கி, பெட்டியை நடு அறையின் தரையில் வைத்துப் புதைத்துவிட்டு உடனே எங்கள்

ஜாகைக்கு வந்தார். வேறே யாரைக் கொண்டாவது எழுதச் சொன்னால், இன்னார் எழுதியதென்பது வெளியாகி விடுமென்று, என்னைத் தனியாக வைத்துக்கொண்டு, போலீஸ் கமிஷனருக்கு ஓர் அநாமதேயக் கடிதம் எழுதி அதை வாங்கிக்கொண்டு போய்த் தபாலில் போட்டுவிட்டு வந்து விட்டார். உடனே போலீசார் அந்த வீட்டைச் சோதித்துப் பார்த்துப் பெட்டியை எடுத்துக்கொண்டு போனதன்றி, நிச்சயதார்த்தம் நடக்கையில் வந்து கலியாணப் பிள்ளையைக் கைதியாக்கிக்கொண்டு போய் ஜெயிலில் அடைத்து விட்டார்கள். அவர் இப்போது ஜெயிலில் இருக்கிறார். அந்தத் திருட்டில் எடுத்து வந்த ரிஜிஸ்டர்டு இன்ஷியூர்டு உருப்படிகளில் இருந்த நூறு ரூபாய் நோட்டுகளையும், நகைகளையும் கொஞ்ச காலம் கழித்து உபயோகிக்கலா மென்று இவர் இரும்புப் பெட்டியில் வைத்திருக்கிறார். அதுவுமன்றி, இவர் 10 ரூ. மணியார்டர் அனுப்பியதற்கு தபால் கச்சேரியில் கொடுத்த ரசீதை சமயம் வந்தால் இன்னும் யார் வீட்டிலாவது வைத்து அவர்களையும் மாட்டி விடலாமென்று அதே இரும்புப் பெட்டியில் வைத்திருக்கிறார். அவர் ஜெயிலுக்குப் போன பிறகாவது, அந்த மூத்த பெண்ணைத் தமக்கு அவர்கள் கொடுப்பார்களோ வென்று இவர் பார்த்தார். அந்தப் பெண் கண்ணபிரானையே தான் கட்ட வேண்டுமென்று ஒரே உறுதியாக இருந்தது; அவருடைய தாயாரையும் வெளியில் அனுப்பாமல் பங்களாவிலேயே வைத்திருந்தாள். அதைக் கண்ட இவர் இன்னொரு தந்திரம் செய்தார். உடனே இவருடைய ஆள்களில் ஒருவனுக்கு ஒரு குடிகார சாயபுவைப்போல வேஷம் போட்டுவிட்டு, அவனும் வேறு சிலரும் அந்த பங்களாவுக்குப் போய்க் கண்ணபிரான் தாயாரை அந்தத் துருக்கன் வைத்திருந்ததாகவும். அந்த அம்மாள் அவனுக்குத் தெரியாமல் வந்து விட்டதாகவும் எல்லா ஜனங்களுக்கும் எதிரில் அவமானப்படுத்தச் செய்து, கடைசியில் இவரே போய் மத்தியஸ்தம் செய்பவர்போல நடித்து, அவர்களை அனுப்பிவிட்டார். அந்த அவமானத்தைப் பொறுக்க மாட்டாமல் அந்த அம்மாள் தாம் தற்கொலை செய்துகொள்ளப் போவதாக எழுதி வைத்துவிட்டு நடு இரவில் புறப்பட்டு எங்கேயோ போய்விட்டாளாம். அதன் பிறகாவது, மூத்த பெண் தமக்குக் கிடைக்குமோ வென்று இவர் பார்த்தார். அவர்கள் மாறுபடவில்லை மறுநாள் மூத்த பெண் ஏதோ காரியமாய் எங்கேயோ போனாளாம். இவர் அவளுடைய வண்டிக்காரனை வசப்படுத்தி வைத்திருந்தாராம், அவனைத் தூண்டி அந்தப் பெண்ணைக்

கடற்கரைக்குக் கொண்டு வந்து வண்டிக்குள் இருக்க வைத்து மறைந்து கொள்ளச் செய்து, தம்முடைய ஆள்களை சிப்பாயிகளைப் போல வேஷம் போட்டுக் கொள்ளச் செய்து, அந்தப் பெண்ணிருந்த வண்டியை ஓட்டிக் கொண்டு மைலாப்பூருக்குத் தெற்கில கொண்டு போய், தாழைக் காட்டில் தனியாக வைத்துக் கொண்டு பலாத்காரம் செய்வதுபோல நடிக்கச் செய்தார். தாம் உடனே போய் அவளுடைய வண்டிக்காரனைக் கண்டு வண்டியையும் பெண்ணையும் காணுதவர் போலத் தவித்து, அவனுடன் தேடிக்கொண்டு தெற்கில் வந்து, மைலாப்பூருக்குப் பிரிந்துபோன கிளை ரஸ்தாவில் ஓர் ஆள் வந்திருந்து தம்மைச் சந்திக்கும்படி செய்து, பெண்ணை யாரோ சிப்பாயிகள் கொண்டு போனதைத் தான் கண்டதாக அவன் சொல்லத் தெரிந்துகொள்பவர் போல வண்டிக்காரனுக்கு காட்டிக்கொண்டு அவனுடன் தெற்கே போய் மகா சூரர்போல நடித்து வெறுந் துப்பாக்கியைச் சுட்டு சிப்பாயிகளைத் துரத்தி விட்டவர் போல நடித்து பெண்ணைக் கொணர்ந்து தமது பங்களாவில் வைத்துக்கொண்டு அவளுடைய மூர்ச்சையைத் தெளிவித்து அவளுடன் பேசி, தான் அவளைப் பெரிய அபாயத்திலிருந்து காப்பாற்றியதாகவும், அதனால், அவள் பேரில் தமக்கு ஓர் உரிமை ஏற்பட்டுப்போனது போலவும், காட்டி, தன்னை மணக்கும்படி தம்மாலென்ற வரையில் சொல்லிப் பார்த்தார், அவள் தன்னுடைய பழைய உறுதியில் மாறுபடவே இல்லை. ஆகவே, இவருக்கு அவள் பேரில் பெருத்த க்ஷாத்திரம் உண்டாய் விட்டது, தங்கையைத் தூண்டிவிட்டு அவள் தன் அக்காளை அவமானப்படுத்தி வேறே ஜாகைக்குப் போகும் படியும் அவள் எல்லா சொத்துகளையும் அபகரித்தது தன்வசம் வைத்துக்கொள்ளும்படியும் செய்து விட்டதன்றி, இன்றைக்கு ஆறுவது நாள் வெள்ளிக் கிழமையன்று இளைய பெண்ணைத் தாம் கட்டிக் கொள்வதென்று முடிவு செய்திருக்கிறார். இது மாத்திரமல்ல, இவருக்குப் பழக்கமான ஒரு பையன் அஸிஸ்டெண்டு கலெக்டர் வேலையில் இருக்கிறானும். அவனுக்கு 10 லக்ஷம் ரூபாய்க்கு மேல் சொத்திருக்கிறதாம். அந்தப் பையனுக்கும் புஷ்பாவதியைக் கட்டி வைத்து, அவள் மூலமாய் அவர்களுடைய வீட்டு சொத்துகளையும் தாம் அபகரிக்கலாம் என்ற பேராசை இவருக்கு உண்டாகிவிட்டது. ராஜரத்தின முதலியாருடைய பெண்கள் இருவரும் இரட்டைப் பெண்கள். அவர்கள் ஒரே மாதிரியாக இருப்பார்கள். அவர்களுள் யாரோ ஒருத்தியின் படத்தை இவர் எடுத்து வந்து, அதை

அந்த அசிஸ்டெண்டு கலெக்டருக்கு காட்டி அவள் தான் தம்தங்கை யென்று சொல்லி விட்டார். அந்தப் பெண் நல்ல ரூபலாவண்யம் பொருந்திய சிறு பெண்ணுகையால், அவளைக் கண்டு அந்தக்கலெக்டர் மோகித்துப் போய் அவளையே கட்டுவ தென்று தீர்மானித்து, அரை மனசாக இருந்த தம் தாய் தகப்பன் மாரும் அதற்குசம்மதிக்கும்படி செய்து விட்டார். இந்த இரண்டு கலியாணங்களும் அசிஸ்டெண்டு கலெக்டர் வீட்டில் வருகிற வெள்ளிக்கிழமை காலையில் நடக்கப் போகிறது. புஷ்பாவதி மறுபடி கலியாணம் செய்வதற்கு இணங்கவே இல்லை. அவளை அடிப்பதாகவும், கொல்வதாகவும், வெளியில் துரத்தி விடுவதாகவும் பயமுறுத்தி இந்தக் காரியத்திற்கு அவள் இணங்கும்படி செய்து விட்டார். நானும், அவளும் குரங்கின் கைப் பூமாலைப்போல இவரிடம் அகப்பட்டு வேறு எங்கேயும் போக வழி இல்லாமல் தத்தளிக்கிறோம். நானும், அவளும் இவரிடம் நிரம்பவும் வாஞ்சையுள்ளவர்கள் போலவும், இவரது சொல்லை மீறுதவர்கள் போலவும் நடிக்க வேண்டி யிருக்கிறது. என்னை இவர் தம்முடைய இன்னொருதங்கை யென்றும்மற்றவரிடம் சொல்லிக்கொள்ளுகிறார். இப்போதே என் நிலைமை மகா கேவலமாகி விட்டது. இனி இவருக்கு அழகான சிறிய பெண்ஜாதியும் ஏராளமான செல்வமும் வந்து விட்டால், என்னை இவர்ஒரேநாளில் காலால் மிதித்து, உயிரோடு பூமியின் கீழ் புதைத்து விடுவாரென்பது நிச்சயம். இவர்கள் புதுச்சேரியில் இருந்தபோது இவரிடம் இருந்த வீராசாமி என்ற சேவகன் தான் என் புத்தியைக் கலைத்து, என்னை இவரிடம் சிநேகம் செய்து வைத்தது. நாங்கள் ரகஸியமாக அவ்விடத்தை விட்டு வந்த பிறகும் அவன் எங்களோடு கூடவே வந்து இப்போதும் இவரிடத்திலேயே இருக்கிறுன். இவர் செய்கிற எல்லா மோசங்களும் திருட்டுகளும் அவனுக்குத் தெரியும், ஆனுல் இவர் என்னை அநாதரவாக விட்டு வேறொரு பெண்ணைக் கட்டுவதிலிருந்து அவனுக்கும் இவர் மேல் உள்ளூற பகைமை உண்டாயிருக்கிறது. அவனுடைய உதவியினுல் தான் நான் இந்தக் கடிதத்தை அனுப்ப சாத்தியப்பட்டது. இவரிடம் இருந்து ஒரு நாள் தள்ளுவது பெருந்த நரக வேதனையாக இருக்கிறது. இவர் பிராந்தி குடிப்பது கணக்கு வழக்கில்லை. அந்த மயக்கத்தில் இவர் ஒரு நாள் புஷ்பாவதி தங்கை என்பதைக் கூடப்பாராமல் அவளிடம் துன்மார்க்கமாக ஆரம்பித்து விட்டார். அது முதல் அவளுக்கும் இவரிடம் வெறுப்பு இவருடைய அசாத்தியமான குடி

வெறியில் இவர் நேற்று என் தலை மயிரைப் பிடித்து அப்படியே மேலே தூக்கி பத்து நிமிஷநேரம் அலாக்காய்ப் பிடித்து என்னை உலுக்கிக் கொண்டே இருந்தார். என் உயிர் துடித்துப் போய்விட்டது. நான் அழுதால் உயிரோடு குழியில் தள்ளிப்புதைத்து விடுவேனென்று பயமுறுத்தி படுததாத பாடெல்லாம் படுத்தினர். இனி என்னால் ஒரு நிமிஷ நேரமும் இவரிடம் இருக்க முடியாது. எப்படியாவது தாங்கள் இருவரும் என் மேல் இரக்கங் கொண்டு, நான் அங்கே வர அநுமதி கொடுக்க வேண்டும். அநுமதி கொடுப்பதை கடிதத்தில் எழுதி யனுப்ப வேண்டாம். ஒரு மனிதனை இங்கே அனுப்பி, இவருக்குத தெரியாமல், என்னைப் பார்க்கும்படி செய்யவும். பராமுகமாயிருந்தால் நான் அநியாயமாய் வெகுசீக்கிரம் இவருடைய கையால் மாண்டுபோய் விடுவேன். மற்றமனிதர் அவஸ்தைப்படுவதைக் காண்பதில் இவருக்கு சந்தோஷம் அதிகம்; மனிதரைக் கொல்வது கோழி கொக்குகளை அடித்து விருந்து செய்கிற மாதிரி. இல்லாவிட்டால் இவர் வேண்டுமென்றே தம்முடைய மோட்டார் வண்டியைக் கொண்டு போய், அந்தப் பெண்களின் ஸாரட்டில் மோதி அவர்களை அபாயத்திற் குள்ளாக்குவாரா. அம்மாதிரி இவர் செய்துவிட்டு வந்து பரம ஸாதுவைப்போலப் படுக்கையில்படுத்துக் கொண்டார். நான் வழக்கப்படி இவரிடம் பிரியமா யிருப்பது போல நடித்து என்ன விசேஷமென்று கேட்டேன் தாம் செய்துவிட்டு வந்த காரியத்தை வெகு சந்தோஷமாக என்னிடம் தெரிவித்ததன்றி, அந்த இரண்டு பெண்களையும் தாம் கெடுத்து விட்டு அவர்களுடைய சொத்து முழுவதையும் அடியோடு அபகரித்து விடவும் தாம் தீர்மானித்திருப்பதாகவும், அதற்கு என்ன தந்திரம் செய்யலாமென்று யோசித்துக் கொண்டிருப்பதாகவும் என்னிடம் கூசாமல் சொல்லுகிறார். இவர் ஈவிரக்கமற்ற கொடிய படுபாவி என்பது இன்னொரு விஷயததிலும் இன்று தெரிந்தது, இவருடைய வேலைக்காரன் துருக்க சாயப்புவைப் போலப் போய் அந்தக் கற்பகவல்லியம்மாளை அவமானப் படுத்தின னல்லவா அதைப் பொறுக்க மாட்டாமல் அந்த அம்மாள் நடு இரவில் பங்களாவை விட்டுப் புறப்பட்டுப் போனாளல்லவா. அம்மாதிரி போனவள் விடியற்காலம் ரயிலேறிக் கூடலூர் வரையில் போய் கெடிலம் என்ற ஆற்றில் விழுந்து விட்டாள் போலிருக்கிறது. அதைக்கண்ட ஜனங்கள் ஆற்றில் குதித்து அந்த அம்மாளைக் காப்பாற்றி உயிர்ப்பித்ததாகவும், போலீசார் அந்த அம்மாளை டிப்டி கலெக்டரிடம் கொண்டுபோனதாகவும்,

அவர் அந்த அம்மாளைக் கண்டு இரங்கி, அவள் செலுத்தவேண்டிய அபராதத்தைத் தாமே செலுத்திவிட்டு, அந்த அம்மாளைத் தம்முடைய வீட்டிற்கு அனுப்பி வைத்ததாகவும், அவருடைய வீட்டு ஜனங்கள் அந்த அம்மாளை உபசரித்து வைத்திருப்பதாகவும் பத்திரிகையில் சமாசாரம் வந்தது. ஆனால், அது அந்த அம்மாள் தான் என்று பெயர், ஊர் முதலியவற்றைக் காட்டிக் குறிப்பாகச் சொல்லப் படவில்லை. இவர் அதைப் பார்த்தவுடன், "சரி, இது அந்தக் கற்பகவல்லி முண்டையாகத்தான் இருக்கவேண்டும். அவள் கெட்ட கேட்டுக்கு உபசரணையென்ன! நானாக இருந்தால், அந்த ஆற்றிலிருந்து அவள் மேலே கிளம்பாமல், அப்படியே பிடித்து தண்ணீருக்குள் அழுத்தி மணலில் புதைத்து விட்டிருப்பேன். இப்போதுதான் அவள் எங்கே தப்பினாள். நான் என்னுடைய ஆளை அனுப்பியே அவளுடைய கழுத்தை இரண்டாய் வெட்டிப் போட்டு விடச் செய்கிறேன்" என்று வெகு சாதாரணமாகச் சொல்லுகிறார். இது மாத்திரமா! "இருக்கட்டும் இந்தக் கலியாணம் முடியட்டும்' உடனே அந்தக் கோகிலாம்பாள் எங்கே போனாள் என்பது எவருக்கும் தெரியாதபடி அவளுக்கு நான் தக்க வழி செய்து விடுகிறேன்" என்றும் இவர் சொல்லுகிறார். இதுபோலவே என்னுடைய ஆயிசும் இவருடைய கலியாணம் வரையில்தான் நீடித்திருக்குமென்பது எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. ஆகையால், தாங்கள் கருணை கூர்ந்து அதற்குள் ஆளை அனுப்பி என்னை இந்தக் கொடிய இராக்ஷசனுடைய சிறையிலிருந்து மீட்கக் கோருகிறேன்.

இங்ஙனம், தங்கள் இருவரையும் நினைத்துருகும் குமாரி

துளஸியம்மாள்.

—என்று அழகிய மணவாளர் இரண்டாவது கடிதத்தைப் படித்து முடிக்கவே, அங்கிருந்த ஜனங்களெல்லோரும், "ஆகா! அப்படியா! இப்பேர்ப்பட்ட மோசக்காரனா இவன்!" என்று ஆரவாரம் செய்து, அளவற்ற ஆச்சரியமும் வீராவேசமும் கொண்டு, சுந்தரமூர்த்தி முதலியாரை அப்படியே நசுக்கிச் சாறு பிழிந்து விட நினைப்பவர் போலத் துடிதுடித்து அவனைப் பார்த்துப் பலவாறு தூஷிக்கத் தொடங்கினர். அந்த வரலாற்றைக் கேட்ட பூஞ்சோலையம்மாள் சகிக்க வொண்ணாத மன வேதனையும், ஆத்திரமும், நடுக்கமும் கொண்டு, "அடே படுபாவி! சதிகாரா! எவ்வளவோ மானமாக

வும் கண்ணியமாகவும் இருந்த எங்கள் குடும்பத்தை ஒரு நிமிஷத்தில் சீர்குலைத்து அழிக்கப் பார்த்தாயேடா! கொலைக்காரா! உன் தலையில் இன்னம் இடிவிழ வில்லையே!'' என்று கூறி வீரிட்டு ஓ வென்று கதறி யழுது விட்டாள். அழகிய மணவாளர் ரௌத்திராகாரமான கோபங்கொண்டார்; கோவைப் பழம்போலச் சிவந்து தீப்பொறியைக் கக்கிய தமது விழிகளால் சுந்தரமூர்த்தி முதலியாரை ஒரு பார்வை பார்த்தார். அந்தப் பார்வை மகா கூர்மையான வாளால் சுந்தரமூர்தி முதலியாரது இருதயத்தை இரண்டாய்ப் பிளப்பதுபோல இருந்தது.

அப்போது போலீஸ் கமிஷனர் அழகிய மணவாளரை நோக்கி, "தாங்கள் இன்னொரு காகிதத்தையும் படியுங்கள். நேரமாகிறது'' என்றார். சகிக்க வொண்ணாத அபாரமான கோபாக்கினியினால், அழகிய மணவாளரது மூளை தெறித்து விடும் போல ஆகிவிட்டது. அந்த நிலைமையில் போலீஸ் கமிஷனர் கூறியது இன்னதென்பது அவரது மனத்தில் பட இரண்டொரு நிமிஷமாயிற்று. அவர் அந்த மூன்றாவது காகிதத்தையும் எடுத்துப் படிக்கத் தொடங்கினார். அது அடியில் வருமாறு இருந்தது:—

பரமரகஸியம்

சென்னை போலீஸ் கமிஷனர் துரைக்கு நடுவீதி நமச்சிவாயன் அநேககோடி சலாம் செய்து எழுதும் மொட்டை விண்ணப்பம்.

சைனாபஜாரில் தபால் திருட்டு நடந்ததல்லவா; அதில் உண்மையான திருடனை விட்டு விட்டு, உங்கள் போலீஸ் புலிகள் யோக்கியமான மனிதர் பேரிலெல்லாம் சந்தேகம் கொண்டு வீண்பாடு படுகிறார்கள். இதோ, புரசைப்பாக்கத்தில் துபாஷ் ராஜரத்ன முதலியார் பங்களாவுக்குப் பக்கத்திலுள்ள ஓட்டு வீட்டில் இருக்கும் கண்ணபிரான் என்பவனே திருடன். அவன் ரெவினியு போர்டா பீசில குமஸ்தா வேலை பார்க்கிறான். திருடிய சொத்துக்கள் அவனுடைய வீட்டில் வைத்துப் புதைக்கப் பட்டிருக்கின்றன. நீங்கள் உடனே போய்ப் பார்த்தால், சொத்துக்கள் அகப்படும். தாமதம் செய்தால், சொத்துகள் பராதீனமாய்விடும். இதை வேறு யாரிடமும் அனுப்பாமல் உடனே நீங்களே போய்ப் பார்த்தால்,

திருட்டை ஒரு நிமிஷத்தில் கண்டு பிடித்து விடலாம். ஜரூர், ஜரூர், ஜரூர்.

இப்படிக்கு,

பொய்யா மொழியோன்.

—என்று அழகியமணவாளர் படித்து முடித்தார். முடிக்கவே, அங்கிருந்தோரது கோபமும் ஆவேசமும் உச்ச நிலைமையை அடைந்து விட்டன.

அதை உணர்ந்த போலீஸ் கமிஷனர் உடனே எல்லோரையும் அமர்த்தி, "கொஞ்சம் பொறுங்கள்; பதற வேண்டாம். இன்னம் சில முக்கியமான விஷயங்கள் இருக்கின்றன" என்று கூறியபின், இராஜாம்பாளை நோக்கி "இந்தக் கடிதங்களையெல்லாம் யாரம்மா எழுதியது?" என்றார். அவள், "நான்தான் எழுதினேன்" என்றாள்.

போலீஸ் கமிஷனர், "உன் தகப்பனாருக்கு எழுதியிருக்கும் இரண்டு கடிதங்களிலும், நீ இவரைப் பற்றிச் சொல்லி யிருக்கிற சங்கதிகளெல்லாம் நிஜமானவைகள் தானா, அல்லது, உன் தகப்பனார் உன்னை அழைத்துக் கொள்ள வேண்டுமென்று சும்மா வாகிலும் கற்பனையாக எழுதி யிருக்கிறாயா?" என்றார்

இராஜாம்பாள், "எல்லாம் நிஜமான சங்கதி; இதெல்லாம் பொய்யா யிருந்தால், நான் இவரை விட்டுப் போகவே எண்ண மாட்டேனே" என்றாள்.

அந்த சமயத்தில் ஜனக்கும்பலை விலக்கிக் கொண்டு, போலீஸ் உதவிக் கமிஷனர் வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்த பெரிய கமிஷனர், "என்ன சாமாசாரம்?" என்றார்.

உதவிக் கமிஷனர், "நான் பிரசிடென்சி மாஜிஸ்டிரேட்டின் வீட்டுக்குப் போனேன். அவர் இந்தக்கலியாணத்துக்கு வரவேண்டுமென்று புறப்பட்டுக் கொண்டிருந்தார். நான் எல்லா தகவலையும் அவரிடம் சொல்லி, அவரையும் கூட அழைத்துக் கொண்டு இன்னம் பலபெரிய மனிதரையும கூட்டிக்கொண்டு சுந்தரமூர்த்தி முதலியாருடைய பங்களாவில் நுழைந்து, அங்கிருந்த வேலைக்காரர்களெல்லோரையும் கைதிசெய்து, ஸ்டேஷனுக்கு அனுப்பி

விட்டு, கதவுகளைத் திறந்து சோதனை போட்டதில், இன்ஷியூர்டு ரிஜிஸ்டர்டு கடிதங்களில் இருந்த நூறு ரூபாய் நோட்டுகள், நகைகள் பத்து ரூபாய் மணியார்டர் செய்த ரசீது, இன்னும் பல முக்கிய மான கடிதங்கள் முதலியவைகளை ஜப்தி செய்து எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன் துளஸியம்மாளுடைய கடிதத்தில் சொல்லப்பட்ட படி எல்லாப் பொருள்களும் அகப்பட்டு விட்டன. அவைகளைக் கொண்டு போய்க் கச்சேரியில் வைத்து சீல் செய்தோம். கண்ண பிரான் முதலியார் வீட்டிலிருந்து எடுத்த பெட்டியை உடனே நீதிபதி பலருக்கு முன்னால் எடுத்துத் திறந்து எல்லாவற்றையும் பிரித்துப் பார்த்தார். எல்லாம் காலியா யிருந்தன. அவை அவ் வாறு காலியா யிருந்ததாக சாட்சிகளிடம் கையொப்பம் வாங்கிக் கொண்டு வந்தோம்'' என்றார்.

போலீஸ் கமிஷனர், "நீதிபதி இப்போது எங்கே இருக்கிறார் கள்?'' என்றார்.

உதவிக் கமிஷனர், "இங்கே கலியாணத்துக்காக வந்து, ஆச னத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள்!'' என்றார்.

பெரியகமிஷனர், "இந்தக் கலியாணங்கூட இனி நடக்கப்போகி றதா? அவர்கள் வீண் பிரயாசைப்பட்டு இவ்வளவு தூரம் ஏன் வர வேண்டும்'' என்றார்.

உதவிக் கமிஷனர் "என்னவோ, ஒரு வேளை மாப்பிள்ளை இந் தப் பெண்ணையே கட்டிக் கொள்ள ஆசைப்படலாம். நாம் போக வேண்டிய மரியாதைப்படி போய் விட்டு வருவோ மென்று அவர்கள் சொல்லிக் கொண்டே வந்தார்கள்'' என்றார்

போலீஸ் கமிஷனர், "யாருடைய சம்சாரத்தை யார் கட்டுகி றது! இந்தப் புஷ்பாவதி யம்மாளுடைய புருஷர் மலைபோல இருக்கி றாரே.'' என்று கூறித் தமக்குப் பின்னால் நின்ற இன்னொரு சப் இன்ஸ்பெக்டரை அழைத்து, "ஐயா! நீர் இப்படி எதிரில் வாரும்'' என்றார் அவர் அப்படியே வந்து நின்றார்

போ. கமிஷனர்:—நீர் யார் ஐயா?

சப். இன்ஸ்பெக்டர்:—நான் திருவடமருதூர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்.

போ. கமிஷனர்:—இப்போது இங்கே என்ன காரியமாக வந்தீரோ?

சப் இன்ஸ்பெக்டர்:—சுந்தரமூர்த்தி முதலியார் என்றுபெயர் வைத்துக்கொண்டு இதோ இருக்கிறாரே இவரையும், இவருடைய தங்கையையும் பார்க்க வந்தேன்.

போ. கமிஷனர்:—ஆனால் இவருடைய உண்மையான பெயர் அது வல்லவா?

சப் இன்ஸ்பெக்டர்:—அல்ல. இவருடைய பெயர் அண்ணாமலை முதலியார்; இவருடைய தங்கையின் பெயர் கமலவல்லி.

போ கமிஷனர்:—ஓகோ! சரி; அது உமக்கு எப்படித் தெரியும்? நீர் இவர்களைப் பார்ப்பதற்காக ஏன் வரவேண்டும்?

சப். இன்ஸ்பெக்டர்:—இவர்களுடைய பூர்விகமான ஊர் எதுவென்பது தெரியவில்லை யானாலும், இவர்கள் இவருடைய தகப்பனார் காலத்திலிருந்து திருவடமருதூரில் தான் இருந்தார்கள். அந்த ஊரில் குஞ்சிதபாத முதலியார் என்று ஒரு தனிகர் இருந்தார்; இப்போதும் இருக்கிறார். அவரிடம் இவருடைய தகப்பனார் தவசிப் பிள்ளை வேலையி லிருந்தார்.

போ. கமிஷனர்:—ஆ! என்ன! என்ன! இவருடைய தகப்பனார் கோவிந்த புரம் ஜெமீந்தா ரல்லவா? அவரா தவசிப்பிள்ளை வேலை செய்வார்? அவருடைய பெயர் ஜெம்புலிங்க முதலியாரா?

சப். இன்ஸ்பெக்டர்:—அவருடைய பெயர் இராமலிங்கம் என்பது. எங்கள் ஊரில் அவர் இருந்த வரையில், அவரை எல்லோரும் தவசிப்பிள்ளை இராமலிங்கம் என்று தான் கூப்பிடுவார்கள். முதலியார் என்ற பட்டம் கூட அவருக்கு ஏற்படவில்லை. இவர்களுடைய குடும்ப வரலாற்றை நான் வாயால் சொல்வதைவிட, அதைப்பற்றி சென்னை துரைத்தனத்தாரால் வெளியிடப் பட்டுள்ள விளம்பரத்தையே படித்துக் காட்டுகிறேன். நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்—என்று கூறி குஞ்சிதபாத முதலியார் மார்படைப்பினால் இறந்து பிழைத்தது, தஞ்சை ஜில்லா கலெக்டர் தங்கமணி நாடாருக்கு அவர் விண்ணப்பம் எழுதியது, அவர் விசாரணை நடத்திய விதம், முடிவில் துரைத்தனத்தார் பிறப்பித்த உத்தரவு, முதலிய விவரங்களடங்கிய விளம்பரத்தை சப் இன்ஸ்பெக்டர் படித்துக்

காட்டினார். அதன் மேல் குஞ்சிதபாத முதலியார் வெளிப்படுத்தி யிருந்த விளம்பரத்தையும் படித்துக் காட்டினார்.

அந்த வரலாறுகளை யெல்லாம் கேட்ட ஜனங்களது நிலைமை கட்டிலடங்காததாய் விட்டது. போலீஸ் கமிஷனர் ஜனங்களை அமைதிப் படுத்த முயன்றதெல்லாம் பயனற்றுப் போய் விட்டது. ஜனங்களது ஆவேசமும் கோபமும் பிரமாதமாகப் பொங்கிப் போகவே, எல்லோரும் சுந்தரமூர்த்தி முதலியாரைத் தாறு மாறாய் தூஷிக்கத் தொடங்கினர். ஒருவர், "அடே அண்ணாமலை! என்னடா உனக்கு வந்த கேடு! எந்த ஊர் ஜெமீந்தாரடா நீ? கோவிந்தபுரம் ஜெமீந்தாரா அன்னக்காவடிப்பட்டி ஜெமீந்தாரா? கெட்ட கேட்டுக்கு ஜரிகைத் தலைப்பாகை கூடவா? என்று கூறிப் பின்னாலிருந்து அவரது தலைப்பாகையைத் தட்டிவிட்டார். வேறொரு வர் அவரது பூமாலைகளைப் பிடித்து இழுத்துப் பிய்த்துத் தூள் தூளாக எறிந்தார். இன்னொருவர் சீக்கிரமாக ஓடி, ஜனங்கள் காலில் போட்டு வந்து ஒரு மூலையில் நூற்றுக் கணக்கில் விட்டு வைத் திருந்த செருப்புகளில் சுமார் இருபது முப்பதை எடுத்து மாலையா கக் கட்டிக்கொண்டு வந்து அவரது கழுத்தில் சாத்தி எச்சிலை முகத் தில் உமிழ்ந்தனர். அதற்கு முன் புஷ்பாவதியை உதைத்த பெண் பிள்ளை எங்கிருந்தோ ஒரு குடத்தில் சாணியைக் கரைத்து எடுத்து வந்து எல்லோரும் பிரமிக்கும்படி கடகடவென்று சுந்தரமூர்த்தி முதலியாரது தலையில் கொட்டிவிட்டுத் தனது கையில் ஆபத்தமாகக் கொணர்ந்த விளக்குமாற்றினால், அவரது முகத்தைப் பார்த்து பட் பட்டென்று ஐந்தாறு அடிகள் கொடுத்து விட்டாள்.

அதுவரையில் பொறுமையோடிருந்த போலீஸ் கமிஷனர் பலமான குரலில் ஜனங்களை அதட்டித் தமது ஜெவான்களைப் பார்த்து, "அடேய் ஜெவான்களா! சிலர் நம்முடைய அண்ணாமலைக் குப் போலீஸ் கங்கணம் போட்டுக்கொண்டு போய் லக்னம் தவறிப் போவதற்குள் காராகிரகப் பிரவேசம் நடத்தி வையுங்கள். சிலர் கமலவல்லி யம்மாளை மரியாதையாக அழைத்துக்கொண்டு போய் அதோ நிற்கும் இரண்டு சாமியாரிடம் ஒப்புவித்து விடுங்கள். அவர்கள் குஞ்சிதபாத முதலியாருக்காகப் பாடு படுகிறவர்கள். அந்தப் பெண்ணை அவர்கள் குஞ்சிதபாத முதலியாரிடம் ஒப்பு வித்து விடுவார்கள். பெண் கலியாணக்கோலத்தோடு தன் புருஷரிடம் போய்ச் சேரட்டும். அவரும் ஒரு தரம் இறந்து மறுதரம்

ஜென்மமெடுத் திருக்கிறார். இந்தப் பெண்ணை இப்போதுதான் புதிதாய்க் கலியாணம் செய்து கொள்வதுபோல அவரும் சந்தோஷப் படட்டும். ஐயா, புதுச்சேரி சப் இன்ஸ்பெக்டரே! உங்களூர்ப் பெண்ணை சட்டப்படி நீர் அழைத்துக்கொண்டு போய் அதனுடைய தாய் தகப்பன்மாரிடம் சேர்த்துவிடும். அவ்வளவேகாரியம்.'' என்று கூறியபின் அழகியமணவாள முதலியாரை நோக்கி, "தாங்கள் எவ்வளவோ, பணச்செலவின்மேல், அபாரமான ஏற்பாடுகளையெல்லாம் செய்து, ஜனங்களையும் வரவழைத்துக் கலியாணத்தை நடத்த எத்தனித்தீர்கள் இப்பேர்ப்பட்ட எதிர்பாராத இடையூறு நேர்ந்துவிட்டது. கலியாணம் நின்று போகும்படியாக நிலைமை ஏற்பட்டு விட்டது. ஆயினும், இவ்விதமான, தடை ஏற்பட்டது, தங்களுக்குப் பொருத்த நன்மையே யாகையால், இதைப்பற்றி தாங்கள் மிகுந்த சந்தோஷமடைய வேண்டுமன்றி என் பேரிலாவது மற்றவர் பேரிலாவது ஆயாசமடைய மாட்டீர்களென்று நம்புகிறேன்.'' என்றார்.

உடனே அழகிய மணவாளர் புன்னகை தவழ்ந்த முகத்தோடு போலீஸ் கமிஷனரை நோக்கி, "ஐயா! நல்ல சமயத்தில் எனக்கு நீங்கள் செய்த இந்த பேருதவியை நினைத்து என் மனம் அடையும் ஆநந்தத்தை நான் எப்படி வெளியிடப் போகிறேன். மனசு என்பது சூட்சுமமான ஸ்தானமாகையால், அதை உங்களுக்கு நான் எப்படிக் காட்டப் போகிறேன்! உங்களுக்கு நான் என் மனமார்ந்த நன்றி யறிதலின் பெருக்கை எவ்விதமாகத தெரிவிக்கப் போகிறேன். நீங்கள் இன்னம் பத்துநிமிஷ நேரம் பொறுத்து வந்திருந்தால், தாலி கட்டியாயிருக்கும் எங்கள் குடும்பத்திற்கு இது தீராத மனப்பிணியாகவும், விசனமாகவும் முடிந்திருக்கும்; என் வாழ்நாள் முழுதும் என்னை பாதிக்கக்கூடிய பெருதத அபாயத்திலிருந்து என்னை நீங்கள் காப்பாற்றினீர்கள். கடவுள் உங்களுக்கு நீடித்த ஆயுளையும் பொங்குகிற செல்வத்தையும், நிரந்தரமான சந்தோஷததையும் கொடுக்க வேண்டுமாய்ப் பிரார்த்திப்பதுதான் நான் உங்களுக்குச் செய்யத் தகுந்த கைம்மாறு'' என்று கூறி நிறுத்தினார்.

அதற்குள் அழகிய மணவாளரின் தாயும் பூஞ்சோலையம்மாளும் தங்களுக்குள் ரகஸியமாக ஏதோ சில வார்த்தைகள் பேசிக் கொண்டனர். அழகிய மணவாளரும், அவரது தந்தையும் அந்த சம்பாஷணையில் கலந்து கொண்டனர். இரண்டே நிமிஷ காலம்

கழிந்தது. உடனே அழகிய மணவாளர் போலீஸ் கமிஷனரை நோக்கி, "ஐயா! தாங்கள் எனக்கு இன்னோர் உதவி செய்ய வேண்டும். சிறைச்சாலையி லிருக்கும் கண்ணபிரான் முதலியாரின்மேல் இனி யாதொரு தாவாவுமில்லை யென்றும், அவரை கண்ணியமாக இனி விட்டு விடலாமென்றும், தாங்கள் இவ்விடத்திலேயே எழுதி, இங்கே கலியாணத்திற்கு வந்திருக்கும் நீதிபதியிடம் கொடுத்தால், அவரைவிட்டு விடலாமென்று, அவர்கள் அதன்மேல் எழுதி விடுவார்கள். அந்த உத்தரவை வாங்கி எங்களிடம் கொடுங்கள்" என்றார்.

போலீஸ் கமிஷனர், "ஓ! அதற்கு ஆக்ஷேபனை ஒன்றுமில்லை. நிரபராதியை இனி ஒரு க்ஷணமும் சிறைச்சாலையில் வைத்திருப்பது அக்கிரமம்." என்று கூறித் தமது சட்டைப்பையி லிருந்த ஒரு காகிதத்தை எடுத்து பவுண்டன் பேனுவினால் எழுதி அதைக் கொண்டுபோய் சிறிது தூரத்திற் கப்பாலிருந்த நீதிபதியிடம் கொடுக்க, அவர் கண்ணபிரானை உடனே விட்டுவிட வேண்டிய தென்று அதன்மீது எழுதிக் கொடுக்க, கமிஷனர் அதைக் கொணர்ந்து அழகிய மணவாளரிடம் கொடுத்தார்.

உடனே அவரது தந்தை எழுந்து நின்று எல்லா பந்து ஜனங்களையும் நோக்கி, கனதனவான்களான பந்து மித்திரர்களே! நாமொன்று நினைக்க தெய்வ மொன்றைச் செய்விக்கிறது சர்வ சாதாரணமான காரியமாக இருக்கிறது. இந்த சுந்தரமூர்த்தி நம்முடைய பையனை ஏமாற்ற வேண்டுமென்று நினைத்து வேறொரு பெண்ணின் படத்தைக் கொடுத்தது தெய்வமே அவ்வாறு செய்யும்படி தூண்டியதனால் நடந்த காரிய மென்றே நான் நினைக்கிறேன். "இந்தப் படத்தில் இருக்கும் பெண்ணுக்கும் உனக்குந்தான் பிராப்தம். இந்த சுந்தரமூர்த்தி உன்னை ஏமாற்றப் பார்க்கிறான். அது பலியாது" என் கடவுளே முன்னறிகுறி காட்டியதாக நான் எண்ணுகிறேன். எந்தப் பெண்ணின் வடிவத்தைக் கண்டு பையன் பிரியப்பட்டானோ, அந்தப் பெண்ணையே அவனுக்குக் கட்டி விடுவதென்று நாங்கள் இப்போது தீர்மானித்து விட்டோம். அந்தப் பெண்ணுக்கும் தாயாருக்கும் அந்த விஷயத்தில் மனப் பூர்த்தியான சம்மதமே! ராஜாதன முதலியார் என்னுடைய ஆப்த சிநேகரா யிருந்தவர். அவருடைய குடும்பத்தின் மேம்பாட்டைப் பற்றி நான் இனி விசாரித்துத தெரிந்துகொள்ள வேண்டு மென்பதில்லை. அவ

ருடைய இளைய குமாரத்தியை நம்முடைய பையனுக்கே கட்டுவ தென்று நாங்கள் தீர்மானித்து விட்டோம். அது மாத்திரமல்ல. அக்காளிருக்கையில் தங்கைக்கு முன்னால் கலியாணம் செய்வது உசிதமல்ல. கண்ணபிரான் முதலியார் என்பவரும் அவரது தாயா ரும் சுத்த நிரபராதி என்பதும் இப்போது பரிஷ்காரமாய் ருஜு வாகி விட்டது. அதுவுமன்றி, மூத்த பெண் அவரை கட்டிக் கொள்ள வேண்டுமென்ற உறுதியோ டிருப்பதாகவும் தெரிகிறது. ஆகையால், இப்போதே போய்க் கண்ணபிரான் முதலியாரை இங்கே அழைத்து வரத் தீர்மானித்திருக்கிறோம். அவருடைய தாயார் மஞ்சட்குப்பம் கூடலூரில் இருப்பதாகத் தெரிகிறது. அங்கேயும் ஒரு மனிதரை யனுப்பி, அந்த அம்மாளையும் இங்கேயே அழைத்து வருவோம். மூத்த பெண் வண்ணாரப் பேட்டையில் இருக்கிறது. அதையும் அழைத்து வருவோம். இன்றைக்கு மூன்றாவது நாளும் முகூர்த்த நாளாம் அன்று இந்த இரண்டு கலியாணங்களையும் இவ்விடத்திலே லக்ஷணமாக நடத்தி விடு வோம். கலியாணத்திற்காக விஜயம் செய்திருக்கும் பந்து மித்தி ரர்கள் எல்லோரும் தயவுசெய்து இங்கேயே இருந்து அந்தக் கலி யாணத்தை நடத்தி வைத்து, தம்பதிகளை ஆசீர்வதித்து எங்களை கௌரவப்படுத்த வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன். இவ்வளவு தூரம் இந்த சுபகாரியம நடந்து இடையில் நின்று போவதென் றால், அது எங்கள் மனசுக்கு நிரம்பவும் அவமானமாகத் தோன்று கிறது. நாங்கள் பந்து ஜனங்களுக்கும் அவமரியாதையை உண்டாக் கியதாகத் தோன்றும். ஆகவே, கலியாணங்களை அதிக காலம் ஒத்தி வைக்காமல் நடத்துவது அத்யாவசியம். இதே லக்னத்தில் முடிக்க வேண்டுமென்று நான் எண்ணினேன். ஆனால் பெரிய பெண்ணும், மற்றவர்களும் வரவேண்டும். அதற்கு அவகாசமில்லை ஆகையால், மூன்றாவது நாள் வரையில் எல்லோரும் எப்படியாவது பெரிய மனசுடன் இருந்து இந்த சுபகாரியத்தை நிறைவேற்றி வைக்க வேண்டுமாய்த் தங்க ளெல்லோரையும் பன்முறை நமஸ்கரித்து வேண்டிக் கொள்ளுகிறேன்" என்று நிரம்பவும் பணிவாகவும் விநயமாகவும் கூற, ஜனங்கள், "தங்களுடைய யோசனை நிரம்பவும் சிலாக்கியமானது. அப்படியே செய்யுங்கள். நாங்கள் அவசியம் இருந்து நடத்தி வைக்கிறோம்" என்றனர்.

அப்பொழுது சௌந்தரவல்லி தனது தாயண்டை நெருங்கி, அந்த அம்மாளின் காதில், "அம்மா! நானே நேரில் வண்ணாரப்

பேட்டைக்குப் போய் அக்காளை அழைத்து வருகிறேன். அவளுடைய விஷயத்தில் நான் ரொம்பவும் அபராதியாகி விட்டேன். அதைப்பற்றி என் மனம் தவித்துப் போகிறது. நான் போய் அக்காளுடைய காலைப் பிடித்துக்கொண்டு கெஞ்சி, அவளுடைய மன வருத்தத்தை மாற்றி அவளை இங்கேயே அழைத்துக்கொண்டு வருகிறேன். நீங்கள் மஞ்சட் குப்பத்துக்குப் போய் கற்பகவல்லியம்மாளை அழைத்து வாருங்கள். அந்த அம்மாள் விஷயத்திலும் நான் பெருத்த அநியாயம் செய்து விட்டேன். அவர்களைத்தான் எப்படி சமாதானப் படுத்துவதென்பது தெரியவில்லை. இந்த மோசக்காரர்கள் செய்ததை உண்மையென்று நம்பி நான் என் அவசர புத்தியினால், அவர்களை தாறுமாறாகப் பேசி விட்டேன். நான் தெரியாத்தனத்தினால் செய்த பிழையை மன்னிக்கும்படி நான் ஆயிரம் தரம் அவர்களுடைய காலில் விழுந்து கேட்டுக் கொண்டதாகச் சொல்லி அழைத்துக்கொண்டு வாருங்கள் அக்காள் புருஷனை வேறே ஆண்பிள்ளை யாராவது அழைத்து வரட்டும்'' என்றாள்.

அந்த சமயத்தில் சில ஜெவான்கள் சுந்தரமூர்த்தி முதலியாருக்கு விலங்கிட்டு, அவ்விடத்தி லிருந்து அழைத்துப் போனது மகா துர்லபமாகி விட்டது. ஜனங்கள் அவரை பலவகையில் அவமானப்படுத்தி, வைது, காலால் உதைத்து, எச்சிலை முகத்தில் உமிழ்ந்து சகிக்கவொண்ணாத துன்பமும் அவமானமும் உண்டாக்கி விட்டனர். அது அசிஸ்டெண்ட் கலெக்டருடைய கிரகமாதலாலும், போலீசார் சொற்பமாகவே இருந்தமையாலும், அவர்கள் ஜனங்களை அடக்க இயலாமல் போய்விட்டது. அத்தகைய மகா சிறப்பான மரியாதைகளுடன் கோவிந்தபுரம் இளையஜெமீந்தார் காராக்கிரகப் பிரவேசம் செய்தார் புஷ்பாவதியோ போலீஸார் தன்னிடம் வருவதற்கு முன்பே, அவ்விடத்தை விட்டு மெதுவாக நழுவிச்சென்று போலீஸ் கமிஷனர் குறித்த சாமியார்களண்டை போய்ச் சேர்ந்தாள். அன்றைய கலியாணமும் கிரகப் பிரவேசமும் அவ்வாறு சமாப்தியடைந்தன.

---

## 20-வது அதிகாரம்

# அமிர்த கலசம்

துளஸியம்மாள் புதுச்சேரியிலுள்ள தனது தந்தைக்கு எழுதிய
கடிதங்கள் சென்னை போலீஸ் கமிஷனருக்கு எப்படி வந்தன
வென்பதை, நமது வாசகர்களே சுலபத்தில் யூகித்துக் கொண்டிருக்
கலாமாயினும், அது சம்பந்தமாய் நாம் சிலதகவல்களைத் தெரிவித்து
மேலே நடந்த வரலாற்றைக் கூறுவோம். திவான் சாமியாரும்,
உதவிச்சாமியாரும் துரைக்கண்ணு முதலியாருக்கு ஐயாயிரம்ரூபாய்
பெறுமான முள்ள நோட்டுகளை ஓர் உறைக்குள் வைத்து ரிஜிஸ்டர்
செய்தனுப்பிய பிறகு மறைவான ஓரிடத்திற்குப் போய்க் கடிதங்க
ளிரண்டையும் பிரித்துப் படித்துப் பார்த்தனர் பார்க்கவே, சுந்தர
மூர்த்தி முதலியாரது செய்கைகள் அவர்களது மனத்தில் பெருத்த
ஆக்கிரோஷத்தையும், வியப்பையும்மனக்கொதிப்பையும்உண்டாக்கி
விட்டன. ஆயினும் புஷ்பாவதி கடைசி வரையில் நிரபராதியாகவே
இருக்கிறாளென்ற விஷயம் மாத்திரம் அவர்களுக்கு நிரம்பவும்
திருப்திகரமாகவும் சந்தோஷகரமாகவும் இருந்ததன்றி, தாம்
அந்த விஷயத்தில் தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள
லாம் என்ற எண்ணத்தையும் ஊக்கத்தையும் உண்டாக்கியது.
புஷ்பாவதியின் கலியாணம் முடிவதற்குள் தாம் சென்னைக்குப்
போய் அதைத் தடுத்து அவளை அழைத்து வந்துவிட
வேண்டுமென்றும், துளஸியம்மாளை அவ்விடத்திலிருந்து தப்ப
வைத்து அழைத்துவர வேண்டுமென்றும் அவர்கள் தீர்மானித்துக்
கொண்டனர். ஆனால், துளஸியம்மாளைத் தாம் அழைத்துவந்தால்,
அவளது தந்தை ஏற்றுக்கொள்ள மாட்டாராதலால், தாம் அவளை
யாரிடம் ஒப்புவிப்பது என்பதைப் பற்றி வெகுநேரம் வரையில்
யோசனை செய்து, கடைசியில் அவர்கள் அவ்வூர் போலீஸ் சப்
இன்ஸ்பெக்டரிடம் போய் அவரிடம் தங்களது வரலாற்றைத்
தெரிவித்து, கடிதங்களிரண்டையும் காட்டினர். ஷை சப் இன்ஸ்
பெக்டர் துரைக்கண்ணு முதலியாரது பந்து வாதலால், அவர் கடி
தங்களைப் படித்துப் பார்த்து, நிரம்பவும் பதறிப்போய்த் துளஸி
யம்மாளது நிலைமையைப் பற்றி மிகவும் வருந்தி, "ஐயா! துரைக்
கண்ணு முதலியார் பிடிவாதமா யிருப்பதைக் கருதி அந்தப் பெண்

ணின் இடரை நாம் நிவர்த்திக்காமல் இருப்பது நிரம்பவும்கொடுமையான காரியம். ஆகையால், நானே நேரில் உங்களோடு வருகிறேன். அந்தப் பெண்ணை மீட்டு நான் இங்கே அழைத்துவந்து வைத்துக் கொண்டு, ரகசியத்தில் அதன் தகப்பனுருக்குச் செய்தி சொல்லியனுப்பி, பெண் இனியாவது கெட்ட வழியில் போகாமல் ஒழுங்காயிருப்பதற்குத் தக்க மார்க்கம் செய்கிறேன். பிரெஞ்சு இலாகாவைச் சேர்ந்த பெண்ணை அக்கிரமமாக அவர் கொண்டு போனது சட்டப்படி குற்றமாகிறது. பெண்ணை மீட்டு அழைத்துக் கொண்டுவர எங்களுக்கு உரிமை இருக்கிறது. ஆகவே, நான் வருகிறேன். நீங்கள் கமல வல்லியைப் பற்றி அனுப்பி வைத்த விளம்பர விஷயம்எனக்கு நன்றாய் ஞாபக மிருக்கிறது. ஆனாலும், இவர்கள் பெயர்களை மாற்றி வைத்துக் கொண்டிருந்தமையால், அவர்கள் தான் இவர்களென்று நான் கண்டு கொள்ள இயலாமல் போய் விட்டது. அது விஷயமாய் இப்போதும், நான் நடவடிக்கை எடுத்துக் கொள்வது அவ்வளவு உசிதமாகத் தோன்றவில்லை ஆகையால் நீங்கள் உடனே போய்த் திருவடமருதூர் சப் இன்ஸ்பெக்டருக்கு இந்தக் கடிதங்களைக் காட்டி, அவரையும் கூட அழைத்துக் கொள்ள வேண்டும். அதுவுமன்றி, திருவையாற்றிலுள்ள குஞ்சிதபாத முதலியாரையும் அழைத்துக்கொள்ளுங்கள். எல்லோரும் சேர்ந்து வாருங்கள். நான் இங்கே இருந்து புறப்பட்டு வந்து உங்களை விழுப்புரத்தில் சந்திக்கிறேன். நாளைக்கு மறுநாள் காலையில் கலியாண மாகையால், நாம் நாளைய தினம் இரவு 8-மணிக்கு எழும்பூர் போய்ச் சேரும் வண்டியில் பட்டணம் போய் விடுவோம் அங்கே போய் மற்ற காரியங்களை யோசித்துக் கொள்வோம்'' என்றார்.

உடனே சாமியார்களிருவரும் அதற்கிசைந்து அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டனர். புறப்பட்டவர்கள் நேராய்த் திருவடமருதூருக்குப் போய், அவ்விடத்துப் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரைக் கண்டு, அவர் சென்னைக்குத் தங்களோடு வருவதற்கு ஏற்பாடு செய்துகொண்டு, அங்கிருந்து திருவையாற்றுக்குச் சென்றனர். கிழவருக்கு வேறு எந்த தகவலையும் தெரிவிக்க அவர்கள் சிறிதும் விரும்பவில்லை புஷ்பாவதி சென்னையில் இருப்பதாகவும், அவளுக்கு விளம்பரச் செய்தியே தெரியாதெனறும், அவள் அதுவரையில் நன்னெறி தவருமல் இருக்கும் விஷயத்தையும் தாம் சந்தேகமறத் தெரிந்து கொண்டதாகவும் கிழவரிடம் கூறவேண்டுமென்று அவர்கள் தீர்மானித்துக் கொண்டனர்; அதுவு

மன்றி, புஷ்பாவதியைத் தமது வசப்படுத்திக்கொள்ள கிழவருக்கே உரிமை இருந்ததன்றி, மற்றவருக்கு இல்லையாதலால், அவரும் தங்களுடன் உடனே புறப்பட்டு சென்னைக்கு வரவேண்டு மென்று அவரிடம் நிரம்பவும் விநயமாகக் கேட்டுக் கொண்டனர். புஷ்பாவதி தனது தேக பரிசுத்தம் கெடாமல் இருக்கும் பட்சத்தில் மாத்திரம் தாம் அவளை ஏற்றுக் கொள்ளலாமென்று கிழவர் எண்ணியிருந்தவ ராதலால், அவள் அவ்வாறே களங்கமற்றவளா யிருக்கிறாளென்பதைக் கேட்கவே, அவளைத் தாம் ஏற்றுக்கொள்ளலாம் என்று அபிப்பிராயப்பட்டு, அவர்களுடன் வர இணங்கினர்

உடனே எல்லோரும் புறப்பட்டு ரயிலில் வர, இரண்டு சப் இன்ஸ்பெக்டர்களும் இடை வழியில் வந்து சேர்ந்து கொண்டனர். அவர்கள் கிழவரிடம் கடிதங்களைப் பற்றிய தகவல் எதையும் தெரிவியாதிருக்கும்படி, திவான் சாமியார் அவர்களிடம் தனிமையில் கேட்டுக்கொள்ள, அவர்கள் அதற்கிணங்கினர். கலியாண தினத்திற்கு முந்திய நாள் இரவு எட்டுமணிக்கு எல்லோரும் சென்னைக்குப் போய்ச் சேர்ந்தனர். அதற்குமேல் தாம் போலீஸ் கமிஷனரிடம் போவது மரியாதை யல்லவென்றும், மறுநாள் அதிகாலையில் போகலாமென்றும், அவர்கள் தீர்மானித்துக் கொண்டதன்றி, காலியா யிருந்த ஒரு ஜாகையையும் உடனே வாடகைக்குப் பேசி ஒப்புக்கொண்டு, இரவு அவ்விடத்தில் தங்கி இருந்தனர். விடியற்காலையில் எல்லோரும் எழுந்து தமது காலைக் கடமைகளை முடித்துக் கொண்டபின் குஞ்சிதபாத முதலியாரை மாத்திரம் அவ்விடத்தில் வைத்துவிட்டு நேராய்ப் போலீஸ் கமிஷனரிடம் போய் விஷயங்களை யெல்லாம் கூறிக் கடிதங்களையும் காட்டவே, அவர் அளவற்ற ஆச்சரியமும் கோபமு மடைந்து, தமது உதவிக் கமிஷனரைப் பிடித்து சுந்தரமூர்த்தி முதலியாரது பங்களாவிற்கு அனுப்பிவிட்டு, தாம் மற்றவர்களுடன் அழகிய மணவாளரது பங்களாவிற்கு வந்து சேர, முன் விவரிக்கப்பட்டபடி, எல்லா ரகஸியங்களும் வெளியாயின. முடிவில் சுந்தரமூர்த்தி முதலியாரும் சிறைப்படுத்தப்பட்டார்.

சாமியார்கள் புஷ்பாவதியை அழைத்துப் போவதற்கு ஒரு வண்டி தயாரித்து ஆயத்தமாக வைத்துக்கொண் டிருந்ததன்றி, அவளது உபயோகத்திற்கு சாதாரணச் சேலை ரவிக்கை முதலியவைகளும் வாங்கி வைத்திருந்தனர். அவள் கலியாணக் கோலத்

தோடு போனால், கிழவர் அவளது முகத்திலும் விழிக்கமாட்டா ரென்று தெரியுமாதலால், அதற்குத் தக்க ஏற்பாட்டுடன் அவர்கள் வந்திருந்தனர். ஆகவே, வண்டியை நடுவழியிலிருந்த சர் சவலை ராமசாமி முதலியாரது சத்திரத்தில் நிறுத்தி அவளை இறக்கி அழைத்துக்கொண்டே போய் உதவிச்சாமியார் அவளைத் தனி யாக வைத்துக் கொண்டு, கிழவரிடம் அவள் நடந்துகொள்ள வேண்டிய மாதிரியைச் சொல்லிக் கொடுத்து, அவளது கலியாணக் கோலத்தையும் மாற்றி, அவள் சாதாரணத் தோற்றத்தோ டிருக் கும்படியாகவும் கிழவரிடம் ஒழுங்காகவும், அவர் சம்சயம் கொள் ளாதபடியும் நடந்துகொள்ள வேண்டுமென்றும் உபதேசித்தார். அதன் பிறகு அவர்கள் மறுபடி அவளை வண்டியில் வைத்து அழைத்துக்கொண்டு குஞ்சிதபாத முதலியார் இருந்த ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தனர். சுமார் இரண்டுவருஷகாலம் எவ நம் நாதியின் றிப் பிச்சைக்காரராய்த் திரிந்து க்ஷயநோய் கொண்டு இறக்கும் தரு ணத்தில் இருந்த தமக்கு சகலமான செல்வமும், பழைய கண்ணிய மான நிலைமையும் திரும்பினாலும், தமது யௌவன மனைவி திரும்பித் தம்மிடம் வரப்போகிறாளா வென்றும், வந்தாலும் தம்மை அவள் இலட்சியம் செய்ய மாட்டாள் என்றும் நினைத்து முற்றிலும் நம் பிக்கை இழந்து விரக்தி கொண்டிருந்த குஞ்சிதபாத முதலியார் தமது யௌவன மனைவி முன்னிருந்ததைக் காட்டிலும் பன்மடங்கு கனிந்த அழகும் கம்பீரத் தோற்றமும் முகக்களையும் நிறைந்தவ ளாய்த் தங்கக்கொடிபோல நாணிக்குனிந்து பயந்து பயந்து மருண்ட வண்ணம் உள்ளே வந்து நுழைந்ததைக் காணவே, அவரது மனம் மகா இன்பகரமான மனவெழுச்சி யடைந்து பேரானந்த வெள்ளத் தில் தோய்ந்து போயிற்று. அவரது தேகம் தன்னை மறந்து பூரித் துப் பரவச மடைந்தது. அந்த ஒரு நிமிஷத்தில் அவர் கொண்ட ஆநந்தப் பெருக்கினால், அவரது வயது முதிர்ச்சியில் இருபது வயது குறைந்து போனதுபோல் அவர் உணர்ந்தார் புஷ்பாவதியை இனி நாம் கமலவல்லி யென்று குறிப்போம். அந்த மடந்தையை முன்னால் அனுப்பிவிட்டுப் பின்னால் சாமியார்கள் இருவரும் சந்தோ ஷப் பெருக்கினால் மலர்ந்த இனிய முகத்தினராய் வந்து சேர்ந்த னர். திவான் சாமியார் தமது தந்தையை பயபக்தி வாஞ்சை யோடு நோக்கி, "அப்பா! என்னுடைய தாயாரை அழைத்துக் கொண்டு வந்து தங்களிடம் ஒப்புவித்து விட்டேன். தாங்கள் மயானத்திலிருந்து காத்தானை அனுப்பிய சங்கதியே அம்மா

ளுக்குத் தெரியாதாம். அப்போது அம்மாள் விசனப்பெருக்கில் எதையும் கவனிக்க வில்லையாம். ஒருவேளை தன் தாய் அவனுக்குப் பதில் சொல்லி யிருக்கலா மென்றும், இரவில் காத்தான் ஆள் மாறாட்டமாய்த் தப்பான தகவல் கொடுத்திருப்பா னென்றும் சொல்லுகிறார்கள். தாங்கள் உயிரோடு இருக்கிறீர்களென்று இதுவரையில் தெரியாதாம். இப்போது நாங்கள் சொன்னவுடனே, அவர்கள் பிரமாதமான ஆச்சரியமும், ஆநந்தமும் அடைந்து, உடனே புறப்பட்டு வந்து விட்டார்கள், தாங்கள் அவர்கள்மேல் கொஞ்சமும் வெறுப்பென்பதே கொள்ளாமல், பழைய நினைவுகளை யெல்லாம் சுத்தமாய் மறந்து, அவர்களைக் கலியாணம் செய்து கொண்டகாலத்தில், எவ்வளவு அன்பும் ஆசையுமாயிருந்தீர்களோ, அதுபோலவே, இப்போதும் தாங்கள் அவர்களை நடத்த வேண்டும். அம்மாள் இந்த நிமிஷம் வரையில் மகா புனிதவதியாகவே இருந்து வந்திருக்கிறார்க ளென்பதை நாங்கள் பலவகைகளில திருப்தி செய்து கொண்டோம். தாம் பாலியத்தில் விதவையாய் விட்டோம் என்று நினைத்து ஏங்கி விசனத்தி லாழ்ந்திருந்தவர்களாகையால், இப்போது தங்களை தத்ரூபம் தெய்வம் போலவே கொண்டாடுவார்கள் என்பதைத் தாங்கள் இனி அநுபவத்தில் பார்த்துக் கொள்ளலாம்.'' என்றார்.

அதைக் கேட்ட குஞ்சிதபாதமுதலியாரது உள்ளங்குளிர்ந்தது. தாங்கவொண்ணாத அபாரமான சந்தோஷமும் உருக்கமும் பொங்கி யெழுந்து அவரது நெஞ்சை யடைத்தன. அவர் ஆநந்த பாஷ்பம் சொரிந்து தேம்பித் தேம்பிக் குழந்தை போல அழுது, அப்பா! யோகலிங்கம்! உன்னை நான் என்னவென்று புகழப் போகிறேன்! எப்படிக் கிடந்த என்னை நீ மறுபடி எப்பேர்ப்பட்ட நிலைமைக்கு உயர்த்தி விட்டாய்! என்னென்ன வைபவங்களை உண்டாக்கிக் கொடுக்கிறாய்! மனிதரால் செய்ய சாத்தியப் படாத காரியங்களை யெல்லாம் நீ சாதித்து விட்டா யப்பனே! உன்னை நான் பேசுந் தெய்வ மென்று தான் மதிக்கிறேன்! என்னப்பனே! எம்பெருமான் உனக்கு நீடித்த ஆயுளையும் குறைவற்ற சந்தோஷத்தையும் கொடுக்க வேண்டும்.'' என்றார்.

திவான் சாமியார், "அப்பா! தங்கள் மனம் குளிர்ந்தால், அது ஒன்றே எனக்குப் பெருத்த தைரியத்தையும், அதனால் நீடித்த ஆயுளையும், சந்தோஷத்தையும் கொடுக்கு மென்பதைப்பற்றி சந்தேகமே இல்லை'' என்றார்.

கிழவர், "ஆ என்னப்பனே! என் கண்ணே! உன் குணத் தழகை நான் என்னவென்று புகழப் போகிறேன்!—ஆம், இந்தப் பெண் மாத்திரம் வந்ததே, இதன் சொந்தக்காரர் யாரும் வர வில்லையா?" என்றார்.

திவான் சாமியார், "வர அவர்களுக்கு முகமில்லை. அவர்கள் வாராம லிருப்பதே, தாங்களும் என் தாயும் அதிக மனவொற்றுமை யோடு எப்போதும் சந்தோஷமா யிருப்பதற்கு உகந்ததென்று நாங் களும் நினைத்து, அம்மாளை மாத்திரம் அழைத்து வந்தோம். அம்மாளுக்கும் மற்றவர் வருவது கொஞ்சமும் விருப்பமாக இல்லை" என்றார்.

கிழவர், "சரி; உங்கள் இஷ்டம்" என்றார்.

திவான் சாமியார், "அப்பா! என் தாயார் தங்களை விட்டுப் பிரிந்து வெகுகால மாகிறது. தங்களுக்குக் கால் கும்பிடவும், தங்க ளோடு சந்தோஷமாய்ப் பேசவும், அவர்கள் ஆசைப் படுகிறார்கள். ஆகையால். தாங்கள் உள்ளே போய் அம்மாளுடன் பேசுங்கள். நாங்கள் நாமெல்லோருக்கும் வேண்டிய போஜன விஷயத்தைக் கவனிக்கிறோம்." என்றார்.

குஞ்சிதபாத முதலியாரும் தமது யௌவன மனையாட்டியுடன் சம்பாஷிக்க ஆவல் கொண்டிருந்தா ராதலால், அதற்கிணங்கி, கமல வல்லி யிருந்த அறைக்குள் சென்று விட்டார். உடனே உதவிச் சாமியார் எதையோ நினைத்துக் கொண்டவர் போலத் தோன்றி, "சுவாமிகளே! ஒருவேளை புதுச்சேரி சப் இன்ஸ்பெக்டரும், திருவடமருதூர் சப் இன்ஸ்பெக்டரும் நாம் காரியம் ஆனவுடன் அவர்களை கவனிக்காமல் வந்து விட்டோ மென்று நினைத்துக் கொண்டு ஊருக்குப் போனாலும் போய் விடுவார்கள். நான் உடனே ஓடி அவர்களைப் பார்த்து உபசார வார்த்தைகள் கூறி அழைத்துக் கொண்டு வருகிறேன். அவர்கள் அவசரமாய்ப் போகவேண்டுமானு லும் அனுப்பிவிட்டு வருகிறேன். இதோ பக்கத்திலுள்ள சாப்பாட் டுக் கடையில்தான் நம்முடைய போஜனத்துக்கு ஏற்பாடு செய் திருக்கிறேன். எல்லாவற்றையும் இங்கே கொண்டு வந்து வைக்கும் படி சொல்லிவிட்டு அங்கே போகிறேன்" என்றார்.

திவான், "சரி; அப்படியே செய்யுங்கள்." என்றார்.

உடனே உதவிச் சாமியார் புறப்பட்டுப் போய் போஜனத்தை அனுப்பியபின் தமது போஜனத்தை அவ்விடத்திலேயே முடித்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டு தாம் செல்ல நினைத்த இடங்களுக் கெல்லாம் சென்றுவிட்டு பிற்பகல் மூன்று மணி சமயத்திற்குத் திரும்பி வந்து சேர்ந்தார். அதற்குள், திவான் சாமியாரும், மற்ற இருவரும் தங்களது போஜனத்தை முடித்துக் கொண்டு ஒரு தூக்கம் தூங்கி எழுந்தனர். திவான் சாமியார் உதவிச் சாமியார் அவ்வளவு நேரமாய் வராததைப்பற்றி கவலை கொண்டு, அவரைப் பார்த்துவிட்டு வருவதாய்க் கிழவரிடம் கூறி விட்டு வெளியில் போயிருந்தார். அப்பொழுது உதவிச் சாமியார் வேறு வழியாக வீட்டுக்கு வந்து சேர்ந்தார். கிழவர் தமது யௌவன மனைவியின் மாறாத பிரியத்தைக் கண்டு பூரித்து மெய்ம் மறந்து குழந்தை போலக் குதூகலமாகச் சிரித்து விளையாடிக் கொண் டிருந்தார் உதவிச் சாமியார் திரும்பி வந்தவுடன் திவான் சாமியார் தம்மைத் தேடிக்கொண்டு போயிருப்பதாக உணர்ந்து "நான் போனால் வாராமல் இருப்பேனா ! ஏன் அவர்கள் எனக்காக வீண்பாடு படவேண்டும். ஐயோ பாவம்! நான் கொஞ்சம் தாமசமாய் வந்ததால், அவர்களுக்கு இந்த உபத்திரவம் ஏற்பட்டது. ஆனாலும் அவர்கள் இந்த சந்தர்ப்பத்தில் வெளியில் போனதும் தெய்வ சங்கற்பந்தா னென்று நினைக்கிறேன்." என்றார்.

கிழவர்:—ஏன் சுவாமிகளே அப்படிச் சொல்லுகிறீர்கள் ? அவன் வெளியில் போனதில் ஏதாவது நன்மை யுண்டா ?

உதவிச்சாமியார்:—ஆம். நாம் இருவரும் தனியாக வார்த்தை சொல்லும்படியான சந்தர்ப்பம் வாய்த்ததல்லவா அதைத்தான் நான் நன்மையாகக் கருதுகிறேன்.

கிழவர்:—அவனுக்குத தெரியாமல் தாங்கள் என்னிடம் ஏதாவது சங்கதியைப் பற்றிப் பேச எண்ணுகிறீர்களா ?

உதவிச்சாமியார்:—ஆம்.

கிழவர்:—என்ன அது ? சொல்லுங்களேன்.

உதவிச்சாமியார்:—நான் திருவையாற்றில் வந்து தங்களைப் பார்த்த காலத்தில், இவர்கள் தங்கள் குமாரருடைய சிநேகித

ரென்று சொன்னீர்களல்லவா. அதை வைத்துக்கொண்டு நான் இவர்களை சாதாரண மனிதரென்று நினைத்தேன். அதன் பிறகு நான் இவர்களோடுப் பழகிப் பழகி இவர்களுடைய உண்மையான மகிமையைக் கண்டுகொண்டேன். நம்முடைய பழைய காலத்து மகரிஷிகளிடத்தில்கூட இவர்களிடத்தில் இருக்கும் அபார சக்தி இருந்திருக்குமென்று நினைக்கவில்லை. இப்பேர்ப்பட்ட பேசுந் தெய்வத்தைத் தாங்கள் யோகலிங்கமென்றும், அடே என்றும் கூப்பிடுவதைக்காண என் உயிரே போய்விடும்போல இருக்கிறது. தாங்கள் அப்படிச் செய்வது பெருத்த அபசாரமும் பாவச் செய்கையுமாகும். இதுவரையில் போனது போகட்டும். இனி தாங்கள் அப்பேர்ப்பட்ட ஒருமைப் பதத்தை உபயோகிக்க வேண்டாம்

கிழவர்:—(திடுக்கிட்டு நடுங்கிப்போய்) ஆ! அப்படியா! ஐயோ! நான் தெரியாமல் பெரும் பிழை செய்துவிட்டேனே! அடாடா! முதலில் நான் அவர்களை மரியாதைப் பதங்களால்தான் அழைத்தேன். அவர்கள் ஒருமைப் பதத்தால் அழைக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். அதனாலல்லவா, இதுவரையில் அப்படிச் செய்துவிட்டேன்! இனி அம்மாதிரி நான் செய்யவே மாட்டேன்.

உதவிச்சாமியார்:—ஆம். இனி அவர்களை நிரம்பவும் உயர்வான பதங்களால் அழையுங்கள்.

கிழவர்:—நான் அப்படியே செய்யத தடையில்லை. ஆனால் அவர்கள் மறுபடியும் முன்போல அதற்கு இடம் கொடுக்காமல் வற்புறுத்துவார்களோ என்னவோ?

உதவிச்சாமியார்:—ஆம். வாஸ்தவந்தான். அவர்கள் அப்படித்தான் சொல்வார்கள். நீங்கள் அவர்களுடைய வாயை அடக்க இன்னொரு தந்திரம் செய்யுங்கள். நீங்கள் அவர்களிடம் சொல்லுங்கள்; சுவாமிகளே! தாங்கள் காஷாயம் அணிந்து ஜடை தரித்திருக்கும் யதிதிகள். நான் கேவலம் குடும்பஸ்தன். நான் வயசில் பெரியவனாயிருந்தாலும், தங்களை ஒருமைப் பதத்தால் அழைக்க முடியவே முடியாது. தாங்கள் ஒருகாரியம் செய்தால், நான் ஒருமைப் பதத்தால் தங்களை அழைக்கிறேன். அதாவது, தாங்கள் தங்களுடை தீக்ஷையை விலக்கி, முகத்தை சுத்தம் செய்துகொண்டு, காஷாயம் உடுத்தாமல், எங்களைப்போல உடுததிக் கொள்ளும் பட்சத்தில், நான் ஒருமைப் பதத்தால் தங்களைக் கூப்பிடுகிறேன்’’

என்று ஒரே பிடிவாதமாய்ச் சொல்லி விடுங்கள் பிறகு அவர்கள் அந்த விஷயத்தை அதோடு விட்டுவிடுவார்கள் தாங்கள் அவர்களை மரியாதையாகவே கூப்பிடலாம். அவர்கள் தீக்ஷை முதலியவைகளை விலக்கி விட்டால், பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

கிழவர்:—(மிகுந்த சந்தோஷமடைந்து) ஆம். அது நல்ல யுக்தி தான். அபபடியே செய்கிறேன்.

உதவிச்சாமியார்:—நான் தங்களைத் தூண்டிவிட்டது அவர்களுக்குத் தெரிந்தால், அவர்களுடைய கெட்ட அபிப்பிராயத்திற்கு நான் பாத்திரனாவேன்.

கிழவர்:—தங்களை நான் காட்டிக் கொடுப்பேனா. அதைப்பற்றித் தாங்கள் கவலைகொள்ள வேண்டாம்—என்றார்.

அவ்வாறு அவர்கள் சம்பாஷித்திருக்கையில் திவான் சாமியார் வந்து உள்ளே நுழைந்தார். உடனே உதவிச்சாமியார் தமது இரு கைகளையும் கூப்பி, "அடியேன் தங்களுக்குப் பெருத்த தொந்தரவைக் கொடுத்து விட்டேன் க்ஷமித்தருள வேண்டும்." என்றார்.

திவான் சாமியார், "நான்தான் இங்கே என்ன செய்கிறேன். உட்கார்ந்திருப்பதைவிட, காலாறக் கொஞ்சதூரம் நடந்துவிட்டு வந்தது நல்லதுதானே. அதைப்பற்றிப் பரவாயில்லை." என்றார்.

உதவிச் சாமியார், "சப் இன்ஸ்பெக்டர் இருவரும் இன்று இரவு வண்டியில் போகிறார்கள். அவர்களுக்கு வசதியான வேறு இடம் அகப்பட்டதாம்; அங்கே இருந்து விட்டார்களாம். நான் அவர்களுக்கு உபசார வார்த்தைகள் சொல்லிவிட்டு வந்தேன்." என்றார்.

திவான் சாமியார் சரி; "சந்தோஷம். நாமும் இனி புறப்பட்டு ஊருக்குப் போக வேண்டியதுதானே! நாம் வந்த காரியம் ஆய் விட்டது. இவ்விடத்தில் நமக்குத் தேவையான வசதிகள் இல்லையாகையால், நாமும் ஊருக்குப் போய் விடுவதே நல்லது. ஏன் அப்பா! நாம் இப்போது திருவையாற்றுக்குப் போகலாமா, திருவடமருதூருக்குப் போகலாமா? எப்போது புறப்படலாம்?" என்றார்.

உடனே உதவிச் சாமியார், "நேற்று முழுதும் ரயிலில் பிரயாணம் செய்த அலுப்பு என்னாலேயே தாங்க முடியவில்லையே.

பெரிய ஐயாவுக்கு அது அதிக பாதையாக இருக்கும், ஆகையால், எந்த ஊருக்குப் போவதானாலும், நாம் இன்னம் இரண்டு தினங்கள் பொறுத்துப்போவதே சிலாக்கியமான காரியமென்று நினைக்கிறேன்'' என்றார்.

உடனே குஞ்சிதபாத முதலியார் திவான் சாமியாரைப் பார்த்து, "சுவாமிகளுக்குத் தெரியாத யோசனையை நாங்களா சொல்லப் போகிறோம். தங்களுக்கு எது யுக்தமாகத் தோன்றுகிறதோ அதன்படி செய்ய நான் காத்திருக்கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் திடுக்கிட்டுப் போய், "என்ன அப்பா! தாங்கள் மறுபடி என்னைப் பார்த்துப் பெரிய மரியாதைப் பதங்களை உபயோகிக்க ஆரம்பித்து விட்டீர்களே! அடியேன் தங்கள் விஷயத்தில் ஏதாவது அபசாரம் செய்து விட்டேனா! தாங்கள் என்னை எப்போதும்போல, அப்பா யோகலிங்கம் என்று கூப்பிடாமல், இப்போது புதுமாதிரியாய்க் கூப்பிடுவது என் மனதைப் புண்படுத்துகிறது. என்றார்.

உடனே குஞ்சிதபாத முதலியார், "சுவாமிகளே! க்ஷமிக்க வேண்டும். நான் இது வரையில் தங்களை ஒருமைப் பதத்தால் கூப்பிட்டு பெருத்த அபராதியாகி விட்டேன். தாங்கள் வயசில் சிறியவர்களா யிருந்தாலும், தங்கள் காஷாயவஸ்திரம் தீக்ஷை முதலிய வற்றின் மகிமை என்ன! உண்மையிலேயே தங்களிடம் இருக்கும் அபாரசக்தி யென்ன! இப்பேர்ப்பட்ட மகானை கேவலம் குடும்பஸ்தனான நான் ஒருமைப் பதத்தால் அழைப்பது மகா பாவகரமான காரியம். தாங்கள் அந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் என்னை விட்டு, மற்ற சகலமான காரியங்களிலும் தங்கள் பிரியப்படி என்னை நடத்தலாம்'' என்று ஒரே உறுதியாக மொழிந்தார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் மிகுந்த கலக்கமும் சஞ்சலமு மடைந்து, "என்ன அப்பா! தாங்கள் இதுவரையில் என் மனதைக் குளிரச்செய்து இப்போது என்னைப் பெருத்த வேதனைக்கு ஆளாக்க எண்ணுகிறீர்களே! எப்படியாவது தாங்கள் கிருபை செய்ய வேண்டும்'' என்று கெஞ்சி வேண்டினார் கிழவர், "சுவாமிகளே! தங்களை ஏகவசனத்தில் கூப்பிடுவது என் மனசுக்கு சகிக்கவில்லை. நான் மரியாதைப் பதத்தால் அழைப்பது தங்கள் மனசுக்கு சகிக்கவில்லை. இருவருக்கும் துன்பமில்லாதபடி இதற்கு

ஒரு பரிகாரம் செய்துவிடலாமென்று நினைக்கிறேன். தாங்கள் தங்களுடைய தீக்ஷை காஷாயம் முதலியவைகளை விலக்கி விட்டு, எங்களைப் போல ஆடைகள் தரித்துக் கொள்ளுங்கள். அப்போது நான் கூசாமல் தங்களை முன்போல அழைக்கிறேன், அதுதான் நல்ல யுக்தியாகப் படுகிறது" என்று கூறிவிட்டு, தாம் அந்த முடிவை மாற்றத் தயாராக இல்லை என்பதை திவான் உணரும் பொருட்டு, கமலவல்லி இருந்த அறைக்குள் போய் விட்டார்.

உடனே திவான் சாமியார் உதவிச் சாமியாரை நோக்கி, "சுவாமிகளே! அப்பா என்ன காரணத்தினால் இப்படி திடீரென்று பிடிவாதம் பிடிக்கிறார்கள்?" என்றார்

உதவிச் சாமியார், "இதற்கு வேறு காரணம் கூட வேண்டுமா. அவர்களே தான் காரணத்தைச் சொல்லுகிறார்களே, அது சரியான காரணமாகத்தான் படுகிறது. தாங்கள் தங்களுடைய மனத் திருப்தியை மாத்திரம் கருதுகிறீர்கள். அவர்கள் வயசு முதிர்ந்த நல்ல புத்திமான். அவர்களுடைய மனசுக்கும் இது உறுத்தலாயிருக்குமல்லவா. அதையும் தாங்கள் கவனிக்க வேண்டாமா! இன்னொரு விஷயமும் இருக்கிறது. தாங்கள் ஏதோ ஒரு வியாஜ்யத்தை வைத்துக்கொண்டு காஷாயம் வாங்கிக் கொண்டீர்களே யன்றி உண்மையான துறவியல்ல. ஆகையால், தாங்கள் இந்தக் கோலத்திலேயே எப்போதும் இருக்க வேண்டுமென்ற கட்டாயமும் இல்லை. அதுவுமன்றி தங்கள் தகப்பனாரையும் தாயாரையும் தாங்கள் ஒன்றாய்ச் சேர்த்து நல்ல நிலைமையில் வைத்து விட்டீர்கள். அதுவும் தவிர, தங்கள் சம்சாரம் குற்றமற்ற பதிவிரதா சிரோன்மணி என்ற விஷயத்தையும் தாங்கள் திருப்தி செய்து கொண்டீர்கள். அந்த ஒரு விஷயத்தைப் பற்றியே தாங்கள் சந்நியாசி ஆனது. அது திருப்திகரமாக முடிந்தது. இனி தாங்கள் சந்நியாசிக் கோலத்தில் இருக்க வேண்டிய அவசியமுமில்லை. இனி அவர்களைக் காண்பதொன்றே பாக்கி. அதுவும் திருவருளால் வெகு சீக்கிரம் கைகூடுமென்று என் மனசில் ஏதோ ஒரு தெய்வம் சொல்லுவது போல நான் உணருகிறேன். இறந்து போக வேண்டு மென்று நினைத்திருந்த தாங்கள் தங்கள் தந்தையாரைக் கண்டவுடன், இனி அவர்களைக் காப்பாற்றி சந்தோஷ நிலைமையில் வைக்க வேண்டு மென்பதைக் கருதி தாங்கள் உயிருடன் இருக்கிறீர்கள். ஆகையால் அவர்களுடைய மனம்பூர்த்தியான சந்தோஷத்தை யடையும்படி தாங்கள் எப்படியும் செய்யவேண்

டும். தாங்கள் அவர்களுடைய புத்திரர் என்பதைக் கூடிய சீக்கிரம் அவர்களுக்குத் தாங்கள் தெரிவிப்பதே உசிதமென்று தோன்றுகிறது. அதற்குப் பூர்வாங்கமாகத் தாங்கள் இப்போது தங்களுடைய தீக்ஷை காஷாயம் முதலியவைகளை நீக்குங்கள்; உங்களுடைய அடையாளத்தை இவர்கள் கண்டுகொள்வது துர்லபம். கண்டுகொண்டாலும், இருவரும் ஒரே மாதிரியான தோற்றமுடையவர்களென்றுதான் தாங்கள் ஏற்கனவே சொல்லி வைத்திருக்கிறீர்களே. அவர்கள் திடீரென்று அதிர்ச்சி யடையாதபடி நாம் படிப்படியாய் உண்மையை வெளியிட்டு விடலாம்.'' என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார் சிறிது நேரம் தமக்குள் ஆலோசனை செய்து பார்த்து, "சரி சுவாமிகளே! தாங்கள் சொல்வதும் யுக்தமாகத்தான் தோன்றுகிறது. அப்படியே செய்துவிடுவோம். நாளைய தினம் சனிக்கிழமை; அது கழிய, ஞாயிற்றுக்கிழமை இந்தக் கோலத்தை விலக்கி விடுகிறேன்.'' என்றார்.

உதவிச்சாமியார்:—"ஆம். ஸ்வாமிகளே! அப்படியேசெய்யுங்கள். இந்த சந்நியாசிக் கோலத்தோடு தங்களைப் பீடித்த பெருத்த சநியனும் ஒழிந்து போய்விடுமென்று நினைக்கிறேன். தாங்கள் இப்போது வருவதற்கு முன், பெரியவர் ரயிலில் பிரயாணம் செய்த அனுப்புத்திரப் பல நாட்கள் பிடிக்கும் என்று சொன்னார்கள். ஆகையால் நாம் இந்த ஊரில் திங்கள் கிழமை பகல்வரையில் இருந்து அன்று இரவு வண்டியில் ஏறிப்போய் விடுவோம். நான் இன்னொரு விஷயத்தையும் தங்களிடம் சொல்ல மறந்து போய் விட்டேன். நான் அந்த சப் இன்ஸ்பெக்டர்கள் இருவரையும் எங்கே கண்டேன் தெரியுமா! போலீஸ் கமிஷனருடைய கச்சேரியில் எல்லோரும் கூடியிருந்தார்கள். அங்கே தான் கண்டேன். அப்போது அந்த அழகிய மணவாள முதலியாரும் அங்கே வந்தார்கள். வந்து, சப் இன்ஸ்பெக்டர்களுக்குத் தமது மனமார்ந்த நன்றி யறிதல் கூறினார்கள். அவர்கள் தம்மா லொன்றும் ஆகவில்லை யென்றும், இரண்டு கடிதங்களையும் கொணர்ந்து கொடுத்த சாமியார்களுக்கே எல்லா ஸ்தோத்திரமும் உரியது என்றும்'' சொன்னார்கள். நான் பக்கத்தில் இருந்தேன். உடனே அழகிய மணவாளர் என்னை நமஸ்கரித்து, "சுவாமிகளே! தாங்கள் இருவரும் கடிதங்களைக் கொண்டு வராவிட்டால் இந்நேரம் நான் மீளாத படு குழியில் விழுந்திருப்பேன். தெய்வம்போல வந்து நீங்கள் இருவரும் காப்பாற்றினீர்கள். நீங்கள் இருவரும் திங்கள

கிழமை நடக்கும் கலியாணத்துக்கு அவசியம் விஜயம் செய்து, எடுத்த காரியத்தைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று நூறு தடவை கேட்டுக் கொண்டார்கள். நான் தங்களையும் அழைத்துக் கொண்டு வருவதாக வாக்களித்து விட்டேன்" என்றார்.

அதைக் கேட்ட திவான், சாமியார், "சரி, அந்த வாக்கை நாம் அவசியம் நிறைவேற்றுவோம். திங்கள் கிழமை இரவிலேயே நாம் போகலாம்" என்றார்.

* * * *

இவர்களை நாம் சற்றுசமயம் இவ்வளவோடு விடுத்து வேறொரு விஷயத்தைக் கூறுவோம். வண்ணாரப்பேட்டை பங்களாவில் தனியாக இருந்து வந்த நமது பெண்மணியான கோகிலாம்பாள் கண்ணபிரானையே நினைந்து நினைந்துருகி அல்லும் பகலும் அநவரதமும் அழுதக் கண்ணும் புண்ணுற்ற மனதுமாக இருந்தாள். அவள் தனது போஜனத்தை நாடவில்லை நித்திரையையும் நாடவில்லை; தனது தேகபோஷணையையே சிறிதும் கவனிக்காமல் அசட்டையாக விட்டு, கண்ணபிரானது குடும்பத்திற்கும், தங்களது குடும்பத்திற்கும் நேரிட்டுள்ள பல இடர்களை நினைந்து நினைந்து சதாசர்வதா துக்கித்து மனமாழ்கிக் கிடந்தாள். சௌந்தரவல்லியின் கலியாணம் நின்றது அவளது மனவேதனை உச்ச நிலையை யடைந்து, அவள் பொறுக்கத்தக்க வரம்பை மீறி அபாரமாகப் பெருகிவிட்டது. தனது கலியாணம் நின்று போனதைப் பற்றிய நினைவே அவளுக்கு உண்டாகவில்லை. தனது தங்கையின் கலியாணம் நடக்கும்போது, தானும் கூட இருந்து அந்த ஆநந்தத்தை யடைய தான் பாக்கியம் செய்யவில்லையே என்றும், தனது தங்கையும் தாயும் ஏகாங்கியாய் இருந்து காரியங்களை நடத்துவது தனது தங்கைக்கு மதிப்புக் குறைவாயிருக்குமே யென்றும் எண்ணி யெண்ணிப் பெருவேதனையி லாழ்ந்து, "ஆகா! எங்களுக்கு என்ன கஷ்டகாலம் வந்துவிட்டது! நாங்கள் பிறந்த வேளைப்பயன் இப்படியா யிருக்கவேண்டும்! ஐயோ! ஊரில் எத்தனையோ கோடாநு கோடி ஜனங்கள் இருக்கிறார்களே! அவர்களுடைய வீடுகளிலெல்லாம் கலியாணங்கள் இப்படியா நடக்கின்றன. எனக்குக் கலியாணம் செய்ய ஆரம்பித்தது அந்த மாதிரி முடிந்தது. அது தான் போனால் போகிறதென்றால், நான் சாதாரணமாக இருந்து இந்தக் கலியாணத்தை நடத்தி, அங்கிருந்து மற்றவர்களைப்போல நானும்

சந்தோஷ மடையக் கூடாதா! அதற்குக்கூட கொடுத்துவைக்காத மகாபாவி ஜென்ம மெடுத்தேனே! இப்போது காலை பதது மணியிருக்கும். இந்நேரம் சௌந்தராவுக்குக் கலியாணம் முடிந்து போயிருக்கும். அவளும், அவளுடைய புருஷரும் கலியாணக் கோலத்தோடிருப்பது போல, என் அகக் கண்ணில் ஒருதோற்றம் உண்டாகிறதே! ஐயோ! அவர்கள் இருவரும் எவ்வளவு அழகாயிருப்பார்கள்! நான் அவளுககுத தெரியாமல் யாரோ ஒரு பரதேசியைப்போலவாவது கூட்டத்தில் தூர நின்றபடி பார்த்துவிட்டு வந்துவிடலாமா வென்றுகூட நினைக்கும்படி இருக்கிறதே! ஈசா! என்னை இப்படியும் சோதனைக்கு ஆளாக்கவேண்டுமா! மற்ற விஷயங்களில் என்னை வதைத்தாலும், என் தங்கைக்கு என்மேல் இவ்வளவு பகைமையும், அருவருப்பும் ஏற்படவேண்டுமா! நான் அவள் விஷயததில் என் மனசாலும் யாதொரு தீங்கும் நினையாதிருக்கையில், அவள் இப்படி மாறுவது காலவிததியாசததின் பலனா! ஆ! தெய்வமே! இப்படியும சதி செய்யலாமா! யாதொரு காரணமுமின்றி கூடபபிறநத தங்கைகளுக்குள் இப்படிப்பட்ட பகைமையை உண்டாக்கி விட்டாயோ! ஐயோ! இனி என்னுடைய ஆயிசுகாலம் முழுதுமே அவளும் நானும் இப்படியே தான் இருந்துவிட நேருமோ என்னவோ தெரியவில்லையே. அவளை நான் மறுபடி பார்ப்பேனா ஐயோ! என் மனம் பதறுகிறதே! தெய்வமே! தெய்வமே! என் விஷயத்தில் உன் ஹிருதயம் இவ்வளவு கடினமாய்ப் போகவேண்டுமா" என்று நினைத்து நினைதது அழுதழுது சோர்ந்து தளர்ந்து கண்ணீரை மாலை மாலையாய்ப் பெருகவிட்டவண்ணம் ஓர் அறையின் தரையில அலங்கோலமாய் விழுந்து கிடந்தாள். அவளது ஆடையும் அளகபாரமும் தாறுமாறாகச் சிதரிப் போய்க் கிடந்தன. கைகாலகளெல்லாம் சுவாதீனமற்று அப்படியப்படியே ஓய்ந்து கிடந்தன. அவ்வாறு அவள் சகிக்கவொண்ணாத துயரமும், ஏக்கமும், மனத தளர்ச்சியும், ஏமாற்றமும் அடைந்து ஓய்ந்து படுத்திருக்க, அப்பொழுது அந்த அறையின் கதவு சடேரென்று திறந்து கொண்டது. "அக்கா! அக்கா!" என்று மிகுந்த வாஞ்சையோடும், பயபக்தியோடும், உருக்கமாகவும், பதைபதைப்பாகவும் அழைத்தகொண்டு சௌந்தரவல்லி தனது கலியாணக் கோலததோடு உள்ளே நுழைந்தாள். நுழைந்தவள் தனது அக்காள் மகா பரிதாபகரமாகப் படுததிருந்த அலங்கோல நிலைமையைக் கண்டு திடுக்கிட்டுப் பதறித் துடிதுடித்துப்போய், "ஆ!

அக்கா! என்ன கோலம் இது! மகா துஷ்டையாகிய என்னு லல்லவா நீ இப்படிப்பட்ட கோலத்தை யடைய நேர்ந்தது! என் அக்கா! என் அமிர்தம்போன்ற அக்கா! என் அரிய மாணிக்கக்கட்டி போன்ற அக்கா! உன் அலங்கோலத்தைப் பார்க்க, என் வயிறு பற்றி எரிகிறதே! என் கண் கூசுகிறதே! என் உயிர் துடிக்கிறதே! எழுந்திரம்மா!'' என்று கூறிய வண்ணம் அவளண்டை ஓடி வந்தாள்.

சிறிதும், எதிர்பாராத விதமாய் சௌந்தரவல்லி திடீ ரென்று உள்ளே வந்து அவ்வாறு பிரியமாகிய அமிர்தத்தை மழை போலச் சொரிந்ததைக் கண்ட கோகிலாம்பாள் திடுக்கிட்டு சரே லென்று எழுந்து உட்கார்ந்து தனது கேசத்தையும் ஆடையையும் திருத்திக்கொண்டு, தனது கண்களையும் செவிகளையும் நம்பாமல் இரண்டொரு நிமிஷ நேரம் பிரமித்துக் கல்போல இருந்து விட் டாள். மகா வசீகரமான கலியாணக் கோலத்தோடு ரதிதேவிபோல திடீரென்று அவள் தனக்கெதிரில் வந்து நின்றது, அவளுக்கு சொப்பனக் காட்சிபோலத் தோன்றியதே யன்றி உண்மைக் காட்சி யாகத் தோன்றவே இல்லை. எவளது வருகையை அவள் சிறிதும் எதிர்பார்க்க வில்லையோ, அவளே தனது கலியாண வைபவத்தை விட்டுத் தனிமையில் அவ்வளவு தூரம் வந்தாளென்றால், அது கோகி லாம்பாளுக்கு மானஸீகத தோற்றமாகப் பட்டு மிகுந்த மலைப் பையும மனப் பிராந்தியையும் உண்டாக்கியது. ஆகவே, அவள் அப் படியே விழித்தபடி மௌனமாயிருக்க, அதைக் கண்ட சௌந்தர வல்லி தனது அக்காளுக்குப் பக்கமாய்ப் போய் உட்கார்ந்து மிகுந்த வாத்சல்யத்தோடும் பாசத்தோடும் அவளைக் கட்டித் தழுவி அவளது முகத்தைத் தனது மார்பின்மீது சார்த்தி, அவளது கண்களி லிருந்து வழிந்தோடிய கண்ணீர் வெள்ளத்தைத் துடைத்துவிட்டு, "அக்கா! நான் தெரியாத் தனத்தினாலும், ஆததிர புத்தியினாலும், உன் மனம் புண் படும்படியான காரியங்களைச் செய்து, பெருத்த அபராதியாகி விட்டேன். அதற்கு தண்டனை கைமேல் கிடைத்து விட்டது உன் வதைதான் என்னை இப்படித் தாக்கிய தென்பது நிச்சயம். அக்கா! உன் விஷயத்தில் நான் செய்த தீங்குகளை யெல் லாம் நீ இந்த க்ஷணம் முதல் மறந்துவிட வேண்டும். நான் உன் விஷயத்தில் மரியாதைத் தவறான சொற்களை உபயோகித்ததையும் மறந்து என்னை க்ஷமிக்கவேண்டும். நான் லக்ஷம் தரம் உன் காலைத் தொட்டுக் கும்பிடுகிறேன். நீ ஆழ்ந்த உறுதியான விவேகம் படைத்

தவள். உன் நடத்தையில் தவறு ஏற்படுவது அரிது. எனக்கு விவேகம் இருந்தாலும், என் ஆத்திர புத்தியில், எதைப் பற்றியும் நான் உடனே தவறான அபிப்பிராயம் கொண்டு விடுகிறேன். மனிதர் பட்டுப் பட்டுத்தான் தேற வேண்டுமென்று நீ சொன்ன வார்த்தையைத் தங்கத் தகட்டில் செதுக்கி வைத்துப் பூஜைசெய்ய வேண்டும். அது என் விஷயத்தில் முற்றிலும் பொருத்தமாக முடிந்தது. உன்னை இளக்காரம் செய்து தூஷித்து உதறித் தள்ளி விலக்கிவைத்து விட்டு நான் போய்க் கலியாணம் செய்துகொண்டு வாழ நினைத்தேனல்லவா! என் எண்ணத்தில் கடவுள் நன்றாக மண்ணைப் போட்டுக் குதறி விட்டார். நான் இன்று அடைந்த அவமானத்துக்கு அளவு சொல்ல முடியாது'' என்றாள்.

அதைக் கேட்ட கோகிலாம்பாள் தனது செவிகளையே நம்பாமல் அளவற்ற வியப்பும், பிரமிப்பும், மனவெழுச்சியும், பூரிப்பும் அடைந்து, ஆனந்த பாஷ்பம் சொரிந்து, தான் அவள்மீது சிறிதும் பகைமை பாராட்டாமல் முன்னிருந்ததை விட அதிக வாஞ்சையோடிருந்தது தெரியுமாறு அவளை அன்போடு அணைத்து, "என்ன சௌந்தரா இது! நீ சொல்வது எனக்கு விளங்கவில்லையே! என்ன நடந்ததம்மா? உன் கழுத்தில் மாங்கலியம் இல்லையே! கலியாணம் ஏனம்மா நடக்கவில்லை? என்ன இடையூறு நேர்ந்ததம்மா? நம்முடைய அம்மாள் இப்போது எங்கே இருக்கிறார்கள்?'' என்று மிகுந்த ஆவலோடு வினவினாள்.

உடனே சௌந்தரவல்லி எல்லா விஷயங்களையும் விவரமாக எடுத்துக்கூறினாள். மைலாப்பூராரது அபாரமான செல்வம் செல்வாக்கு முதலியவற்றின் பெருமையையும், அவர்கள் செய்திருந்த அத்யாச்சரியகரமான கலியாண ஏற்பாடுகளையும், அழகிய மணவாளரின் கட்டழகு, குணாதிசயங்கள், உத்தியோகச் சிறப்பு ஆகிய விவரங்களையும், கலியாணம் நடந்த சமயத்தில் போலீஸ் கமிஷனர் திடீரென்று தோன்றி, அதை நிறுத்தியதையும், மேலே முடிவு வரையில் நிகழ்ந்த சம்பவங்களையும், கண்ணபிரான் விடுதலையடைந்ததையும், மறுபடி செய்யப்பட்டிருக்கும் கலியாணத் தீர்மானத்தையும், கற்பகவல்லி யம்மாளைப் பற்றி சமாச்சாரப் பத்திரிகையில் வந்த செய்தி, பூஞ்சோலையம்மாள் கடலூருக்குப் போயிருப்பது கண்ணபிரானை அழைத்து வந்து தமது பங்களாவில் வைத்திருக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் அழகிய மணவாள முதலி

யாரே நேரில் சப் ஜெயிலுக்குப் போயிருப்பது ஆகிய செய்திகள் யாவற்றையும் சவிஸ்தாரமாக எடுத்துக் கூறினாள். அவைகளைக் கேட்ட கோகிலாம்பாள், "ஆ! அப்படியா! இதெல்லாம் நிஜந்தானா! என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்! இப்படியும் உலகத்தில் நடக்குமா! எனக்கு இன்னமும் நம்பிக்கைப்பட மாட்டேனென்கிறதே! அம்மா! சௌந்தரா! நான் இப்போது என்னுடைய அதிர்ஷ்டத்தைப் பற்றிக்கூட அதிகமாய் சந்தோஷப்படவில்லை. அந்தச் சண்டாளனுக்கும் உனக்கும் ஏற்பட இருந்த முடிச்சைக் கடவுள் நீக்கினாரே! அதை நினைக்கத்தான் எனக்கு மயிர்ச் சிலிப்பு உண்டாகிறது. என் மனசு பூரித்துப் பொங்கிப் பரவசமடைகிறது. கடவுள் கருணாநிதி யல்லவா! அவரே தான் வந்து இந்தப் பேரிடரை விலக்கி காப்பாற்றி இருக்கிறார். கடவுளின் துணை யில்லாவிட்டால், கண்ணுள்ள குருடரான நாம் இந்த உலகத்தில் ஒரு க்ஷணநேரங்கூட இருந்து வாழமுடியாது." என்று கூறி முன்னிலும் அதிகரித்த வாஞ்சையும் பாசமும் தோற்றுவித்து சௌந்தரவல்லியைத் தழுவினாள். அக்காளும் தங்கையும் பகைத்துப் பிரிந்து, அவ்வாறு மறுபடியும் கூடி ஒன்றுபட்ட காட்சி தெய்வமும் கண்டு கண்கலங்கத் தக்க மகா உருக்கமான காட்சியாக இருந்தது.

* * * * *

இனி நாம் சிறிதுகாலம் சென்னையை விட்டு மஞ்சட்குப்பம் கூடலூருக்குச் செல்வோம்; அவ்விடத்திலுள்ள டிப்டி கலெக்டருடைய வீட்டில் இருந்த கற்பகவல்லியம்மாளது நிலைமை கல்லும் கரைந்துருகத் தக்கதாக அவ்வளவு பரிதாபகரமாக இருந்து வந்தது. டிப்டி கலெக்டரும், அவரது தாய்தந்தையர், மனைவி, மக்கள், சகோதரிகள் முதலிய எல்லோரும் அந்த அம்மாளை குணவதியம்மாள், குணவதியம்மாள் என்று நிரம்பவும் பட்சமாகவும் வாஞ்சையாகவும் கூப்பிட்டு, புதிதாய் வரும் சம்பந்திக்கு மரியாதைகள் செய்வதை விட அதிகமாக அந்த அம்மாளுக்கு உபசரணை புரிந்து அவளைத் தரையில் விடாமல் தங்களது ஹிருதய கமலத்திலேயே வைத்திருந்தனரென்று கூறுவது மிகையாகாது. கற்பகவல்லியம்மாளது மகா மிருதுவான தோற்றமும், அமிர்தம் போன்ற குணமும், மாதுரியமான சொற்களும், அந்த அம்மாள் தக்க பெரிய இடத்தைச் சேர்ந்தவளாகத்தான் இருக்க வேண்டுமென்ற பெருத்த

சந்தேகத்தை அவர்கள் எல்லோரது மனத்திலும் உண்டாக்கி விட்டன வாதலால், கற்பகவல்லி யம்மாளது பெயர், ஊர் முதலிய வரலாறுகளை அறிய வேண்டுமென்று அவர்கள் பட்டபாடு கணக்கிலடங்காதது. கற்பகவல்லி யம்மாள் தேனொழுகுவது போலப் பேசி அவர்களெல்லோரையும் சமாதானப் படுத்தி, "அம்மா! என்னுடைய பெயரையும் ஊரையும் மற்ற வரலாறுகளையும் நான் இப்பேர்ப்பட்ட மகா உபகாரிகளான உங்களிடம் வேண்டுமென்று மறைத்து வைக்கவில்லை. அவைகளை நீங்கள் தெரிந்து கொண்டால், நீங்கள் எவ்வளவோ சந்தோஷமாக இருப்பதெல்லாம் ஒரு நொடியில் துக்கமாக மாறிவிடும். என் விஷயத்தில் இவ்வளவு தூரம் இரக்கங் கொண்டு உதவி புரியும் புண்ணியாத்துமாக்களுக்கு நான் தீமையையா கைமாறாகச் செய்கிறது. வேண்டாமம்மா. நான் ஏழையிலும் பரம ஏழையான ஒரு ஸ்திரீ! கடவுளின் சோதனைக்கு ஆளாய் உற்றார் உறவினர் எல்லோரையும் இழந்து துக்க சாகரத்தில் மூழ்கி அநாதையாய்க் கிடந்து புழுவிலும் கேடாய்த் தவிப்பவள் ஆய்விட்டது. என் உயிர் நீங்கும்படியான காலம் நெருங்கி விட்டது! அநேகமாய் இன்னம் பதினைந்து தினங்களில் என் உயிர் இந்தப் பாழுடம்பை விட்டு நீங்கிவிடும். என் துயர மூட்டை என் தலையோடு ஒழியட்டும், அதை உங்களுக்கு மாற்றி விட்டுப் போவது மகா பாதகமான செய்கை. நான் என் வரலாற்றைச் சொல்லவில்லையே என்று நீங்கள் யாரும் என்மேல் அருவருப்புக் கொள்ளக் கூடாது," என்று நிரம்பவும் உருக்கமாக மனநைந்து கூறுவாள். கண்களிலிருந்து கண்ணீர் மாலை மாலையாகப் பெருகும். அதைக் கண்டு மற்றவர் சகியாமல், "சரி; ஏற்கெனவே விசனக்கடலில் மூழ்கி இருக்கிறவர்களை நாமேன் வருத்தவேண்டும்." என்று நினைத்து அவர்கள் மௌனமாக இருந்து விடுவார்கள். கற்பகவல்லி யம்மாள் விடியற் காலையிலேயே ஸ்நானத்தை முடித்துக் கொள்வதும், பிறகு நாள் முழுதும், "பகவானே! என்னப்பனே! பரம புருஷா! பரந்தாமா! தீனரக்ஷகா! என்னை வெகு சீக்கிரம் உன் பாதார விந்தத்தில் சேர்த்துக் கொள்ளப்பனே!" என்று ஓயாமல் ஜெபம் செய்து உருகுவதுமாய் தூரமான ஓர் மூலையில் உட்கார்ந்திருப்பாள். டிப்டி கலெக்டரது வீட்டார் ஆயிரம் தரம் வேண்டிக் கொண்டால் மரியாதைக்கு இரண்டு கவளம் போஜனம் செய்து அவ்வளவோடு திருப்தியடைந்து மறுபடியும் ஜெபத்தை துவக்கிக் கொள்வாள்.

வெள்ளிக்கிழமை மாலையில் டிப்டி கலெக்டரும், அவரது குடும்பத்தினரும் கற்பகவல்லியம்மாளைச் சூழ்ந்து அவளது வரலாற்றையறிய முயன்றிருந்த தருணத்தில் சேவகன் உள்ளே வந்து, "வாசலில் யாரோ ஓர் அம்மாள் வந்திருக்கிறார்கள். நம்முடைய குணவதியம்மாளைப் பார்க்கவேண்டுமென்கிறார்கள்" என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் அபாரமான மகிழ்ச்சியும் குதூகலமுமடைந்து தாம் அறிய ஆவல் கொண்டிருந்த வரலாற்றைத் தெரிந்துகொள்ள வழி ஏற்பட்டதென்று நினைத்தது, அந்த அம்மாளை உள்ளே அழைத்து வரச் செய்தனர். கற்பகவல்லியம்மாளும் திடுக்கிட்டு தன்னைத் தேடிக்கொண்டு அவ்வளவு தூரம் யார் வரப் போகிறார்களென்று சந்தேகித்த வண்ணம் ஆவலோடு வாசற்படியைப் பார்க்க, அந்தத நிமிஷம் பூஞ்சோலையம்மாள் நிரம்பவும் ஆவலோடு அங்கு மிங்கும் பார்த்தபடி உள்ளே வந்து, கற்பகவல்லியம்மாளைக் கண்டவுடனே, மற்றவர் இருந்ததைக்கூட மறந்து, "அம்மா! எங்களை விட்டு இப்படித்தானா வந்து விடுகிறது! நாங்கள் உங்கள் விஷயத்தில கொஞ்சமும் தவறு செய்யவில்லையே! ஐயோ அம்மா என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்! தங்கமான மனதையுடைய நீங்கள், நாங்கள் எல்லோரும் நடுங்கும்படியான பெரியகாரியத்தைச் செய்து விட்டீர்களே!" என்று கூறி அபாரமாகப் பொங்கிய மனவெழுச்சி யடைந்து ஆநந்த பாஷ்பத்தைச் சொரிந்தவண்ணம் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஆசையோடு கற்பகவல்லியம்மாளைக் கட்டித் தழுவ, அவ்வாறு மின்னல் தோன்றி மறையும் நேரத்தில் சிறிதும் எதிர்பாராத நிலைமையில் அந்த அம்மாளைக் கண்ட கற்பகவல்லியம்மாள் வாய்திறந்து பேசமாட்டாமல் கோவென வாய்விட்டுக் கதறியழத் தொடங்கி விட்டாள். பூஞ்சோலை யம்மாள் தன மனதை சாந்தப்படுத்திக் கொண்டதோடு கற்பகவல்லியம்மாளுக்கும் உபசார வார்த்தைகள் கூறி சமாதானப் படுத்திவிட்டு, கற்பகவல்லியம்மாள் சென்னையை விட்டு வந்தது முதல் அந்த நிமிஷம் வரையில் நிகழ்ந்த விஷயங்கள் யாவற்றையும் விரிவாக எடுத்துக் கூறினாள்.

தனது புதல்வன் நிரபராதியென்று மெய்ப்பிக்கப் பட்டதையும், அவன் விடுதலை பெற்றதையும், தன் விஷயத்தில் குடிகாரத் துருக்கனால் ஏற்பட்ட மானபங்கம் நிவர்த்தியானதையும், முடிவில் கண்ணபிரானுக்கும் கோகிலாம்பாளுக்கும் திங்கள்கிழமையன்று கலியாணம் நிச்சயமாயிருப்பதையும்கேட்ட கற்பகவல்லியம்மாளது

நிலைமை உயிரற்ற சவம் யௌவனப் பருவமும் தீர்க்காயுளும் பெற்று எழுந்து உட்கார்ந்து கொண்டதைப் போலாயிற்று. அந்த அம்மாளது தேகமும் உயிரும் அந்த ஒரு நிமிஷத்தில் புத்துயிர் பெற்றுத் தழைத்துச் செழித்தது வல்லமையும் வனப்பும் பெற்றன. விசனமே வடிவெடுத்து வந்ததோவெனத் தோன்றிய மகா துக்ககரமான வதனத்தில் சந்தோஷமும் புன்னகையும் அரும்பவாரம்பித்தன. மனத்தில் இன்ப வெள்ளம் பொங்கிப் பெருக்கெடுக்கத் தலைப்பட்டது தேகம் பூரித்து மினுமினுப்பை யடையத் தொடங்கியது. கற்பக வல்லியம்மாள் பூஞ்சோலையம்மாளை நோக்கி, "அம்மா! நீங்கள் சொல்வதெல்லாம் கனவில் காண்பதுபோலல்வா இருக்கிறது! அந்த சுந்தரமூர்த்தி அப்பேர்ப்பட்ட மோசக்காரனென்பது கொஞ்சமும் தெரியாமல் போய்விட்டதே. பார்த்தீர்களா! அவன் என்னென்ன துணிகரமான காரியங்களைச் செய்திருக்கிறான்! அக்கிரமம் அதிக காலம் நீடித்திராது; எப்படியும் கூடியசீக்கிரம் அழிவில்போய் முடியும் என்பது ஸ்தாபிதமாயிற்று கடவுளுடைய பாதமே கதியென்று நம்பி இருப்போருக்கு உடனே கைமேல் பலன் கிடைக்காவிட்டாலும் எப்படியும் ஒரு நாளைக்கு அதன் பலன் கிடைத்தே தீரும். உங்கள் குடும்பத்தையும் எங்கள் குடும்பத்தையும் சுந்தரமூர்த்தி ரூபமாக சநியன் வந்து பிடித்துக் கொஞ்சகாலம் ஆட்டி வைத்தான். கடைசியில, நினைக்கும் கேடு தனக்கே வந்து முடிந்தது. முடிவில், அவனுக்கு கிடைக்க வேண்டிய சர்க்கார் தண்டனை கிடைத்து விட்டது" என்றாள்.

பூஞ்சோலையம்மாள் கூறிய வரலாறு முழுவதையும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த டிப்டி கலெக்டரும், அவரது குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களும், கற்பகவல்லியம்மாளுக்கும், கண்ணபிரானுக்கும் நேர்ந்த அபாண்டப் பழியைக் கேட்டு மிகுந்த வியப்பும் விசனமும் அடைந்து, முடிவில் அவர்களுக்கு நேரிட்ட வெற்றியையும், மேம்பாட்டையும் கேட்டு அபாரமான களிப்பும் ஆநந்தமும் கொண்டு, அந்த அம்மாளது நற்குணத்தைப் பற்றி வாய் ஓயாது புகழ்ந்து கொண்டாடினர்.

முடிவாக பூஞ்சோலையம்மாள் கற்பகவல்லியம்மாளை நோக்கி, "அம்மா! இன்னொரு முக்கியமான வேண்டுகோ ளிருக்கிறது. என்னுடைய இளைய பெண் சௌந்தரவல்லியின் அவசர புத்திதான் உங்களுக்குத் தெரிந்ததாயிற்றே. அவள் உங்கள்பேரில் ஏற்பட்ட

அவதூறை உண்மையென்றே நம்பி அது விஷயமாய் உங்களிடம் தகாதபடி சில வார்த்தைகளைச் சொல்லி விட்டதாகவும், அதை நீங்கள் மனசில் வைக்காமல்மறந்துவிட வேண்டுமென்று உங்களிடம் தான் கெஞ்சிக் கேட்டுக்கொள்வதாய்த தெரிவிக்கவும் சொன்னுள். அந்த மாதிரி ஏதோ சம்பவம் நடந்ததென்பது எனக்கு அவள் சொன்னபிறகுதான் தெரிந்தது. எங்களைக் கருதி நீங்கள் அதைப் பாராட்டக்கூடாது. இது என்னுடைய முக்கியமான வேண்டு கோள்" என்றாள்.

உடனே கற்பகவல்லியம்மாள், "அது உலக அநுபவமில்லாத குழந்தை. மற்றவர் சொன்னதை நிஜமென்று அது நம்பியது. அதன்மேல் தப்பிதமே இல்லை. நான் அதைப்பற்றி நினைக்கவே இல்லை. அது விஷயத்தில் உங்களுக்கும் அந்தக் குழந்தைக்கும் கவலையே வேண்டியதில்லை" என்றாள்.

உடனே அவர்களிருவரும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு சென்னைக்குப் போவதைப்பற்றிய பிரஸ்தாபம் ஏற்பட்டது. அன்றைய இரவு வண்டியிலேயே புறப்பட்டு வரவேண்டுமென்று பூஞ்சோலையம்மாள் பிரரேபித்தாள்; நல்ல செய்தி கிடைத்தவுடன் அவ்வளவு அவசரமாய் அந்த உபகாரிகளின் வீட்டை விட்டு வந்துவிடுவது கற்பகவல்லி யம்மாளுக்கு அநுசிதமாகத் தோன்றியது. ஆகவே, மறுநாள் புறப்பட்டுப் போகலாமென்று கற்பகவல்லியம்மாள் கூற, அதைக்கேட்ட டிப்டி கலெக்டருடைய தாயார், "நீங்கள் கலியாணத்தை முன்னிட்டுப் போகிறீர்கள். சனிக்கிழமை போவது நல்லதல்ல. ஆகையால் நீங்கள் இருவரும் நாளையதினம் முழுதும் இங்கே இருந்து, ஞாயிற்றுக்கிழமை புறப்பட்டுப் போகவேண்டும். நாங்கள் வருந்தி யழைத்தாலும், நீங்கள் இருவரும் இங்கே வரக் கூடியவர்களல்ல. நீங்கள் நாளையதினம் இங்கே இருந்து, அதனால் நாங்கள் சந்தோஷமடையும்படி செய்து, மறுநாள்தான் போகவேண்டும்" என்றாள்.

அதைக் கேட்ட கற்பகவல்லியம்மாள், "தங்களுடைய பிரியப் படியே நாங்கள் செய்யத் தடையில்லை. ஆனால் இந்தக் குடும்பத்தார் எல்லோரும் கூடப் புறப்பட்டு வந்திருந்து, எங்கள் குழந்தைகளின் கலியாணத்தை நடத்தி வைத்துவிட்டு வரவேண்டுமாய்க் கோருகிறேன். அந்த வேண்டுகோளைத் தாங்களும் மற்றவர்களும் அவசியம் பூர்த்தி செய்துதான் தீரவேண்டும்" என்றாள்.

அவர்கள் அவ்வாறே வருவதாக ஒப்புக் கொண்டனர்.

*   *   *   *   *

கலியாண தினமாகிய திங்கள்கிழமை வந்து சேர்ந்தது. அழகிய மணவாள முதலியாரது பங்களாவில் வெள்ளிக்கிழமை முகூர்த்தத்திற்குச் செய்யப்பட்ட அலங்காரங்களும் ஏற்பாடுகளும் அப்படியே இருந்ததன்றி, முன்னிலும் பன்மடங்கு சிறப்பிக்கப்பட்டிருந்தன. அன்றைய தினம் வந்திருந்த ஆயிரக் கணக்கான சீமான்களுக்கும் சீமாட்டிகளுக்கும் அந்த மூன்று தினங்களிலும் நித்திய கலியாணம் போல வேளைக்கு வேளை விருந்துகளும் மரியாதைகளும் நடந்தேறி வந்தன. நாகசுரக் காரர்களும், பாண்டு வாத்தியக் காரர்களும், தாசிகளும், சங்கீதவித்வான்களும் தமது திறமையைப் பூர்த்தியாகக் காட்டுவதற்கு நல்ல சந்தர்ப்பம் வாய்த்ததென்று நினைத்து அளவு கடந்த உற்சாகமடைந்து பேய் கொண்டவர்கள் போல ஒருவருடன் ஒருவர் போட்டி போட்டு சங்கீதமென்னும், சமுத்திரத்தையே அவ்விடத்தில் வரவழைத்துக் கடைந்து அமிர்தத்தை எடுத்துக் காட்டி விட்டனர் பெருத்த ஒரு மண்டலேசுவரனது அரண்மனையில் தொடர்ச்சியாக மாதக் கணக்கில் கொண்டாடப்படும் பெருத்த கலியாணங்களைப் போலவே அவ்விடத்திலும் அந்தக் கலியாண மகோத்சவம் நடந்து கொண்டே இருந்தது.

அழகிய மணவாளரது தந்தை சிறிதும் சலிப்பின்றி, மேன்மேலும் அதிகரித்த ஊக்கமும், குதூகலமும், ஆநந்தமும் கொண்டு லக்ஷக் கணக்கில் பொருளை வாரி இறைத்து ஓர் அற்ப குறைவுக்ும் இடம் கொடாமல் எல்லா ஏற்பாடுகளையும் அலங்காரங்களையும் செய்து, முன் காலத்தில் தருமபுத்திரர், இமாரர் முதலிய மகா மகா மன்னர்கள் ராஜசூயயாகம், அசுவமேதயாகம், பட்டாபிஷேகம் முதலிய சுபகாரியங்களை நடத்தியது இவ்வாறுதான் இருந்ததோ வென்று எல்லோரும் அபாரமாகப புகழும்படி அந்த சுபகாரியத்தை ஒப்புயர்வில்லா விதமாக நடத்தி வைத்தார்; வெள்ளிக்கிழமையன்று கலியாண மண்டபத்தில் கூடியிருந்தது போலவே, ஆயிரக் கணக்கில் சீமான்களும், சீமாட்டிகளும், உத்தியோகஸ்தர்களும, போலீசாரும திரண்டு ஆசனங்களில அமர்ந்து கொண்டனர். ஒரு பக்கத்தில் நமது உதவிச்சாமியாரும் திவான்

சாமியாரும் அவரது தந்தையும் உட்கார்ந்திருந்தனர்; திவான் சாமியார் தமது காஷாயத்தையும், தீக்ஷையையும் விலக்கி உயர்வான ஆடைகளையணிந்த வண்ணம் உட்கார்ந்திருந்தார். அவர்களிருவரும் கலியாணத்திற்கு வரும்போது உதவிச்சாமியார் குஞ்சிதபாத முதலியாரை வேடிக்கையாகக் கலியாணம் பார்த்து வரலாமென்று அழைக்க, அவரும் பொழுது போக்காக வந்து, மற்றவருக்குப் பக்கத்தில் வீற்றிருந்தார். வாத்தியங்கள் மனதைக் கவரும் வண்ணம் அற்புத முழக்கம் செய்கின்றன. இரண்டு முத்துப் பந்தல்களின் கீழ் முறையே கண்ணபிரானும், அழகிய மணவாளரும் ஜெகத் ஜோதியான அலங்காரத்துடன் இராஜ்ய பட்டாபிஷேகம் செய்து கொள்ளும் இரண்டு ராஜ குமாரர்களைப் போலவே, மகா அற்புதமான அழகும், அலங்காரமும் உடையவர்களாய் வீற்றிருந்தனர். முன்போலவே புரோகிதர்கள் கும்பல்கூடி வேத மந்திரங்களை கானம் செய்து துரிதத்தில் வைதிக காரியங்களை நடத்திக் கொண்டிருந்தனர் முன்போலவே ஆயிரக் கணக்கான சீமாட்டிகள் தத்ரூபம் நட்சத்திரச் சுடர்கள் போன்றவையும் கோடி சூரியப் பிரகாசமானவையுமான ஆடையாபரணங்கள் நிறைந்தவராய் நின்று மங்கள கீதம் பாடியவண்ணம் இரண்டு முத்துப் பந்தல்களில் நடுப்பாகத்தை அடைத்துக் கொண்டு நின்றனர். பூஞ்சோலையம்மாள், கற்பகவல்லியம்மாள், அழகிய மணவாளரின் தாயார் ஆகிய மூவரும் ஒன்றாக ஸ்திரீகளின் கும்பலில் நடுநாயகமாய் நின்றனர். கற்பகவல்லியம்மாள் தனது பொற்கொடி போன்ற தேகத்தில் சுத்த வெண்மையான ஒரு நார்மடிப் புடவையை மாத்திரம் அணிந்து கொண்டு, விதவையான தான் எவர் கண்ணிலும் படுவது கூடாதென நினைத்து, மற்ற ஸ்திரீகளுக்குப் பக்கத்தில் மறைந்து நின்றனள். மணப்பிள்ளைகள் முடிக்கவேண்டிய பூர்வாங்கச் சடங்குகள் முடிய, புரோகிதர்கள் மணப்பெண்களை அழைத்தனர். இருவரும் ஒரே மாதிரியாக இருந்த நமது இளந்தோகைகளான கோகிலாம்பாளும், சௌந்தரவல்லியும பாதாதிகேசம் வரையில் ஆபரணங்களே மயமாகவும், ஜரிகையே நிறைவாகவும், விளங்கி ஒரே காலத்தில் இரட்டைப் பூரணச் சந்திரர்கள் உதயமாவது போலத் தோன்றிப் பல தோழிகளால் நடத்தப்பட்டு, நாணித் தலைகுனிந்து அன்னநடை நடந்து வந்து தத்தம் மணவாளருக்குப் பக்கத்தில் அமர்ந்துகொண்டனர். அற்பமும் வித்தியாசமுமின்றி இருவரும் ஒரே அச்சில் கடைந்தெடுக்கப்பட்ட தங்கப் பதுமைகள் போல் இருந்ததைக் கண்ட

பிருந்தினரும், மற்றவரும் அப்படியே பிரமித்து மூக்கின்மேல் விரலை வைத்து, "ஆகா! என்ன அழகு! என்ன அழகு! எவ்வளவு ஸௌகுமாரமான முகம்! ஐயோ! முகத்தைப் பார்த்தால், எத்தனையோ ஜென்மங்களில் பிடித்த பீடையெல்லாம் தொலைந்து போகுமப்பா! ரவிவர்மா சரஸ்வதி, லக்ஷ்மிப்படங்கள் எழுதியிருக்கிறாரே! இவர்கள் இருவரையும் பார்த்த பிறகு அவருடைய படங்கள் அவ்வளவு அழகாகப் படவில்லை" என்று பலவாறு பேசத் தலைப்பட்டனர். சிலர், "மாப்பிள்ளைகளின் ஸௌகுமார்யத்தைப்பார். இருவரும் தமக்குத்தாமே நிகரென்று சொல்லத் தக்கபடியல்லவா இருக்கிறார்கள். இரண்டு பிள்ளைகளும், இரண்டு பெண்களுக்கும் சரியான ஜோடிகள் தான்" என்றனர். இன்னம் சிலர், "ஆனாலும் இரண்டு மாப்பிள்ளைகளையும் சமப்படுத்திப் பேசுவது யானையையும் பூனையையும் ஒத்திட்டுப் பேசுவதுபோல இருக்கிறது. அழகிய மணவாளரது செல்வமென்ன செல்வாக்கென்ன! உத்தியோகமென்ன! புத்திசாலித்தனமென்ன! குணமென்ன! அந்தப் பையன் அழகிலும் அலங்காரத்திலும் இவரைப்போல இருந்தால் மாத்திரம் மற்ற விஷயங்களில் இவருக்கு ஈடாகிவிடுவானா! அவனுடைய தாய் விதவை. அவன், தாய் ஆகிய இரண்டே பேரைத் தவிர, அவனுக்கு வேறு மனிதரே இல்லை அவனுக்கு ஏதோ ஒரு கச்சேரியில பதினைந்து அல்லது இருபது ரூபாயில் குமாஸ்தா வேலை. அவன் இவருக்கு சமதையாக அலங்காரம் செய்து கொண்டுவந்து உட்கார்ந்திருப்பது புலியைப் பார்த்து பூனை சூடுபோட்டுக் கொண்டது போலிருக்கிறது" என்றனர். மற்றும் சிலர், "இந்த ஏழைக் கலியாணத்தையும் இதோடு சேர்த்துச் செய்வதே தவறு. அழகிய மணவாளருக்கு யோசனை இல்லை அவர் பெண்ணைப் பார்த்து மோகித்து விட்டார். உடனே அந்த பிரமை பெண்ணைச் சேர்ந்த மற்றவர்கள் பேரிலும் ஏற்பட்டது. சரி; அந்தக் கலியாணத்தையும் இங்கேயே நடத்து என்று சொல்லிவிட்டார்" என்றனர். இன்னம் சிலர், "அக்காளை விட்டுத் தங்கைக்குக் கலியாணம் செய்வது சரியல்லவாகையால், அதையும் இதோடு சேர்த்து அவசரமாய்ச் செய்ய நேர்ந்ததேயன்றி, அழகிய மணவாளருக்கு புத்தியில்லாமையால், இப்படிச் செய்கிறாரென்று நினைக்க வேண்டாம்" என்றனர். அவ்வாறு அங்கு சம்பாஷணை நடந்துகொண்டிருந்த சமயத்தில் திருமாங்கலிய தாரணத்திற்கு ஆரம்பம் செய்தனர். அப்பொழுது உதவிச்சாமியார் திவான்

முதலியாரை நோக்கி, "சுவாமிகளே! பெரிய பெண்ணைக் கட்டப் போகும் பிள்ளையாண்டானைக் கொஞ்சம் கவனித்துப் பாருங்கள். நம் ராஜா பகதூரின் முகச் சாயல் கொஞ்சம் இருப்பது போலத் தோன்றுகிறதே!" என்றார்; உடனே திவான் சாமியார் திடுக்கிட்டு, "அவனை நீங்கள் எங்கே பார்த்திருக்கிறீர்கள்?" என்றார். உதவிச்சாமியார், "நான் திருவடமருதூரில எப்போதோ ஒருதரம் பார்த்தமாதிரி இருக்கிறது வேறு எங்கே பார்க்கப்போகிறேன்." என்றார். உடனே திவான் சாமியாரும், குஞ்சிதபாத முதலியாரும் மிகுந்த மனவெழுச்சியும் ஆவலும் அடைந்து அவனது முகத்தை உற்று உற்று நோக்கி, "ஆம் முகம் அப்படித்தானிருக்கிறது" என்று கூறி ஒரே ஆவல் வடிவாக வீற்றிருந்தனர்.

உடனே உதவிச்சாமியார் எழுந்து நின்று, "புரோகிதர் ஐயா! ஸ்வாமிகளே!" என்று ஓங்கிக் கூப்பிட்டார். அந்தக்குரலைக் கேட்டு ஆண்பெண்பாலார் எல்லோரும் திடுக்கிட்டு உதவிச்சாமியாரை உற்றுப் பார்த்தனர். புஷ்பாவதியை அழைத்துப் போன சாமியார் அவ்வாறு நின்று கூப்பிட்டதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். புரோகிதர் கடுகடுத்த கோப முகத்தோடு, "யார் ஐயா நீர்! அன்றையதினம் மாங்கலியதாரணம் நடந்தபோது போலீஸ் கமிஷனர் தடுத்தார் இப்போது நீர் தடுக்கிறீர்! ஏன் ஐயா! நல்ல சமயத்தில் இப்படி அச்சானியமாய்த் தடுக்கிறீர்?" என்றார் உடனே உதவிச்சாமியார் தமது கைகளிரண்டையும் குவித்தவண்ணம், "புரோகிதர் சுவாமிகளும் சரி, மற்ற கனதனவான்களும் சரி, அடியேன் மேல் கோபிக்கக் கூடாது; அன்று போலீஸ் கமிஷனர் குறுக்கிட்டதில், எவ்வளவு அபாரமான நன்மை ஏற்பட்டதென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அதுபோலவே இன்னொரு பெரிய நன்மையைக் கருதி நான் இப்போது எழுந்து இரண்டொரு வார்த்தைகள் சொல்லத் துணிகிறேன். லக்னம் இன்னும் இரண்டு நாழிகை வரையில் இருக்கிறது. அதற்குள் திருமாங்கலிய தாரணத்தை நடத்தி விடலாம். முக்கியமான, ஒரு விஷயம் எல்லோருக்கும் தெரிய வேண்டி யிருக்கிறது. அது முக்கியமாய் இந்த பங்களாவின் எஜமானருடைய கௌரதையை பாதிக்கக்கூடிய விஷயம் அதனால்தான் நான் இடைநடுவில் எழுந்து பேசுகிறேன்; இல்லாவிட்டால் இந்தக் கலியாணம் முடிந்த பிறகு தனிமையில் நான் ஆகவேண்டியதைச் செய்திருப்பேன். வேறொன்றுமில்லை. இதோ எங்களுக்குப் பக்கத்தில்

இருக்கும் சில கனவான்கள் பேசியதைக் கேட்க, என் மனம் பொறுக்கவில்லை. மூத்த பெண்ணின் புருஷரும், விதவைத்தாயும் தவிர, அவர்களுக்கு நாதியில்லை யென்றும், அவருக்குப் பதினைந்து ரூபாய் சம்பளமென்றும் அவர் இந்த வீட்டுப் பிள்ளையாண்டானுக்கு சமதையாக அலங்காரம் செய்துகொண்டு மனையில் உட்கார்ந்து கொண்டிருப்பது புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொண்டது போன்றதென்றும், இந்த வீட்டுப் பிள்ளையாண்டானுக்கு முன் யோசனை யில்லையென்றும் சில கனவான்கள் பேசிக்கொண்டார்கள். அதைக் கேட்க எனக்குச் சகிக்கவில்லை'' என்றார்.

அதற்குள் அழகிய மணவாளர், "யார் அப்படிச் சொன்னது! ஒருவரும் அப்படிச் சொல்லி இருக்கமாட்டார்கள் உமக்குப் பொறுக்கவில்லை யென்றால், அதற்காக நீர் இந்த சமயத்தில் எழுந்து கலகம் செய்து மாப்பிள்ளைகளுக்குள் குடுமி முடித்துவிடப் பார்க்கிறீரா'' என்றார். மற்றவர்களும் உதவிச்சாமியாரை அதட்டத் தொடங்கினர். அவர் நிரம்பவும் பணிவாகக் குனிந்து குனிந்து எல்லோரையும் கும்பிட்டு, "இல்லை இல்லை. அப்படி யொன்றுமில்லை. நான் சொல்வதைக் கொஞ்சம் பொறுமையாகக் கேட்கவேண்டும். ஒரே ஒரு நிமிஷம் தயவு செய்யவேண்டும்'' என்றார்.

மறுபடியும் ஏதேனும் இடையூறு நேர்ந்துவிடுமோ வென்று நினைத்துத் திடுக்கிட்டுப் போன பூஞ்சோலையம்மாள், சௌந்தரவல்லி, அழகிய மணவாளரின் தாய் தகப்பன்மார் முதலியோர் திக்பிரமை கொண்டு விழிக்கத் தொடங்கினர்.

உடனே அழகிய மணவாளர், "சரி, சங்கதியைச் சொல்லும் ; நீர்பீடிகை போட்டபோதே எனக்குபயமாய்ப் போய்விட்டது கெடுதல் ஒன்றுமில்லாவிட்டால் சங்கதியைச் சொல்லலாம்'' என்றார்.

உதவிச்சாமியார் அழகிய மணவாளரை நோக்கித் தமது கைகளைக் குவித்து நிரம்பவும் விநயமாகப் பேசத தொடங்கி, "ஐயா செல்வச் சீமானே, இப்பேர்ப்பட்ட மகா அருமையான சந்தர்ப்பத்தில், யாராவதுகெடுதல்செய்ய நினைப்பார்களா? அதெல்லாம் ஒன்றுமில்லை நான் நன்மையை உத்தேசித்தே பேசுகிறேன். தங்களுக்கு ஷட்டகராய் வரப்போகிறவர் தங்களுடைய யோக்கியதைக்கு நிரம்பவும் குறைவான நிலைமையிலிருப்பவரென்ற களங்கம் தங்களுக்குஏற்

படக்கூடாதென்ற காரணத்தை முன்னிட்டே நான் இப்போது நடுவில் குறுக்கிட்டுப் பேசுகிறேன். இல்லாவிட்டால், நான் இந்தக் கலியாணம் முடிகிறவரையில் பொறுத்திருந்து பிறகு ஆகவேண்டிய காரியத்தைப் பார்ப்பேன் அந்தக் கலியாணப் பந்தலின் கீழ் இருக்கிற மாப்பிள்ளையை நானும், என்னோடு இதோ இருக்கும் கனவான்களும் இப்போதுதான் கவனித்துப் பார்த்தோம். சில வருஷங்களுக்கு முன்பு, இதே சுந்தரமூர்த்தியின் தகப்பனார் முதலிய சில சதிகாரர்களின் சூழ்ச்சியினாலும், காலவித்தியாசத்தினாலும், நாங்கள் இரண்டு மாணிக்கக் கட்டிகளை இழந்து தேடித்தேடி அலைந்து ஏமாறித் தவித்திருந்து வருகிறோம். மாணிக்கக் கட்டிகளென்றால், சகலமான அம்சங்களிலும் சிரேஷ்டமான மனிதர்கள் அந்த மாணிக்கக் கட்டிகள் இரண்டும் இப்படி உருமாறி வந்திருக்கின்றனவென்று நாங்கள் சந்தேகிக்கிறோம் இவர்கள் அவர்களாக இருக்கும் பட்சத்தில், தங்களுக்கு ஏற்பட்டு இருக்கும் களங்கமும் மாறிப்போகும். மூத்தப் பெண்ணுக்குக் கிடைத்த இடம் எளியது என்ற ஏச்சும் அந்தப் பெண்ணுக்கு இல்லாமல் போகும்; இவருடைய அன்னையார் விதவை என்ற அமங்கலச் சொல்லும் இல்லாமல் போகும், இத்தனை நன்மைகளையும் உத்தேசித்தே நான் இவ்வளவு சிலாக்கியமான மகாசபையின் மத்தியில் துணிந்து குறுக்கிட்டுப் பேச எழுந்தேன். விஷயத்தைத் தெரிவிக்கலாமென்றால், தெரிவிக்கிறேன். இல்லாவிட்டால் உட்கார்ந்து கொள்ளுகிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட அழகிய மணவாளரும் மற்றவர்களும் திடுக்கிட்டு அபாரமான ஆச்சரியமடைந்து, “ஆ! அப்படியா! இவர்கள் மேலான பதவியில் இருந்தவர்களா! அப்படியானால், சொல்லலாம்'' என்று கூறி மிகுந்த ஆவலோடு உதவிச்சாமியாரது வாயைப் பார்த்தபடி நிசப்தமாய் நின்றனர். அவர் கூறிய சொற்களைக் கேட்ட கண்ணபிரானும், கற்பகவல்லியம்மாளும் பெருத்த மன அதிர்ச்சியும் பேராவலும் அடைந்து பொங்கிக் கொத்தளித்தெழுந்த மனத்தினராய் உதவிச்சாமியாரை உற்றுப் பார்த்தனர். ஆனால், கற்பகவல்லியம்மாள் ஸ்திரீகளின் மறைவில் மான்போல மருண்டு மருண்டு ஒளிந்து நின்ற வண்ணம் இடைவெளிகளால் அவரைக் கூர்ந்து நோக்கினாள். இருவரும் பிரமித்து பேச்சுமூச்சற்று சித்திரப் பாவைகள்போல மாறி விட்டனர்.

உடனே உதவிச்சாமியார், அழகிய மணவாளரைப் பார்த்து, “ஆனால் இதில் இன்னொரு விசேஷம் [illegible] இவர்கள் இருவருக்கும்

முன்பு வேறு பெயர்கள் இருந்தன. அவைகளை இப்போது இவர்கள் மாற்றிவைத்துக் கொண்டிருப்பதாகவும் தெரிகிறது. அதனால் தான், எங்களுக்குக் கொஞ்சம் தயக்கம் உண்டாகிறது," என்று கூறிய பின் கண்ணபிரானைப் பார்த்து, "என்னப்பனே குழந்தாய்! இதற்கு முன் உன்பெயர் ராஜாபகதூர் அல்லவா? உன் அன்னையாரின் பெயர் காந்திமதி யம்மாளல்லவா? பயப்படாமல் சொல். கெடுதல் ஒன்றுமில்லை. உங்களுக்குப் பெருத்த சந்தோஷ சங்கதியையே நான் சொல்லப் போகிறேன்" என்றார்.

அவ்வாறு அவர் பேசிய தருணத்தில் குஞ்சிதபாத முதலியாரும், திவான் முதலியாரும் பெருத்த ஆவலும், குழப்பமும், மனப்பிராந்தியும் அடைந்து, காந்திமதியம்மாள் எங்கே நிற்கிறாளென்று உற்றுப் பார்க்கவும், அவள் தானா என்ற சந்தேகத்தை தீர்த்துக் கொள்ளவும் முயன்றனர் ஆனால் அவர்கள் ஜனக் கும்பலுக்குள் மறைந்திருந்தமையால், கற்பகவல்லி யம்மாள், கண்ணபிரான் முதலியோரது திருஷ்டிக்கு அவர்கள் படவில்லை. கடைசியாக உதவிச்சாமியார் கூறியதைக் கேட்ட கண்ணபிரான் அவரை உற்று உற்றுப் பார்த்ததன்றி சரேலென்று மணையை விட்டு எழுந்து மிகுந்த பதைப்போடும் ஆவலோடும் பேசததொடங்கி, "தாங்கள் யார் யென்பது தெரியவில்லையே! தாங்கள் என்ன சந்தோஷச் சங்கதியைச் சொல்லப் போகிறீர்கள்? என்னுடைய தகப்பனார் உயிரோடு இருக்கிறார்களா? அவர்கள் இங்கே வந்திருக்கிறார்களா?" என்று பதை பதைத்து வினவினான்.

உடனே உதவிச்சாமியார், "அப்படியானால், நான் உங்களுடைய பழைய பெயர்களைச் சொன்னது சரிதானா?" என்றார்.

கண்ணபிரான், "ஆம்" என்றார்.

உடனே உதவிச்சாமியார், "அப்படியானால், இதோ உன் தகப்பனார் வந்திருக்கிறார்கள். அம்மாளையும் அழைத்துக்கொண்டு இப்படிவா" என்றார். அவ்வாறு அவர் சொல்லி வாய் மூடியது தான் தாமதம். அது வரையில் மறைவில் நின்று கொண்டிருந்த கற்பகவல்லியம்மாள் அபாரமான மின்சார சக்தியினால் ஊக்கப்பட்டவள்போலக் கட்டிலடங்கா ஆவேசங் கொண்டு, "ஆ அப்படியா! என் பிராணபதி இங்கே வந்திருக்கிறார்களா! எங்கே! எங்கே?"

என்று வாய் விட்டு கதறித் தன்னையும் உலகையும் மறந்தவளாய், உதவிச்சாமியார் இருந்த இடத்தை நோக்கி ஓடி வந்தாள். அது போலவே கண்ணபிரானும், தாயைவிடப் பன்மடங்கு அதிகரித்த பதைப்பும் பேராவலு மடைந்து சந்ததங் கொண்டவனாய் "அப்பா! அப்பா! என் அப்பா எங்கே இருக்கிறார்கள்?" என்று கன்றைத் தேடும் தாய்ப் பசுபோல அலறிக்கொண்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடிவந்தான். கற்பகவல்லியம்மாளின் முழு வடிவத்தையும் அப்போதே நன்றாகப் பார்த்த திவான் முதலியாரும் அபாரமான மன வெழுச்சியும், கொதிப்பும், மன வேகமும் அடைந்து தம்மையும் உலகையும் மறந்து, "ஆ! என் காந்திமதி! என் தங்கமே! அப்பா ராஜாபகதூர்! என் செல்வக் குழந்தாய்!" என்று பிரமாதமாகக் கதறியவராய் எழுந்து எதிர் கொண்டோடினார். அது வரையில் ராஜாபகதூரையும். காந்திமதி யம்மாளையும் மாத்திரம் பார்த்து சகிக்க வொண்ணாத மன வதிர்ச் சியும் எழுச்சியும் பேரானந்தமு மடைந்து தவித்திருந்த குஞ்சிதபாத முதலியார், அது வரையில் தம்மோ டிருந்து, தமக்கு உதவிகள் செய்து வந்த பரதேசியே தமது அருங்குணப் புதல்வர் என்பதை யும் உணரவே, அவரது நிலைமை கட்டிலடங்காததாகி விட்டது. அவர் யாரைப் பார்க்கிறது, யாரைகூப்பிடுகிறது, யாரைப்பார்த்து சந்தோஷப்படுவது, எங்கே போவது, என்ன செய்வது என்பதை அறியாமல் பைத்தியம் பிடித்தவர்போல மாறித் தமது இரண்டு கைகளையும் ஆவலோடு விரித்துக்கொண்டு, "ஆகா! இன்று தான் சுபதினம்! நான் இழந்திருந்த மூன்று மாணிக்கக் குன்றுகளையும் ஒருங்கே காண்கிறேன்! சிவபெருமானுடைய பேரருள் இன்று தான் என் பக்கம் வீசத் தொடங்குகிறது. இன்றுதான் என் உள்ளம் உண்மையில் குளிர்கிறது." என்று கதறிய வண்ணம் மற்ற மூவரையும் நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாய்கிறார்.

ஆயிரக் கணக்கான ஜனங்கள் அவ்விடத்தில் கூடித் தங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்களென்பதையும் அவர்கள் உணரவில்லை. காந்திமதியம்மாள் ஓடோடியும் சென்று, "என் பிராணபதி! என் அருங்குணக்குன்றமே! என் உயிருக்குயிரே! என் தெய்வமே! தங்களையும் நான் இந்த ஜென்மத்தில் இனி காண்பேனா என்றல்லவா ஏங்கிக்கிடந்தேன்! ஆகா! ஈசா ஈசா! என்னசந்தோஷத்தைக்கொடுக்கி றாயப்பனே!" என்று கதறிய வண்ணம் ஒரே பாய்ச்சலாய் பாய்ந்து திவான் முதலியாரைப் பிடித்துக் கொள்ளுகிறாள். ராஜாபகதூ

ரும் அதே காலத்தில் ஓடிவந்து, "அப்பா! அப்பா! உங்களை எத்தனை வருஷம் தேடித்தேடி இந்த உலகம் முழுதும் நானும் அம்மாளும் அலைந்து, இனி காணப் போகிறோமா என்று நினைத்து உருகியோடிக் கொண்டிருந்தோமப்பா! இப்போதாவது தங்கள் தரிசனம் எங்களுக்குக் கிடைக்கும்படி கடவுளின் திருவருள் ஏற்பட்டதே!" என்று கூறி அலறியபடி தனது தந்தையின் இன்னொரு பக்கத்தைப் பிடித்து ஆலிங்கனம் செய்து கொள்ளுகிறான். அது போலவே குஞ்சிதபாத முதலியாரும், "அப்பனே! என் செல்வச் சீராளா! என் நவநிதியே! என் பாக்கியமே! என் கண்மணி! அமிர்தலிங்கம்! அப்பா! அப்பா! என் தங்கமே! என் அருங்குண மணியே! என் பாக்கியமே! என் தவக்கொழுந்தே! நீயா பரதேசிக் கோலங்கொண்டு என்னோடு கூட இருந்து இதுவரையில் என்னைக் காப்பாற்றினாய்! ஆகா! உன் அடையாளமே தெரியாமல் அடியோடு மாறிப்போய் இருக்கிறதே! எப்படி இருந்த நீ இப்படி உருவழிந்து மாறிப்போயிருக்கிறாயே! கண்மணி! என்ன கோலமப்பா இது!" என்று கூறி நமது திவானை அணையப் பார்க்கிறார். காந்திமதியம்மாளின் ஆலிங்கனத்திற்கும், ராஜாபகதூரின் ஆலிங்கனத்திற்குமே திவானினது உடம்பு போதவில்லை யாகையால் கிழவர் தூர நின்றபடி அவரது கன்னங்களையும், முதுகையும் வாஞ்சையோடு தடவிக் கொடுக்கிறார். திவான் முதலியார் தம் மனத்தில் கரையுடைந்த ஆற்று வெள்ளம்போலப் பொங்கி எழுந்த ஆநந்த வேகத்தைத் தாங்கமாட்டாமல் கண்ணீர் சொரிந்து குழந்தைபோலக் கோவெனக் கதறி யழுகிறார். வாயைத் திறந்து வார்த்தை சொல்லலாமென்றால், தொண்டையடைகிறது. அவர்கள் நால்வரும் அவ்வாறு கூடிய காட்சி கல்லும் கரைந்துருகத்தக்கதா யிருந்தது. திவானைப் போலவே மற்ற மூவரும் ஆநந்தபாஷ்பத்தை ஆறுபோலச் சொரிந்து தேம்பித் தேம்பி அழுகிறார்கள். எவரும் வாய்விட்டுப் பேசுவதற்கே இயலாதபடி சந்தோஷம் பொங்கிப் பொங்கி வழிகிறது.

> "மருங்கிலா மங்கையும் வசையில் ஐயனும்
> ஒருங்கிய இரண்டுடற்கு உயிரொன்றாயினார்
> கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
> பிரிந்தவர் கூடினால் பேசலும் வேண்டுமோ."

—என்று நமது கவிச்சக்ரவர்த்தி கூறியுள்ள வர்ணனை அந்த சந்தர்ப்பத்திற்கு முற்றிலும் பொருத்தமாக இருந்தது.

அவ்வாறு அவர்கள் நால்வரும் ஒன்றுகூடி ஆநந்தக் கடலில் ஆழ்ந்திருந்ததைக் காண, பூஞ்சோலையம்மாள், கோகிலாம்பாள் சௌந்தரவல்லியம்மாள் ஆகிய மூவரும் தத்தம் இடத்தை விட்டு எழுந்து ஓடி அவர்களுக்குப் பக்கத்தில் வந்து நின்று கொண்டு தாமும் சந்தோஷப் பெருக்கைத் தாங்கமாட்டாதவராய் ஆநந்தக் கண்ணீரை அபாரமாகச் சொரிந்து அப்படியே ஸ்தம்பித்து நிற்கின்றனர். அழகிய மணவாளரும், மற்றும் ஆயிரக்கணக்கில் கூடியிருந்தோரும் அவர்களது பூர்வீகமான வரலாற்றை அறியாதவராய்ப் பிரமித்து அதிசய வசத்தராய் வைத்த கண் வைத்தபடி நின்றனர்.

உடனே உதவிச்சாமியார் எழுந்து நின்று அழகிய மணவாளரை நோக்கி, "ஐயா! கனவானே! பார்த்தீர்களா? நான் செய்த காரியத்தால் எத்தனை பேர் சந்தோஷமடைகிறார்கள். நிலைமை இப்போது எப்படி மாறுபட்டுப் போனது பார்த்தீர்களா! இவர்களுடைய பூர்வ வரலாறு தங்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரியாதிருப்பதுபற்றி, நீங்கள் நாங்கள் அடைகிறதுபோல அவ்வளவு அபாரமான சந்தோஷம் அடைய இயலவில்லை. நேற்று கமலவல்லியென்ற பெண்ணை அழைத்துக்கொண்டு போனோமல்லவா. அந்தப் பெண்ணின் புருஷர்தான் இந்தப் பெரியவர். இவர்கள் திருவடமருதூரில் பெருந்தசீமான். இவர்களுடைய புத்திரர் தான் இதோ பக்கத்தில் இருப்பவர்கள். இவர்கள் எம். ஏ. பரீட்சையில்தேறி பல ஜில்லாக்களில் பெரிய கலெக்டர் வேலையில் இருந்து, சென்னை கவர்னரிடம் காரியதரிசி வேலை பார்த்து, கடைசியில் மாதம் ரூ. 5000-ம் சம்பளத்தில் திருவாங்கூர் சமஸ்தானத்தில் திவானாக இருந்தவர்கள். சுமார் 7-வருஷத்திற்கு முன்பு, இந்தப் பெரியவர் தம்முடைய புத்திரருக்கு ஒரு கடிதம் எழுதி, திருவடமருதூர் கோவிலில் நடந்த உத்சவத்துக்கு வரும்படி அழைத்தார்கள். திவான், தங்கள் சம்சாரத்தையும் குழந்தையையும் அனுப்பினார்கள் அப்போது திருவடமருதூரில்இருந்த சுந்தரமூர்த்தி யென்கிற அண்ணாமலையின் தகப்பனார் இராமலிங்கம் என்பவனும், அவனுடைய சம்சாரமும் தங்கள் பெண்ணான கமலவல்லியை இந்தப் பெரியவருக்குக் கட்டிக்கொடுத்து இவர்களுடைய சொத்து முழுவதையும் அபகரித்துவிட வேண்டுமென்று நினைத்து, திவானுக்குப் பாஷாணம் போட்டுக் கொன்று விட ஏற்பாடு செய்ததன்றி, திருவடமருதூருக்கு வந்திருந்த இந்த அம்மா

ளிடம் இந்தப் பெரியவரைப்பற்றி தகாத வார்த்தைகளை யெல்லாம் கூறினர். பெரியவர் அம்மாள்மீது துராசை கொண்டிருப்பதாக வும் வேறு பலவாறுகவும் சொன்னதைக் கேட்டு அம்மாள் பயந்து கொண்டு இராவோடிராவாய் குழந்தையையும் அழைத்துக்கொண்டு திருவடமருதூரை விட்டுத் திருவனந்தபுரத்துக்குப்போக ஆரம்பித் தார்கள். அவ்விடத்தில் அதற்குள், திவானுக்கு விஷம் வைக்கப் பட்ட முயற்சி தெய்வத்தினருளால் தடைப்பட்டுப் போனதன்றி, இராமலிங்கத்தின் சூழ்ச்சியினுல் திவான் தமது மனைவியாரின் மேலும் சம்சயங்கொள்ள நேர்ந்தது. ஆகையால் திவான் தாம் காட்டில் புலியினுல் அடிபட்டு இறந்து போனதாகக் காட்டிவிட்டு சாமியார்போல உருமாறி வந்துபார்க்க, அம்மாளும் குழந்தையும் காணப்படவில்லை. பெரியவர் கமலவல்லியைக் கலியாணம் செய்து கொள்ளும் சமயத்தி லிருந்தார்கள். அதன் பிறகு, இந்த அம்மா ளும் குழந்தையும் திவான் இறக்கவில்லையென்ற சந்தேகத்தைக் கொண்டு அவர்கள் பாட்டில் ஊரூராய்ச் சென்று இவர்களைத் தேடிக்கொண்டே இருந்திருக்கிறார்கள். திவான் அவர்களைத் தேடி யலைந்துகொண் டிருந்திருக்கிறார்கள். ஒருவரையொருவர் இந்த நிமிஷம் வரையில் சந்திக்க இயலாமல் போய்விட்டது. ஏழுவருஷ காலமும் இவர்கள் எல்லோரையும் ஏழரைநாட்டுச் சனியன் பிடித் திருந்தது இப்போதுதான் நீங்குகிறது. பெரியவரும் நடுவில் இறந்து மறுஜன்மம் எடுத்துத் தமது பழைய ஐசுவரியத்தையும் மனைவியையும் அடைந்தார்கள்; இன்று அவர்களது புத்திரரையும் புத்திரர் சம்சாரம், குழந்தைகளையும் காண்கிறார்கள். இவர்களுக்கு இப்போது பல லக்ஷத்திற்கு சொத்துகள் இருக்கின்றன. இங்கிருந்த சில கனவான்கள் சொன்னதுபோல, இவர்கள் எளியவர்களல்ல. இந்த அம்மாளும் அமங்கலியல்ல. தங்களுக்கு ஏற்பட இருந்த களங்கமும் உண்மையானதல்ல. ஆகையால், இனி கலியாணத்தை நடத்தலாம்'' என்றார்.

அவர் அவ்வாறு கூறி வாய்மூடுமுன் ஜனக்கும்பலில் இன் ெனாரு பாகத்தில் இருந்த கூடலூர் டிப்டி கலெக்டர் துள்ளிக் குதித்து ஆவேசங் கொண்டவர்போலவும் பைத்தியக்காரர் போல வும் எழுந்தோடி வந்து திவான் முதலியாருக்கும் காந்திமதியம்மா ளுக்கும் எதிரில் சாஷ்டாங்கமாக விழுந்து, "ஆகா! எங்கள் குல தெய்வமா இங்கே வந்து தரிசனம் கொடுக்கிறது! என்னப்பனே! அருங்குணப் பெருந்தகையீர்! தங்களுடைய திருவருட் பெருங்

கருணையால், அடியேன் இப்போது கூடலூரிலேயே டிப்டி கலெக்டர் உத்தியோகம் பார்க்கிறேன். நான் பெருத்த குடும்பி. நாங்களெல்லோரும் சாப்பிடும் அன்னம் தாங்கள் அளித்த பிச்சை ஒவ்வொரு வேளையிலும் நாங்களெல்லோரும் தங்களை ஸ்தோத்திரம் செய்துதான் போஜனம் செய்கிறது. அடியேன் குடிசையில்தான் என் தாயும் தங்கள் உத்தம பத்தினியுமான இந்த மகாலக்ஷ்மி வந்து தங்கி இருந்தது. ஆகா! என்ன என் பாக்கியம்! இப்பேர்ப்பட்ட மகா உபகாரியின் பத்தினியாரின் பாதம் என் குடிசையில் படவும், நாங்களெல்லோரும் தங்கள் குழந்தையின் கலியாணத்திற்கு வரவும், நானும் என் குடும்பத்தாரும் என்ன தவம் செய்தோமோ!'' என்று நிரம்பவும் கழுதழுத்த குரலில் கூறி ஆநந்தக் கண்ணீர் சொரிந்து, மாறி மாறி திவான் முதலியாரையும் காந்திமதியம்மாளையும் நமஸ்கரித்தார் அதைக் கண்ட திவானும், மற்ற எல்லோரும், முக்கியமாய்க் காந்திமதியம்மாளும் பிரமித்துப் போய் சிறிது நேரம் ஓய்ந்து நின்று விட்டனர். உடனே திவான் முதலியார் நிரம்பவும் பணிவாகவும் மரியாதையாகவும் டிப்டி கலெக்டரை நோக்கி, "ஐயா, தாங்கள் யார் என்பது தெரியவில்லையே! நான் தங்களுக்கு என்ன உதவி செய்தேனென்பதும் நினைவிற்கு வரவில்லையே!'' என்றார்

உடனே டிப்டி கலெக்டர், "மகாப் பிரபு! நான் யாரென்பது நினைவிற்கு வரவில்லையா! நான் திருவடமருதூரிலுள்ள ஓர் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன் என் பெயர் அண்ணுசாமி; நான் பி. ஏ. பரீட்சையில் தேறி வேலையில்லாமல் திண்டாடி தென்னுற்காடு ஜில்லா கலெக்டர் ரெவினியு இன்ஸ்பெக்டர் உத்தியோகம் காலியாயிருப்பதாய் விளம்பரம் வெளியிட்டதைக் கண்டு, நான் சிறுபிள்ளைத்தனத்தினுல், தங்களுடைய கையெழுத்தைப் போல பொய்க் கையெழுத்துச் செய்து, நற்சாக்ஷிப் பத்திரம் தயாரித்து கலெக்டருக்கு அனுப்ப, அவர் தங்கள் சிநேகிதராகையால் என் விண்ணப்பத்தைத் தங்களுக்கு அனுப்பினுர். தாங்கள் என்னை ஜெயிலுக்கு அனுப்பாமல் என்மேல் கிருபை பாலித்து, எனக்கு சப் மாஜிஸ்டிரேட் உத்தியோகம் கொடுக்கும்படி தாங்கள் சிபார்சு செய்தது நினைவில்லையா! அதுவுமன்றி தாங்கள் நேராக எனக்கு எழுதி அதில் எனக்குப் புத்திமதிகள் சொல்லி இருந்தீர்களல்லவா. அதைக் கண்ட முதல் நான் நல்ல பதவிக்கு வந்து விட்டேன். என் உழைப்பினுலும் நற்குண நல்லொழுக்கத்தினுலும் நான் இரண்டு

வருஷத்தில் தாசில் வேலைக்கு வந்து இப்போது அதே ஊரில் டிப்டி கலெக்டராய் உயர்த்தப்பட்டிருக்கிறேன். மகாப் பிரபுவே! இப்போது ஞாபகம் உண்டாகிறதா?" என்றார். அதைக் கேட்ட திவான் தமது மனைவி மக்களைக் கண்டதனால் அடைந்த சந்தோஷத்தை விடப் பன்மடங்கு அதிகரித்த சந்தோஷமடைந்து, "ஆகா அப்படியா! நீ நல்ல வழிக்கு வந்து மேலான பதவிக்கு வந்திருக்கிறாயா! நிரம்பவும் சந்தோஷமாயிற்று. சர்வேசனுடைய கிருபையால், நீ இன்னமும் மேலான பதவியை அடைவாய் என்று நம்புகிறேன்" என்றார். அப்போது டிப்டி கலெக்டருக்குப் பக்கத்தில் வந்திருந்த அவரது ஜனங்கள் திவானையும், காந்திமதியம்மாளையும் நிரம்பவும் பணிவாகவும் மனமார்ந்த நன்றியறிதலோடும் நமஸ்கரித்தனர். அந்தப் புதிய வரலாற்றைக் கேட்ட காந்திமதியம்மாளும் அளவற்ற சந்தோஷமும் பூரிப்புமடைந்து அளவளாவினாள்.

அங்கு நடந்த சம்பவங்களை யெல்லாம் கேட்டுப் பேருவகை கொண்டு பேரானந்தத்தில் தோய்ந்து நின்ற அழகிய மணவாள முதலியார் தமது மனையை விட்டு வந்து திவான் முதலியாரது கையையும் அவரது தங்கையின் கையையும் வாஞ்சையாகப்பிடித்து "புண்யாத்மாக்களே! இப்பேர்ப்பட்ட மகா பெரியவர்களான தங்களுடைய தரிசனமும், பந்துத்வமும் எங்களுக்கு ஏற்படுவதைப் பற்றி என் மனம் அடையும் ஆநந்தத்தை நான் என்னவென்று சொல்லப் போகிறேன்! தாங்கள் நிற்கவேண்டாம். கலியாணப் பந்தல்களுக்கு முன்னால் வந்து தாங்களிருவரும் சபா நாயகர்களாய் அமர்ந்து கொள்ளுங்கள். லக்னம் தவறிப்போவதற்குள் முகூர்த்தத்தை நடத்துவோம்," என்று கூறி அவர்களிருவரையும் அழைத்துக்கொண்டு போய் முன் வரிசையில் இருந்த ஆசனங்களில் உட்கார வைக்க, அவரது தங்கையும் வந்து அவர்களுக்கு முகமன் கூறி உபசரித்து வரவேற்றாள். அழகிய மணவாளரின் தாயாரும், பூஞ்சோலையம்மாளும், மற்றுமுள்ள ஸ்திரீகளும் காந்திமதியம்மாளைச் சூழ்ந்து எல்லோரும் ஆசையோடுக் கட்டித் தழுவினர். அப்பொழுது கோகிலாம்பாள் அடைந்த ஆநந்தம் எப்படி இருந்ததென்பதைக்கூற நமது எழுதுகோல் வல்லமையற்றதென்றே கூறவேண்டும். அவள் நேராக சுவர்க்கலோகத்திற்குள் கொண்டு போய் விடப்பட்டவள்போல ஆநந்தப்பெருக்கில் ஆழ்ந்து அப்படியே மயங்கி நிற்கிறாள். எல்லோரும் உடனே காந்திமதியம்மாளைப் பக்கத்திலிருந்த ஓர் அறைக்குள் அழைத்துப்

போய், அந்த அம்மாளுக்கு உயர்ந்த ஆடைகள் ஆபரணங்கள் மாங்கலியம் முதலியவற்றை அணிவித்து அழைத்து வந்தனர். மறு படி கலியாணமுழக்கம் ஆரம்பமாயிற்று. மூன்றாவது தடவையே நிச்சயமானதென்று நினைத்து வாத்தியக்காரர்கள் முன்னினும் அதிக பலமாய் முழக்கத் தொடங்கினர். ஸ்திரீகள் எல்லோரும் பன்மடங்கு அதிகரித்த குதூகலத்துடன் மங்களகீதம் பாடினர் வைதீகர்களும் அளவற்ற ஊக்கங்கொண்டு வேத முழக்கம் செய் தனர். அந்த பிரமாண்டமான கலியாண மண்டபத்தில் கூடி யிருந்த ஆண்பாலார் பெண்பாலார் குழந்தைகள் முதலிய சகலமான வர்களது மனதும் ஒரே ஆநந்த நிறைவாய் பொங்கியிருந்த நிலைமை யில், ராஜாபகதூர் கோகிலாம்பாளுக்கும், அழகிய மணவாளர் சௌந்தரவல்லி யம்மாளுக்கும் திருமாங்கலிய தாரணத்தை நடத்தி னார்கள்.

* * * * *

அன்று முதல் மூன்று தினங்கள் வரையில் அந்த பங்களா சுவர்க்கலோகம் போலவே விளங்கியது. விருந்தினர் எல்லோரும் தமது வீட்டையும் ஜோலிகலையும் சொந்த கவலைகளையும் மறந்து அவ்விடத்திலேயே இருந்து மாறி மாறி விருந்துண்டு. சிற்றுண்டி சாப்பிட்டு, சங்கீதம் கேட்டு, சந்தனம் பூசி, தாம்பூலமணிந்து. தூங்கி யெழுந்து குழந்தைகள்போல ஓடியாடி, ஒருவரோடொருவர் பரிகாசம் செய்து சிரித்து விளையாடிப்பொழுதைப் போக்கினார்கள். திவான் முதலியாரும் காந்திமதியம்மாளும், குஞ்சிதபாத முதலியா ரும் கமலவல்லியும் அவரவர்க்கு விடப்பட்ட தனி விடுதிகளில் ஆநந்தமாக தனித்திருந்து ஒருவரிடத் தொருவர் பேசவேண்டிய விஷயங்களனைத்தையும் பன்முறை சொல்லிச் சொல்லி ஆறாமல் திரும்பத் திரும்ப அவற்றையே பேசி இன்பக் கடலில் மூழ்கி இருந்தனர். காந்திமதியம்மாளும் ராஜாபகதூரும் திருவிடமருதூரி லிருந்து ரகசியமாய் போன சமயத்தில், சுந்தரமூர்த்தி முதலி யாரும், புஷ்பாவதியும் சிறு வயதினராக இருந்தனர். அதுவுமன்றி, அப்பொழுது இராமலிங்கத்தின் குடும்பத்தினர் வேறு தெருவில் தனியாக ஜாகை வைத்துக் கொண்டிருந்தனர். இராமலிங்கத்தின் மனைவி மாத்திரம் குஞ்சிதபாத முதலியாரது மாளிகைக்கு அடிக் கடி வந்து, தனது புருஷனுக்கு உதவியாக வேலைகளைச் செய்து விட்டுப் போவாள். அப்பொழுது புஷ்பாவதியும், சுந்தரமூர்த்தி யும் குஞ்சிதபாத முதலியாரது மாளிகைக்கு வந்ததில்லையாதலால்,

அவர்கள் இருவரும் காந்திமதியம்மாளைப் பார்த்ததில்லை. ஆகவே, அவர்கள் கற்பகவல்லி கண்ணபிரான் ஆகிய இருவரது அடையாளத்தையும் கண்டுகொள்ள இயலவில்லை. புஷ்பாவதி கமலவல்லியாக மாறிக் குஞ்சிதபாத முதலியாரிடம் வந்தபின், கற்பகவல்லியம்மாள் கண்ணபிரான் என்பவர் இன்னின்னாரென்பதை உணரவே, அவள் அடைந்த நிலைமையும் மனவேதனையும் கழிவிரக்கமும் இவ்வளவென்று கூற இயலாது, ஆயினும், கமலவல்லியும் காந்திமதி யம்மாளும் அந்தக் கலியாணத்திலேயே ஒருவருக்கொருவர் அன்னியோன்னியத் தன்மையை யடைந்து விட்டனர்.

கலியாண தினத்திற்கு மறுநாள் ஜனங்கள் வதூவரர்களுக்கு நிரம்பவும் குதூகலமாய் கலந்து, ஊஞ்சல் முதலியவற்றை நடத்தி ஆனந்தமாக விளையாடிக்கொண்டிருந்த சமயத்தில், பங்களாவின் வாசலில் பாண்டு வாத்திய முழக்கம் உண்டாயிற்று அது என்னவாக இருக்கலாமென்று நினைத்து எல்லோரும் திடுக்கிட்டு அதை உற்றுக் கவனித்தனர். இரண்டொரு நிமிஷத்தில் வெள்ளிக் கட்டியம் தாங்கிய ஒரு சேவகன் உள்ளே ஓடிவந்து, "திவான் முதலியாரைப் பார்ப்பதற்காக திருவனந்தபுரம் மகா ராஜாவும் சென்னை கவர்னரும் வந்திருக்கிறார்கள்" என்றான். அதைக் கேட்ட திவான் முதலியார் திடுக்கிட்டு, "திருவநந்தபுரத்து மகாராஜா இந்த ஊருக்கு எப்போது வந்தார்கள்? அவர்களுக்கு இந்த சங்கதி எப்படி எட்டியது?" என்றார்.

உடனே சேவகன், "திருவநந்தபுரம் மகாராஜா தமது சமஸ்தான ஆளுகை விஷயமாக சென்னை கவர்னரிடம் நேரில் ஆலோசனை செய்வதற்காக இந்த ஊருக்கு வந்து ஐந்தாறு தினங்களாகின்றன; இன்று புறப்பட்டுப் போகப்போகிறார். கொஞ்ச நேரத்திற்குமுன், யாரோ டெலிபோன் மூலமாய் இங்கே இருந்து, அவருடன் பேசினார்கள்; நீங்கள் உயிரோடிருப்பதாகவும் உங்கள் குமாரருக்குக் கலியாணமென்றும் சொன்னார்கள். அதைக் கேட்டவுடன் அவருக்கு உண்டான சந்தோஷம் இவ்வளவு அவ்வளவென்று சொல்ல முடியாது உடனே மகாராஜா இதை கவர்னருக்குச் சொல்ல இருவரும் உடனே புறப்பட்டு உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள்" என்றான்.

அதைக்கேட்ட அழகிய மணவாளர் முதலியோர் அந்த திவானினது மேம்பாடு எவ்வளவு என்பதை அதிலிருந்து யூகித்துக்கொண்டு

அவரது பாக்தவ்வியம் தங்களுக்கு ஏற்பட்டதைப் பற்றிப் பூரித்துப் போயினர். உடனே திவான் முதலியார், அழகிய மணவாளர், இன்னம் பல கனவான்கள் எல்லோரும் வெளியில் செல்ல, அங்கிருந்த மகாராஜா வண்டியை விட்டு ஓட்டோடியும் வந்து அடக்கவொண்ணாத மனவெழுச்சியோடும், ஆநந்தத்தோடும் நமது திவான்முதலியாரைக் கட்டித்தழுவி, "ஐயா! கனவானே! தங்கள் குடும்பத்துக்கு நேர்ந்த துன்பங்களை யெல்லாம் கொஞ்சநேரத்திற்கு முன் யாரோ ஒருவர் டெலிபோன் மூலமாய் எனக்குத் தெரிவித்தார். அவர் உங்களுக்கு உதவியாயிருந்த சாமியாராம். அவர் சொன்னதைக் கேட்டவுடன் நான் புறப்பட்டு ஓடிவந்தேன். நீங்கள் இறந்து போனதாய்க் கேள்வியுற்றது முதல் நானும் என் தேசத்துக் குடிகளும் அடைந்த விசனம் இன்னும் மாறவில்லை. நீங்கள் போனபிறகு மூன்று திவான்கள் வந்துவிட்டார்கள். எவரும் என் மனசுக்குப் பிடித்தமானவராக இல்லை. ஆகையால் எவரும் நிலைக்கவில்லை. இப்போது என் சமஸ்தானத்தில் திவானே இல்லை அது விஷயமாய் கவர்னரிடம் நேரில் பேசிவிட்டுப் போகலாமென்றுதான், நான் சென்னைக்கு வந்தது. வந்த இடத்தில் தெய்வச்செயலாக, இந்த சந்தோஷ சங்கதி கிடைத்தது. நீங்கள் இந்த நிமிஷம்முதல் உங்கள் உத்தியோகத்தை வகித்து எங்கள் சமஸ்தானத்துக் குடிகள் க்ஷேமப்படும்படியான புண்ணியத்தைத் தேடிக்கொள்ள வேண்டும். இந்த வேண்டுகோளை நீங்கள் மறுக்கவே கூடாது" என்று அன்பாக வற்புறுத்திக் கூறினர்.

அதைக் கேட்ட திவான் முதலியார் சிறிது சிந்தனை செய்து, "தங்கள் உத்தரவுப்படி நடக்க வேறு ஆக்ஷேபனை ஒன்றுமில்லை. என் தகப்பனார் விருத்தாப்பிய தசையி லிருக்கிறார்கள். அவர்கள் எங்கள் பூர்வீக ஊராகிய திருவடமருதூரை விட்டு வேறிடத்திற்கு வரமாட்டார்கள். அவர்களை அவர்களது தள்ளாத காலத்தில் அநாதரவாக விட்டு நான் தூரதேசத்தில் இருப்பது உசிதமல்லவென்று நினைக்கிறேன். அந்த ஓர் இடைஞ்சலைப் பற்றித்தான் யோசிக்கிறேன். வேறொன்று மில்லை" என்றார்.

திருவனந்தபுரம் மகாராஜா, "அக்கரையில்லை நீங்கள் இன்னொரு காரியம் செய்யுங்கள். ஒருமாத காலம் திருவனந்தபுரத்திலும் ஒருமாத காலம் திருவடமருதூரிலுமாய் நீங்கள் இருந்து, உங்கள் உத்தியோகத்தைப் பார்க்கலாம். அதனால் உங்களுக்கு ஆகும் பிர

யாணச் செலவுகளை யெல்லாம் நம்முடைய சமஸ்தானத்தி லிருந்தே கொடுக்க ஏற்பாடு செய்கிறேன்'' என்றார்.

அதற்கு மேல் திவான் எவ்வித ஆட்சேபனையும் சொல்ல இயலவில்லை. உடனே அவ்விடத்திலேயே மகாராஜா அவருக்கு உத்தரவு எழுதிக்கொடுத்து விட்டார். நிரம்பவும் பணிவாக அதை வாங்கிக்கொண்ட திவான் முதலியார் மகாராஜாவுக்கும், கவர்னருக்கும் சலாம் செய்து தமது நன்றியறிதலைச் செலுத்தியதன்றி அவர்களை உள்ளே அழைத்துப்போய் உட்காரச்செய்து புஷ்பமாலைகளை வரவழைத்து அவருக்குச் சாத்தி தாம்பூலம் முதலியவை வழங்கி தமது குமாரனை ராஜாபகதூரை அவர்களுக்கு முன்னால் நிறுத்தி அவன்தான் தமது புத்திர னென்பதையும் விக்ஞாபனம் செய்து கொண்டார். கலியாண வெகுமதியாக அவனுக்கு திருவனந்தபுரம் மகாராஜா லக்ஷம் ரூபாய்க்கு ஒரு செக்கு எழுதிக்கொடுத்த பின் அவ்விடத்தை விட்டு கவர்னர் துரையுடன் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்தார்.

மூன்றாவது நாள் காலை பத்து மணி சுமாருக்கு மேள தாளங்களுடன் வேறு இரண்டு வரிசைகள் வந்து சேர்ந்தன. விலையுயர்ந்த சேலைகள், ரவிக்கைகள், ஆயிரம் பவுன்கள், கற்கண்டு, கனிவர்க்கங்கள், புஷ்பம் முதலிய சாமான்களை எடுத்துக்கொண்டு பல ஆட்கள் வர, நமது திருச்செந்தூர் வீரம்மாளும் அவளது புருஷனை கண்ணுசாமி வாண்டையாரும் வெகு ஆடம்பரமாக வந்துசேர்ந்தனர். இன்னொரு புறத்தில் அதே மாதிரியான வரிசை மேள தாளங்களுடன் நமது கணடியூர் மேலப்பண்ணைக் கந்தசாமிமுதலியாரும் அவரது மனையாட்டியும் வந்துசேர்ந்தார்கள். அவர்கள் நால்வரும் வரிசைகளையெல்லாம் காந்திமதியம்மாளுக்கு முன்னும் திவானுக்கு முன்னும் வைத்துவிட்டு எல்லோரும் கீழே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்தனர். உடனே வீரம்மாள் மிகுந்த மனவெழுச்சியும், ஆநந்தமும் பொங்கிய மனத்தினளாய்க் காந்திமதியம்மாளை நோக்கி, "அம்மா தாயே! தங்களை விட்டுப் பிரிந்தபின் இதுவரையில் தங்களைப் பற்றிய ஏக்கமே ஏக்கமாக இருந்தது. நேற்றுதான் தந்தி வந்தது. உடனே புறப்பட்டு வந்து சேர்ந்தோம். தாங்கள் உயிரோடிருப்பதாய் ஒருகடிதம்கூடஎழுதவில்லையே என்று நாங்கள் தவித்தது செந்திலாண்டவனுக்கே தெரியும். தாயே! இன்றுதான்

எல்லோருடைய கலியும் நீங்கியது. எங்கள் உள்ளமும் குளிர்ந்தது" என்றாள்.

அவளைப் பிடித்து ஆசையோடு கட்டித் தழுவிய காந்திமதியம்மாள், "அம்மா! உன்னை விட்டுப் பிரிந்து போனபின், நானும், குழந்தையும் சரியாக ஒரு வருஷகாலம் அலைந்தலைந்து பார்த்தது, இனி அவர்களைக் காணமுடியாதென்று நினைத்து, மூன்று தடவை தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தோம்; மூன்றிடங்களிலும் அகப்பட்டுக் கொண்டோம் நாங்கள் தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தது பலிக்கவே இல்லை. கடைசியாக ஒருவர் எங்களிருவருடைய பிறந்தநாளைக் கேட்டு ஜோசியம் பார்த்துச் சொன்னார் அதாவது, ராஜாபகதூரின் அப்பா உயிரோடுதானிருக்கிறார்களென்றும், எங்களெல்லோருக்கும் தீர்க்காயிசாகையால், நாங்கள் எவ்வளவுதான முயன்றாலும் சாகமாட்டோமென்றும் அவர் சொன்னார். அதுவுமன்றி, எங்கள் எல்லோருக்கும் ஏழரை நாட்டுச்சனியன்பிடித்திருப்பதால், அது தீருகிற வரையில் அவர்களை நாங்கள் காணவே முடியாதென்றும், அதன் பிறகு அவர்களே வந்து சேர்ந்து விடுவார்களென்றும், அதுவரையில் எங்கேயாவது பையனைப் படிக்க வைத்து சிக்கனமாய் ஜீவனம் செய்து கொண்டிருக்கும்படியும் அவர் புத்திமதி சொன்னார். நாங்கள் அப்படியே செய்து, மிகுதி இருக்க பணத்தை வைத்துக்கொண்டு காலந் தள்ளிக்கொண்டிருந்தோம். நாங்கள் இன்னார் என்பது எவருக்கும் தெரியாதிருக்க வேண்டுமென்று எங்கள் பெயர்களை மாற்றி வைத்துக்கொண்டிருந்தோம். என் எஜமானர் இல்லாதவரையில் நான் உண்மையில் விதவையாகையால், நான் இதுவரையில் விதவைக் கோலம் பூண்டிருந்தேன் அவர்கள் வந்து சேர்ந்தபின் உங்களுக்கு எழுதலாமென்றிருந்தேன். ஏனென்றால், அநாவசியமாக எங்கள் கவலைகளையெல்லாம் உங்களுக்கும் உண்டாக்க எனக்கு இஷ்டமில்லை. கடைசியில் நாங்கள் எதிர்பாராதிருக்கையில், எங்கள் தெய்வமும், செல்வமும் திரும்பின. நானே உங்களுக்கு எழுதலாமென்றிருந்தேன். அதற்குள் உங்களுக்கு யாரோ தந்தி கொடுத்திருக்கிறார்கள்" என்றாள்.

உடனே திவான் முதலியார், மேலப்பண்ணை முதலியாரைப் பார்த்து, "உங்களுக்கு தந்தி வந்ததா?"

அவர் "ஆம். உங்களுக்கு உதவியாக யாரோ ஒரு சாமியார் இருக்கிறாராமே. அவர்தான் கையெழுத்துச் செய்திருந்தார்" என்றார்.

அதைக் கேட்ட திவான் சாமியார், "என்ன ஆச்சரியம் இது! நமக்குத் தெரியாமலே சுவாமிகள் மகாராஜாவுக்கும் டெலிபோனில செய்தியனுப்பி இருக்கிறார்கள்; இவர்களெல்லோருக்கும் தந்தியனுப்பி இருக்கிறார்கள். இது மாத்திரமா. வேறு எத்தனையோ பெருத்த பெருத்த உதவிகளையெல்லாம் அவர்கள் செய்திருக்கிறார்கள். அவர்களுடைய முயற்சி இல்லாவிடில், நான் என் சிறிய தாயாரையும், உங்களையும் கண்டு பிடித்திருக்கவே முடியாது. அவர்கள் இன்று காலை முதல் எங்கேயோ போய் விட்டார்களே! நானும் தேடித் தேடிப் பார்க்கிறேன்; சாமியார் ஐயா காணப்படவில்லையே!" என்று கூறி நாற்புறங்களிலும் இருந்த ஜனக்கும்பலில் உதவிச் சாமியார் இருக்கிறாரோ வென்று பார்த்தார். எங்கும் அவர் காணப் பட வில்லை.

அப்பொழுது அவர்களுக்குப் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்த ஒரு மனிதர் காந்திமதியம்மாளுக்கும் திவானுக்கும் முன்னால் விழுந்து சாஷ்டாங்கமாகப் பன்முறை நமஸ்காரம் செய்தெழுந்து கைகட்டி வாய் புதைத்து நின்று, "என் தாயே! என் தந்தையே! உதவிச்சாமியார் வந்த வேலை ஆய் விட்டது. அவர் இன்று காலையோடு மறைந்துபோய் விட்டார். இனி தாங்கள் அந்தப் பைத்தியக்கார வேஷத்தைக் காணமுடியாது. நான்தான் அந்த வேஷத்தி லிருந்தவன். எஜமானே! நான் யார் என்பது தெரிய வில்லையா? நான்தான் தங்கள் சுயம்பாகியான முத்துசாமி" என்றான்.

அதைக் கேட்ட திவான், காந்திமதியம்மாள், ராஜாபகதூர், கந்தசாமி முதலியார், வீரம்மாள் முதலிய சகலமான ஜனங்களும் திடுக்கிட்டு வியப்பும் பிரமிப்பும் அடைந்து அவனை ஏற இறங்கப் பன்முறை உற்றுப் பார்த்தனர்.

உடனே திவான், "ஆகா! முத்துசாமீ! உன்னுடைய அடையாளம் கொஞ்சமும் தெரியாமல் போய்விட்டதப்பனே! நீயா வந்தி

ருந்து இததனை பேருதவிகளையும் செய்து எங்களெல்லோரையும் சேர்தது வைத்தாய் !'' என்றார்.

முத்துசாமி, ''என் தெய்வமே! தங்கள் குடும்பம் இம்மாதிரி கலைவதற்கு நானும் காரணஸ்தனல்லவா. தாங்கள் புலியினால் அடிபட்டு இறந்து போனதாய்க் கேட்டவுடன், அம்மாள் எப்படி சந்தேகம் கொண்டார்களோ, அதுபோல நானும் சந்தேகம் கொண்டு, தாங்கள் இறந்திருக்கமாட்டீர்களென்றும், அம்மாளுடைய கற்பை சோதிப்பதற்காகவே தாங்கள் இப்படி சூழ்ச்சி செய்திருக்கிறீர்களென்றும் நினைத்து உடனே திருவடமருதூருக்கு வந்து பார்ததேன். அம்மாளும் குழந்தையும் காணாமல் போய் விட்டதாகக் கேள்வியுற்று நான் விசனக்கடலி லாழ்ந்த தன்றி, உலகத்தில் விரக்தி யடைந்து சந்நியாசிக் கோலம் பூண்டு, என் ஆயிசு காலம் முடியத் தங்கள் மூவரையும் தேடிப் பிடித்து ஒன்றாய்ச் சேர்க்கிற தென்று சங்கல்பம செய்து கொண்டதன்றி, தங்களுக்கு விஷம் கொடுக்கச் சொன்ன மனிதனைக் கண்டு பிடிக்க வேண்டுமென்றும் தீர்மானிதது்க் கொண்டேன். பிறகு, இராமலிங்கம் தன் பெண்ணைப் பெரியவருக்குக் கட்டிக்கொடுததகிலிருந்து எனக்கு அவன்மேல் சந்தேக முதித்தது. நான் அவனைக் கவனித்து, அவனிடம் வரத்துப் போக்காயிருந்தவர்களைப் பார்த்ததில், என்னிடம் பணமும் விஷமும் கொடுத்தவன் வந்தான். அவன்தான் அந்தக் குருடியின் தமயன். அவனிடம் நான் தந்திரமாகப் பழகி அவர்களுடைய சதியாலோசனை முழுதையும் தெரிந்து கொண்டேன். பெரியவருக்குத் தெரியாமல் பெட்டியிலிருந்து தவசிப்பிள்ளை ஐயாயிரம ரூபாயை எடுத்துத் தன் மைத்துனனிடம் கொடுதது என்னிடம் அனுப்பியதாகவும் நான் கேள்வி யுற்றேன். பிறகு நான் பல இடங்களில் அலைந்து தற்செயலாய்த் திருச்செந்தூருக்குப் போக, அங்கிருந்த சததிரததிற்கு வந்த வீரம்மாளின் அடையாளத்தை நான் கண்டு பேசியதில், அம்மாளைப்பற்றிய தகவல் கிடைத்தது. நான் பல ஊர்களுக்குப் போவதாகவும், மாயாவிபூதிப்பரதேசி என்பவரைக் கண்டால் திருச்செந்தூருக்கு அழைததது வருவதாகவும் அவளிடம் சொன்ன பின் அவ்விடத்தை விட்டு வந்து அம்மாளையும் தங்களையும் தேடிக் கடைசியாகத் திருவையாற்றில் பெரியவர் இருப்பதாய் விளம்பரததின் மூலம் தெரிந்து கொண்டு, அவருடைய வீட்டில் தாங்கள், இருக்கக்கண்டு தாங்கள்தான் என் எஜமானர் என்று

சந்தேகித்தேன். கடைசியில் கந்தசாமி முதலியாருடைய குழந்தையின் கழுத்துச் சங்கிலி விஷயமாய் நடந்த விசாரணையைக் கவனிக்க வந்தேன் அவ்விடத்தில் என் சந்தேகம் நிவர்த்தியாயிற்று அப்போதுதான் கந்தசாமி முதலியார் அந்த ஊரில் இருக்கிறார் என்பதையும் நான் தெரிந்துகொண்டேன். அதன் பிறகு நடந்தவைகள் தங்களுக்குத் தெரியும். நான் இன்னானென்பது தெரிந்தால், தாங்கள் என்னை கிட்டச் சேர்க்கமாட்டீர்களென்று நினைத்து, நான் பலவித தகவல்களைச் சொல்லித் தங்களுடன் இருந்தேன். தங்களைக் கண்டபோதே எனக்கு எல்லாத் தகவல்களும் தெரியுமானாலும், நான் வெளியிடக் கூடவில்லை ஏனென்றால், நான் இன்னான் என்பதையும் வெளியிட நேரும்; அதுவுமன்றி, அம்மாள் நிரபராதி என்று நான் சொன்னால், அது அவ்வளவாக நம்பிக்கைப் படாது. ஆகையால், வீரம்மாளே தற்செயலாய்த் தங்களுக்கு அதைச் சொல்லும்படி செய்தேன். மதுரையில் ஒரு நெல் வர்த்தகர் சொன்னதாக நானே பொய் சொல்லித் தங்களை வேண்டுமென்றே திருச்செந்தூருக்கு அழைத்துப் போனேன். நான் எந்த ஊருக்குப் போனாலும், விதவைத் தாயும், பிள்ளையுமான இருவர் அந்தஊரில் இருக்கிறார்களா என்று விசாரிப்பதையே முக்கிய வேலையாகச் செய்து வந்தேன். அன்றையதினம் இங்கே போலீஸ் கமிஷனர் வந்து நடவடிக்கை நடத்தினார்களல்லவா; அப்போது எனக்கு ஒரு சந்தேகமுண்டாயிற்று இந்தக் கண்ணபிரான்தான் ஒருவேளை நம்முடைய ராஜாபகதூரா யிருக்கலாமோ என்று நான் சந்தேகித்து, போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்களைப் பார்க்க போகிறேனென்று தங்களிடம் சொல்லிவிட்டு, ஜெயிலுக்குப் போய்ப் பையனைப் பார்த்தேன். பையன் அவன் போலவே இருந்தான். ஆனாலும் தாயாரையும் பார்த்துத்தான் நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்குள் தங்கள் தந்தையைத் தூண்டித் தங்களுடைய பாதேசிக் கோலத்தைப் போக்க யுக்தி செய்தேன்; கிழவரைக் கூடவே அழைத்து வந்தால், எல்லோரையும் ஒரே காலத்தில் பார்ப்பதான ஆநந்தத்தை அவர்களும் அடையட்டுமென்ற எண்ணத்தோடு அவர்களையும் தந்திரமாக இங்கே அழைத்து வந்தேன். அம்மாளை இந்தக் கும்பலில்தான் நான் பார்க்க முடிந்தது உடனே என் சந்தேகம் நிச்சயப்பட்டது. உங்கள் மூவரையும் தனிமையில் சந்திக்க வைப்பதை விட எல்லோருக்கும் எதிரில் சந்திக்க வைப்பதே

ஜனங்களுக்கு சந்தேகமில்லாமல் திருப்திகரமாய்ப் போகுமென்று நினைத்து நான் இவ்விடத்திலேயே எல்லோரையும் சேர்த்து வைத்தேன். பிறகு அன்றைய தினமே இவர்களெல்லோருக்கும் தந்தியனுப்பினேன், திருவனந்தபுரம் மகாராஜாவுக்கும் தந்தி யெழுதிக் கொடுத்தேன். தந்தி குமஸ்தா, அந்தராஜா இங்கேயே வந்திருப்பதாகச் சொன்னார். உடனே, அவர்களுக்கு டெலிபோன் மூலம் செய்தி யனுப்பினேன். அவர்கள் வந்து தங்களுடைய திவான் பதவியை மறுபடியும் கொடுத்துவிட்டார்கள். இவ்வளவோடு என் வேலை பூர்த்தியாகிறது. என்னால் தாங்கள் இழந்த பதவியும் திரும்பியது பந்து ஜனங்களும் வந்து சேர்ந்தனர். நாம் செய்ய நினைத்த கொடிய பாதகத்திற்கு என்னாலென்ற வரையில் நான் பிராயச்சித்தம் செய்து கொண்டு பரிகாரமும் தேடி விட்டேன். இனி நான் நிச்சலனமாய் இரவில் தூங்குவேன் என் ஜென்மமும் இனி கடைத்தேறும்.'' என்றான்.

அவன் கூறிய வரலாற்றைக் கேட்ட திவான் முதலியாரும் காந்திமதி யம்மாளும் மற்றவர்களும் தாங்கவொண்ணாத ஆச்சரியமும், ஆநந்தமும் கொண்டு பிரமித்துப் பேயினர்.

உடனே திவான் முதலியார் முத்துசாமியை நோக்கி' ''அப்பா! முத்துசாமி! இப்பேர்ப் பட்ட மகா அற்புதமான குணம் உன்னிடமிருக்குமென்றும், நீ எங்களைப் பற்றி இவ்விதமான முயற்சிகளையெல்லாம் செய்து கொண்டிருப்பா யென்றும் நான் கனவில்கூட நினைக்கவில்லை. என்னப்பனே முத்துசாமி! உன் உடம்புகூட அடியோடு உருக்குலைந்துபோய் விட்டதே! ஆகா! அரசமரத்தைப் பிடித்த சநியன் அதன் கீழிருந்த பிள்ளையாரையும்பிடித்ததென்றுபழமொழி சொல்வார்கள். அதுபோல எங்களுக்கு நேரிட்ட காலவித்தியாசம் உன்னையும் அநியாயமாக ஒறுத்து விட்டதப்பா! முத்துசாமி! உன்னைப் பார்க்கப் பார்க்க, என் மனம் அபாரமான சந்தோஷத்தினால் பொங்குகிறது! உன்னை ஒரு குழந்தை மாதிரி கட்டித் தூக்கி ஆலிங்கனம் செய்து முத்தமிடவேண்டுமென்ற ஒரு பதைப்பு உண்டாகிறது. அப்படி நான் செய்தால், இங்கேயுள்ள மற்றவர்கள் என்னைப் பைத்தியக்காரனென்று மதிப்பார்கள். ஆகையால் நான் அப்படிச் செய்யாமல் என் மனதை அடக்கிக் கொள்ளுகிறேன். என்னப்பனே முத்துசாமி! நீ மகா சிரேஷ்டமான குணமுடையவனப்பா! ஆதியில் புத்தி கொஞ்சம் சபலித்ததால், ஒரு தவறு

செய்து விட்டாலும், பிறகு தவறென்று மனப்பூர்வமாக உணர்ந்து, அதைப்பற்றி வருந்தித் திருந்தி அதற்குத் தக்க பரிகாரங்களையும் தேடுவதென்றால், அது சாமான்யமாய் எல்லோரும் செய்யக்கூடிய காரியமல்ல. எல்லா மனிதரும் இவ்விதமான மனப்பான்மை யுடையவரா யிருந்தால்; இந்த உலகமே வெகுசீக்கிரத்தில் சுவர்க்கலோகத்துக்கு சமானமாகிவிடும். அன்பனே! நீ நீடூழி சந்தோஷமாக வாழ' எம்பெருமானுடைய திருவருள் பூர்த்தியாக ஏற்படட்டும்'' என்று கூறி ஆநந்தக் கண்ணீர் சொரிந்தார்.

* * * *

கலியாணம் வெகு வெகு சர்பிரமமாக நடந்து பூர்த்தி யடைந்தது. பிரிந்து கூடியவர்களான காந்திமதியம்மாளும், திவான் முதலியாரும் அதன்பிறகு அடைந்த ஆநந்தத்தையும் சுகத்தையும், நாம் என்னவென்று எடுத்துக் கூறப்போகிறோம் சகலமான உத்தம குணங்களும் அவர்களிருவரிடமும் சம்பூர்ணமாக நிறைந்திருந்தமையால், அவர்களது குணவொழுக்கங்களைக் காண்போர் அனைவரும் "மனிதர் இருந்தால் இப்படியல்லவா இருக்க வேண்டும்! சோற்றுக்குக் கேடும் பூமிக்கு பாரமுமாய் நாமும் இருக்கிறோமே! "தோன்றில் புகழொடுதோன்றுக அஃதிலார், தோன்றலின் தோன்றாமை நன்று" என்று திருவள்ளுவர் கூறியுள்ளபடி நாம் "இருப்பதும் ஒன்றே இறப்பதும் ஒன்றே'' என்று கூறி நெடுமூச் செறிவர்.

அவர்களை விடுத்து, நாம் ராஜாபகதூரையும் கோகிலாம்பாளையும் குறித்துச் சொல்வதென்றால், அதற்குப் போதிய இடம் இச் சிறிய புஸ்தகத்தில் அகப்படாதென்றே கூறவேண்டும். தன்னைக் கணவனென்று வரித்தபிறகு, தான் சிறைச்சாலை தண்டனை யடைந்தாலும் ஏழ்மை நிலைமையை யடைந்தாலும், துர்நடத்தை யுடையவனா யிருந்தாலும், மற்ற உறவினர் இகழ்ந்து விலக்கினாலும், அவைகளை யெல்லாம் பொருட்படுத்தாது முடிவுவரையில் ஒரே உறுதியா யிருந்த தனது அருங்குண மனையாட்டியான கோகிலாம்பாளை நமது ராஜாபகதூர் எவ்விதமாக மதித்திருப்பானென்பது நாம் கூறாமலே விளங்கும். அவன் அடிக்கடி அவளைப் பார்த்து, "ஈசுவரனுடைய நாமத்தை ஸ்தோத்திரம் செய்வதைத் தவிர எனக்கு தேவேந்திர பதவி கிடைத்தாலும், அதை நான் வேண்டேன்'' என்று ஆழ்வார் பாடியிருக்கிறார். அதைப்போல "சதா சர்வதா உன்னை நினைத்து

உன் கலியாண குணங்களை மனனம் செய்து உன் முகத்தைப் பார்ப்பதே தேவர்கள் அமிர்தபானம் செய்து பசி தாகம் களைப்பு முதலியவற்றை உணராமல் ஒரே ஆநந்தமயமாய் நிறைந்திருப்பதுபோல என்னையும் தேவர்களுடைய நிலைமையில் வைத்திருக்கின்றன! என் மாணிக்கக் கட்டியே! நானும், என் முன்னோர்களும் செய்த தவப் பயனே உன் வடிவமாய் வந்திருக்கிறது'' என்று அவளிடமே கூறி அடிக்கடி தன்னை மறந்து வாய்கூசாமல் அவளை அபாரமாக ஸ்தோத்திரம் செய்யத்தொடங்கி விடுவான். ஆகவே அவர்களை விடுத்து, நாம் சௌந்தரவல்லியையும் அழகிய மணவாளரையும் கவனித்தால் அவர்களிருவரும் ஒருவருக்கொருவர் முற்றிலும் பொருத்தமான ஜோடிகளாகவே இருந்தனர். அவர்கள் குபேர சம்பத்தில் கிடந்து இன்பசாகரத்தைக் கடைந்து வெண்ணெய் திரட்டி அதன் சுகம்இவ்வளவுதான் என்பதைக் கரைகண்டு தீர்த்து விட்டனரென்று கூறுவதே பொருத்தமானது. பூஞ்சோலையம்மாளது சொத்து முழுதும் பணமாக மாறி இரண்டு பங்குகளாய் பிரிந்து இரண்டு புதல்வியரிடத்திலும போய்ச் சேர்ந்தது. பூஞ்சோலையம்மாள் ஒவ்வொருவர் வீட்டிலும் ஆறுமாதகாலம் இருப்பதென்றும், அந்தக் காலத்தில் அந்த அம்மாளுக்கு ராஜோபசாரம் செய்வதற்கே அந்தப் பணம் உபயோகப்படுத்துவதென்றும் ஓர் ஏற்பாட்டைப் புதல்வியரிருவரும்நடத்திவருகின்றனர். அந்த அம்மாளின் சந்தோஷம் அளவு கடந்து மீறிக்கொண்டே போவதால், தொந்தி தொப்பைகள் வாசற்படிகளுக்கு அபாயம் வந்து விடுமே என்ற அச்சம் சிறிது மின்றிப் பெருத்துக் கொண்டே போகின்றன.

குஞ்சிதபாத முதலியாரும் புஷ்பாவதியும் சிற்றின்ப சுகத்தைச் சுருக்கிப் பேரின்பசுகத்தை எதிர்பார்த்து சிவபெருமானது பூஜை நடத்துவதிலும் அவனது சிருஷ்டி திதி சங்காரங்களைப் பற்றிய வருமங்களை ஆராய்ச்சி செய்வதிலும் தமது பொழுதைக் கழித்து வருகின்றனர்.

சுந்தரமூர்த்தி முதலியாரும் அவரது சகாக்களான துஷ்டர்களும் எவ்வேழு வருஷம் காராக்கிரக தண்டனை பெற்று மனிதராய்ப் பிறந்தும் தமது துர்நடத்தையால மாடுகளாய் மாறி உழன்று தவிக்கின்றனர்.

கோகிலாம்பாளை போலீஸ் இன்ஸ்பெக்டர் பராங்குசம் பிள்ளை வஞ்சித்து அழைத்துப் போய் பலாத்காரம் செய்த சங்கதி எப்

படியே போலீஸ் கமிஷனருக்கு எட்டிப் போக, அவர் அந்தப் பகை மையை மனதில் வைத்து சமயம் பார்த்து அவரை வேலையிலிருந்து தகையர் செய்து விட்டார். அவர் சோற்றுக்குத் தாளம் போட்டு வீடு வீடாய்ப் பிச்சைக்குப் போகும் காலத்திலும் ரைட் லெப்ட் என்று கம்பீரமாகவே நடந்து போகிறார்.

நமது முத்துசாமியை திவான் தமது பண்ணையின் பெரிய காரியஸ்தராக வைத்திருக்கிறார். அவரது பரோபகார குணம் வர வரக் கனிந்து பழுத்துப் போகவே, எந்த மனிதராயிருந்தா லும், அவரது துன்பத்தைக் களைந்த பிறகுதான் அவர் தமது போஜனத்தையும் கவனிப்பார். புதுச்சேரி சப் இன்ஸ்பெக்டர் அழைத்துச் சென்ற துளஸியம்மாளை துரைக்கண்ணு முதலியார் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அந்தப் பெண்ணை வேறு யாரும் கலியாணம் செய்துகொள்ள விரும்பவில்லை. ஆகையால், நமது பரோபகாரியான முத்துசாமி அதனால் தனக்கு இழிவு வந்தா லும் வரட்டுமென்று நினைத்து, அந்தப் பெண்ணை அழைத்துவந்து பகிரங்கமாகக் கலியாணம் நடத்தி அவளை உத்தமகுண பத்தினியாக மாற்றி அவளோடு இல்லறம் நடத்தி வருகிறான்.

மேலப்பண்ணை கந்தசாமி முதலியார் கோடீஸ்வரர் ஆகிவிட்ட போதிலும், தாம் ஆரம்பத்தில் திவானிடம் சுயம்பாகியாயிருந்தவர் என்பதை மறவாமலேயே இருந்து வருகிறார்.

வீரம்மாளும், அவளது புருஷரான வாண்டையாரும் செந்தி லாண்டவன் பாதத்தடியில் இருந்தவண்ணம் அமோகமாய் வாழ்ந்து சர்வ ஜனங்களும் மனங்குளிர்ந்து, சந்தோஷமாய் இருக்கவேண்டு மென்ற எண்ணத்துடன் தான தருமங்களை ஏராளமாகச் செய்து முதலியார் சத்திரங்களை இப்போதும் நடத்தி வருகிறார்கள்!

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

திருமகள் விலாச அச்சு நிலையம் சென்னை, 1951.

பிரபல நாவலாசிரியரும்,

தங்க மெடல்கள் பரிசுபெற்றவருமான

# வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார் B. A.

எழுதிய

## தேனினுமினிய தமிழ் நாவல்கள்

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| பூர்ண சந்திரோதயம் | 4-பாகங்கள் | ... | 10 | 0 |
| மதன கல்யாணி | 3 ,, | ... | 7 | 0 |
| செளந்தர கோகிலம் | 3 ,, | ... | 8 | 0 |
| மாயா விநோதப் பரதேசி | 2 ,, | ... | 7 | 0 |
| திகம்பர சாமியார் அல்லது கும்பகோணம் வக்கீல் | 2 ,, | ... | 4 | 8 |
| மேனகா ... | 2 ,, | ... | 4 | 8 |
| பாலாமணி ... | ... | ... | 3 | 8 |
| வசந்த மல்லிகா ... | ... | ... | 2 | 8 |
| வித்தியா சாகரம் ... | ... | ... | 2 | 4 |
| திலோத்தமா ... | ... | ... | (அச்சில்) | |

கிடைக்குமிடம் :

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 57. வெங்கட்ராமய்யர் தெரு. ஜி. டி. சென்னை.